# பஞ்சாப் குழப்பம்

காங்கிரஸ் சப்-கமிட்டியார் அறிக்கை.

# பஞ்சாப் குழப்பம்

காங்கிரஸ் சப்-கமிட்டியார்
அறிக்கை





தேசபக்தன் லிமிடெட்

1920

விலை அணு 12

# முன்னுரை

## குழப்ப விசாரணை அறிக்கை

காங்கரஸ் சப்-கமிட்டியார், பஞ்சாப்பில் நிகழ்ந்த குழப்பத்தைப்பற்றி விசாரணை புரிந்து வெளியிட்ட அறிக்கையின் தமிழ் மொழி பெயர்ப்பாகிய இந்நூலுக்கு முன்னுரை வரையுமாறு இதனை வெளியிட்டார் என்னைக்கேட்டுக் கொண்டனர். இந்நூலுக்கு முன்னுரை வரைவது நான் செய்து வரும் தொண்டனுள் ஒரு பகுதி யெனக்கொண்டு, அன்னுர் விருப்பத்துக்கிணங்கினேன். இவ்வறிக்கை, தமிழ்நாட்டுக்கு ஒருவகை புதிய உணர்ச்சியை நல்கும் என்ற நம்பிக்கையும் என்னை முன்னுரை எழுதுமாறு உந்தியது. இவ்வறிக்கையை முற்றும் ஒரு முறை வாசிப்போர் "மாஸனி" யாகிவிடுவர் என்பது நிச்சயம். எத்துணையோ பேச்சுகள், எத்துணையோ எழுத்துகள், எத்துணையோ கூட்டங்கள் செய்யவேண்டிய வேலையை இவ்வொரு நூல் செய்துவிடும் என்ற உறுதியான நம்பிக்கை எனக்குண்டு. ஆதலால், சுதந்தர தாகத்தை எழுப்பும் இவ்வரிய நூலுக்கு முன்னுரை எழுதுவதை ஒரு புண்ணியத் தொண்டாகக் கருதுகிறேன்.

இயற்கை வடிவான இறைவன், உயிர்கள் எல்லாவற்றையும் தன்னைப்போலாக்கவே ஐந்தொழிலைச் செய்துவருகிறுன். அவன் படைப்புக்கு உட்பட்ட உயிர்கள் யாவும், இவ்வுலகில் வாழ்ந்து, இயற்கை இன்பத்தை நுகரும் உரிமை பெற்றிருக்கின்றன. அவ்வுரிமை ஆண்டவனுல் வழங்கப்பட்டது. அவ்வுரிமை

கேடுறும் நாடுகள் பல்வகை நோய்களுக்கு இரையாகும். அவ்வுரிமை கேடுறு நாடுகள் இயற்கை இன்பத்தைத் துய்த்துக் கொண்டேயிருக்கும். உலகில் மன்னரென்னும் கூட்டத்தார், மக்கள் பிறப்புரிமை கேடுறுவண்ணம் பாதுகாக்கக் கடன்பட் டிருக்கின்றார். நம் பண்டைநூல்களில் வேந்தனைக் கடவுள் கூறு என்று கூறப்பட்டுள்ளதன் கருத்தென்னை? இயற்கை வடிவான கடவுள் தன்னைப்போல உயிர்களு மாதல்வேண்டும் என்ற எண்ணங் கொண்டு ஐந்தொழிலால் உயிர்களைத் தூய்மைசெய்து வரும் நோக்கம் நிறை வேறவேண்டுமேல் உலகத்தில் மக்கள் பிறப்புரிமை யிழந்து வாழ்தலாகாது. பிறப்புரிமை யிழந்த மக்கள் இயற்கை இன்பந் துய்க்காது வருந்துவார்கள். இயற்கையின்பத்தை இவ்வுலகில் நுகரும் பேறு பெறுதோர், இறைவன் இன்பத்தை நுகர்தல் அரிது. உலகில் மன்னர்கள், மக்கள் இயற்கை இன்பந்துய்க்குமாறு அறவழிநின்று செங்கோலாட்சி செலுத்தி வருவார்களாயின் அவர்கள் உலக இன்பத்துக்கு முயலாது, கடவுள் இன்பத்துக்கே முயல்வார்கள். மக்கள் கடவுளின்பத்தைக் கருதவும் பெறவும், மன்னர்கள் அறவாழி கருவியாக நிற்றலால் அவர்கள் கடவுள் கூறு என்று கூறப்பட்டார்கள். மறவழி நின்று கொடுங்கோலாட்சி புரியும் அரக்கர், கடவுள் கூறு என்று போற்றப்படார். ஆதலால் உலகத்துள்ள மக்கள் கடவுளால் வழங்கப்பெற்றுள்ள உரிமை யிழந்து துன்புறுவதும், அதைப்பெற்று இன்புறுவதும் அரசன் ஆட்சிமுறையைப் பொறுத்து நிற்கின்றன என்பது வெளிப்படை.

எவ்வெம் மக்கள் எவ்வெந்நாட்டிடைப் படைக்கப் படுகின்றார்களோ அவ்வம்மக்கள், அவ்வந்நாட்டு மன்னர்களால் புரக்கப்படல் வேண்டும். அங்ஙனம் புரக்கப்படுவதே இயற்கை நெறியாகும். பண்டை நாளில் நம்மன்னர்கள், மக்களுக்கு, தங்கள் செங்கோலாட்சியால் புறவின்பத்தை—உலக இன்பத்தை—நல்கி

வந்தமையான், அம்மக்கள் புறவின்பத்துக்கு வருந்தாது, அக இன்பத்தை நாடி உழைத்து வந்தார்கள். இப்பொழுது அம் முறை மாறுபட்டமையால், நம்மக்கள் வயிற்றுக்கே வனவாசஞ் செய்கிறார்கள். நம்மை ஆளும் பிரிட்டிஷ் சாதியார் நல்லவர்; சுதந்தரத்தை விரும்புபவர்; பிறப்புரிமையின் அருமையை யுணர்ந் தவர். அன்றேர், இந்தியாவுக்குச் சுய ஆட்சி வழங்க வேண்டும் என்ற எண்ணங் கொண்டே இந்தியாவை ஆண்டு வருவதாகவும் கூறுகின்றனர். அச்சாதியார் நல்லவாரக இருக்கலாம்; சுதந்தர நேசராக இருக்கலாம்; பிறப்புரிமையை வழங்குபவராயிருக்கலாம். ஆனால் அவர் இந்தியாவுக்கு அந்நியரே யாவர். அவர் ஆட்சி முறையால் இந்தியர் இயற்கை இன்பத்தை நுகர்தல் இயலாது. அது பற்றியே நம்மவர்கள் பிரிட்டிஷ் ஆட்சிக்குக் கீழ்ப்பட்ட சுய ஆட்சி பெற முயல்கின்றார்கள். பிரிட்டிஷ் ஆட்சி தீயதா யிருப்பின், நம்மவர்கள் பிரிட்டிஷ் ஆட்சிக்குக் கீழ்ப்பட்ட சுய ஆட்சி கேட்கவே மாட்டார்கள்.

பிரிட்டிஷார் பல்லாயிரமைல் தூரத்திலிருந்துகொண்டு, நாம் விரும்பும் வழிச் சுயஆட்சியை நமக்கு வழங்காது, அதிகாரவர்க்க ஆட்சி முறை வழி இந்தியாவை உழலச் செய்துள்ளமையால், நாம் நமது உரிமையை யிழந்து வருந்துகிறோம். அதிகார வர்க்க ஆட்சிமுறையை யொழிக்க நம்மவர்கள் பகீரத முயற்சி செய்து வருகிறார்கள். அதிகார வர்க்க ஆட்சிமுறையின் கொடுமை நாளுக்கு நாள் வளர்ந்து கொழுந்து விட்டெரிந்துகொண் டிருக்கி றது. அவ்வெரியைத் தணிக்கவேண்டும். அதற்குச் சாந்த நீர் தேவை. சாந்த நீர் ஊற்று ஆமதாபாத்தில் தோன்றியிருக்கிறது. அது நாலுபக்கம் ஓடிப்பாய்கிறது. அதனைக்கண்டு அதிகாரவர்க்க எரி, தான் தணியுங்காலம் நேர்ந்ததைக்கண்டு, பலநாக்களை நீட்டி கொதிப்புக்காட்டுகிறது. சாந்தநீர் ஓடை வெள்ளமாகப் பெருக் கெடுத்தோடுங்காலை, அவ்வெரி தானே தணிந்துபோகும்.

அதிகார வர்க்கத்தார் ரௌலட் சட்ட மென்னும் அநாகரிகச் சட்டத்தை நிறைவேற்ற முயன்றபோது, நம் தேசத்துப் பத்திரிகைகள், தலைவர்கள், சட்டசபைப் பிரதிநிதிகள் எல்லாரும் ஒரு முகமாக அச்சட்டம் நிறைவேறலாகாதென்று மறுத்தார்கள். அம்மறுப்பைப் பொருட்படுத்தாது அதிகாரவர்க்கத்தார் அச்சட்டத்தை நள்ளிரவில் நிறைவேற்றினர். (இந்நூல், அதிகாரம் 3 பார்க்க) ஆமதாபாத்தில் அழகிய ஆசிரமத்தில், பொறுமையே ஓருருக்கொண்டு வந்தாலென இலங்கும் நமது காந்தியடிகள் ரௌலட் சட்டத்தின் கொடுமையை ஒழிக்கச் சத்தியாக்கிரக விரதந் தாங்கினர். இவ்விரத வெழுச்சி, நாடெங்கும் மின்சாரம் போல் பரவிற்று. இவ்விரதத்தின்மீது மற்ற மாகாண அதிகாரிகளைப் பார்க்கிலும், அதுகாலை பஞ்சாப் தலை அதிகாரியாயிருந்த ஸர் மைக்கல் ஓ'ட்வியர் என்னும் அரக்கர் அதிகமாகக் கவனஞ் செலுத்தினர். இந்த ஸர் மைக்கல் ஓ'ட்வியர் இயல்பாகவே தேசபக்தர்களிடத்தும், தேசீயப் பத்திரிகைகளிடத்தும் வெறுப்புக் கொண்டவர். இவர், திலகர், பாலர், காந்தி அடிகள் ஆகிய இவர்கள் பாஞ்சாலத்தில் கால் வைத்தலாகாது என்றும், 'நியூ இந்தியா,' 'அமிர்த பஜார்,' 'இண்டிபெண்டண்ட்' ஆகிய இப்பத்திரிகைகள் தமது மாகாணத்தில் தலை காட்டலாகாது என்றும் கட்டளை பிறப்பித்திருந்தார். இவர் ஆட்சியில் சண்டைக்கு அநியாயமாக ஆள்சேர்த்த கதைகளும் பணம் பறித்த கதைகளும் விரிக்கிற் பெருகும். (இந்நூல் அதிகாரம் 2 பார்க்க) தேசபக்தர் செயலை இயல்பாக வெறுத்துவந்த இவர்க்குச் சத்தியாக்கிரக இயக்கம் பெருங்கோபத்தை மூட்டிவிட்டது. ஸர் மைக்கல் ஓ'ட்வியர் என்னும் ஒரு தீயர் கோபம், பஞ்சாப் படுகொலையாக முடிந்தது. அப்படுகொலையைப் பற்றி அறிவிக்கும் நூலே இந்நூல்.

இந்நூலின் உள்ளுறையைச் சுருங்க உரைக்கவேண்டுவது எனது கடமை. அக்கடமையை இந்நூலுக்குச் செலுத்தவேண்டு

வது அநாவசியம். இவ்வறிக்கையை எழுதிய பெரியோரே முதலில் அறிக்கையின் சுருக்கத்தை வெளியிட்டுள்ளார். இவ்வறிக்கையின் சுருக்கத்தை இந்நூலில் "அறிக்கைச் சுருக்கம்" (பக்கம் 5 முதல் 11 வரை) என்ற மகுடத்தின் கீழ்க் காணலாம். அன்பர்கள் காங்கரஸ் சப்-கமிட்டியார் காங்கரஸ் தலைவராகிய பண்டித மோதிலால் நேருவுக்கு எழுதிய கடிதத்தையும் வாசித்துப் பார்ப்பார்களாக.

பஞ்சாப் படுகொலையை விசாரிக்க அமர்ந்த பெரியோர் சத்தியத்திலும், சட்ட ஆராய்ச்சியிலும் பேர்பெற்றவர். அப்பெரியார் நடுநிலை பிறழாமலும், நியாயவழி மாறாமலும் விசாரணைசெய்து, தாமெடுத்த சான்றுகளை ஒரு நூலாக வெளியிட்டுள்ளார். சான்றுகளையும் பிறவற்றையும் கருவியாகக்கொண்டு ஆராய்ந்து தங்கள் அபிப்பிராயங்களை இவ்வறிக்கையாக ஆங்கிலத்தில் வெளியிட்டனர். உத்தியோக முறையில் மற்றுமோர் அறிக்கை இன்னும் ஒரு வாரத்தில் வெளிவரும். அது ஹண்டர் கமிட்டி அறிக்கை யெனப்படும்.

இவ்வறிக்கையை முற்றும்வாசிப்பவர்க்குப் பல உண்மைகள் புலனாகலாம். ஸர் மைக்கல் ஓட்வியர் அறிவும்அன்பும் உடையவராயிருப்பின் பஞ்சாப் படுகொலை நிகழ்ந்தேயிராதென்று உறுதியாகக் கூறலாம். ஸர் மைக்கல் ஓ'ட்வியர் நீண்ட காலமாகத் தலைவர்கள்மீது வன்மங்கொண்டு சத்தியாக்கிரக இயக்க காலத்தில் டாக்டர் கிச்சிலு, டாக்டர் சத்தியபால் இவர்களை வெளியேற்றியது ஜனங்களுக்குச் சின மூட்டிற்று. சினமூட்டிய ஜனங்களை மிகத் திறமையாகச் சாந்தப்படுத்தி யிருக்கலாம். பொதுஜனங்கள் டிப்டி கமிஷனரை நாடி ஓடியபோது அவர்களைத் தடுத்து, துன்புறுத்தியது அறியாமை. அவர்கள் தங்கள் விருப்ப வழியே விடப்பட்டிருப்பார்களாயின் எவ்வித குழப்பமும் நிகழ்ந்திராது. குழப்பமெழுந்து ஒடுங்கி அமைதி நிலவி யிருந்த காலத்தில் இராணுவச்

சட்டத்தைப் பிரயோகித்தது பெருந்தவறு. இராணுவச் சட்ட ஆட்சியில் டையர், ஜான்ஸன், ஓ'ப்ரையன்முதலிய சண்டாளர்கள் செய்த கொடுமைகளை என்னென்று கூறுவது? செங்கோலிற் சிறந்த பிரிட்டிஷ் இராஜ்ஜியத்தில் இராட்சதர்களும், அநாகரிகர்களும், ஒழுக்க வீனர்களும் கண்டு அஞ்சும்படியான கொடுமைகள் நடந்திருக்கின்றன. ஜலியன்வாலா பாக்கென்னும் ஒரு சிறு தோட்டத்தின் வாயில்களிலே நின்றுகொண்டு ஜனங்களை அப்புறம் இப்புறம் ஓட ஒண்ணாதவாறு சுட்டதும், ஜனங்களைச் சலாம் செய்யுமாறு வலியுறுத்தியதும், முக்கோணத்தில் சிறுவர்களைக் கட்டியடித்ததும், இளைஞர்களைச் சாட்டையாலடித்ததும், ஜனங்களை ஊர்ந்துசெல்லுமாறு செய்வித்ததும், தண்ணீர் வசதிகளையும், மின்சார வசதிகளையும் நிறுத்தியதும், ஆகாயவிமானத்தினின்று குண்டுகளை எறிந்ததும், பெண்மணிகளைத் துன்புறுத்தியதும், வேறு பல மிலேச்சசெயல்களைச் செய்ததும் என்றும் மறக்கற்பாலனவல்ல. இவைகளை வாசிக்குங்காலத்து அழுகையும், ஆவேசமும், பெருமூச்சும், பற்கடிப்பும், எழுச்சியும் உண்டாகின்றன. இராணுவச் சட்டத்தின்கீழ்ப் பஞ்சாப் பட்டபாட்டை அன்பர்கள் ஒரு முறைக்குப் பன் முறை வாசிக்கவேண்டும். எத்துணை முறை வாசித்தாலும் மனஞ் சலிப்புறாது. இராமாயணத்தில் இராவணன் கொடுமைகளை வாசிக்குங்காலத்து நமது மனம் பதைக்கிறது. ஸர் மைக்கல் ஆட்சியில் பஞ்சாப் கண்ட கொடுமையை நோக்குழி, இராவணன் கொடுமை நீதியாகவே தோன்றும். இராவணன் எம்பெருமாட்டியாகிய சீதா தேவியைத் தூக்கிக் கொண்டு சென்று ஓர் அழகிய புனித வனத்தில் இருத்திப் பாதுகாத்தான். அவன் அம்மையாரை மானபங்கஞ் செய்ய அஞ்சினன். ஸர் மைக்கல் ஓ'ட்வியர் ஆட்சியில் நம் பெண்மணிகள் பட்ட கஷ்டத்தை யெழுத மன மெழவில்லை. கையும் நடுங்குகிறது. இராணுவச் சட்ட ஆட்சியில் ஓரிடத்தில் பெண்மணிகளைச்

சில துஷ்டசேவகர்கள் மானபங்கஞ் செய்திருக்கிறார்கள். அப் பாவிகள் நம்மாதர்களைப் பாவாடைகளை........(கைகூசுகிறது.) செய்வித்தார்களாம். நம் சகோதரர்களின்............குச்செடுத்து ............(எழுதமுடியவில்லை).........இக்கொடுமைகள் இரா வணன் ஆட்சியிலும் நிகழவில்லையே! தெருவில் திரியும் சோம் பேறிகள், தூர்த்தர்கள் இவர்கள் பொறுப்புள்ள ஆட்சியில் ஓர் உத் தியோகத்தை வகிப்பார்களானால், அவர்கள் ஆட்சியிலும் இத் துணைக் கொடுமைகள் நடை பெறமாட்டா. ஸர் மைக்கல் என் னும் ஒரு மனிதன் செயல் பிரிட்டிஷ் இராஜ்ஜியத்தின் பெரு மையையுங் குலைத்தது; இந்தியர் மானத்தையும் போக்கியது.

இக்கொடுமைகளைச் செய்துள்ள ஸர் மைக்கல் ஓ'ட்வியருக் கும் அவர் செயலை ஆதரித்த லார்ட் செம்ஸ்பர்ட்டுக்கும் மற்றக் கொலை பாதகர்கட்கும் என்ன தண்டனை விதிக்கலாம்! காங்கரஸ் சப்-கமிட்டியார் செய்துள்ள சிபார்சுகளில் குறிக்கப்பட்டுள்ள தண்டனைகள் மிகச் சாதாரணமானவை. இஃது இந்தியர் பெருந் தகைமையைக் காட்டுகிறது.

இன்னோரன்ன பல பொருள்களைத் தாங்கியுள்ள இந்நூல் அரசாங்கப் பார்வைக்கு மாத்திரம் வெளியிடப்படவில்லை. இந் நூல் இந்தியாவை என்றும் எழுப்பிக்கொண்டே யிருக்கவேண்டு மென்னும் நோக்கத்துடனும் வெளியிடப்பட் டிருக்கின்றது. அதிகார வர்க்க ஆட்சிமுறை பஞ்சாப்பில் எரிந்து சுவாலை வீசித் தணிந்து விட்டது. இனிச் சுய ஆட்சி யொளி வீசவேண்டும். அவ்வொளி இவ்வறிக்கையில் ஒடுங்கி யிருக்கிறது. இவ்வறிக்கை யில் அறியக்கிடக்கும் பொருள் நான்கு.

(1) அதிகாரவர்க்க ஆட்சியின் கொடுமை. [ழுச்சி.

(2) அக்கொடுமையை ஒழிக்கவேண்டு மென்னு மனவெ

(3) அவ் வெழுச்சியை வளர்க்கப் பஞ்சாப் படுகொலை நிகழ்ச்சி.

(4) கொடுமையை ஒழிக்கும் வழி சத்தியாக்கிரகம் என்பது. இந்நான்கும் இந்தியாவை யீடேற்றுவன.

இந்நாறும் பொருளைக் கொண்டுள்ள சுதந்தர நிதியாகிய இவ் வறிக்கையின் தமிழ் மொழி பெயர்ப்பாகிய இந்நூல் எல்லாவழி யிலும் போற்றத்தக்கது. ஆங்கிலத்தினின்றும் தமிழில் மொழி பெயர்ப்போர் சிலர் அவ்வாங்கில மொழிக்கு அடிமையாகித் தமி ழின் இயல்பைக் கெடுப்பது வழக்கம். இந்நூலின் மொழி பெயர்ப்பு ஆங்கிலத்துக்கு அடிமையாகாது தமிழ் மணத்தை வீசிக் கொண்டிருக்கிறது. இந்நூலில் சொற்சுவையும் பொருட் சுவை யும் மலிந்து கிடக்கின்றன. இராமாயணம், பாரதம் முதலிய நூல்களை வாசிக்குங்கால் உண்டாகும் இன்பம் இந்நூலை வாசிக் குங்காலத்து உண்டாகும்.

இத்துணைச் சிறப்புவாய்ந்த இந்நூலைத் தமிழர் ஒவ்வொரு வரும் வாங்கி வாசிக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளவும் வேண்டுமோ? ஒவ்வொரு வீட்டிலும் இந்நூல் இலங்கவேண்டு மென்பது எனது கோரிக்கை.

சான்றுகளடங்கிய நூலையும், இனி வெளிவரும் ஹண்டர் கமிட்டி அறிக்கையையும் தமிழில் மொழிபெயர்ப்பித்து, அவை களையும் வெளியிடுவது நலம். வந்தேமாதரம்.

22—5—1920. திரு. வி. கலியாணசுந்தரன்.

---

# பஞ்சாப் காங்கிரஸ் சப்-கமிட்டியாரின் குழப்ப விசாரணை அறிக்கை

---

## சப்-கமிட்டியாரின் கடிதம்

பஞ்சாப் குழப்பத்தைப்பற்றி விசாரணை செய்து தாம் வெளியிட்டுள்ள அறிக்கையை எல்லா இந்திய காங்கிரஸ் கமிட்டியின் பஞ்சாப் சப்-கமிட்டியார் உத்தியோக முறையில் காங்கிரஸ் கமிட்டித் தலைவரான கனம் பண்டித மோட்டிலால் நேரு அவர்களுக்கு அனுப்பியபோது கீழ்க்கண்ட கடிதத்தை அனுப்பியுள்ளார் :

ஐயா,

1919-ம் வருஷம் நவம்பர் மாதம் 14-ந்தேதி எல்லா இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் பஞ்சாப் சப்-கமிட்டியார் உங்களையும், கனம் பஸ்லுல் ஹேக் அவர்களையும், அப்பாஸ் டயாப்ஜி அவர்களையும், ஸ்ரீமான்கள் ஸி. ஆர். தாஸ், மோ. க. காந்தி அவர்களையும், கமிஷனர்களாகவும், ஸ்ரீமான் கே. ஸந்தானம் அவர்களைக் காரியதரிசியாகவும் நியமித்து, பஞ்சாப்பில் சென்ற ஏப்ரல் மாதத்தில் நடைபெற்ற குழப்ப விஷயமாய்க் காங்கிரஸ் சப்-கமிட்டியார் முன்னரே சேகரித்துள்ள சாட்சியங்களைப் பரிசீலனை செய்து ஆராய்ந்து ஒழுங்குபடுத்தித் தேவையான இடங்களில் சேர்த்து முடிவை வெளியிடுமாறு கேட்டுக் கொண்டனர்.

காங்கிரஸ் தலைவராகத் தெரிந்தெடுக்கப்பெற்ற காரணத்தை முன்னிட்டு நீங்கள் உங்கள் கமிஷனர் பதவியினின்றும் விலகிக் கொள்ள நேர்ந்தது. உங்களுடைய இராஜினாமா சப்-கமிட்டியா ரால் முறையாக அங்கீகரிக்கப் பெற்றது. நீங்கள் இராஜினாமா செய்த போது சாட்சியம் சேகரிக்கும் வேலை அநேகமாய் முடிவு பெற்றிருந்தமையின், உங்கள் ஸ்தானத்தில் வேறெவரும் கமிஷ னராக நியமிக்கப்படவில்லை.

கனம் பஸ்லுல் ஹேக் வந்தவுடன் மிகவும் அவசியமான வேலையை முன்னிட்டு வெளியே செல்ல வேண்டியவரானார். அவர் ஸ்தானத்தில் பம்பாய் நியாயவாதி மிஸ்டர் எம். ஆர். ஜயகர் நியமிக்கப் பெற்றனர்.

நாங்கள் 1919-ம் வருடம் நவம்பர் மாதம் 17-ந் தேதி எங்கள் வேலையைத் தொடங்கினோம்.

நாங்கள் 1700-க்கு மேற்பட்டவர்களின் வாக்குமூலங்களைப் பரிசோதனை செய்து, அவைகளுள் 650 வாக்குமூலங்களை வெளியிட்டிருக்கின்றோம். ஒரே தன்மையதான செய்கைகளை நிரூபிக்கும் வாக்குமூலங்களையே நாங்கள் பிரசுரியாமல் விடுத் துள்ளோம்.

எடுத்துக் கொள்ளப் பெற்ற வாக்குமூலம் ஒவ்வொன்றும் எங்களுள் ஒருவரால் பரிசீலனை செய்து பார்க்கப் பட்டது. சாட்சியங் கொடுத்தவர்களின் யோக்கியதை எங்களுக்குத் திருப்தியளித்த பின்னரே நாங்கள் அவர்கள் சாட்சியத்தை அங்கீகரித்தோம். ஆயினும் மணியன்வாலாவிலும் அதன் சுற்றுப் புறத்திலுமிருந்து கிடைத்த சாட்சியத்தில் மேற்கண்ட முறை அனுசரிக்கப்பட வில்லை. அவ்வாக்கு மூலங்கள் எங்கள் வேண்டுகோளுக்கிணங்க பாரிஸ்டர் ஸ்ரீமான் லாப் சிங்க், எம். ஏ., அவர்களால் கொடுக்கப் பட்டவை. அத்தகைய வாக்குமூலம் ஒவ்வொன்றின் அடியிலும் அவர் பெயர் குறிப்பிடப் பெற்றிருக்

கிறது. சாட்சியங் கொடுத்தவர்களைப் போதுமான வரை குறுக்கு விசாரணை செய்யாமல், நாங்கள் ஒரு வாக்குமூலத்தை யும் அங்கீகரிக்க வில்லை.

சாட்சியங் கொடுத்தவர்களிற் பலர் நல்ல பதவியிலுள்ளவர்க ளென்பதும், தத்தம் ஜில்லாக்களிலும் கிராமங்களிலும் ஜனத் தலைவர்களா யிருக்கிறார்களென்பதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கன.

சாட்சியங் கொடுத்தவர்களிற் சிலர் உத்தியோகஸ்தர்களின் மீது பெருங் குற்றஞ் சாட்டியிருக்கின்றன ரென்பதும் இங்குக் கவனிக்கத் தக்க தொன்றாம். அங்ஙனம் உத்தியோகஸ்தர்களைக் குற்றஞ் சாட்டுவதனால் சாட்சியங் கொடுப்பவர்களுக்குப் பெருந் தீங்கு நேரிடுமென நாங்கள் எச்சரிக்கை செய்தோம். தங்களுக்கு நேரிடக்கூடிய துன்பத்தையும், பொய்மையினாலும் மிகைபடக் கூறலாலும் தங்கள் நலத்திற்கு ஏற்படும் தீங்கையும் அறிந்தபின் னரும், அவர்கள் தங்கள் வாக்குமூலங்களை உறுதியான மன நிலையுடன் கொடுத்த பின்னரே நாங்கள் அவைகளை ஏற்றுக் கொண்டோம். சிலர் கொடுத்த சாட்சியங்களில் எங்களுக்கு நம்பிக்கையிருந்தும், அவை பிறரால் ஆமோதிக்கப்பெறாததன்கார ணமாக நாங்கள் அவைகளை விலக்கிவிட்டோம். ஸ்திரீகள் துன் புறுத்தப்பட்டார்களெனச் சொல்லிய சாட்சியங்கள் இத்தகை யனவே.

இராணுவச் சட்டத்திற் குட்பட்டிருந்த எல்லைக் குள்ளும், இராணுவச் சட்டம் அமுலுக்குக் கொண்டு வரப்பட்ட ஜில்லாக் களுக்குள்ளுமே நாங்கள் விசாரணை செய்தோ மென்பதை இங்கே குறிப்பிட வேண்டுவதில்லை. முக்கியமான விடங் களுக்கு நாங்களே நேரிற் சென்றிருந்தோம். லாகூர், அமிர்த சரஸ், டார்ன்டாரன், காஸுர், குஜரன்வாலா, வாஜீரபாத், நைஜாமபாத், அகல்கார், ராம்நகர், ஹாபிஜபாத், ஸாங்க்லாஹில், ஷெயிக்புரா, சுஹர்கானா, லயல்பூர், கூர்ஜ்ஜரம், மாலக்வால்,

ஸார்கோதா முதலிய பல விடங்களுக்கும் எங்களில் ஒருவர் சென்றிருந்தார். பலவிடங்களில் பெரிய பொதுக்கூட்டங்கள் கூட்டி, வாக்குமூலங் கொடுப்பதற்காக அவைகளுக்கு வருமாறு பொது ஜனங்களை அழைத்தோம். முன்னரே கிடைத்திருந்த சாட்சியங்களின் தன்மையை அக்கூட்டங்களில் எடுத்துக்கூறிய துடன், அவைகளில் எதையேனும் மறுக்க மனமுள்ளோர் இரக சியமாகவும் முன் வந்து தங்கள் மறுப்பைத் தெரிவிக்கலா மெனச் சொன்னோம். ஒருவரேனும் அவ்வாக்குமூலங்களுக்கு மறுப்பு அனுப்பவில்லை.

எங்கள் அபிப்பிராயங்களைப் பலப்படுத்திக் கொள்ளும் பொருட்டும் திருத்திக்கொள்ளும்பொருட்டும் குழப்ப விசாரணைக் கமிட்டியாரின்முன் சொல்லப்பட்ட சாட்சியங்களை ஆராய்ந்து பார்த்திருக்கிறோம். எங்கள் அறிக்கையோடு சேர்க்கப் பெற்றி ருக்கும் வாக்குமூலங்களிற் பல, ஹண்டர் கமிட்டியார் தங்கள் வேலையைத் தொடங்குமுன்னரே வாங்கப்பட்டவை யென்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

வாக்குமூலங்களுள் பல தேசபாஷைகளிலேயே கொடுக் கப்பட்டன. நாங்கள் அவைகளைக் கூடியவரை நன்றாக மொழி பெயர்ப்பித்திருக்கிறோம். ஆயினும் நாங்கள் மொழிபெயர்க்கப் பெற்ற வாக்குமூலங்களை வைத்துக்கொண்டு சாட்சியங்களைச் சரிபார்த்து, வேண்டிய இடங்களில் திருத்தியிருப்பதால், எங்கள் அறிக்கையோடு சேர்க்கப்பட்டுள்ள வாக்குமூலங்களை நேரான வாக்குமூலங்களாகவே கொள்ளுதல் கூடும்.

எங்களுக்குக் கிடைத்த மட்டில் நாங்கள் இராணுவச் சட்டக் கமிஷனர்கள் செய்த விசாரணைகளையும், சேனைக்கு ஆள்சேர்க் குங் காலத்திலும் ஆள்சேர்க்கும் முறையினாலும் ஏற்பட்ட வழக் குகள் பலவற்றிற் கொடுக்கப் பெற்றுள்ள சாட்சியங்களையும் ஊன் றிப் படித்திருக்கிறோம்.

முடிவில், நாங்கள் சென்ற ஒவ்வோரிடத்திலுமுள்ள பிரதானமான கனவான்களுக்கும், லாகூரிலும் பிற விடங்களிலுமுள்ள உழைப்பாளிகள் பலர்க்கும், அவர்கள் எங்களுக்குச் செய்த உதவிக்காக எங்கள் நன்றியறிதலைச் செலுத்துகிறோமென்பதை ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறோம். அத்தகைய உதவியின்றி நாங்கள் எங்களுக்கிருந்த குறைந்த காலத்தில் எங்கள் வேலையைச் செய்து முடித்திருத்தல் முடியாது.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி,
சி. ஆர். தாஸ்,
அப்பாஸ் எஸ். டயாப்ஜி,
எம். ஆர். ஜயகர்.

வாரணாசி,
பெப்ருவரி 29, 1920.

---

## அறிக்கையின் சுருக்கம்

சென்ற ஏப்ரல்மாதம் பஞ்சாப்பில் ஏற்பட்ட குழப்பவிஷயமாகக் கிடைத்திருந்த சாட்சியங்களைப் பரிசோதனை செய்து, ஆராய்ந்து, ஒழுங்குபடுத்தித் தங்கள் முடிவை வெளியிடுமாறு எல்லா இந்தியக் காங்கிரஸ் கமிட்டியாரின் பஞ்சாப் சப்-கமிட்டியார் நியமித்த கமிஷனர்கள் தங்கள் அறிக்கையை இரண்டு பாகங்களாக வெளியிட்டிருக்கிறார்கள். முதல் பாகம் அவர்களுடைய அறிக்கையைக் கொண்டுள்ளது. இரண்டாம் பாகம் கமிஷனர்கள் பரிசோதித்த சாட்சியங்களைக் கொண்டது. கீழ்க்கண்ட கனவான்கள் கமிஷனர்களாக நியமிக்கப் பெற்றவர்கள். ஸ்ரீமான்கள் மோ. க. காந்தி, பாரிஸ்டர்; சி. ஆர். தாஸ், பாரிஸ்டர்; அப்பாஸ் எஸ். டயாப்ஜி, பாரிஸ்டர்; எம். ஆர். ஜயகர், பாரிஸ்டர்; ஸ்ரீமான் பாரிஸ்டர் கே. ஸந்தானம் காரியதரிசியாக நியமிக்கப்பெற்றனர். கமிஷனர்கள் 1919-ம் வருஷம் நவம்பர்

மாதம் 17-ந்தேதி வேலை தொடங்கிச் சுமார் 1,700 சாட்சியங்களைப் பரிசீலனைசெய்து, அவைகளுள் 650 வாக்குமூலங்களை வெளியிட்டிருக்கிறார்கள். இவ்வாக்குமூலங்கள் 950 பக்கங்கள் கொண்ட ஒரு பெரும் புத்தகத்தில் வெளியிடப் பெற்றிருக்கின்றன. கமிஷனர்கள் தங்கள் முடிவைப் பலப்படுத்திக் கொள்ளவும் திருத்திக்கொள்ளவும், அரசாங்கத்தாரால் நியமிக்கப்பெற்ற பஞ்சாப் குழப்பவிசாரணைக் கமிட்டியாரின் முன்கொடுக்கப்பட்டுள்ள சாட்சியங்களையும் தாராளமாக உபயோகப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

சிலவிடங்களில் தாங்கள் கடூரமான மொழிகளை உபயோகித்திருப்பின் அஃது அவசியத்தை முன்னிட்டேயென்றும், ஒவ்வொரு பதமும் அளந்தே உபயோகிக்கப் பெற்றிருக்கிறதென்றும் கமிஷனர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். "பஞ்சாப் அரசாங்கத்தார் மீதுள்ள குற்றத்தை நாங்கள் சிறிதளவாகக் கூறியிருத்தல் எதனாலெனின், அரசாங்கத்தாரிடம் முடியாத அளவு திருத்தத்தை எதிர்பார்க்க எங்களுக்குச் சுதந்தர மில்லையென்பதை உணர்ந்திருப்பதினாலேயே" என்று கமிஷனர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆயினும் எதிர்காலம் எவ்வளவு பிரகாசமுள்ளதாகக் காணப்படினும், ஜனங்களிடமுள்ள குற்றங்களைக் காணாதிருத்தல் கூடாதது போலவே, பொறுப்புள்ள உத்தியோகஸ்தர்கள் நியாய விரோதமாகச் செய்த மொத்தமான கொடிய செய்கைகளைக் கவனியாதிருத்தல் முடியாதெனக் கமிஷனர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். உத்தியோகஸ்தர்களுள் சிலர் எத்தகைய மனப்போக்கைக் கொண்டிருந்தனரென்பதை விளக்கும் பொருட்டுக் கமிஷனர்கள் லாகூர் டெபுடி கமிஷனர் மிஸ்டர் மைல்ஸ் இர்விங் கூறியுள்ள கீழ்க்கண்ட இரண்டு வாக்கியங்களையும் எடுத்துப் பதனப் படுத்தி வைத்திருக்கிறார்கள்:

"ஆங்கிலேயரைக் கொலை செய்ததனால் நீங்கள் ஒரு கெட்ட

செய்கையைச் செய்தவர்களாவீர்கள். உங்களேயும் உங்கள் குழந்தைகளேயும் பழிக்குப் பழி வாங்குவார்கள்" என்று மிஸ்டர் இர்விங் கூறியிருக்கிறுர்.

செம்ஸ்பர்ட் பிரபுவின் பொறுப்பைப் பற்றியவரையில், உத்தியோகஸ்தர்கள் பஞ்சாப்பில் செய்த அநீதிச் செயல்களில் இந்தியா அரசங்கத்தாரும் கலந்து கொண்டிருந்தனரெனக் கூறு விடினும், அவர்கள் செயலற்றிருந்தது குறிப்பிடப் பெறும விருக்க முடியாதெனக் கமிட்டியார் அபிப்பிராயப் படுகின்றனர். இராஜப் பிரதிநிதியார் ஜனங்களின் சார்பாகப் பரிசோதனே செய்து பார்க்கச் சிறிதும் சிரமமெடுத்துக் கொண்டாரில்லே. சம்பவங்கள் நிகழ்ந்த பிறகும், அவர் விசாரணே செய்யாமலே பஞ்சாப் அரசாங்கத்தாரின் செய்கையை அங்கீகரித்துவிட்டார். உத்தியோகஸ்தர்களான சாட்சிகள் ஒப்புக்கொண்ட விஷயங்கள் எல்லாவற்றையும் இராஜப்பிரதிநிதியார் சென்ற மே மாதத்தி லேனும் தெரிந்து கொண்டிருந்திருப்பார். அங்ஙனந் தெரிந்து கொண்டும், ஜலியன்வாலா பாக் கொலேயின் தன்மையையும், இராணுவச்சட்டத்தின்படி பிறகு செய்யப்பட்ட செய்கைகளே யும் அவர் ஜனங்களுக்கேனும் அரசாங்கத்தாருக்கேனும் தெரி வித்தாரில்லே. அவர் பொதுஜன அபிப்பிராயத்தைப் பொருட் படுத்தாமலும் நிந்திக்கத்தக்கவாறு இவ்விஷயத்தில் கவனஞ் செலுத்தாமலு மிருந்தபடியால், இந்தியா மந்திரியால் வற்புறுத் தப்படுவதற்குமுன் இராணுவச் சட்டத்தின்படி மரணதண்டனே விதிக்கப்பட்டவர்களின் தீர்ப்பை நிறுத்திவைக்கவும் உடன் படாமலிருந்தார். இராஜப்பிரதிநிதியார் தம்பொறுப்பில் விடப் பட்டுள்ள குடிமக்களே வேண்டு மென்றே கவனியாம லிருந்தா ரென்று கமிட்டியார் கருதவில்லே யெனினும், இத்தகைய பொறுப்புள்ள உத்தியோகத்தை வகிக்க அவர் யோக் கியதை யற்றவரென்றும், எனவே அவர் உத்தியோகத்தினின்

றும் திரும்ப அழைக்கப்பட வேண்டுமென்றும் கருதுகின்றனர். கமிட்டியார் செய்துள்ள முடிவுகளுள் கீழ்க்கண்டவை கவனிக்கத்தக்கன.

பஞ்சாப் லெப்டினண்ட் கவர்னராயிருந்த ஸர் மைகல் ஓட்வியர் படித்தவர்களிடம் வெறுப்பும் அவநம்பிக்கையும் கொண்டிருந்ததனாலும், யுத்தகாலத்தில் ஆள் சேர்க்கும் விஷயத்திலும் பணவுதவி பெறுவதிலும் அவர் வெறுக்கத்தக்க கட்டாய முறைகளைக் கைக்கொண்டிருந்த படியாலும், மாகாணத்திலுள்ள அச்சுக் கூடங்களின் வாயடைத்து வெளியிலிருந்து வரும் தேசியப் பத்திரிகைகளைத் தடுத்துப் பொதுஜன அபிப்பிராயத்தை அடக்கிய படியாலும், பஞ்சாப் வாசிகள் அவரிடம் கோபங் கொண்டிருந்தார்கள்.

ரௌலட் சட்டத்தை முன்னிட்டெழுந்த கிளர்ச்சி பிரிட்டிஷார்மீது துவேஷங்கொண் டெழுந்ததன்று. சத்தியாக்கிரஹ இயக்கம் துவேஷமும் கொடுமையுமின்றி ஆலோசிக்கப்பட்டு நடத்தப் பெற்றது.

பஞ்சாப் அரசாங்கத்தை வீழ்த்த யாதொரு சதியாலோசனையும் நடைபெறவில்லை.

ஸ்ரீமான் காந்தியைப் பிடித்துக் காப்பில் வைத்ததும், டாக்டர்கள் கிச்லுவையும் சத்ய பாலையும் பிடித்து வெளியேற்றியதும் நியாயமானவையல்ல. இச் செய்கைகளினாலேயே பொதுஜனங்கள் பீதிகொண்டு கலங்கிவிட்டார்கள்.

எக்காரணம்பற்றி நிகழ்ந்தனவெனினும், ஜனங்கள் வரம்பு கடந்து செய்த கொடிய செய்கைகள் மிகவும் வருந்தத்தக்கனவாயும் கண்டிக்கத் தக்கனவாயுமிருக்கின்றன.

விஷயங்கள் வெளிப்படையாகத் தெரியும் வரை, இராணுவச் சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டதற்கு நியாயமான காரணம் ஒன்றும் காட்டப்படவில்லை.

ஒவ்வோரிடத்திலும் அமைதி நன்கு ஏற்பட்ட பின்னரே இராணுவச்சட்டம் வெளியாக்கப்பட்டது.

இராணுவச் சட்டத்தின் படி ஐந்து ஜில்லாக்களிலும் எடுத்துக் கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் அநாவசியமானவை களாகவும், கொடுமையானவைகளாகவும், வருந்தத் தக்கவை களாகவும், அவைகளால் துன்பமனுபவித்த ஜனங்களின் உணர்ச்சியைப் பொருட்படுத்தாதவைகளாகவு மிருந்தன.

ஜலியன் வாலாபாக் படுகொலை, குழந்தைகள் உட்படக் குற்றமற்றவர்களையும் நிராயுதபாணிகளையும் ஜீவகாருண்யமின்றி மாய்க்கும் பொருட்டுச் செய்யப்பட்ட ஒரு கொடுஞ் செயலாகும். இந்தப் படுகொலையின் கொடுமை நவீன பிரிட்டிஷ் ஆட்சியின் சரித்திரத்தில் எங்கும் காணப் படாது.

இராணுவச்சட்ட விசாரணை ஸ்தலங்களும், அவசர நியாய ஸ்தலங்களும் குற்றமற்றவர்களைப் பயமுறுத்துங் கருவிகளா யிருந்ததோடு, நீதியைச் சீர் குலைத்து நூற்றுக் கணக்கான ஸ்திரீ புருஷர்களின் நிலைமையைப் பாழ்படுத்துவனவாயின.

ஊர்ந்து செல்லல் முதலிய விநோத தண்டனைகள் நாகரிக முள்ள அரசாங்கத்தார் கைக்கொள்ளற் பாலனவல்ல. இந்தத் தண்டனைகளை விதித்தவர்கள் எவ்வளவு ஒழுங்கீனமான நிலைமையில் வீழ்ந்து விட்டார்களென்பது அவைகளினால் நன்கு விளங்கும்.

குடிமக்களுக்குச் செய்யப்பட்ட தீங்கிற்குப் பரிகாரந் தேடவும், ஆட்சியைச் செப்பஞ் செய்யவும், உத்தியோகஸ்தர் கள் இனி இங்ஙனம் சட்ட விரோதமாக நடந்து கொள்வதைத் தவிர்க்கவும் கமிட்டியார் கீழ்க்கண்ட ஆலோசனைகளை வெளி யிட்டிருக்கின்றனர்.

(1) ரௌலட் சட்டம் தொலைக்கப்பட வேண்டும்.

(2) ஸர் மைக்கல் ஓட்வியர் அரசாங்கத்தில் எவ்விதமான பொறுப்புள்ள உத்தியோகத்தையும் வகியாதபடி நீக்கப்பட வேண்டும்.

(3) ஜெனரல் டையர், கர்னல் ஜான்ஸன், கர்னல் ஓ'ப்ரையன், மிஸ்டர் பாஸ்வர்த்ஸ்மித், ராய் சாகிப் ஸ்ரீராய் ஸத், மலிக் சாஹிப்கான் முதலியவர்கள் அரசாங்கத்தில் எத்தகைய பொறுப்புள்ள பதவியிலும் இல்லாதவாறு நீக்கப்படவேண்டும்.

(4) நாங்கள் வெளியிட்டுள்ள வாக்கு மூலங்களில் கூறப் பட்டுள்ளபடி குற்றஞ் செய்தவர்களான சில்லரை உத்தியோகஸ் தர்களைப் பற்றி விசாரணை செய்து, குற்றமிருப்பதாக ருஜு ஏற் படின் அவர்களை வேலையினின்றும் நீக்கி விடவேண்டும்.

(5) கனம் இராஜப் பிரதிநிதியார் தம் பதவியை விட்டு விலகுமாறு திரும்ப அழைக்கப்படவேண்டும்.

(6) பிரத்தியேக விசாரணை ஸ்தலங்களிலும் அவசர நியாய ஸ்தலங்களிலும் தண்டனை விதிக்கப் பெற்றவர்களின் அப ராதத் தொகைகள் திருப்பி யளிக்கப்படல்வேண்டும். குழப்பத் தினால் பாதிக்கப்பட்ட நகரங்களினின்றும் வாங்கப்பட்ட நஷ்ட ஈடுகள் குறைக்கப்படல்வேண்டும். நஷ்ட ஈடு முழுமையும் செலுத்தியுள்ள நகரங்களுக்குக் குறைந்த நஷ்ட ஈடு விதிப்பத னால் ஏற்படும் மிச்சம் திருப்பி யளிக்கப்படல்வேண்டும்; தண்ட னைக்காக வைக்கப்பட்டிருக்கும் போலீசார் அப்பால் அகற்றப் படல்வேண்டும்.

ஸர் மைகல் ஓட்வியர், ஜெனரல் டையர், கர்னல் ஜான்ஸன், கர்னல் ஓ'ப்ரையன், மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித், ராய்சாகிப் ஸ்ரீராம் ஸத், மலிக் சாகிப்கான் ஆகிய எழுவரும் தண்டிக்கப்படுமாறு நியாய விரோதமாக நடந்து கொண்டிருக்கின்றனரெனக் கமிட்டி யார் உணர்ந்தும், இந்தியாவின் நன்மையை நாடி அம்முறையைக் கைக்கொள்ளாதிருத்தல் ஏற்றதெனத் தீர்மானித்திருக்கின்றனர்.

மேற்கூறிய உத்தியோகஸ்தர்களை அவர்கள் பதவிகளினின்றும் விலக்குவதனுல் எதிர்கால ஆட்சி -முறை போதுமானவரை செம்மையுறுமெனக் கமிட்டியார் கருதுகின்றனர்.

---

# சப் கமிட்டியாரின் அறிக்கை.

## அதிகாரம்—1

### (பஞ்சாப் அமைப்பும் வரலாறும்.)

சரித்திர பூர்வமாகப் பார்க்குங்கால் இந்தியாவிலுள்ள மாகாணங்களுள் பஞ்சாபே மிகச் சிறந்ததெனக் கொள்ளலாம். இம்மாாாணத்திலேயே வேதகாலத்திய ஆரியர்கள் முதன் முதலில் வந்து குடியேறினுர்கள். இங்கேயே ருக்வேதத்தின் பாடல்கள் முதன் முதல் பாடப்பட்டன. இம்மாகாணத்திலிருந்த தாக்ஷசீலா என்னும் சர்வகலாசாலைக்கே ஞானதாகங்கொண்டிருந்தவர்களெல்லோரும் பற்பல விடங்களிலிருந்து வந்து சேர்ந்தனர். இம்மாகாணத்திலேயே பாண்டவர்களும் கௌரவரும் மகபாரதப் போரியற்றினர்.

இம்மாகாணத்திலேயே எகிப்து நாட்டு மன்னரான ஆஸிரிஸ் பாரத பூமியின் பரிசம் பெற்றது. இங்கேயே அஸிரிய நாட்டு இராணியான ஸெமிராமிஸ் இந்தியாவைத் தன் ஆட்சிக்குட்படுத்திக் கொள்ள வேண்டுமென்ற பேராசையினுல் போரியற்றித் தோல்வியுற்றது. ஸிதியர்களும் டார்ட்டர்களும் பாரசீகரும் இந்தியாவுக்குள் நுழைய வேண்டி வந்த போது இம்மாகாணத்திலேயே பாரதபுத்திரர்களுடன் போர் செய்ய வேண்டியவராயினர். இம்மகாணத்திலேயே மகா பெரிய அலெக்ஸாண்டர், முதலில் வெற்றிபெற்றிருந்தும், போரஸ் அரசனேடு

போர் செய்து உலகத்தை வெற்றிகொள்ளும் கனவைக் கைவிட லாயினர்.

பஞ்சாப் ஜீலம், சீனப், ராவி, பீயாஸ், ஸட்லிஜ் என்ற பஞ்சநதங்களின் தண்ணீர் பாயப்பெற்ற பிரதேசம். இவ் வைந்து நதிகளை யுடைமையினுலேயே இம்மாகாணத்திற்கு இப் பெயர் வழங்கிவரலாயிற்று. இம்மாகாணம் இந்தியாவின் வட மேற்குப் பாகத்தில் இருக்கின்றது. வடக்கில் இமயமலையும் காஷ்மீரமும், மேற்கில் சிந்துநதியும், தெற்கில் சிந்தபிரதேசமும் இராஜபுதனமும், கிழக்கில் யமுனையாறும் இம்மாகாணத்தின் எல் லைகளாம்.

பஞ்சாப் தற்போழ்து 135, 773 சதுரமைல் விஸ்தீரண முள்ளது. அதில் 100,000 சதுரமைல் விஸ்தீரணத்திற்குச் சிறிது குறைந்துள்ள பிரதேசம் பிரிட்டிஷாரால் நேராக ஆட்சி செய்யப்பட்டு வருகிறது. மற்றப்பிரதேசத்தை இந்தியமன்ன ரும் சிற்றரசரும் ஆண்டு வருகின்றனர். 1911-ம் ஆண்டில் இம்மாகாணம் இரண்டு கோடிக்குச் சிறிது குறைந்த ஜனத் தொகை யுள்ளதாக விருந்தது. இம்மாகாணம் முன்னே இப் பொழுதிருப்பதைவிடப் பெரிதாயிருந்தது. 1901-ம் வருஷத் தில் அது பிரிக்கப்பெற்று, வடமேற்கு எல்லைமாகாண மென்ற ஒரு புதியமாகாணம் அதினின்றும் ஏற்படுத்தப்பட்டது. 1912-ம் ஆண்டில் பிரிட்டிஷ் இந்தியாவின் தலைநகர் டில்லிநகரத்திற்கு மாற்றப்படவும், பஞ்சாப் மாகாணத்தினின்றும் இன்னொரு பகுதி வேறுபடுத்தப்பட்டது. டில்லியும் அதைச்சார்ந்த பிரதே சமும் இப்பொழுது பிரத்தியேக மாகாணமாக அமைக்கப்பெற் றிருக்கின்றன.

பஞ்சாப் மாகாணத்திலுள்ளோருள் பெரும்பாலோர் ஹிந் துக்களும் மகமதியரும் சீக்கியருமாவர். சீக்கியர்க்குப் பஞ்சாப் மாகாணமே பிறப்பிடம். அவர்களுடைய தொகை 35 லக்ஷம்.

ஜனங்களின் முக்கியமான ஜீவனோபாயம் விவசாயமாமாகும். ஆயினும் மற்றக் கைத்தொழில்களும் நாளுக்கு நாள் பெருகி வந்திருக்கின்றன. பஞ்சாபிலுள்ள நகரங்கள் பலவற்றில் நீராவியின் சக்தியைக் கொண்டு நடத்தப் பெறும் தொழிற்சாலைகள் பல கட்டப்பெற்றிருக்கின்றன.

## பஞ்சாப் யுத்தகாலத்திற் செய்த உதவி.

பிரிட்டிஷ் இந்தியசேனையின் மகுடமெனத்தகும் சிறந்த வீரர்களை உதவுவது பஞ்சாப் மாகாணமே. சென்ற யுத்தத்தில் இந்தியாவிலுள்ள மற்ற மாகாணங்களைக் காட்டிலும் பஞ்சாபே அதிக வீரர்களை வழங்கியிருக்கின்றது. போர்த்தொழில் வகுப்பினருள் சீக்கியரே தலைசிறந்து விளங்குபவர். மேற்கிலும் தெற்கிலுமுள்ள ரஜபுத்ரரும் ஜாது வகுப்பினரும் பெரும்பாலும் மகமதியராயிருக்கின்றனர். கிழக்கிலும் வடக்கிலு மிருப்போர் ஹிந்துக்கள்; மத்திய பஞ்சாபிலுள்ள ஜாதுக்கள் பெரும்பாலும் சீக்கியராயிருக்கிறார்கள்.

பஞ்சாப் யுத்தத்திற்காகச் செய்துள்ள ஆள் உதவியை ஸர் மைகல் ஒட்வியர் கூறியுள்ளபடியே கீழே கூறுகின்றோம். சென்ற ஏப்ரல் மாதம் 7-ந்தேதி பேசிய காலை ஸர் மைகல் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கின்றனர். "யுத்தத்தைப்பற்றியும் பஞ்சாப் யுத்தத்திற்காகச் செய்துள்ள உதவியைப்பற்றியும் நான் பன்முறை பேசியுள்ள படியால் இப்பொழுது அவ்விஷயத்தைப்பற்றிச் சிறிதளவே கூற விரும்புகிறேன். நாங்கள் சேனையில் 100,000 பேரை வைத்துக்கொண்டு யுத்தந்தொடங்கலானோம். யுத்தத்தின் முதல் இரண்டரை வருஷங்களுள் நாங்கள் 124,000 போர்வீரர்களைச் சேர்த்தோ மென்பதை நான் 1917-ம் ஆண்டிற் சொல்லியிருக்கிறேன். அதற்கடுத்த வருஷத்தில் 127,000 போர் வீரரைச் சேர்த்தோம். ஒரு வருஷத்திற்கு முன்பாக, சேனையில்

சேர்க்கப்பட்டவர்களின் மொத்தத் தொகை 2½ லக்ஷத்திற்கு அதிகமிருக்கும். நாங்கள் அப்பொழுது மிகவும் நெருக்கடியான நிலைமையிலிருந்தோம். சக்ரவர்த்திப் பெருமான் ஆகஸ்ட் மாதத்தில் விடுத்த செய்திக்கும் முதல் மந்திரியார் அனுப்பிய வேண்டுகோளுக்குமிணங்க 180,000 போர்வீரர் உட்பட இம் மாகாணம் 200,000 பேரைச் சேர்த்துக் கொடுக்க வேண்டுமெனக் கேட்டேன். நான் அதிகமாகக் கேட்டேனெனப் பலர் கருதினர். அங்ஙனம் நினைத்தவர்கள் பஞ்சாபின் மனப் போக்கையறியாதவர்கள். 1918-ம் வருஷம் ஏப்ரல் மே மாதங்கள் அறுவடை காலமாயிருந்த படியால் நாங்கள் அப்பொழுது அதிகமாக ஆள் சேர்க்கவில்லை. ஆயினும் அப்பொழுது 21,000 பேர் சேர்க்கப் பெற்றனர். ஜூன் மாதத்திலிருந்து செப்டம்பர் மாதம் வரை சேனைக்கு ஆள் சேர்த்தல் ஒவ்வோரிடத்திலும் உற்சாகத்துடன் நடைபெற்று வந்தது. அந்நான்கு மாதங்களிலும் 78,000 பேர் சேனையில் சேர்ந்தனர். அக்டோபர் மாதத்தில், இன்புளுவென்ஸா ஜுரத்தின் கொடுமை காரணமாக 14,426 பேரே சேர்க்கப்பட்டனர். நவம்பர் மாதத்தில் நாங்கள் மறுபடியும் சேனைக்கு ஆள்சேர்க்கவிருந்த தறுவாயில் எதிரிகள் வீழ்ச்சியுறவும் யுத்தம் நிறுத்தப்பெற்றது. எனவே 6,313 பேரே சேர்ந்தனர். ஆனல் ஜூன் முதல் நவம்பர் வரையிலுமுள்ள ஆறுமாதங்களில் நாங்கள் 99,000 பேரைச் சேர்த்தோம். தேவை இருந்திருக்குமாயின் நாங்கள் 200,000 பேரைச் சேர்த்திருப்போம். யுத்தம் நடைபெற்ற நான்கு வருடங்களிலும், நேபாளத்தினின்றும் வந்த பேர்போன வீரர்கள் நீங்கலாக இந்தியாவில் சேர்க்கப்பெற்ற போர்வீரர்களுள் நாங்கள் பாதிக்கு மேலாக அதாவது 360,000 பேரைச் சேர்த்திருக்கிறேம். ஒவ்வொரு ஜாதியிலும் சேனையில் சேர்ந்தவர்களின் தொகை வருமாறு :—

| | |
|---|---|
| மகமதியர் | 170,000 |
| பட்டாணியர் | 5,000 |
| பஞ்சாபி மகமதியர் என்று வழங்கப்பெறுபவர்களும், பஞ்சாபின் வடபாகத்திலும் மத்தியபாகத்திலும் இருப்பவர்களுமான மகமதியர் | 136,000 |
| தென்பஞ்சாப் மகமதியர் | 25,000 |
| காஷ்மீரப் பிரதேசத்தினர் | 1,500 |
| இதர மகமதியர் | 2.500 |
| சீக்கியர் | 90,000 |
| ஹிந்துக்கள் | 90,000 |
| ஜாதுக்கள் | 30,000 |
| டோக்ரா வகுப்பினர் | 24,000 |
| ஏனைய ரஜபுத்ரர் | 10,000 |
| அஹிர் வகுப்பினர் | 10,000 |
| கூர்ஜ்ஜரர் | 6,000 |
| கௌர் பிராமணர் | 5,000 |
| மற்றவர் | 5,000 |
| பஞ்சாபி கிறிஸ்துவர் | 4,000 |

ஜனத்தொகையில் 9-ல் 5 பாகத்தினராயுள்ள மகமதியர் சேனையில் சேர்ந்தவர்களுள் 100-க்கு 48 வீதமும், ஜனத்தொகையில் 9-ல் 3 பாகத்தினரான ஹிந்துக்கள் 100-க்கு 25 வீதமும், ஜனத்தொகையில் ஒன்பதில் ஒரு பாகத்தினரான சீக்கியர் 100க்கு 25 வீதமாகவும் போர் வீரர்களை வழங்கியிருக்கின்றனர்.

நான் சென்ற வருஷம் சொல்லியது போலவே போர்வீரர்களும் ஊழியப் பட்டாள ஆட்களும் பெரும்பாலும் கிராமங்களினின்றும் சேர்க்கப் பட்டார்கள். நகரங்களிலுள்ளவர்கள் யுத்த நிதிக்குத் தாராளமாக உதவினார்களெனினும், ஆளுதவுமாறு

கேட்டதற்குச் சிறிதளவே இணங்கினார்கள். கிராமங்களிலுள்ள ஹிந்துக்கள் ஆள் சேர்க்கும் விஷயத்தில் மிக்க ஊக்கத்துடன் உழைத்தனர். அவர்கள் சீக்கியரைக் காட்டிலும் குறைந்த தொகையினரைச் சேனைக்கு வழங்கினார்களெனினும், பஞ்சாப் மகமதியருக்குச் சமமாக வழங்கி யிருக்கிறார்கள்."

பஞ்சாபின் ஆட்சி ஒரு லெப்டினண்ட் கவர்னரின் பொறுப்பில் விடப் பெற்றிருக்கிறது. கவர்னருக்குக் கீழ் ஒரு சட்டசபையுண்டு. சட்டசபை அங்கத்தினருள் சிலர் தெரிந்தெடுக்கப் படுகின்றனர்; மற்றுஞ் சிலர் நியமிக்கப் படுகின்றனர்.

பஞ்சாப் மாகாணத்தின் தலைநகர் லாகூர். அது 250,000 ஜனத்தொகை கொண்ட ஒரு பெரிய நகரம். அந்நகரம் கல்கத்தாவுக்கு 1200 மைல் தூரத்திலும், டில்லிக்கு 300 மைல் தூரத்திலும், கராச்சிக்கு 784 மைல் தூரத்திலும், பம்பாய்க்கு 1162 மைல் தூரத்திலும் உள்ளது.

இம்மாகாணம் கமிஷனர்களின் அதிகாரத்திற்குட்பட்ட ஐந்து டிவிஷன்களாகப் பிரிக்கப் பட்டிருக்கின்றது. அவைகளுள் டெபுடி கமிஷனர்கள் அல்லது கலெக்டர்களின் கீழுள்ள 28 ஜில்லாக்கள் அடங்கி யுள்ளன. ஐந்து டிவிஷன்களாவன: இந்தியா அரசாங்கத்தாரின் கோடை கால வாசஸ்தலமாகிய சிம்லாவைத் தன்னுட்கொண்ட பஞ்சாபின் கீழ்ப் பாகமாகிய அம்பாலா டிவிஷன், மலைப் பிரதேசங்கள் சேர்ந்துள்ள ஜலந்தர் டிவிஷன், பஞ்சாபின் மத்தியிலுள்ள லாகூர் டிவிஷன், வடமேற்கிலுள்ள ராவல்பிண்டி டிவிஷன், மேற்கிலுள்ள மூல்டான் டிவிஷன்.

# அதிகாரம் 2

## ஓட்வியரின் ஆட்சி முறை

"கனவான்களே!

பஞ்சாபின் மேலான வேலைகளைப்பற்றி நான் அடிக்கடி பேசிவருகிறேனெனச் சொல்லப்படுகிறது. நான் யாதொரு குறுகிய நோக்கத்தைக்கொண்ட விசுவாசத்தின்மேலும் இம் மாகாணத்தில் பெருமைகொண் டிருக்கவில்லை. நான் 15 வருஷ காலம் இம்மாகாணத்திற்கு வெளியிலிருந்து இந்தியாவின் பல பாகங்களைப் பார்த்திருக்கிறேன். நகரங்கள் பலவற்றையும், ஜனங்களையும், நடையுடை பாவனைகளையும், சீதோஷ்ண நிலைமைகளையும், சபைகளையும், அரசாங்கங்களையும் நான் நன்கு கண்டிருக்கிறேன். ஆயினும் பஞ்சாப் மாகாணத்தில் அரசன் அரண்மனைமுதல் குடியானவன் குடிசை வரை தோன்றுவதாயுள்ள ஓர் அபூர்வ சக்தியை நான் எங்குங் கண்டிலேன். பஞ்சாபிலுள்ள ஒருவன் எவ்வகுப்பினனாயினும், எந்நிலையி லிருப்பவனாயினும், சந்தேகமேனும் அவநம்பிக்கையேனுமின்றி அவனைக் காணலாமென்று நான் கண்டுகொண்டேன். பஞ்சாப் வாசி இராஜபக்தி மிக்குடையவன்; ஆனால் அடிமைபோன்றவனல்லன்; தைரிய முள்ளவன், ஆனால் பெருமை பேசிக்கொள்பவனல்லன்; ஊக்கமுள்ளவன், ஆனால் வீண்கனவு காண்பவனல்லன்; முன்னேற்றமான போக்குள்ளவன், ஆனால் தவறான இலக்ஷியங்களையுடையவனாகவேனும், பொருளை நீக்கி நிழலைக்கைக்கொள்பவனாகவேனும் இருக்கமாட்டான். இன்னோரன்ன குணங்களே இந்தியாவிலுள்ள மாகாணங்களுள் பஞ்சாபைச் சிறந்ததாகச் செய்திருக்கின்றன. இக்குணங்களே ஒழுக்கத்தைத் தழுவிய தைரியத்தோடு சேர்ந்து முன்னேற்றத்திலும் வளத்திலும் முதன்மையாக வைத்திருக்கும்"

சென்றவருஷம் இந்தியா முழுவதும் கடைகளை மூடிக் கூட்டங் கூடியதற்கு முதல்நாளும், அமிர்தசரஸிலும் லாகூரிலும் நிராயுதபாணிகளைத் துப்பாக்கியாற் சுட்டதற்கும் அமிர்தசரசில் செய்த குழப்பத்திற்கும் கொலைகளுக்கும் மூன்று நாள் முன்னதுமான ஏப்ரல் 7-ந்தேதி ஸர் மைகல் ஓட்வியர் மேற்கூறிய உரைகளை வெளியிட்டிருக்கின்றனர்.

இவ்வுரைகள் தம் பதவியினின்றும் விலகிக்கொள்வதற்கு முன்னதாக நடைபெற்ற சட்டசபைக் கூட்டத்தில் அவர் பேசிய பேச்சினின்றும் எடுக்கப்பட்டன.

## சத்துருக்களை எதிர்த்த அரசாங்கம்

பின்னும் ஸர் மைகல் கூறுகின்றார்:

"யுத்தகாலத்தில் நிலைநிறுத்தப்பெற்ற பொதுஜன அமைதி சமாதான காலத்திலும் நிலவியிருக்குமாறு இம்மாகாண அரசாங்கத்தார் பார்த்துக் கொள்ளத் தீர்மானித்திருக்கின்றனர். எனவே அமிர்தசரஸிலும் லாகூரிலுமுள்ள சிலர் எக்காரணங்கொண்டேனும் பொதுஜனங்களை அரசாங்கத்திற்கு விரோதமாகக் கிளப்பிவிடுவதை முன்னிட்டு முன்னரே நடவடிக்கை யெடுத்துக்கொள்ளப் பட்டிருக்கிறது. வெளிநாட்டுச் சத்துருக்களை நசுக்கி உள்நாட்டுக் கலகத்தை யடக்கிய பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இக்கிளர்ச்சிக்காரர்களைப் பொருட்படுத்தாது நிந்தித்திருத்தல்கூடும். ஆனால் அவர்கள் பின்னே நின்றுகொண்டு ஒன்றுமறியாத ஜனங்களைக் கொடுஞ்செயலும் குற்றமுஞ் செய்யத் தூண்டுவார்களாகலின், சிறுவர்களையும் அறியாதவர்களையும் காக்குங் கடமையை அரசாங்கத்தார் வகிக்கவேண்டி யிருக்கின்றனர். எனவே அரசியல் துறையில உழைப்பவர்கள் கூட்டும் கூட்டங்களின் நடைமுறைகளுக்கும், அவைகளில் உபயோகிக்கப்பட்ட உரைகளுக்கும்,

அவைகளினு லுண்டாகும் நன்மை தீமைகளுக்கும் தாங்களே பொறுப்புள்ளவர்க ளாவார்களென்று ஈண்டு அவர்களுக்கு எசச்ரிக்கை செய்கிறேன். இந்நிபந்தனைகளுக்கிணங்க, அரசாங்கத்தார் பொதுக்கூட்டங்களை மற்ற வழிகளில் கட்டுப்படுத்த விரும்பவில்லை. ஆயினும் நியாயமான நோக்கங்களைக்கொண்டு கூட்டம் கூட்டுபவர்களும் பலமுறைகளில் தைரியமிழந்து வரம்பு மீறிப் பேசுபவர்களை யடக்கச் சக்தியற்றவர்க ளாகிறுர்களென்பது பலரறிந்த விஷயம். ஆரவாரஞ் செய்யும் கிளர்ச்சிக்காரர்கள் சிலர் வரம்பு கடந்து பேசுவதை முன்னிட்டே சாந்தமும் மனவமைதியு முள்ளவர்கள் அவர்கள் பேசும் கூட்டங்களுக்குச் செல்லாதிருக்கிறுர்கள். தடுக்கும் முறைகள் இல்லாமலோ உபயோகிக்கப்பெறுமலோ இருக்கின்றன. எனவே நான் பத்திரிகைகளுக்கும் பிரசங்க மேடைகளுக்கும் இவ்வெச்சரிக்கை செய்ய முன்வந்தேன். அரசியற் சீர்திருத்தத்திற்கு இத்தகைய அமைதியும் நியாயமும் கொண்ட நிலைமைதானு ஏற்றதென்று நான் உங்களை வினயத்துடன் வினவுகின்றேன்.' இந்நிலைமை சிறிதும் அதற்கேற்றதன்று. இதனை உண்டாக்குவோர் அரசியற் சீர்திருத்தத்திற்குச் சத்துருக்க ளாவர். நற்காலத்திற் கேற்ப, அவர்கள் கூச்சலிடுமளவாக அவர்களுடைய செல்வாக்குப் பரவியிருக்கவில்லை. அவர்கள் பஞ்சாபின் பொதுஜன அபிப்பிராயத்தை வெளியிடுபவர்களன்று."

## தீங்கற்ற ரௌலட் சட்டம்.

பின்னர் ஸர் மைகல் ரௌலட் சட்டத்தின் தீங்கற்ற தன்மையை விளக்கிக் கூறி, அச்சட்டம் பிடிக்கவும் பரிசோதிக்கவும் வேறுவிதமான இடையூறு செய்யவும் போலீசாருக்குச் சுயேச்சையான அதிகாரம் வழங்கவில்லை யெனப் பொய் பேசியுள்ளார். ரௌலட் சட்டத்தைப் படித்த ஒவ்வொருவரும் அதில் அத்

தகைய சுயேச்சாதிகாரம் அடங்கியிருக்கிறதென்பதையும், அவ்வதிகாரம் இருப்பதனுலேயே ஜனங்கள் அதைப் பலமாகக் கண்டிக்கிருர்களென்பதையும் நன்கறிவர். ஸர் மைகல் தம் மனம் போனவாறு ரௌலட் சட்டத்தை விவரித்துக் கூறியதோடு திருப்தி கொண்டிருக்கவில்லை. ஆயிரக் கணக்கான ஜனங்கள் விரதமிருந்து புனிதநாளாகக் கொண்டாடிய ஏப்ரல் 6-ந்தேதியன்று தோன்றிய குறிப்பைப்பற்றித் தாம் என்ன நினைத்தன ரென்பதையும் அவர் வெளியிட விரும்பினுர். அவர் அத்திருநாளைப் பின்வருமாறு எள்ளிநகையாடினுர்; "லாகூரிலும் அமிர்தசரஸிலும் ரௌலட் சட்டத்தைக் கண்டிக்கும் பொருட்டுச் சமீபத்தில் செய்யப்பட்ட கிளர்ச்சி அறியாமையும் மூடநம்பிக்கையுங் கொண்ட ஜனங்களைக்கிளப்பி விட்டிராவிடில், நகைப்பூட்டுவதாகவே இருந்திருக்கும். நான் அவர்களுக்குப் பிரெஸிடெண்ட் லிங்கன் கூறிய உரைகளை ஞாபக மூட்டுகின்றேன். 'நீ மிகவும் சாதுர்ய முள்ளவனுகவும் நியாய உணர்ச்சியில்லாதவனுகவுமிருப்பின், எல்லா ஜனங்களையும் சில காலமும், சில ஜனங்களை எல்லாக் காலமும் தவருனவழியில் நடத்திச்செல்லலாம். ஆனுல் நீ எல்லோரையும் எல்லாக் காலத்திலும் தவருன வழியில் நடத்திச் செல்லுதல் முடியாது.' நியாய உணர்ச்சியையன்றி அறியாமையை எழுப்புபவர்கள் என்றேனு மொருநாள் உத்தரவு சொல்லித் தீரவேண்டும்." ஏப்ரல் 7-ந்தேதி இந்தியாவிலுள்ள வேறெந்த அரசாங்கத்தலைவரும் ஜனங்களைப் பரிகசித்தாரில்லை. ஸர் மைகல் நீங்கிய மற்றவர்களெல்லோரும் ஏப்ரல் 6-ந்தேதி தோன்றிய குறிப்பின் பொருளை நன்குணர்ந்து கொண்டனர். ஸர் மைகலே நியாய உணர்ச்சியை யன்றி அறியாமையையும் ஆக்ரோஷத்தையும் எழுப்பிவந்தனரென்பதையும், ஜனங்களையும் மேலதிகாரிகளையும் தவருன வழியில் நடத்திவந்ததனுல் அவர் எத்தகைய பொறுப்பை ஏற்றுக்கொண்டன ரென்பதையும்

நாங்கள் மிக்க மனவருத்தத்துடன் அடியிற் குறிப்பிடவேண்டிய வர்களா யிருக்கிறோம். 'உத்தரவு சொல்லித் தீரவேண்டும்' என் பதற்கு அவர் என்ன பொருள் கொண்டிருந்தன ரென்பதைக் காட்டுவதும் எங்கள் கடமையா யிருக்கிறது. அமிர்தசரஸில் நிகழ்ந்த சம்பவங்களைப் பற்றிக் கேள்வியுற்ற பிறகு, ஏப்ரல் 10-ந் தேதி மாலை ஸர் மைகல் தமக்கு உபசாரப் பத்திரமளிப்பான் வேண்டி மாண்ட் காமெரி மண்டபத்திற் குழுமியிருந்த பஞ்சாப் போர்த்தொழில் வகுப்பினரின் பிரதிநிதிகளுக்குமுன் பின்வரு மாறு பேசியிருக்கிறார்:

"இன்று மாலை தோன்றியுள்ள குழப்பம் நாம் இங்குக் கூடு வதைத் தடுக்கவில்லை யென்பதை நினைக்க நான் மிக்க மகிழ்ச்சி கொள்ளுகிறேன். இவ்வரிய கூட்டத்தில் மகமதியர், சீக்கியர், ஹிந்துக்கள் முதலிய எல்லோருமடங்கியுள்ள பஞ்சாப் மாகாணத் தின் போர்த்தொழில் வகுப்பாரின் பிரதிநிதிகளைக்காண நான் மிக்க பெருமைகொண்டவனுகின்றேன். நீங்கள் ஜாதிமதபாஷை களில் வேற்றுமையுடையவர்களாயிருப்பினும், இராஜபக்தி, வீரம் என்ற இரண்டு எஃகுத்தளைகளாலும் ஒருவரோடொருவரும் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரோடும் பிணைக்கப்பட்டிருக்கிறீர்கள்.

"ஆட்சி நடத்தும் கஷ்டங்களையும், சமாதானமும் ஒழுங்கு முள்ளதான முன்னேற்றம் ஒழுங்கீனத்தாலும் அராஜகத்தாலும் சீர்குலைக்கப் பெறுவதைத்தடுக்க முயற்சி யெடுத்துக் கொள்ள வேண்டுவதன் அவசியத்தையும் நீங்கள் உணர்ந்திருக்கிறீர்கள். புரட்சியினுலும் அராஜகத்தினுலும் ஏற்படும் குழப்பத்தினுல் ஜனங்களுடைய உயிர்களும் சொத்துக்களும் அழிவுரு வண்ணம் பாதுகாக்குமாறு செய்யப்பட்ட ஒரு சட்டத்தை ஆரவாரஞ்செய் யும் சிறுபாலர் சிலவாரங்களாக வாய்க்கு வந்தபடி ஜனங்களுக்கு எடுத்துக்கூறி அவர்களை வருத்த அஃதோர் ஆயுதமாக உபயோ கிக்கப்படுமெனப் பொய் கூறிவருவதை நீங்கள் பார்த்து வந்திருக்

கிறீர்கள். அராஜகம் முதலியவை ஏற்படுங்காலத்திலேயே இச் சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்படும். நெருக்கடியான சமயங்களில் குடிமக்களைக்காக்கும் பொருட்டே இச்சட்டம் செய்யப் பட்டிருக்கிறது. உங்களில் அந்தச் சட்டத்தைப்படித்திருப்போர் அவர்களுடைய கிளர்ச்சி எவ்வளவு ஆதாரமற்றதென்பதை அறிந்துகொண்டிருப்பர். ரௌலட் கிளர்ச்சியைப் போலிக்காரணமாகக்கொண்டு, இந்தியாவின் சண்டைகளில் உழைத்துத் திரும்பிய பஞ்சாபி மகமதியரும் சீக்கியரும் கூர்க்கரும் மூல்டானில் அவமதிப்புடன் நடத்தப்பட்ட சம்பவத்தை உற்றுநோக்கின், கிளர்ச்சியைப் பின்னலிருந்து கிளப்பிவிடுவோரின் நோக்கத்தை நீங்கள் சிறிது உணர்ந்து கொள்ளுதல் கூடும். இங்ஙனம் போர் வீரர்களை அவமதித்தவர்கள் போர்த்தொழிலில் மனப்போக்கில்லாதவர்கள். அவர்கள் தங்கள் வீடுகளையும் பொருள்களையும் பாதுகாத்த வீரர்களின் செயலைப் பாராட்டாதிருப்பவர்கள். அரசாங்கத்தாரை எதிர்த்தலும், உப்பிட்டமை காரணமாக அவர்களிடம் உண்மையாக நடந்து கொள்வோரை அவமதித்தலுமே அவர்களுடைய முக்கிய நோக்கமாகும். இராஜபக்தியுள்ளவர்கள் அவர்களுடைய தீய சூழ்ச்சிகளை எதிர்த்தே தீர்வார்கள். எனவே நீங்கள் இச்சட்டத்தைப் பொறுத்த வரையில் "அரசாங்கத்தாரின் எண்ணங்களையும் முறையையும் உங்களுக்கு வேண்டியவர்களுக்கு விளக்கிக்கூறி, அறியாமையையும் நம்பிக்கையையுங்கொண்டவர்களையும் நகரங்களிற் கடைவீதிகளிலுள்ள கூட்டங்களையும் தவறான வழியில் நடத்தி ஒழுங்கீனத்தையும் கொடியசெய்கைகளையும் செய்யுமாறு அவர்களைத் தூண்டும்பொருட்டுச்செய்யப் பட்டுவரும் தீயமுயற்சிகளையும் பகிரங்கப்படுத்தவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

"கிளர்ச்சியைப் பரவச்செய்தவர்கள் பொறுமை எதிர்ப்பு முறை என்பதை வெளியிட்டுக்கொண்டு தங்கள் வேலையைத்

தொடங்கலானார்கள். அஃது எத்தகைய உருக்கொண் டெழுந் திருக்கின்றது? சனிக்கிழமை மூல்டாணில் என்ன நடந்ததென் பதை நீங்கள் கேள்வியுற்றிருக்கிறீர்கள். ஞாயிற்றுக்கிழமை லாகூரிலும் அமிர்தசரஸிலும் சட்டத்திற் கடங்கி நடக்குங் குடி மக்கள் விஷயத்தில் அடக்குமுறையும் பயமுறுத்தலும் கையா ளப்பட்டன. பம்பாயில் அவர்கள் பகிரங்கமாகச் சட்டத்தை எதிர்க்கலானார்கள். இந்த இயக்கம், உடனே தடுக்கப்பெற்று லொழிய, ஒழுங்கீனத்தையும் உயிர்ச்சேதத்தையும் உண்டுபண்ணி விடும். அஃது அமிர்தசரஸிலும் லாகூரிலும் முன்னரே இந் நிலைமையை உண்டாக்கிவிட்டது. அது சட்டத்திற் கடங்கி நடக்கும் குடிமக்களின் உயிர்களையும் பொருள்களையும் அபாயத் திற்குள்ளாக்குந் தன்மையது. இவ்வபாயகரமான கிளர்ச்சியைக் கண்டித்தொழிக்கும் விஷயத்தில் அரசாங்கத்தார் இராஜபக்தி யுள்ள குடிமக்கள் எல்லோருடைய கூட்டுறவையும் எதிர்பார்த் திருக்கின்றனர். நீங்களும் இவ்விஷயத்தில் அரசாங்கத்தாரோடு ஒத்துழைத்தல் வேண்டும். இதிலும் இதுபோன்ற பிறவிஷ யங்களிலும் நீங்கள் அரசாங்கத்தாரிடம் காட்டும் கூட்டுறவானது உங்களுடைய பேர்போன யுத்த வேலைகளைப்போலவே மதித் துக் கொண்டாடப்படும்.

"தற்பொழ்துள்ள நிலைமை மிகவும் நெருக்கடியானதாக விருக்கின்றது. நீங்களும் அரசாங்கத்தாரும் தாமதமின்றி நட வடிக்கை யெடுத்துக் கொள்ளுதல் அவசியமாகும். அரசாங்கத் தார் தங்கள் கடமையைத் தாமதமின்றிச் செய்வதுடன் உங் கள் கடமையை நீங்கள் செய்வதிலும் உங்களுக்கு ஒத்தாசை செய்வர். அரசாங்கத்தார் சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வரு வர். அதனால் உயிர்ச்சேத மேற்படின், அந்தப்பொறுப்பு, சட்டத் தைக் கடந்து செல்லுமாறு பிறரைத் தூண்டுவோரிடம் இருப்ப தாகவே கருதப்படும்.

"இதுதான் நான் சொல்லும் கடைசி புத்திமதி; நீங்கள் அதனைக் கேட்டு உடனே நடவடிக்கை யெடுத்துக்கொண்டு, நான் இம்மாகாணத்தைவிட்டுப் போகுமுன் பொதுஜன அமைதியை ஏற்படுத்தும் விஷயத்தில் எனக்கு உதவிசெய்வீர்களென்பதை நன்குணர்ந்திருக்கிறேன். இத்தீங்கு பிரமாதமானதெனினும், அதிகமாகப் பரவியிராதபடியால், உங்கள் உதவியைக் கொண்டு விரைவில் அகற்றப் படக்கூடியதாயிருக்கிறது.

"யுத்தகாலத்திலேனும் உள்நாட்டிற் கலகமேற்பட்டசமயத்திலேனும் நான் பஞ்சாபின் இராணுவ வகுப்பினரை வேண்டிக் கொண்டது வீண்போகவில்லையென்பதைப் பெருமையுடன் ஞாபகப்படுத்திக் கொள்வேன். உங்கள் செயலாலும் உங்களைச் சேர்ந்த திடகாத்திரமுள்ள வீரர்களின் செயலாலும் இன்னுஞ் சிலவாரங்களுக்குள் என் நன்றியறிதலையும் அரசாங்கத்தார் அளிக்கவல்ல நலத்தையும் பெறுவீர்களென நான் நம்பியிருக்கிறேன்.

"நான் இப்பொழுது உங்களிடம் விடை பெற்றுக்கொள்ள வேண்டும். இம்மாகாணத்தைவிட்டுப் போகும் போது நீங்கள் செய்ததை நான் ஞாபகத்திலிருத்திச் செல்வேன். உங்களை யேனும் உங்கள் வேலையை யேனும், உங்கள் நலத்தையேனும், மறக்கமாட்டேன்."

## உண்மையை மாற்றிக் கூறல்

மேற்கண்ட உரைகள் ஸர்மைகலின் மனப்பான்மையை விளக்குந் தன்மையனவாயிருத்தலின், அவற்றை அங்ஙனமே வெளியிட்டிருக்கின்றோம். இவ்வுரைகள் பஞ்சாப் போர்த்தொழில் வகுப்பாருக்குச் சொல்லப்பட்டன. அவ்வகுப்பினரை ஜனங்களுக்கு விரோதமாக எழுப்புவதில் ஸர் மைகல் தாமதித்தாரில்லை. அவர் உண்மையான விஷயங்களைத் திரித்துக் கூறியிருக்கிறார். உதாரணமாக மூல்டானிலுள்ள ஜனங்கள் சிப்பாய்களிடம்

நடந்துகொண்ட விஷயமாக அவர் பேசியதை எடுத்துக்கொள்ள லாம். நாங்கள் இவ்விஷயத்தைப்பற்றி விசாரணை செய்துபார்த் தோம். மூல்டான் வழியாகச்சென்ற சிப்பாய்கள் சிறிதும் அவ மதிக்கப்பெறவில்லை. ஸர் மைகல் வேண்டுமென்றே ரௌலட் சட்டத்தின் அதிகாரத்தைப்பற்றித் தவருகக் கூறி, அரசியல் கிளர்ச்சியில் சேர்ந்தால் தண்டனை அடைய நேரிடுமென ஜனங் களைப் பயமுறுத்தியிருக்கின்றனர்.

ஸர் மைகல் ஓட்வியர் தம் ஆட்சி முறையினுல் ஒவ்வொரு வகுப்பாரையும் எப்படிப் பகைத்துக்கொண்டன ரென்பதையும், படித்தவர்களுக்குப் பொதுஜனங்களிடமுள்ள செல்வாக்கைக் குறைக்க எப்படி முயற்சி செய்தனரென்பதையும் இப்பொழுது சுருக்கமாகச் சொல்ல நினைக்கிறோம்.

லெப்டினண்ட் கவர்னராக நியமிக்கப்படுமுன்னரே ஸர் மைகல் பஞ்சாபைப்பற்றி நன்ருகத் தெரிந்துகொண்டிருந்தார். 1913-ம் ஆண்டில் அவர் லெப்டினண்ட் கவர்னர் பதவியில் அமர்த்தப்பட்டனர். அவர் சீர்திருத்த ஆலோசனைகளைப்பற்றி வெறுப்புடன் பேசுவதனுல் தம் ஆட்சியைச் சிறப்பித்துக்கொண் டார். உத்தியோகத்தை ஏற்றுக்கொண்ட சில வாரங்களுக்குள் தமக்கு ஒரு நல்வரவுப் பத்திரம் வழங்கப்பெற்றபோது அவர் பின் வருமாறு பேசியிருக்கிறார்:—“நான் ஆட்சியை ஏற்றுக்கொண்ட இச் சிறு காலத்திற்குள், நான் எங்ஙனம் ஆட்சிபுரிய வேண்டு மென்றும், ஜனங்களின் விருப்பங்களுக் கிணங்க என்ன செய்யவேண்டுமென்றும், சுய ஆட்சி இயக்கத்தை எங்ஙனம் பயன்பெறச் செய்யவேண்டுமென்றும், நிர்வாக அதிகாரமும் நியாய அதிகாரமும் எப்படிப் பிரிக்கப்படவேண்டுமென்றும் இன்னும் பலவுமான அரிய ஆலோசனைகள் எனக்கு அனுப்பப் பட்டிருக்கின்றன. இத்தகைய கூடமான ஆலோசனைகள் தம் மளவில் மதிப்பும் பிரயோஜனமு முள்ளவைகளே யாயினும்

அவைகளோடு ஜனங்கள் நகரவாசிகளாகவும் குடிமக்களாகவும் எத்தகைய கடமைகளை வகிக்கவேண்டியவர்களென்பதும் வற் புறுத்தப்படின், அவ்வாலோசனைகள் இன்னும் அதிக பயன் விளைப்பனவாகும். ஜனங்களின் உயிரையும் பொருளையும் காக்கும்பொருட்டு அரசாங்கத்தார் எங்ஙனம் திறம்பட ஆட்சி புரியலா மென்பதைப்பற்றியும், ஜனங்கள் சமூகத்தினர்க்குத் தாங்கள் செய்யவேண்டிய கடமையை உணருமாறு எங்ஙனம் ஊக்கங் கொளுத்தப் படலாமென்பதைப்பற்றியும் சொல்லப் படும் ஆலோசனைகளை நான் விரும்பி ஏற்றுக்கொண்டிருப்பேன்; இனி ஏற்றுக்கொள்வேன். அனுசரிக்கப்பட வேண்டிய முறையின் மற்ற விஷயங்க ளெல்லாம் மேற்கூறிய இரண் டிற்கும் கீழ்ப்பட்டவை என்பதே என்னுடைய அபிப்பிரா யம். எனவே அவ்விரண்டும் போதிய அளவு நிறைவேறும் வரை மற்றவிஷயங்கள் ஒதுங்கி நிற்கவேண்டும்.'' நாட்டின் முன்னேற் றத்திற்கு இன்றியமையாததென அவர்கள் கொண்டிருந்த சீர் திருத்தங்கள் கூடமான ஆலோசனைகளென்றும், ஜனங்களின் உயிரையும் பொருளையும் பாது காப்பதிலும் அவர்களுக்குச் சமூ கக் கடமைகளை உணர்த்துவதிலும் அவர்கள் தமக்கு உதவி புரிய வேண்டுமென்றும் ஸர் மைகல் தம் பிரசங்கத்தைக் கேட் டிருந்தவர்களுக்கு இங்ஙனம் அறிக்கை செய்து விட்டனர். உயி ரும் பொருளும் நன்கு பாதுகாக்கப் படுகின்றன வென்றும், இப் பாது காப்பு பிரிடிஷ் ஆட்சியினால் விளைந்த நன்மைகளுள் சிறப் பானதாகக் கருதப்படுகிற தென்றும், ஸர் மைகல் உரைகளைக் கேட்டிருந்தோர் சீர்திருத்த தாகங் கொண்டிருந்தது சமூகக் கட மையைக் காட்டியதென்றும் ஒருவர் நினைத்திருத்தல் கூடும். அதேபேச்சில் ஸர்மைகல் தேசபாஷா பத்திரிகைகளுக்குக்கு ஒரு பிரசங்கஞ்செய்தனர். அந்தப் பிரசங்கத்திற்குப் பிறகு அச்சுச் சட்டத்தின்படி நடவடிக்கை யெடுத்துக் கொள்ளப்பட்டது.

தேசபாஷா பத்திரிகைகள் பலவற்றிற்கு ஜாமீன் கேட்கப்பட்டது. முன்னரே கட்டியிருந்த ஜாமீன் தொகையைச் சில பத்திரிகைகள் இழந்துவிட்டன. இதற்கு ஒரு மாதத்திற்குப் பிறகு பஞ்சாப் சட்டசபைத் தலைவராக அவர் முதல் முதல் பேசிய பொழுது பத்திரிகைகளுக்கு இரண்டாமுறை பின் வருமாறு எச்சரிக்கை செய்யலானார். "இதற்கு முன்னரே எடுத்துக் கொள்ளப்பட்ட நடவடிக்கை விரும்பியவாறு பயன்தராவிடின், ஒழுங்கீனத்தையும் விசுவாசக் குறைவையும் பரப்பிச் சட்டத்தைக் கடந்து நடப்போரை நடத்துவது போலவே அரசாங்கத்தார் இக் குற்றவாளிகளையும் நடத்துவர். மேலும், சட்டம் இடந்தரும் எல்லா முறைகளும் அவர்கள் விஷயத்தில் உபயோகிக்கப்படும். அவைகளில் ஜாமீன் வாங்குதலும் அதைப் பறிமுதல் செய்தலும் கடையானவைகளாகும்." இந்தப் பேச்சிற்குப் பிறகு, பத்திரிகைகள் விஷயத்தில் மிகக் கொடுமையான முறைகள் அனுசரிக்கப்பட்டன. ஆயினும் ஸர் மைகல் அதே பேச்சில் மாகாணத்தின் சமாதானத்தைப் பற்றிப் பேசுங் கால் பின் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்; "இதற்கு முன்னரே விளைந்துள்ள பயன்கள், இம்மாகாணத்தில் எப்பொழுதும் ஏற்பட்டிருப்பதுபோல் அரசாங்கத்தாருக்கும் ஜனங்களுக்கும் ஏற்பட்டிருக்கும் பரஸ்பர நம்பிக்கையினாலும் ஒத்த கலப்பினாலும் விளைந்தவைகளேயாகும்." இதற்கு ஆறுமாதத்திற்குப் பிறகு பஞ்சாப் மாகாணத்தில் நிர்வாக சபை ஏற்படுத்தும் விஷயமாகப் பேசியபொழுது அவர் தம் அபிப்பிராயங்களை வெளியிடச் சமயம் வாய்த்தது. இக்குற்றமற்ற ஆலோசனைக்கு அவர் 1914-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 13-ந்தேதி பின்வருமாறு பதில் கூறியிருக்கிறார்:—"இவ்வாலோசனை எனக்கு ஆச்சரியத்தை யுண்டு பண்ணுகிறது. தொடக்கத்திலிருந்து இம்மாகாண வாசிகள் லெப்டினண்ட் கவர்னரே மாகாணத்தின் தலைவரென்றும்,

மாகாண ஆட்சிக்கு அவரே பொறுப்புடையவரென்றும் கருதி வந்திருக்கிறார்கள். அம்முறையில் மாகாணம் முன்னேற்ற மடைந்து வளம்பெற்று எவ்விதத்திலும் மற்ற மாகாணங்களுக்குப் பின்வாங்காமலிருந்து வந்திருக்கிறது. தற்போதைய ஆட்சி முறை குறைபாடுள்ளதென்றும், அக்குறைபாடு நிர்வாக சபை யொன்று சேர்க்கப்படுவதனாலேயே நீங்குமென்றும் நிரூபித்துக் காட்டுவதனாலேயே இவ்விஷயம் நடவடிக்கைக்குக் கொண்டு வரக்கூடியதென ஏற்றுக்கொள்ளப் படலாம்." பிறகு அவர் தமக்கு மரியாதை செய்ய வந்தவர்களை நோக்கி 'அரசாங்க அமைப்பு முறைகளைப்பற்றி மூடர்கள் வாதஞ் செய்யட்டும்' என்ற மேற்கோளைச் சொல்லி அவமதிக்கலானார்.

## யுத்தமும் அதற்குப் பிறகும்.

ஐந்து மாதங்களுக்குப் பிறகு யுத்தந் தொடங்கியது. பஞ்சாபிகள் ஸர் மைகலின் பேருதவியினால் செய்யப்பட்ட இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தைப் போதுமான வரை அனுபவிக்கலானார்கள். இச்சட்டம் செய்யப்பட்டதில் அவர் எவ்வளவு பாகத்தை வகித்தனரென்பதையும், சாதாரண சட்டங்களையும் பாதுகாப்புக்களையும் மீறிநடக்க எத்தகைய அதிகாரத்தை அவர் வேண்டினரென்பதையும் அவரால் செய்யப்பட்டவைகளும் உடனே இம்பீரியல் அரசாங்கத்தாரால் அங்கீகரிக்கப் பட்டவைகளுமான கீழ்க்கண்ட சிபார்சுகளினின்றும் தெரிந்து கொள்ளலாம். அவைகளை இராஜத்துரோக விசாரணைச் சங்கத்தாரது அறிக்கையின் 151-வது பக்கத்திலிருந்து எடுத்திருக்கிறோம்:—

புரட்சிக்காரர்களுள்ளும் இராஜத் துரோகத்தைப் பரப்புவோர்க்குள்ளும், குற்றஞ் செய்யும்போதேனும் உபத்திரவத்தை உண்டாக்க முயலும் போதேனும், பிடிக்கப்பட்டவர்களும் பிடிக்கப் படக் கூடியவர்களும் விசாரணை செய்யப்படும்போது நியாயவாதி

களின் திறமையினல் காக்கப்படுமாறும், சாதாரண சட்டம் இடந்தருவதுபோல் அவர்களுடைய விசாரணை அப்பீல் முதலிய முறைகளினல் நீண்டகாலம் தாமதித்திருக்குமாறும் தற்போழ்து விட்டிருத்தல் விரும்பத்தக்கதல்லவென லெப்டினண்ட் கவர்னர் அபிப்பிராயப்பட்டார். எனவே அவர் பிரதேச அரசாங்கத்தாரின் அங்கீகாரத்திற் கிணங்கக் கீழ்க்கண்ட விஷயங்களில் அனுசரிக்கப்பட வேண்டி ஆட்டினன்ஸ் ஒன்றைத் தயார்செய்து கொடுத்தனர்; (1) அரசியல் சம்பந்தமான குற்றங்களில் ஒப்புவிக்கும் முறை விலக்கப்படவேண்டும்; (2) அக்குற்றங்களுக்கு அப்பீல் இல்லாதிருக்கவேண்டும்; (3) சாதாரண சட்ட முறையைக் காட்டிலும் விரைவான சட்டமுறை அனுசரிக்கப் படுவதனல் பாதிக்கப்படுகிறவர்களிடமிருந்து ஜாமீன் வாங்கப்படல் வேண்டும்; (4) புரட்சி சம்பந்தமான குற்றவாளிகளோடு சம்பந்தப்பட்டு அவர்களைத் தங்களோடு வைத்திருக்கும் கிராம உத்தியோகஸ்தர்கள் தண்டிக்கப்படவேண்டும்; கிராமத்தினர் அபராதம் விதிக்கப்பெறவேண்டும்."

இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்படி தமக்குக் கிடைத்த அதிகாரத்தை ஸர் மைகல் ஸ்ரீமான்களான திலகரும் பாலரும் தம் மாகாணத்திற்குள் பிரவேசிக்கலாகாதெனத் தடுப்பதில் துர்வினியோகப் படுத்தலானர்; பஞ்சாப் வாசிகளுள் நூற்றுக் கணக்கானபேரைத் தக்க காரணமின்றிக் காப்பில் வைத்தனர்; தேசபாஷா பத்திரிகைகளின் வாயைப்பூட்டி வெளி மாகாணங்களில் நடைபெறும் "**நியூ இந்தியா**" "**அம்ருதபஜார்**" "**இண்டிபெண்டெண்ட்**" பத்திரிகைகள் போன்ற தேசீயப் பத்திரிகைகளைப் பஞ்சாபிற்குள் வரவொட்டாமல் தடுத்தார்; முன்னரே சென்ஸாரினல் பார்வையிடப் பெறும் தேசபாஷா பத்திரிகைகளும் வெளிவரலாகாதெனத் தடுத்தனர். இதனல் ஜனங்கள் தங்கள் அபிப்பிராயங்களைச் சுயேச்சையாய் ஒருவருக்

கொருவர் தெரிவித்துக்கொள்ளவும், தங்கள் குறைகளைப் பத்திரிகைகளின் மூலமாக வெளியிடவும் வசதி யில்லாமல் பரிதபிக்கலானார்கள். சுயேச்சையாய்ப் பேசுவதையும் சுயேச்சையாய் எழுதுவதையும் தடுத்தான பிறகு, பஞ்சாப் வாசிகள் தம் ஆட்சியிலேயே மிக்க சந்தோஷமாய் வாழ்ந்து வந்தார்களெனத் தாம் எண்ணியிருந்ததுடன் பிறரும் அங்ஙனம் எண்ண வேண்டுமென அவர் குறிப்பிடலானார்.

## பயமுறுத்தலும் எச்சரிக்கையும்.

அரசியல் நோக்கங்களைச் சீர்குலைக்குமாறு அவர் அவசரச் சட்டத்தைத் துர்வினியோகப்படுத்தியதுமன்றி, உயர்ந்த பதவிகளிலுள்ளவர்களைத் தம் முன்னழைத்துப் பயமுறுத்தி அவர்களுக்கு எச்சரிக்கை செய்வதில் தம் பதவிக்குரிய அதிகாரத்தைக் கெட்டவழியில் உபயோகிக்கலானார். பொது ஜன ஊழியத்தில் தளரா ஊக்கங் கொண்டிருப்பவரான லாலா துனி சந்த் ஸர் மைகல் ஓட்வியர் ஆட்சி முறையின் இந்தப் பகுதியில் நேரான அனுபவம் பெற்றிருக்கிறார். அவர் எங்களுக்குக் கொடுத்துள்ள வாக்கு மூலத்தில் பின்வருமாறு சொல்லுகிறார்: "இந்திய சங்கத்தின் காரியதரிசி பதவியை வகித்தபடியால் நான் பொதுக் கூட்டங்கள் கூட்ட வேண்டியவனாயிருந்தேன். கூட்ட விளம்பரங்கள் வெளியான பிறகு, தம்மை வந்து பார்க்குமாறு அரசாங்கக் காரியதரிசியேனும் லாகூர் கமிஷனரேனும் என்னைக் கூப்பிட்டனுப்புவார். அவர்கள் எனக்குப் பல இடையூறுகளை ஏற்படுத்தினார்கள். என் நிலைமையிலுள்ள பலர் இவ்விடையூறுகளைக் கண்டு லாகூரில் பொதுக் கூட்டங்கள் கூட்டுவதைத் தவிர வேறெதை வேண்டுமானாலும் செய்யத் தீர்மானித்திருப்பர். பிரதான காரியதரிசியும் கமிஷனரும் பொதுக் கூட்டங்களிற் பேச மாகாணத்திற்கு வெளியிலிருந்து யாரை அழைக்

கலாமென்றும் யாரை அழைக்கக் கூடாதென்றும் ஸர் மைகல் ஓட்வியரின் பொருட்டு என்னிடம் பன்முறை சொல்லியதுண்டு. இது மாத்திரமன்று, மாகாணச் சட்டசபை அங்கத்தினருள் சிலர் லாகூரில் நடைபெற்ற மாகாண மகாநாட்டிற்குச் சென்றிருந்த பொழுது, பிரதான காரியதரிசி அவர்களைக் கூப்பிட்டுக் கண்டித்தனர். அதன் பயனாக அவ்வங்கத்தினர்கள் பிராட்லா மண்டபத்தில் நடைபெற்ற பிற கூட்டங்களுக்குச் செல்லத் தைரிய மற்றவர்களாக மாறியிருப்பார்கள்.''

1917-ம் வருஷத்தில் இந்தியச் சட்டசபை அங்கத்தினர் பதினெழுவர் சீர்திருத்த ஆலோசனைகளடங்கிய அறிக்கையை வெளியிடலாயினர். இவ்வாலோசனையை அங்கீகரிக்குமாறு ஒரு பொதுக் கூட்டம் கூட்டப் பெற்றது. இக்கூட்டத்தின் விளம்பரத்தில் கைச்சாத்திட்டவருள் நால்வர் பஞ்சாப் வாசிகள். ஸர் மைகல் அவர்களை வரவழைத்து, தாங்களே ஆலோசித்து விளம்பரத்திற் கையொப்பஞ் செய்ததற்காக அவர்களைக் கடிந்துகொண்டார். அதன்பிறகு, காங்கரஸ்லீக் கோரிக்கை வெளியாயது. ஸர் மைகல் பஞ்சாப் அதில் கலவாதிருக்குமாறு செய்ய மிக்க பாடுபட்டு, ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒன்று படுவதற்கான முயற்சியை எள்ளி நகையாடினர். பிரிட்டிஷ் இராஜ்யத்திற்குள் இந்தியா சுயஆட்சி பெறுமாறு மிஸஸ் பெஸண்டும் திலகர் பெருமானும் எழுப்பிய இயக்கத்தை, கொடிய முறைகளினால் பிரிட்டிஷாரின் தொடர்பை நீக்குவதற் கென வெழுந்த காடர் (Ghadr) புரட்சிக்காரர்களின் சதியாலோசனைக்கும், ஜெர்மானியரின் உதவியைக்கொண்டு இஸ்லாம் ராஜ்யத்தை ஏற்படுத்த வேண்டுமென்று ஆலோசனைசெய்து பலரைப் பாழ்படுத்திய பஞ்சாபின் வடமேற்குகிலுள்ள பைத்தியக்காரர் சிலரது சூழ்ச்சிக்கும் ஒப்பிடத் துணிவுகொண்டனர். அவர் காடர் இயக்கத்தைக் கருணையற்ற வழியில் அடக்கி, குற்றமற்ற பலரை அநியாயமாய்

நடத்தினர். 1915-ம் வருஷத்தில் மேல் பஞ்சாபில் நடந்த கொள்ளையை அவர் தானியத்தின் பொருட்டு ஏற்பட்ட சாதாரண கலகமெனக் கருதுவதாக முதலில் பாவனை செய்து, அது மிகவும் கொடுமையானதாக வளர்ந்து சேனைக்கு ஆள் சேர்ப்பதையே பாதிக்குந் தன்மையதாக மாறிய பிறகே தக்க முறைகளைக் கைக்கொண்டு அதனை அடக்கத் தலைப்பட்டனர்.

## படித்தவர்களை நிந்தித்தல்.

1917-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 13-ந்தேதி, கனம் மிஸ்டர் மகமத் ஷாபி பஞ்சாப் சட்ட நிர்வாக முறை பீஹார் ஒரிஸா மாகாணத்தின் முறையோடு ஒன்று சேர்க்கப்பட வேண்டுமென ஒரு தீர்மானம் கொண்டுவந்தனர். இத்தீங்கற்ற தீர்மானத்தை ஒருவரும் எதிர்த்தாரில்லை. ஸர் மைகலே இத்தீர்மானத்திற்கு அனுகூலமாகப் பேச எழுந்தனர். ஆனல் ஒவ்வொருவரும் ஆச்சரியப்படுமாறு அவர் அந்தப்பேச்சில் சந்தர்ப்பத்திற்குப் பொருந்தாத விஷயத்தையும் படித்தவகுப்பினரைப்பற்றிய வசைமொழிகளையும் வேண்டியவரை புகித்திவிட்டனர். ஸ்ரீமான் பண்டித மதன் மோகன் மாளவியா அதனைப் பொறுக்க வொண்ணது ஸர் மைகல் பேசியதைத் தடுத்து அவர் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டுமெனக் கேட்கலாயினர். இராஜப் பிரதிநிதியார் தெரிவித்ததன்மேல் ஸர் மைகல் மன்னிப்புக் கேட்டுக் கொண்டனர். இராஜப் பிரதிநிதியார் ஸர் மைகலின் கொள்கைகளினின்றும் மாறுபடுதல் உசிதமெனக் கண்டு கொண்டனர். அது காலை ஸர் மைகல் பேசிய பேச்சினின்றும் சில பகுதிகளை ஈண்டுக் குறிப்பிடுகின்றோம்:—

"என் மாகாணத்தைப் பொறுத்தவரையில், நான் துரிதமான முன்னேற்றத்தை நல்வரவேற்பேனெனினும், சுய ஆட்சிக்கு இன்றியமையாதனவென மில் கூறியுள்ள நிபந்தனைகள்

இன்னும் வெகுகாலம்வரை ஏற்படாதெனச் சொல்வேன். இந்தியாவின் இராஜபக்தியையும், இந்தியரின் உதவிகளையும் பஞ்சாப் சேனையைப் பிரதானமாகக் கொண்டுள்ள இந்திய சேனை பட்ட கஷ்டங்களையும் காரணங்காட்டி அரசியலுரிமைகளைக் கேட்போர், அரசர் பெருமானரிடம் இராஜபக்தியையும், அர்ப்பணத்தில் பெரும்பாகத்தை வகிக்கும் மாகாணத்தினிடம் அனுதாபத்தையும், சாதுர்யமான வார்த்தைகளினுற் காட்டாமல் சேனைக்கு ஆள்சேர்த்தல் முதலிய வேலைகளைச் செய்வதனுல் காட்டுவார்களாயின் நாம் சந்தோஷப்படுவோம்."..............
"அரசியற் பிரசங்கங்களினுல் நம் காது செவிடுபட்டும் அரசியல் அறிக்கைகளினுல் கண் குருடுபட்டும் வரும் இந்நாளில், நாம் போலி விஷயங்களை விலக்கி உண்மையை யறிந்துகொள்ளுமாறு ஒவ்வொரு சமயத்தில் பூமிதேவியின் பால் நமது பார்வையைச் செலுத்தி இந்தச் சத்தமும் பேச்சும் நிலத்தின்மேலுள்ளவனுக்கு, ஏர்பிடித்துழுபவனுக்கு, ஒரு மாசூலுக்கும் இன்னெரு மாசூலுக்கு மிடையில் உயிர்வாழ்வதிற் கஷ்டப்படுபவனுக்கு, என்ன செய்யுமென்பதைச் சிறிது ஆலோசித்துப் பார்த்தல் நலமாகும்."
மேற்கண்ட பேச்சின் உட்கருத்து மிகவும் வெளிப்படையாயிருக்கிறது. படித்தவர்களை இங்ஙனம் எதிர்த்ததற்காகவே அவர் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுமாறு தெரிவிக்கப்படலானர்.

## நிந்தனையின் திருத்தப்பதிப்பு.

சாதாரண ஆங்கிலத்தில் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுதல் என்பதற்குப் பொருள் யாதோவெனில், ஒருவன் தன் பேச்சுக்காகவேனும் செய்கைக்காகவேனும் மன்னிப்புக்கேட்டுக்கொண்டால் அவன் அக்குற்றத்தை மறுபடியுஞ் செய்யமாட்டானென்பதேயாம். அவ்வாண்டிலேயே அக்டோபர் 30-ந் தேதி ஸர்

மைகல் பின்வரும் மொழிகளினால் அக்குற்றத்தை மறுபடியுஞ் செய்யலானார்.

"சென்ற மாதம் இம்பீரியல் சட்டசபையில் பேசிய பேச்சில் நான் இந்தயுத்தத்தில் பஞ்சாப் செய்துள்ள உதவிகளை வற்புறுத்திப் பேசியது, மற்ற மாகாணங்களோடும் அவைகள் யுத்த காலத்தில் செய்த வேலைகளோடும் பஞ்சாபையும் அதன்வேலைகளையும் சீர் தூக்கிப் பார்த்துக் கூறியதன் காரணமாக, வரம்பு மீறியதெனச் சிலரால் கருதப்பட்டது. பணத்தாலும் மனிதர்களாலும் பொருள்களாலும் பஞ்சாப் யுத்தகாலத்திற் செய்த உதவி மிகவும் மேலானதென்றும், அரசாங்கத்தாரின் பிரத்தியேக மதிப்பிற்குரியதென்றும் வாதித்தலை நான் இப்பொழுதும் கடைப்பிடித்து நிற்கிறேன். கஷ்டத்தை மிகுதியாகப் பங்கிட்டுக் கொண்டவர்களான போர்த்தொழில் வகுப்பினர் செய்த வேலைகள் அரசாங்கத்தாரால் சிறப்பாகக் கவனிக்கப்படுகின்றனவென்றும், இனிக் கவனிக்கப்படுமென்றும், அரசியல் உரிமைகளெனச் சொல்லப்படுபவை மற்ற வகுப்பினரைக் காட்டிலும் போர்த்தொழில் வகுப்பினர்க்குக் குறைந்த பயன் விளைப்பனவென்றும், அவர்களுக்கு ஏற்றனவாயும் தேவையானவையாயுமுள்ள பரிசளிப்பு முறைகளையும் அங்கீகாரங்களையும் நாம் தெரிந்துகொள்ளவேண்டுமென்றும் நான் இன்னும் வாதித்து நிற்கிறேன்."

இத்திருத்தப் பதிப்பில் குற்றம் மறுபடியும் செய்யப்பட்டிருப்பது மாத்திரமன்றி, அதிகமான அளவிலும் செய்யப்பட்டிருக்கிறது. ஸர் மைகல் குற்றங்காண்பான் வேண்டி இவ்விஷயத்தை மீண்டு மெடுத்துப்பேசி, பஞ்சாபின் யுத்தவேலைகள் மிகச்சிறந்தனவென்பதை,ஒருவரும் மறுக்காமலிருக்கும்போது, ரூபிக்கும்பொருட்டு உண்மைகளைத் திரித்துக் கூறுகின்றார். அவர் போர்த்தொழில் வகுப்பினரை ஏனைய வகுப்புக்களினின்

றும் வேறு பிரித்து, அரசியல் முன்னேற்றத்தில் ஆர்வமற்றவர்களென அவர்களை இழிவுபடுத்தி, பிரத்தியேக நலன்களை வழங்குவதாக ஆசைகாட்டி அவர்களை மற்றவர்களிடமிருந்து வேறு பிரிக்க முயல்கிறார். மேற்கூறிய அவர் பேச்சினின்றும் அவர் படித்தவர்களிடம் கொண்டுள்ள வெறுப்பும், அவர்களுக்கு அரசியலதிகாரங் கொடுக்கக்கூடாதெனக் கொண்டிருந்த அபிப்பிராயமும் வெள்ளிடை விலங்கலாகும்.

அரசியல் சீர்திருத்த விஷயமாக இந்தியா அரசாங்கத்தார் வெளியிட்ட அறிக்கையோடு சேர்க்கப்பட்ட ஸர் மைகலின் அறிக்கை அவர் படித்த வகுப்பினரிடம் கொண்டிருந்த வெறுப்பை இன்னும் அதிகமாகப் புலப்படுத்துகின்றது. இந்தியா முழுவதற்காகவும் படித்த வகுப்பினர் கேட்டதை விவரித்துக் கூறுங்கால் ஸர் மைகல் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கின்றார்: "தங்கள் நலன்களை இழக்கும் அபாயத்திலுள்ள பொதுஜனங்கள் (சீர்திருத்தத்தைக்) கேட்கவில்லையென்பதும், பதவிக்கும் அதிகாரத்திற்கும் ஆசைப்படும் சிறு பகுதியினரே கேட்கின்றனரென்பதும் நமக்கு நன்கு புலப்படும்போது, நாம் நம்மிடம் ஒப்புவிக்கப்பட்டுள்ள நம்பிக்கைக்கு உண்மையாக நடந்துகொள்ள வேண்டுமாயின், எவ்வளவு துன்பம் விளைக்கக்கூடியதும் இடைவிடாததுமாயிருப்பினும், அரசியற்காரரின் கூச்சலுக்கு இடங்கொடாமல் மௌனமாயிருக்கும் பொதுஜனங்களின் நலன்களையே கவனித்தல்வேண்டும். இச்சந்தர்ப்பத்தில் நான் பர்க்கின் அரிய எச்சரிக்கையை எடுத்தாள விரும்புகின்றேன்: 'பிரிட்டிஷ் ஓக் மரத்தின்கீழ் அநேகமாயிரம் பெரிய கால்நடைகள் படுத்து மௌனமாக அசைபோட்டுக்கொண் டிருக்கும்போது, ஓர் இலையின்கீழ் ஐந்தாறு வெட்டுக்கிளிகள் செய்யும் சப்தம் வயல்முழுவதும் தொனித்துக் கொண்டிருப்பதைக்கொண்டு வெட்டுக்கிளிகள் மாத்திரமே அங்கிருப்பவையென எண்ணிவிடாதீர்கள்.'"

இம்மேற்கோளில் எவ்வளவு கொடுமையான நிந்தனை அடங்கி யிருக்கிறதென்பதை நாங்கள் வியாக்கியானஞ் செய்யவேண்டுவ தில்லை. அதே அறிக்கையில் அவர் உண்மைக்கு நேர்விரோத மாகச்சென்று, படித்தவகுப்பினர் பொது ஜனங்களோடு சம்பந்தப் படாதவரென்றும், பொது ஜனங்கள் படித்த தலைவர்களைத் தங் களுக்கு வேண்டியவர்களெனக் கருதுவதில்லையென்றும் குறிப் பிட்டிருக்கிறார். மிஸஸ் பெஸண்ட், ஸ்ரீமான் திலகர், மிஸ்டர் ஜின்னா, கனம் பண்டித மதன்மோகன் மாளவியா, மகமதபாத் ராஜா முதலாயினோர் சுய ஆட்சி விஷயமாகச் செய்த முயற்சி களை அவர் இகழ்ந்து கூறுகிறார். அவர் பிராமணரல்லாதார் இயக்கத்தைப்பற்றிப் பிரமாதமாகக்கூறி, எல்லா இந்திய முஸ் லிம் சங்கத்தைச் சாதாரண கூட்டமெனக்கொண்டு, தாம் தில கரையும், மிஸஸ் பெஸண்டையும் மாகாணத்திற்குள் வரவொட் டாமல் தடுத்திருந்தும் பஞ்சாப் கண்விழித்துக்கொண்டது பற்றி மனவருத்தமுற்று, யோசிக்கப்படும் சீர்திருத்தம் அரசியல் வகுப்பாருக்கு மாத்திரமன்றி இந்தியரெல்லோருக்கும் பயன்படு வதாயிருக்கவேண்டுமெனக் கருதப்படல்வேண்டுமெனக் கூறுகி றார். அவர் கீழ்க்கண்டவாறு தம் அறிக்கையின் இந்தப் பாகத்தை முடிக்கின்றார்: "இந்தியா அரசாங்கத்தாரின் ஆலோசனைகளில் இக்கொள்கை போதிய அளவு அங்கீகரிக்கப்படாமையினாலேயே நான் இதனை வற்புறுத்திக்கூறலானேன். ஒருகால் இஃது இங்ஙனமிருக்கவேண்டுமெனப் பாவித்துக்கொள்ளப்பட்டிருக்க லாம். ஆயினும் இத்தகைய கடமை விளங்கக் கூறப்படாம லிருத்தல்கூடாது. இக்கொள்கை வெளிப்படையாகக் குறிப் பிடப்படாமையினால், கவனிக்கப்படவேண்டிய விஷயம் படித்த வகுப்பினருள் சிறு பகுதியினரின் விருப்பத்திற்கு எங்ஙனம் இணங்குவதென்பதொன்றே அறிந்துக்கொள்ளப்பட வேண்டு மெனச் சீர்திருத்த ஆலோசனை குறிப்பிடுவதுபோல் காணப்படு

கின்றது. படித்த வகுப்பினருள் சிறு பகுதியினர் தாம் பொது ஜனங்களின் பிரதிநிதிகளெனச் சொல்லிக்கொள்ளுதல் உண்மையே. ஆயினும் சென்ற சிலமாதங்களாக வெளிவந்துள்ள விஷயங்களைக் கவனித்தபிறகு அவர்கள் ஜனப்பிரதிநிதிகளெனச் சொல்லிக்கொள்ளுதல் உண்மையல்லவென்பதைச் சொல்ல வேண்டுவது அவசியமில்லை. செய்யக்கூடிய எந்தப்பரிசோதனையை வேண்டுமானாலும் எடுத்துக்கொள்வோம். மதசம்பந்தமான கலகங்களைத் தடுப்பதிலேனும், வகுப்பு வித்தியாசங்களை ஒழிப்பதிலேனும், சேனைக்கு ஆள்சேர்ப்பதிலேனும் அரசியற்கிளர்ச்சிக்காரர்கள் தலையிடாமல் ஒதுங்கி நின்றுவிடுகிறார்கள். அவர்கள் நல்வழியில் ஒன்றுஞ்செய்ய இயலாதவர்கள். ஆனால் சில சமயங்களில் அவர்கள் கெட்ட எண்ணத்துடன் நியாயமில்லாத இடையூறுகளை விளைத்து உபத்திரவத்தை அதிகப்படுத்தி விடுகிறார்கள். சுய ஆட்சி கேட்கப்படுவதற்கு ஒரு காரணமாகச் சுதேச மன்னராட்சிக்குட்பட்ட நாடுகளில் மதசம்பந்தமான கலகங்கள் ஏற்படுவதில்லையெனச் சொல்லப்படுகிறது. இதற்குப் பலகாரணங்களிருக்கின்றன. ஆயினும் அவைகளுள் முக்கியமானது, அரசியற்கிளர்ச்சியையே வேலையாகக் கொண்டுள்ளவர்கள் அவ்விடங்களில் இல்லாதிருப்பதேயாம்; அங்ஙன மிருப்பினும் இடையூறுண்டாக்காதவாறு தடுக்கப்படுகின்றனர். எனக்குத் தெரிந்தவரையில் சமீபத்தில் சுதேச நாடுகளில் ஏற்பட்ட மதக் கலகம் போபாலில் ஸுன்னி வகுப்பினருக்கும் ஷியா வகுப்பினருக்கும் ஏற்பட்டதொன்றேயாம். இக்கலகம் தம்மைப்பகிரங்கப்படுத்திக் கொள்ளவேண்டுமென ஆவல் கொண்டிருந்த பம்பாய் மகமதிய வக்கீல் ஒருவர் தலையிட்டதனாலேயே பொங்கியெழும்பியது.''

இதனால் அரசியல் வகுப்பினர் இந்தியா முழுவதிலும் யாதொரு வேலைக்கும் பயனற்றவர்களென ஸர் மைகல் நிரூபிக்க முயல்கின்றனர்.

## எழுச்சியின் காரணங்கள்

ஸர் மைகல் மேற் கூறியவாறு படித்த வகுப்பினரைப் பகைத்துக் கொண்டனர். அவர் பிற வகுப்பினரை நேசிப்பதாகப் பாவனைசெய்து வந்தன ரெனினும், சேனைக்கு ஆள் சேர்க்கும் முறைகளினாலும் யுத்த நிதிக்குப்பணஞ் சேர்க்கும் வழிகளினாலும் மற்றவர்களையும் விரோதமாக்கிக் கொண்டார். இவ்விஷயத்தை நாங்கள் மிக்க தாமதத்தின் மேலேயே வெளியிடுகின்றோம். யுத்த காலத்தில் சேனைக்கு ஆட்களும் நிதிக்குப் பணமும் சேர்க்க வேண்டிய அவசியத்தை நாங்கள் உணர்ந்திருக்கிறோம். இந்தியா பிரிட்டிஷ் இராஜ்யத்தின் மற்றப் பாகங்களோடு சமமாகக் கருதப்பட வேண்டுமாயின், இராஜ்யத்தின் சுமையில் தன் முழுப்பாகத்தையும் இந்நாடு பகிர்ந்து கொள்ள வேண்டுமென்பதையும் நாங்கள் நன்குணர்ந்திருக்கிறோம். எனவே, கூடுமாயின், நாங்கள் ஆட்களும் பணமும் சேர்க்கப்பட்ட முறைகளைப் பற்றி ஒன்றும் சொல்லாமல் இருந்திருப்போம். ஆனால் வேலையை நிறுத்தி விரதமிருக்க வேண்டுமெனச் சொல்லப்பட்டபோது பொதுஜனங்களும் வகுப்பினர்களும் அதை ஏற்றுக் கொண்டதையும், பஞ்சாபில் எதிர்பாராத வழியில் பொதுஜனங்கள் சினந் தெழுந்ததையும் உள்ளவாறு அறிந்து கொள்ள வேண்டுமாயின், விரதமிருக்க ஜனங்கள் ஆவலோடு ஒருப்பட்டதற்கும் பஞ்சாபில் கொடுஞ் செயல் வெளியானதற்கும் காரணங்கள் யாவை யென்பதை அறிந்து கொள்ளுதல் அவசியமாகும். ரௌலட் சட்டத்தை எவ்வளவு தான் தவறாக எடுத்துக் கூறியிருந்த போதிலும், அது விரதமிருப்பதற்கும் சினந்தெழுவதற்கும் பொதுஜனங்களைத் தூண்டியிராது. இராஜ்யத்திற்கு ஒருவர் செய்யவேண்டிய கடமை மனிதர்களின் பிரத்தியேக சுதரந்தரத்தையும், இரகசியமாகவோ பகிரங்க

மாகவோ செய்யப்படும் சட்ட விரோதமான கொடுஞ் செயல்களை யும் கட்டாய முறைகளையும் பொருட்படுத்தா திருக்குமாறு விடப்படுதல் கூடாது. நாங்கள் சேகரித்துள்ள சாட்சியமும், படித்த தஸ்தாவேஜுகளும், சேனைக்கு ஆள் சேர்ப்பதற்கும் யுத்த நிதிக்கு நன் கொடை வசூலிப்பதற்கும் அனுசரிக்கப்பட்ட முறைகள் நியாய வரம்புகடந்து நிர்ப்பந்தமானவை களாயிருந்தன வென்பதை வெளிப்படுத்துகின்றன. இம்முறைகள் ஸர் மைகல் ஓட்வியருக்குத் தெரியாமலிருந்திருக்கவில்லை. கட்டாயச் சேவக முறை பகிரங்கமாகப் பேசப்பட்டும் சிபார்சு செய்யப் பட்டும் வெளியிடப்பட்டும் வந்தது. பகிரங்கமான கட்டாயச் சேவக முறை சுயேச்சையாய்ச் சேனையிற் சேர்தலென்று சொல்லப் பட்ட முறையைக் காட்டிலும் பன்மடங்கு மேலானதாக இருந் திருக்குமென நாங்கள் நினைக்கிறோம். சுயேச்சையாய்ச் சேரும் முறை எளியவர்களைக் கட்டாயப்படுத்தி, பலத்தவர்களைச் சுயேச்சையாய் விட்டுவிட்டது.

உண்மையை ஈண்டுச் சிறிது உற்று நோக்குவோம். டில்லி எற்பாடு முடிவு செய்யப்பட்டவுடன், 1918-ம் வருஷம் மே மாதம் 4-ந் தேதி நடைபெற்ற கூட்டத்தில் ஸர் மைகல் "கிரம மான சேனைக்கு 200,000 பேர் சேர்க்கப்படவேண்டும். கூடு மானால் சுயேச்சை முறையும் தேவையானால் கட்டாயச் சேவக முறையும் கைக்கொள்ளப்பட வேண்டும்." என்று பேசியிருக் கிறார். அதே கூட்டத்தில் கர்னல் போபம் யங் பின்வருமாறு பேசியிருக்கிறார். "முயற்சியை எங்ஙனம் பகிர்ந்து கொடுத்த லென்னும் விஷயத்தைத் தீர்மானிக்குங்கால், பலர் சரியான வழியில் திருப்பப்பட வேண்டுவதும் கட்டாயப்படுத்தப்பட வேண்டுவதும் அவசியமாகும். நாம் சுயேச்சை முறையில் ஆள் சேர்க்கும் முறையையே கைக்கொண்டு செல்வோம். கிடைக்கக் கூடிய பொருளுக்கேற்ற விதமாக ஒவ்வொரு ஜில்லாவும் தாசி

லும் கிராமமும் எவ்வளவு பேர் உதவவேண்டுமென்பதை வரையறை செய்து, அவைகளுள் பெரும்பாலனவற்றில் நமக்குத் தேவையான மனிதர்களைக் கட்டாய முறையின்றியே பெறுவோம். கடமையைச் செய்வதற்காக முன்வருவோரை நாம் நியாயமாக நடத்தும்பொருட்டு நமக்கு உடனே அதிகாரம் வழங்கப்பெறல்வேண்டும். அவ்வந்தப் பிரதேசங்களிலுள்ள ஜனங்கள் தங்களுள் சிறந்தவர்களைத் தாங்களே தெரிந்தெடுத்தனுப்பத் தவறும்போது, அரசாங்கத்தார் தலையிட்டு அவர்களுக்காக ஆட்களைப் பொறுக்கி யெடுப்பர்."

## கட்டாயச் சேவக முறையைப்பற்றி

அதே கூட்டத்தில் ஸர் மைகல் பின்வருமாறு பேசியிருக்கிறார்:

"சேனைக்கு ஆள் சேர்க்கும் விஷயத்தை முடிக்குமுன், கட்டாயச் சேவகத்தைப்பற்றி நான் இரண்டொரு வார்த்தை சொல்ல வேண்டும். தேவையாயுள்ள 5 லக்ஷம் போர்வீரர்களைச் சேர்ப்பதற்காக இந்தியாவிலுள்ள மனிதர்களைக் கட்டாய முறையில் சேனையில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென ஒருவரும் எண்ணியிருக்கவில்லை. கட்டாயச் சேவக முறையைக் கைக்கொள்ளாமல் நம் வேலையை நடத்தக்கூடுமாயின் அதற்காக என்னைவிட வேறெவரும் அதிகமாக மகிழ்ச்சிகொள்ள மாட்டார். ஆனால் இதுகாறும் சுயேச்சை முறையில் சேரும்விஷயத்தில் பஞ்சாப் மிக்க ஊக்கங்காட்டி வந்திருக்கிறதெனினும், அதனால் மிக்க கஷ்ட மேற்பட்டிருக்கிற தென்பதையும், சுமை சரியாகப் பங்கிடப்படவில்லை யென்பதையும், கடமையைச்செய்த வகுப்புகளும் பிரதேசங்களும் கடமையைச் செய்யப் பின்வாங்கியவைகளைக்கண்டு விரோதங்கொள்கின்றன வென்பதையும் நாம் அறிந்துகொள்ளல் வேண்டும். நிலம்வைத்துக் கொண்டுள்ள வகுப்பினர் தாங்கள் மனிதரையும் பணத்தையும் உதவி தங்கள்

பாகத்திற்குரிய சுமையை ஏற்றுக்கொண்டிருப்பதாகவும் சில வகுப்பினர் ஒரு வழியிலும் உதவாமலிருக்கின்றன ரென்றும் நினைக்கின்றனர். வகுப்பினருக்குள் பாரம் ஏற்றக் குறைவாய்ப் பகிர்ந்து கொள்ளப்படுதல் எப்பொழுதும் நியாயமான மன வருத்தத்திற்கு இடந்தருவதாகும். மனிதர்கள் மிகவும் அவசியமாக வேண்டியிருக்கிற போதும், அந்தத் தேவை அடிக்கடி நேரிடும்போதும் இத்தகைய வருத்தம் அதிகரித்து நிற்கின்றது. சில விடங்களில் சுயேச்சை முறை பயன்பெறவில்லை யென்பதைக் கண்டுகொள்ளாதிருத்தல் பயங்காளித்தனமாகும். நாம் நம்முடைய வாக்கை அளித்திருக்கின்றோம்; அதனைக் காலத்தில் நிறைவேற்றுமாறு தக்க முறைகளைக் கைக்கொள்ளுதல் வேண்டும். மற்ற மாகாணங்களோடு சீர் தூக்கிப் பார்த்தும் பஞ்சாப் மாகாணத்தின் பல பாகங்களின் அளவுக்கேற்றவாறும் ஏற்படும் மனிதர்களின் தொகையை, இருபது அல்லது பதினைந்து அல்லது பத்து தகுதியுடைய மனிதருள் ஒருவர் வீதம் சீட்டுப் போட்டுக் கட்டாய முறையில் சேர்த்துக்கொள்ளலாமென்றும், இன்றேல் ஆளுதவ இஷ்டமில்லாதவர்களிடம் அதற்குப் பதிலாகப் பணம் வசூலிக்கப்படலாமென்றும் பஞ்சாபில் பலர் அபிப்பிராயப்படுகின்றனர். இங்கு என் முன்னுள்ளவர்களுள் பலர் என் உரையை ஆதரிக்கிறார்களென நம்புகின்றேன். அங்ஙனமாயின், இதுகாறும் யுத்தச்சுமையைத் தாங்கி வந்துள்ள மாகாணம் அதனை விளக்கமாக வெளியிடல்வேண்டும். தீர்மானம் பிறரால் செய்யப்படவேண்டுமென்பது உண்மையே. ஆயினும், கனவான்களே! இயந்திரம் உடனே வேலைசெய்யத் தொடங்குதல் கூடாததாகும். மனிதர்கள் உடனே தேவையாயிருக்கிறார்கள். எனவே இப்பொழுது அவசியமாயிருத்தல் யாதெனின், மாகாணங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப்பட்டுள்ள ஆட்களின் தொகையைக் கட்டாயப்படுத்திக் கேட்க அரசாங்கத்தார் அதிகாரம் வகித்

தல் வேண்டும். காட்டாயப்படுத்துவதன்பொருட்டு எல்லா ஏற்பாடுகளும் முன்னதாகச் செய்யப்படல்வேண்டும். தேவையான தொகை சுயேச்சை முறையிலேயே கிடைத்துவிடின், கட்டாய முறை உபயோகிக்கப்படாது."

## யுத்தக்கடனுக்குப் பொருள்பெறும் விஷயமாக ஒரு சுற்றுக் கடிதம்.

யுத்தக் கடனுக்குப் பணவுதவி பெறும் விஷயமாகப் பஞ்சாப் அரசாங்கத்தார் ஒரு சுற்றுக்கடிதம் விடுத்தனர். அதிற் கூறப்பட்டுள்ள ஆலோசனைகள் அசாதாரணமான வற்புறுத்தலின் மேலேயே நடவடிக்கைக்குக் கொண்டுவரப்படலாம். அச்சுற்றுக்கடிதத்தின் ஒரு பத்தியைக் கீழே வெளியிடுகின்றோம். " பல நகரங்களிலிருந்தும் பெறக்கூடிய பணவுதவியை மதிப்பிட்டறிந்து டெபுடி கமிஷனர்கள் யுத்த நிதிக்குப் பணம் வசூலிக்கும் விஷயத்தில் மிக்க உதவி செய்தல்கூடும். அங்ஙனஞ் செய்வதில் அவர்கள் சமீபத்தில் திருத்தி வெளியிடப்பெற்ற வருமான வரிப் பட்டியினின்றும் மிக்க உதவிபெறுதல்கூடும். வருமான வரிப்பட்டி யுத்தக்கடனுக்கு உதவக்கூடிய ஒவ்வொருவருடைய வருமானத்தையும் நன்கு குறிப்பிடுவதாகும். இவ்விஷயத்தில் முன்னரே சில ஜில்லாக்களில் ஒருவிதமான முறை அனுசரிக்கப்பட்டு வந்திருக்கிறது. சராசரியில், வரி செலுத்துவோர் தாங்கள் வரிசெலுத்தும் மொத்த வருமானத்தில் அரைப்பங்கையோ காற்பங்கையோ யுத்தநிதிக்கு வழங்கலாமென எதிர்பார்த்தல் அநியாயமானதன்று. இதனையோ இதுபோன்ற வேறெந்தப் பரிசோதனை முறையையோ கொண்டு, தங்கள் அதிகாரத்திற்குட்பட்ட கிராமங்களும் நகரங்களும் அவைகளிலுள்ளவர்களும் தத்தம் சக்திக்கேற்பப் பொருளுதவிசெய்து வருகின்ற

ஞராவென்பதை டெபுடி கமிஷனர்கள் உணர்ந்துகொள்ளுதல் கூடும்.

பிறகு டெபுடி கமிஷனர்கள் பிரத்தியேகக் கூட்டங்கள் கூட்டியும், ஸாகுகார்களைக்கொண்ட கமிட்டிகள் ஏற்படுத்தியும், இவைபோன்ற பிற முறைகளை அனுசரித்தும், மதிப்பிடப்பெற்ற தொகையை யுத்த நிதிக்காகப்பெற முயலல் வேண்டும். நியாய இலாகா உத்தியோகஸ்தர்களும், பிரத்தியேக உதவிக் கமிஷனர்கள் அல்லது தாசீல்தார்களும், தலைமைவகிக்கும் பிரதேச வியாபாரிகள் கமிட்டியார் கடனைச் சரியானபடி பகிர்ந்துகொடுக்கத் திருப்திகரமான முறையைக் கைக்கொள்வர். யுத்தநிதிக்கு வசூலிக்கப்படும் தொகைகளைப் பிரசுரஞ் செய்வதனாலும் ஒப்புநோக்கி வெளியிடுவதனாலும் நகரங்களுக்குள்ளும் வகுப்பினருக்குள்ளும் போட்டியை உண்டுபண்ணலாம். தாராளமாகப் பணவுதவிசெய்பவர்களுக்கு ஸனத், பிரத்தியேக நற்சாட்சிப்பத்திரம் முதலியவை வழங்குவதாக வாக்களித்து உதவிசெய்யலாம். இவ்விஷயத்தில் கடமையைச் செய்யத்தவறின், முனிசிபாலிடிக்கும் விளம்பரஞ் செய்யப்பட்ட பிரதேச கமிட்டிகளுக்கும் அங்கத்தினரை நியமிக்கும் விஷயத்திலும், கௌரவ மாஜிஸ்டிரேட் பதவிகொடுக்கும் விஷயத்திலும், பிற அரசாங்க கௌரவங்கள் வழங்கும் விஷயத்திலும் அவர்கள் உதவிசெய்யாதிருப்பது கவனிக்கப்படுமென்று செல்வவந்தர்களுக்கு விளக்கமாக அறிவித்தல் வேண்டும். ஆள்வோருக்கு உதவிசெய்யும் விருப்பத்தைச் செய்கையில் காட்டுபவர்களுக்கே இத்தகைய கௌரவப்பதவிகள் பிரத்தியேகப் படுத்தி வைக்கப்படுமென அறிவிக்கப்படல் வேண்டும்.”

இவ்வுரையின் பயனாகச் சில்லரை உத்தியோகஸ்தர்கள் ஜனங்களை வருத்திவந்தார்கள். அம்பாலா ஜில்லாவிலுள்ள ஒருவர் தாம் யுத்தக்கடனுக்கு எவ்வளவு உதவ எண்ணியிருக்கின்

றனரென்பதை ஸப் ஜட்ஜ் லாலா ரங்கிலால் மூலமாக டெபுடி கமிஷனருக்கு ஒரு வாரத்திற்குள் தெரிவிக்கவேண்டுமெனக் கேட்டும் ஒரு கடிதம் வரப்பெற்றனர். இதன்பொருள் வெள்ளிடை விலங்கலாகும்.

## நியாய நடைமுறைகள்

நியாய நடை முறைகளும் இவ்விஷயத்திற்கு அனுகூலமாக உபயோகிக்கப்பட்டுவந்தன. சாக்வால் முதல்வகுப்பு மாஜிஸ்டிரேட் 1917-ம் வருஷத்திய 82-ம் நம்பர் கிரிமினல் வழக்கில் சம்பந்தப்பட்ட குற்றவாளியைக் கீழ்க்கண்ட குறிப்புகளுடன் விடுதலை செய்துவிட்டார்: “ குற்றவாளியும் அவர் சகோதரரும் ‘ நம் நாள் நிதி ’ க்கு (Our Day Fund) 110 ரூபா உதவியிருக்கின்றனர். வாய்மொழியாகச் செய்துகொண்ட உடன்படிக்கைக்கிணங்கக் குற்றவாளி விடுதலை செய்யப்பட்டிருக்கிறார். ” அதே நியாயஸ்தலத்தில், தௌலத் சிங்க் குமாரர் மேஹார் சிங்க், 1917-ம் வருஷத்திய 36-ம் நம்பர் வழக்கில், தம் வருமானவரி குறைக்கப்பட வேண்டுமென விண்ணப்பஞ் செய்துகொண்டார். மாஜிஸ்டிரேட் அவர் விண்ணப்பத்தைத் தள்ளுகையில் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டனர்: “ யுத்தகாரணமாகக் கோவேறு கழுதைகளின் இலாபம் ஏராளமாயிருக்கிறது. ஆனால் ஆக்ஷேபிப்பவர் யுத்தநிதிக்கேனும் யுத்தக் கடனுக்கேனும் ஒரு பைசாவும் உதவியிருக்கவில்லை. அவர் தமக்குள்ள ஒரு குமாரனையும் சேனையிற் சேர்க்க விரும்பவில்லை”. முஜபர்கார் ஜில்லாவில் லெய்ஹியா என்னுமொரு கிராமமுளது. ஒரு பெருங்கூட்டம் நாயிப் தாசில்தாரின் இருப்பிடத்தைத்தாக்கி, சப்ராஸியையும் கிராமப்போலீஸ்காரனையும் துன்புறுத்தியது. சிலர் கைதுசெய்யப்பட்டனர். அவர்களுள் 52 பேர் இந்தியன் பினல்கோட் 147 செக்ஷன்படி விசாரணை செய்யப்பட்டனர். அப்பீலில் செஷன்ஸ் ஜட்ஜ்

சில்லரை விடுதலைசெய்தனர்; மற்றவரின் தண்டனைகளைக் குறைத் தனர். மேற்கண்ட தீர்ப்புச்செய்த நீதிபதி கோல்ட் ஸ்ட்ரீம் அதுகாலை பின்வருமாறு குறிப்பிட்டுப் பேசினர்: "ஜனங்கள் தங்களுக்குள்ள உண்மையான மனவருத்தத்தை வெளிக்குக் காட்டிக்கொண்டார்கள். ஜெயில்தார்களும் லம்பர்தார்களும் தாங் கள் வற்புறுத்தப்பட்டதன் பயனாகக் கைக்கொண்ட முறைகள் காரணமாக, முஜபர்காரிலுள்ள சில்லரை உத்தியோகஸ்தர்கள் யுத்தக்கடனுக்குப் பணம் வசூலிப்பதிலும் சேனைக்கு ஆள் சேர்ப் பதிலும் செய்த முயற்சிகள் பல விடங்களில் மனத்தாங்கலை விளைவிப்பனவாயின. இம்முறைகள் பல சமயங்களில் அங்கீ காரம் பெறுதவைகளும் ஆட்சேபிக்கக்கூடியவைகளும் வருத்தக் கூடியவைகளும் அரசாங்கத்தார் நோக்கத்திற்கு மாறானவை களுமாயிருந்தனவென்பதை நாம் ஏற்றுக்கொள்ளுதல்வேண்டும். தூரத்திலுள்ள இடங்களில் ஜனங்கள் அவைகளைச் சகிக்கக் கூடாதவர்களா யிருந்தார்கள். இவ்விஷயங்கள் பிராசிகியூஷன் தரப்பாரால் ருஜுப்படுத்த முடியாதனவா யிருக்கின்றன. இத் தகைய வழக்கில் டிபன்ஸ் தரப்புக்காக அவைகள் ருஜுப்படுத் தப்படவேண்டுமென்று எதிர்பார்த்தலும் ஆபாசமானதாகும். நான் நியாய தஸ்தாவேஜை விடுத்து வெளியே செல்லவேண்டி யிருப்பினும், நீதியை முன்னிட்டு இவ்விஷயங்களை வெளிப் படையாகக் குறிப்பிடவேண்டியவனாயிருக்கிறேன். நான் கூறிய விஷயங்கள் முன்னே சொல்லியதுபோல் எல்லோருக்கும் தெரிந்தவைகளே." வருத்துமுறைகள் அரசாங்கத்தாரின் நோக்கத்திற்கு மாறுபட்டவையென்று நீதிபதி அபிப்பிராயப் பட்டனர். நாங்கள் சென்றிருந்த ஒவ்வோரிடத்திலும், ஜனங் களை வருத்துவதில் பேர்பெற்றவர்களான உத்தியோகஸ்தர்கள் பகிரங்கமாக இழிவுபடுத்தப்படாமலும் தண்டிக்கப்படாமலு மிருந்

தது மாத்திரமன்றி அவர்களுள் பலர் உயர்ந்த பதவி வழங்கப் பெற்றனரென்றும் அறிந்து கொண்டோம்.

ஷாபூர் ஜில்லாவில் தாசீல்தாரொருவர் துரதிர்ஷ்டவசமாகக் கொலைசெய்யவும் பட்டார். இவ்வழக்கை விசாரிக்க ஒரு பிரத்தியேக விசாரணை ஸ்தலம் ஏற்படுத்தப்பட்டது. 46 பேர் கைது செய்யப்பட்டனர். அவர்களுள் நால்வருக்கு மரணதண்டனையும் பன்னிருவருக்கு ஆயுள்வரை தீவாந்தர சிட்சையும் விதிக்கப்பட்டன. எட்டுப்பேர் முதலில் தள்ளப்பட்டனர். இறுதியில் பன்னிருவர் விடுவிக்கப்பெற்றனர். மேற்கண்ட விஷயங்கள் அடங்கியுள்ள ஸர் மைகலின் குறிப்பு, சையத் நாதர் ஹுசேன் ஜனங்களை வருத்தினரென விளக்கமின்றிச் சொல்லப்பட்டதென்றும், குற்றத்தை டிபன்ஸ் தரப்பார் ரூபிக்கும்படி ஸ்பெஷல் ட்ரிபியுனலார் எல்லா வசதிகளையும் வழங்கினரென்றும், சேனைக்கு ஆள்சேர்க்கும் விஷயத்தில் கட்டாய முறைக்குச் சமமான முறையைக் காலஞ்சென்ற தாசீல்தார் கைக்கொண்டனரெனச் சொல்வதைத்தவிர வேறொரு குற்றமும் ரூபிக்கப்படவில்லையென்றும், அவர் ஒழுங்கீனமான முறையில் நடந்துகொண்டு தம் பேரைக் கெடுத்துக்கொள்ளவில்லை யென்றும் கூறுகின்றது.

## தாசீல்தாரின் முறைகள்

கட்டாய முறை உபயோகிக்கப்பட்டதென்ற அங்கீகாரமே அதனைக் கண்டிப்பதாகுமென்பது எங்களுடைய அபிப்பிராயம். கொலை செய்யப்பட்ட தாசீல்தாரின் ரீடர் மகமத்கான் பிராசிகியூஷன் தரப்பார் சார்பாகக் கூறிய சாட்சியம் பின்வருமாறு: "ஒரு கிராமத்திலுள்ள எல்லா மனிதர்களின் பெயர்களையுங் கொண்ட பட்டியொன்று பட்வாரியால் தயாரிக்கப்படவேண்டுமென்பது தாசீல்தார் கைக்கொண்ட முறையாகும். பட்டிகைக்கு வந்தபிறகு, தாசீல்தார் கிராமத்திற்குச்சென்று சேனை

யில் சேருமாறு ஆள்களைத் தெரிந்தெடுப்பதில் ஏதேனும் ஆட்சேபமுண்டாவெனக் கேட்பார். மூன்று நான்கு சகோதரர்களுள்ள குடும்பத்தில் இருவர் சேனையில் சேரவேண்டுமெனக் கேட்பது அவர் வழக்கம். குர்ஹ பிரதேசத்தில் தப்பியோடியவர்களுள் சிலரை அவர் காப்புடன் சேனைக்கு ஆள்சேர்க்கும் உத்தியோகஸ்தரிடம் பிடித்தனுப்பினர். பட்டியிலுள்ள பெயர்களுக்கெதிரில் 'தெரிந்தெடுக்கப்பட்டனர்' என்று தாசீல்தார் குறிப்பிட் டிருக்கின்றனர். தாசீல்தார் போகும்போது இந்த இலாகாவிலுள்ள ஜமீன்தார்கள் அவரைப்பார்க்கப் பயந்து ஓடிப் போய்விடுவது வழக்கம். பிரத்தியேக ட்ரிபியுனல் தலைவர் தம் குறிப்பில் பின்வருமாறு எழுதியிருக்கின்றனர். "நாதூர் ஹுசேன்ஷா அளவுக்குமிஞ்சி ஊக்கங்கொண்டவராகவும், சேனையில் சேர்வதில் பழக்கமிராத மூர்க்க ஜனங்களிடம் தம் செல்வாக்கை உபயோகிக்கச் சாமர்த்தியமில்லாதவராயும் இருந்தனர். பெப்ருவரிமாதம் 6-ந் தேதி பட்வாரி பாக் ஹுர்க்கான் கிராமத்துப் பட்டியைத் தயார்செய்தனர். மனிதர்களின் உறவினர்களும் வயதும் அடங்கிய பட்டி தயார் செய்யுமாறு அரசாங்கத்தார் அறிவித்திருந்தனர். எனவே பெப்ருவரி 6-ந் தேதி அங்குள்ளவர்கள் தாங்கள் சேனையில் சேர்க்கப்படுவார்களெனத் தெரிந்துகொண்டு பீதியடைந்தார்கள்."

ரெவினியூ உதவி உத்தியோகஸ்தர் கான் அகமத் ஹுசேன் கான் விசாரணை ஸ்தலத்தில் பின்வருமாறு சொல்லியிருக்கின்றனர்: "மனிதர்கள் தங்களைச்சேர்ந்த ஸ்திரீகளின் முன்னிலையில் நிர்வாணமாய் நிற்குமாறு தாசீல்தாரால் உத்தரவு செய்யப்பெற்றனரென்ற புகாரா எனக்கெட்டியது. எந்த ஸ்திரீயும் முட்களால் வருத்தப்பட்டதாக நான் கேள்வியுற்றதில்லை. ஆனல் புருஷர்கள் முட்புதர்களுக்கிடையில் அடைத்துவைக்கப் பட்டார்களென்பது என் செவிகளுக் கெட்டியிருக்கிறது. ஜூன்மாதம் நடை

பெற்ற இச்சம்பவங்களைப்பற்றி நான் கேள்வியுற்றிருக்கிறேனே யன்றி, அவைகளை நேரிற் பார்த்ததில்லை. என் செவிகளுக் கெட்டிய விஷயங்கள் ஜெயில்தார்களாலும் ஜமீன்தார்களாலும் சொல்லப்பட்டவை. கௌராகாட் என்னுமிடத்தில் சில ஸ்திரீ கள் கொடுமையாய் நடத்தப்பெற்றார்களென மியானியிலுள்ள குலாம் மகமத் என்னிடம் சொன்னார். குர்ஞ முதலிய பட்டாணிய கிராமங்களிலும் ஸ்திரீகள் வருத்தப்பட்டார்க ளெனக் கேள்வியுற்றேன். அவர்களுடைய உறவினரைத் திரும்பி வரும்படியேனும் சேனையில் சேரும்படியேனும் கேட்டுக்கொள்ளுமாறு சில ஸ்திரீகள் மிட் ராஞ்ஜ் ஹாவுக் கும் புல்வாலுக்கும் கொண்டுபோகப் பட்டார்களென அவர் என்னிடம் தெரிவித்தார். தாசீல்தாருடன் சென்றவர்கள் ஒளித்துக் கொண்டவர்களின் மாசூல்களை நாசப்படுத்தி வீடு களைக் கொள்ளையாடினார்களென்றும் நான் கேள்வியுற்றேன். பூசா காலானிலுள்ள ஷெர் ஆலி தாசீல்தாருக்காகச் சேர்ந்திருந்த பணத்தில் 15,000 அல்லது 17,000 ரூபா தம்மிடம் வைத்திருந் தார். இந்தப்பணம் சேனைக்கு ஆள் சேர்ப்பதில் கிடைத்த லஞ்சப் பணமெனச் சொல்லப்பட்டது. ஷெர் ஆலி இந்தத் தொகையைக் கைப்பற்றிக்கொண்டாரெனவும் கேள்விப்பட் டேன். கிராமவாசிகள் சேனைக்கு ஆள்சேர்க்கும் விஷயத்தி லேயே மிக்க துன்பமனுபவித்ததாகச் சொன்னார்கள். தாங்கள் சேனையில் சேர்க்கப்பட அவர்கள் சம்மதிக்கவில்லை. ஜூன் மாதத்தில் குல்லாபூரிலுள்ள இரண்டு ஸ்திரீகள் வருத்தப்பட் டார்களென்பதைப் பிறகு கேள்வியுற்றேன். சானிவேஹன் என்னுமூரில் பலர் ஒளித்துக்கொண்டனரென்பதைக் கண்டு, தம்மோடு வந்தவர்களைக் கிராமவாசிகளின் மாசூல்களை அழிக்கு மாறு கேட்டுக்கொண்டதாகவும், அதனால் ஒளிந்திருந்தவர்கள் திரும்பி வந்துவிட்டார்களென்றும் தாசீல்தாரே என்னிடம்

தெரிவித்தார். அவர் வருமுன்னரே கிராமவாசிகள் கிராமத்தை விட்டுப் போய்விட்டார்கள்." விசாரணை ஸ்தலத்தார் இறந்த தாசீல்தார் ஜனங்களை வருத்தினர் என்பது ரூபிக்கப்பட்டதாக ஏற்றுக்கொள்ளவில்லை. அவர்கள் "ரெவினியூ உதவி உத்தியோகஸ்தர் கான் அகமத்கான் தாசீல்தார் நடந்துகொண்ட மாதிரியைப்பற்றி, நாங்கள் கேட்டுக்கொண்டதன்மேல், தாம் கேள்வியுற்றிருந்த எல்லாவற்றையும் தெரிவிக்கலானார். ஆனால் எங்கள்முன் கூறப்பட்ட சாட்சியம், ஆள் சேர்க்கும் முறை ஏறக்குறையக் கட்டாய முறையை ஒத்திருந்ததென்பதைக் காட்டும் விஷயங்களைத் தவிர, தாசில்தார் வேறெவ்வழியிலும் ஜனங்களை வருத்தியதாக ருஜுவாகவில்லை" என்று சொல்லியிருக்கிறார்கள். இதன்மேல் அரசாங்க அறிக்கை, "தாசீல்தார் ஜனங்களை இழிவுபடுத்தவில்லை யென்றும் அவர்களுடைய மனதைப் புண்படுத்தவில்லை யென்றும்" வியாக்கியானஞ் செய்திருக்கிறது. அங்ஙனம் உறுதியாகச் சொல்வதற்கு ஆதாரம் கோர்ட்டாரால் கண்டுபிடிக்கப்படவில்லை. வருமான உதவி உத்தியோகஸ்தர் கேள்வியுற்று நியாயஸ்தலத்தில் தெரிவித்த விஷயங்களைக் கொண்டு உண்மையை அறியவிரும்பியிருப்பின், அரசாங்கத்தார் மரண விசாரணையைத் தவிரப் பிரத்தியேக விசாரணை யொன்றும் நடத்தியிருப்பர்.

அதே ஜில்லாவில் இன்னொரு வழக்கில் ஒரு பெருங் கூட்டம் கிராமத்தைச் சூழ்ந்துகொண்டு எழுபேர் அரெஸ்ட் செய்யப்பட்டதை எதிர்த்துநின்றது. கூட்டத்தின்மேல் துப்பாக்கிகள் பிரயோகிக்கப்படவும் அதிற் பலர் இறந்தனர். சேனையில் சேர்க்கப்படும் விஷயத்தில் பயங்கொண்டே ஜனங்கள் எதிர்த்தார்களென்று டிபன்ஸ் தரப்பில் சொல்லப்பட்ட சாட்சியம் கோர்ட்டாரால் அங்கீகரிக்கப்படவில்லை. எதிர்த்ததும் துப்

பாக்கி உபயோகிக்கப்பட்டதும் வருத்துமுறைகள் கையாளப் பட்டனவென்பதை விளக்குகின்றன.

மூல்டான் டிவிஷனில் கோர்ட் ஆப் வார்ட்ஸ் வசமுள்ள எஸ்டேட் மானேஜரொருவர் சேனைக்கு ஆள் சேர்க்கும் பொருட்டு கிஜி வகுப்பினரிடஞ் சென்றனர். அங்கொரு கலக மேற்பட்டுச் சில உயிர்கள் சேதமாயின. மானேஜர் அவ்வகுப் பினரிடம் ஏன் சென்றனரென்பதும் அவர்கள் ஏன் எதிர்த் தார்களென்பதும் எதை எதிர்த்தார்களென்பதும் இன்னும் வெளியிடப்படவில்லை.

## ஆள் சேர்க்கும் முறைகள்.

ஸர் மைகல் ஓட்வியர் பிரசுரித்துள்ள ஆள்சேர்க்கும் கணக் குப் பட்டியினின்றும் நமக்குச் சிறிது பதில் கிடைப்பதாயிருக் கிறது. 1917-ம் வருஷம் டிசம்பர் மாதத்தினிறுதியில் மூல் டான் ஜில்லாவில் 759 பேர் அதாவது 586 ஆண்மக்களில் ஒரு வர் சேர்ந்திருந்தனர். 1918-ம் ஆண்டு நவம்பர் இறுதிக்குள் அந்தத்தொகை 4,636 ஆக உயர்ந்துவிட்டது. அதாவது 93 பேரில் ஒருவர் சேர்க்கப்பட்டனர். கட்டாய முறையின் மேலேயே சேனையில் சேர்க்கப்பெற்றவர்களின் தொகை இவ் வளவு அதிகமாகப் பெருகியிருத்தல்கூடும். கமிஷனர் பின்வரு மாறு சொல்லியிருக்கிறார். "இரண்டொருவரைத்தவிர, ஜில் லாவிலுள்ள பிரதான மனிதர்கள் தங்கள் கடமையைச் செய்தார்க ளில்லை. அவர்கள் தங்கள் குடும்பங்களிலுள்ளவர்களைச் சேர்ப் பதற்குப் பதிலாகத் தாழ்ந்த வகுப்பினரைப் பயமுறுத்தியேனும் பணங்கொடுத்தேனும் சேர்க்க முயன்றார்கள். கிராமாதிகாரிகள் சிலர் கண்டிக்கக்கூடிய முறைகளைக் கைக்கொண்டதன் பயனாகச் சில விடங்களில் பொதுஜன வமைதி குலைந்துபோய்விட்டது. அரசாங்கத்தாரின் உத்தரவுகளுக்கு விரோதமாக, இதர ஜில்லாக்

களிலும் டிவிஷன்களிலு முள்ளவர்களைத் தவருகக் கொண்டு வந்து சேனையில் சேர்க்க முயற்சிகள் செய்யப்பட்டன." எனவே சேனையில் சேர்க்கப்பட்டவர்களுள் பலர் தங்கள் டிவிஷன்களையும் யூனிட்களையும்விட்டு ஓடிப்போயினரென்றும், ஒருசிலரே போர்க்களத்தில் சத்துருக்கெதிரில் நின்றனரென்றும் ஸர் மைகல் மனஞ்சாம்பியது ஆச்சரியப்படத் தக்கதன்று.

பாகத்தின்படி ஆள்சேர்த்துக் கொடுக்கும்பொருட்டு, ஜனங்கள் சேனையில் சேர்பவர் ஒவ்வொருவருக்கும் 500 ரூபாயும் 1000 ரூபாயுமாகத் தண்டிக் கொடுத்துவந்தார்களென அம்பாலா டிவிஷன் கமிஷனர் தெரிவித்திருக்கின்றனர்.

## இன்னேருபாயம்.

இன்னேருபாயம் என்னவெனில், கெட்ட நடவடிக்கையுள்ளவர்களெனக் கருதப்படுபவர்கள் சேனையிற் சேரவேண்டுமென்றுதல் இந்தியன் பினல்கோட் 100 அல்லது 110-வது செக்ஷன்படி ஜாமீன் கட்டவேண்டுமென்றுதல் கட்டாயப்படுத்தப்படுவதேயாம். 1917-ம் வருஷத்திய கிரிமினல் நியாய நிர்வாக அறிக்கை கூறுவதாவது:—"இவ்வாண்டு ஜில்லா மாஜிஸ்டிரேட்டுகள் தங்கள் காலத்திற் பெரும் பகுதியைச் சேனைக்கு ஆள் சேர்க்கும் வேலையிலேயே செலவிட்டிருக்கின்றனர். இந்தியன் பினல்கோட் 110-வது செக்ஷன்படி ஜாமீன் கொடுக்குமாறு கேட்டுக்கொள்ளப்படுவோரின் தொகை குறைந்திருப்பதற்குக் காரணம் சேனைக்கு ஆள்சேர்த்தல் மும்முரமாக நடைபெற்றதேயாகும்."

கர்னல் ஜில்லா யாரர் கிராமத்திற்கு ஓர் உத்தியோகஸ்தர் சென்று, ஆங்குள்ள சிறுவர் பலரைச் சேனையில் சேருமாறு தூண்டினர். அச்சிறுவர்களுக்குள் ஒருவனுடைய தகப்பன் தன் ஏகபுத்திரனைக் கொண்டுபோகக்கூடாதென மாஜிஸ்டிரேட்டை

வேண்டிக்கொண்டான். மாஜிஸ்டிரேட் அவ்வேண்டுகோளுக்குச் செவிசாய்க்காமற் போகவும் அவ்வூரில் ஒரு குழப்பமும் சண்டையும் தோன்றலாயின. இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்படி சிலர் குற்றஞ் சாட்டப்பெற்றனர். அவர்களுள் ஐவர் தண்டனை விதிக்கப்பெற்றனர். அப்பீலில் தண்டனை மாற்றப்பட்டது. கீழ்க்கோர்ட்டார் மிஸ்டர் ஹமில்டனுடைய உத்தரவின்படியே தீர்ப்புச் செய்ததாகத் தீர்ப்பினின்றும் விளங்கியது. அப்பீல் கோர்ட் சொல்வதாவது:—"அப்பீல் செய்துள்ளவர்கள் தங்கள் உறவினர்களுக்குள்ளும், இராணுவ வேலைக்கேற்ற வயதினரா யிருப்பின் தமக்குள்ளும், சேனைக்கு ஆட்கள் உதவியிருப்பின், முதல் கேட்கப்பட்டவாறு அக்கிராமத்தினின்றும் இருபது பேர் சேனைக்கு உதவப்பட்டிருப்பின், குற்றவாளிகள் விடுவிக்கப்பட்டிருப்பார்களென மாஜிஸ்டிரேட் அப்போதைக்கப்போது அனுப்பியுள்ள உத்தரவுகள் குறிப்பிடுகின்றன. இருபது பேர் சேனைக்கு வழங்கப்பெற்றனர். ஆனல் குற்றவாளிகளிலிருந்தே இருபதுபேர் சேரவேண்டுமென்பது ஜில்லா மாஜிஸ்டிரேட்டின் அபிப்பிராயம்.

1917-ம் வருஷத்தில் குஜரான்வாலாவில் சேனைக்கு ஆள் சேர்த்த விஷயம் ஸர் மைகலுக்குத் திருப்திகரமா யிருக்கவில்லையாகலின், அவர் ஜனங்கள் தங்கள் கடமையைச் செய்யவில்லையென அவர்களை இகழலாயினர். தற்செயலாகவோ ஆலோசனையின்பேரிலோ, அப்போதிருந்த டெபுடி கமிஷனர் ஸ்தானத்திற்குக் கர்னல் ஓப்ரையன் வந்து சேர்ந்தனர். அவர் வரவும் சேனையில் சேர்ந்தவர்களின் தொகை பரபரவென்று ஏறலாயிற்று. 1918-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் ஸர் மைகல் இவ்விஷயத்தைப் பற்றிப் பின்வருமாறு குஜரான்வாலாவில் நடைபெற்றதர்ப்பாரில் குறிப்பிட்டுப் பேசியிருக்கின்றனர்: "ஒரு வருஷத்திற்குமுன் குஜரான்வாலா சேனைக்கு 3,388 பேர் அதாவது ஆண்மக்களின்

மொத்தத்தொகையில் 150 பேருக்கு ஒருவராக வழங்கியிருந்தது. சென்ற மாத இறுதியில் குஜரான்வாலாவிலிருந்து சேனையில் சேர்ந்தவர்களின் மொத்தத்தொகை 11,765 அதாவது ஆண்மக்களின் மொத்தத்தொகையில் 44 பேருக்கு ஒருவர் வீதமும், இராணுவ வயதிலுள்ளவர்களுள் 14 பேருக்கு ஒருவர்வீதமும் ஆகும். எனவே நீங்கள் ஓராண்டிற்குள் 8,500 பேர் வழங்கியிருக்கிறீர்கள். உங்கள் டெபுடி கமிஷனர் கர்னல் ஓப்ரையனும் அவர் சகாக்களும் டிவிஷனல் ரிக்ரூடிங்க் உத்தியோகஸ்தர் மேஜர் பாரன்ஸனும் அவருடைய உதவி உத்தியோகஸ்தர்களும் ஊக்கத்துடன் உழைத்து உங்கள் ஜில்லா யுத்த சங்கத்தை ஒழுங்காக நடத்தி வந்ததே இதற்குக் காரணமாகும்."

சேனைக்கு ஆள் சேர்க்கும் விஷயத்தில் எத்தகைய முறைகள் கைக்கொள்ளப்பட்டனவென்பதைக் குஜரான்வாலா, மணியன்வர்லா, சுஹார்கானு, ஹாபி ஜபாத் முதலிய இடங்களிலுள்ள சிலர் நேராகத் தாங்கள் பார்த்திருந்தவாறு தெரிவித்திருக்கின்றனர். நாங்கள் சேகரித்துள்ள வாக்குமூலங்கள் பலவற்றுள் ஒன்றை ஈண்டு எடுத்துக் காட்டுகின்றோம். குஜரான்வாலா ஜில்லாவிலுள்ள ரடாலி என்னுமிடத்தின் சொந்தக்காரர்களுள் ஒரு பாகஸ்தராகிய ஸர்தார் கான் சாட்சியஞ் சேகரிக்கும் பொருட்டுச் சென்றிருந்த பாரிஸ்டர் மிஸ்டர் லாப்சிங்க் எம். ஏ. முன்னிலையில் பின்வருமாறு வாக்குமூலங் கொடுத்திருக்கிறார். "தாசீல்தார் வைசாக மாதத்தில் எங்கள் கிராமத்திற்குவந்தனர். எல்லோரும் மறுநாள் காலை தாசீல்தாரிடஞ் சென்று அவரைப் பார்க்கவேண்டுமென இரவில் பறையறைவிக்கப்பட்டது. அது மாசூல் காலமாயிருந்தபடியாலும், ஜனங்கள் கட்டாயப்படுத்திச் சேனையில் சேர்க்கப்படுவதற்கு அஞ்சியிருந்தபடியாலும், ஒரு சிலரே காலையில் தாசீல்தாரிடம் வந்து சேர்ந்தனர். தாசீல்தார் 60 அல்லது 70 பேருக்கு அபராதம் விதித்தனர். அபராதத்

தொகையின் மொத்தம் 1,600 ரூபா. 18 மைல் தூரத்திலுள்ள குஜரன்வாலா ஹெட் குவார்ட்டர்ஸில் வந்து சேருமாறு ஜனங்கள் மறுபடியும் அறிவிக்கப்பட்டார்கள். குறிப்பிட்ட தேதியில் ஜனங்கள் அங்கே சென்றபொழுது, அவர்கள் வரிசையாய் நிறுத்திவைக்கப்பட்டார்கள். அவர்களுள் சிறு பிராயமுள்ள எழுவர் தெரிந்தெடுக்கப்பெற்றனர். இவ்வேலை தாசீல்தார் படி காணுற் செய்யப்பட்டது. மற்றவர்கள் திட்டப்பட்டும் அடிக்கப்பட்டும் இன்னும் பல ஆட்களைக் கொண்டுவருமாறு கட்டளையிடப்பட்டார்கள்.”

## கடன் பலவந்தமாய் வசூலிக்கப்பெற்றது.

லயல்பூர் வக்கீல் ஸர்தார் சாந்த சிங்க் சேனைக்கு ஆள்சேர்க்கும் முறைகளையும் யுத்தக்கடன் வசூலிக்கும் முறைகளையும் இங்ஙனம் சுருக்கிக் கூறியுள்ளார்: “இந்த ஜில்லாவில் யுத்தக்கடன் பலவந்தமாய் வசூலிக்கப்பட்டது. பட்டவேட்டை யாடுவோர் தங்களுக்குப் புகழ்தேடிக் கொள்ளும்பொருட்டுப் பொது ஜனங்களிடம் யுத்தக்கடன் வசூல்செய்து கொடுத்தனர். ஒரு சதுரத்திற்கு 33 ரூபா வீதம் வசூல்செய்யப்பட்டது. இதில் யாதொரு விலக்கும் அனுசரிக்கப்படவில்லை. பணமில்லாதவனென அங்கீகரிக்கப்பெற்றவனும் அந்தத் தொகையைச் செலுத்தவேண்டியவனானான். இத்தகைய வசூலின் வரலாறு மிகவும் வேடிக்கையானது. ஒவ்வொரு சதுரத்தின் சொந்தக்காரனும் ஒரு ஏகர் நிலத்தின் மதிப்புத் தொகையான 33 ரூபாயை அரசாங்கத்தாருக்குக் கொடுக்கவேண்டுமெனத் தெரிவிக்கப்பட்டது. சதுரத்தின் சொந்தக்காரர் ஒருவரும் இவ்விஷயத்தில் கலந்து ஆலோசிக்கப்படவில்லை. இவ்வாலோசனை பட்டவேட்டை யாடுவோராலேயே செய்யப்பட்டது. பிரதேச அதிகாரிகள் இதை எற்

றுக்கொண்டார்கள். ஆனால் பிரதேச அரசாங்கத்தார் அதை மாற்றஞ் செய்தனர். நன்கொடைக்குப் பதிலாகப் பிரதேச அரசாங்கத்தார் அதைக் கடனாகப் பெற்றுக்கொண்டனர். இக் கடன் தொகையின் வட்டி தனித்தனியே பணமுதவியவர்களுக் குக் கொடுக்கப்படாமல் கிராம நன்மையின் பொருட்டு மொத்த மாகவே வழங்கப்பெறும்.

“ஜி. எஸ். சாக் நெ. 26-ன் சொந்தக்காரர் உத்தம சிங் பணங்கொடுக்க மனமில்லாதிருந்தபோது ஒரு குற்றத்திற்காகப் பிடிக்கப்பட்டார். அவர் பணங் கொடுத்தவுடன் வழக்கு விலக் கிக்கொள்ளப்பெற்றது.

“இம்பீரியல் யுத்த சகாய நிதி.

“ஒவ்வொரு சதுரத்திற்கும் 10 ரூபா வீதம் விதிக்கப்பெற் றது. வேறு வழியின்றி ஜனங்கள் அதனைச் செலுத்தவேண் டியவர்களானார்கள்.

“லம்பர்தார்கள் சேனைக்கு ஆள் சேர்த்துக் கொடுக்கும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டியவரா யிருந்தார்கள். அங் ஙனஞ் செய்யாவிடின், அவர்கள் தங்கள் உரிமைகளை இழக்க நேர்ந்திருக்கும். அவர்களுள் பலர் வேலையினின்றும் தள்ளப் பெற்றனர். எனவே சேனையில் சேரும் ஒவ்வொருவருடைய மதிப்பும் 500 ரூபாயாக இருந்தது. சமாதானத்தை நிலைநாட் டுவதாக ஏற்றுக்கொண்டு ஜாமீன் கொடுப்பதற்காகப் போலீசார் ஜனங்களை மாஜிஸ்டிரேட்டிடம் அனுப்பிவந்தனர். மாஜிஸ்டி ரேட்டுகள் ஜாமீன்பேரில் விடுதலை செய்ய மறுத்துத் தம்மிடம் அனுப்பப்பட்டவர்களைக் காப்பில் வைத்துக் கதவடைத்தனர். சேனைக்கு ஆள் சேர்த்துக் கொடுப்பதாக ஒப்புக்கொண்டாலன்றி அவர்கள் விடுதலை செய்யப்பட்டதில்லை. குற்றவாளி சேனை

யில் சேரச் சம்மதித்தால் அவன்மேலுள்ள குற்றம் நீக்கப் படும்."

## ஓட்வியரின் ஆவேசமுள்ள பேச்சு.

ஸர் மைகல் ஓட்வியர் இங்ஙனம் பஞ்சாப் மாகாணத்திற்குப் புதிய உயிர் கொடுக்கலாயினர். பஞ்சாப் வாசிகள் அதற்குமுன் எப்பொழுதும் உணராதபடி ஒரு புதிய உணர்ச்சியைப் பெற்ற தாக எண்ணிக்கொள்ளலானார்கள். எனவே சென்ற ஏப்ரல் மாதம் வந்ததும், பஞ்சாபின் ஒற்றுமையும் இந்தியாவின் ஒற்றுமையும் ஸர் மைகலின் கண்முன் தோன்றியபோது, அவர் தம்மறிவு மயங்கப்பெற்று, ஏப்ரல் மாதம் 7-ந்தேதி நாம் மேலே எடுத்தாண்டுள்ள பேர் போன உரைகளை வழங்கலாயினர். தம்முடைய கொடுங்கோன்மையின் பயனாக ஏற்பட்டிருந்த அடிமைத் தனத்தினின்றும் தப்பித்துக்கொள்ள வேண்டுமென்று ஜனங்கள் மனதில் எழுந்த உணர்ச்சியை அவர் நசுக்க முயன்று வந்தனர். ஜனத்தலைவர்களின் நியாயமான பேச்சுக்கள் ஒவ்வொன்றினாலும் அபாயமும், ஒற்றுமையினால் கலகமும் விளையு மென நினைத்து அவர் டாக்டர் கிச்லூ, டாக்டர் ஸத்யபால், மகாத்மா காந்தி ஆகிய மூவர் பேரிலும் உத்தரவு பிறப்பிக்க லாயினர். இங்ஙனஞ் செய்வதனால் தம் ஆட்சியில் முன்னரே வெறுப்புற்றிருந்த ஜனங்கள் கோபங்கொள்வார்க ளென்பதை அவர் அறிந்திருத்தல் வேண்டும். அவர் ஜனங்களை அடக்கும் நோக்கத்துடன் அவர்கள் கொடுஞ்செயல் செய்யுமாறு நடந்து கொண்டனரென நாங்கள் சொல்ல விரும்புகிறோம். தங்களுடைய மனதைக் கட்டுப்படுத்தக் கூடாதபடி பஞ்சாப் வாசிகள் அவரால் வருத்தப்பட்டார்களென்பது அநுபந்தத்திலுள்ள சாட்சியங்களால் நன்கு விளங்கும். அவர்கள் அதற்காக மிகவும் வருந்தலானார்கள். ஆயினும் அவர்கள் விரைவில் தங்கள் சாதா

ரண மனநிலையையடைந்து, தாங்கள் அனுபவித்த கஷ்டங்களி னின்றும் புனிதமாய் எழுந்து, தக்கமனநிலையிலிருப்பதாக ஸர் மைகலால் கொடுக்கப்பெற்ற நற்சாட்சிப் பத்திரத்தைப் பெற லாயினர்.

---

## அதிகாரம்—3.

### ரௌலட் மசோதாக்கள்.

### ஆனும் வதுப்பினருள் வியாதிக் குறி.

### சத்தியாக்கிரகத்தின் உட்கருத்து.

### மகாத்மா காந்தியின் குறிப்பு.

பஞ்சாப் வாசிகள் பிரதேச அரசாங்கத்தாரால் பல வழி களில் துன்புறுத்தப்பட்டார்களென்பதும், அதிகாரிகள் ஜனத் தலைவர்களை வேண்டுமென வெறுத்து வந்ததன்பயனாகத் தலை வர்கள் ஜனங்களை அடக்குதல் கூடாததா யிருந்ததென்பதும் முன்னதிகாரத்தால் நன்கு விளங்கும். இத்தகைய நிலைமையி லேயே பஞ்சாபில் ரௌலட் மசோதாக்கள் வந்து சேரலாயின.

இவ்விரண்டு மசோதாக்களும் வெளியிடப்பட்ட காலையில் இந்தியாவில் புரட்சிக்குற்ற மில்லையென்பது யாவருமறிந்த விஷ யம். பல்லாண்டுகள் வரை அது வங்காளத்தையும் பஞ்சாபை யுந் தவிர இந்தியாவின் வேறெந்தப் பாகத்தையும் பாதித்திலது. வங்காளத்தில் பிரிவினை விஷயமாக ஏற்பட்ட அதிருப்தி அதி கரித்த காலத்திலேயே கொடுஞ்செயல் செய்யும் கூட்டம் தோன்றலாயிற்று. கானடாவில் குடியேறியுள்ள சீக்கியர் விஷய மாகப் பிரதேச அரசாங்கத்தார் அனுசரித்த முறைகள் அதி ருப்தி விளைவித்ததன் காரணமாகவே பஞ்சாபில் இக்கூட்டத் தினர் தோன்றலாயினர். கோமகாத்தமாருவில் திரும்பி வந்த

வர்கள் விஷயத்தில் நிர்ப்பந்தமாய்த் தலையிட்ட சம்பவம் அதி ருப்தியை அதிகரிக்கலாயிற்று. மேற்கூறிய இரண்டிடங்களி லும் கொடுஞ் செயல்களுக்குக் காரணம் நன்கு விளங்குவன வாயும், எளிதில் விலக்கக்கூடியனவாயும், பரிகாரந் தேடக்கூடி யனவாயுமிருந்தன. பஞ்சாபிலும் வங்காளத்திலும் ஏற்பட்ட கொடுமை இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்படி அனுசரிக்கப் பட்ட முறைகளினல் அடக்கப்பெற்றனவென்று அரசாங்கத் தாரே வாதஞ்செய்கின்றனர்.

யுத்தகாலத்தில் ஏற்படுமெனக் கருதப்பட்ட புரட்சிக் கலகங் களை அடக்கும் நோக்கத்துடனேயே இச்சட்டம் ஒரு அவசர முறையாக நிறைவேற்றப்பட்டது. இந்தியாவிலுள்ள சைனி யங்களெல்லாம் பிரான்சிலும் மெஸபொடேமியாவிலுமுள்ள போர்க்களங்களுக்குச் சென்றிருந்தபடியாலும், இந்தியாவின் உள் நாட்டுச் சமாதானம் ஜனங்களின் இராஜபக்தியையும் சமா தானத்தை விரும்பும் தன்மையையுமே பொறுத்திருந்த படி யாலும், இத்தகைய அதிகாரம் இருக்கவேண்டுவது அவசிய மென்பதை நாம் அறிந்து கொள்ளுதல்கூடும். நிர்வாக அதி காரிகள் இராணுவச்சட்டம்போன்ற பெரிய அதிகாரங்களை வகிப் பார்களாயின், ஒரு போலீஸ் உத்தியோகஸ்தன் நான்கு உத்தி யோகஸ்தர்கள் செய்யும் வேலையைச் செய்தல் சாத்தியமாகும். ஆனல் இத்தகைய அதிகாரம் குடிமக்களின் உரிமைகளைப் பாழ் படுத்துவதாகும். சாதாரணமாகப் போலீஸ் நடைமுறையில் அனு சரிக்கப்படும் நன்மை பயக்கக்கூடிய தடைகள் குடிமக்களிடத்து உபயோகிக்கப்படாமற்போம். எனவே யுத்தம் முடிவுபெற்ற தும், இந்தியப் பாதுகாப்புச் சட்டம் ஒழிக்கப்பெறுமென ஜனங் கள் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். இச்சட்டம் உண்மை யாக அவசியமிருக்கும்போதே உபயோகிக்கப்படுமென்றும், அரசி யற் கிளர்ச்சியை அடக்கவேனும் பொதுஜன ஊழியரைத் தடுக்க

வேனும் ஒருபொழுதும் உபயோகிக்கப்படாதென அரசாங்கத்தார் உறுதி கூறியிருந்தும், அரசியற் சுதந்தரத்தைக் கட்டுப்படுத்தவே உபயோகிக்கப்பட்டுவந்தமை காரணமாக ஜனங்கள் அஃது எப்பொழுது தொலையுமென ஆவலுடன் எதிர்பார்க்கலானார்கள். இதற்கோர் உதாரணமாக, மிஸஸ்பெஸண்டும் அவர் சகாக்களும் சுயஆட்சி இயக்கத்தின் உண்மையான முறையின் பிரதிநிதிகளாயிருந்ததுபற்றிக் காப்பில் வைக்கப்படுமாறு இச்சட்டம் கையாளப்பட்டது. அவருடைய ஜன்ம விரோதிகளும் மிஸஸ் பெஸண்ட் கொடுஞ் செயல் செய்ததாகச் சந்தேகித்தார்களில்லை. எனவே பொது ஜனங்கள் அரசாங்கத்தாரிடம் அவநம்பிக்கை கொண்டு, இந்தியா யுத்தத்திற்குப் பெருத்த உதவி செய்திருந்ததாலும் இந்தியாவுக்குப் பொறுப்பாட்சி வழங்கப் பெறுமென 1917-ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் வாக்குறுதி செய்யப்பட்டதாலும் இந்தியப் பாதுகாப்புச் சட்டம் ஒழிக்கப் பெறுமென்றும் ஜனங்கள் இரகசியப் போலீசாரின் தொந்தரவுகளுக்கு உட்படாமல் ஓய்வு பெற்றிருக்கலாமென்றும் எதிர்பார்த்திருந்தார்கள்.

## இந்தியர் நிலைமை.

இரண்டு மசோதாக்களும் தங்கள் மேல் எறியப்பெற்றபொழுது ஜனங்கள் வியப்புறலானார்கள். மசோதாக்களைத்தாங்கி இராஜப் பிரதிநிதியார் பேசிய பேச்சு, சீர்திருத்தத்தின் கீழ் தங்கள் நிலைமை கேவலமானதாக விருக்குமென ஸிவில் ஸர்விஸ் உத்தியோகஸ்தர்கள் கொண்டிருந்த அச்சத்திற் கேற்றவாறிருந்தது அதிருப்தியை அதிகரிக்கலாயிற்று. இந்தியரின் நிலைமையை ஸத்யாக்கிரஹ இயக்கத்தை ஒழுங்கு படுத்திய பொழுது மகாத்மா காந்தி பத்திரிகைகளுக் கெழுதிய கீழ்க்கண்ட கடிதத்தில் நன்கு விளக்கியிருக்கிறார்:

"ஐயா,

ரௌலட் மசோதாக்கள் சம்பந்தமான ஸத்யாக்கிரஹ உறுதி மொழியை இதனோடு அடக்கஞ் செய்திருக்கிறேன். இப்பொழுது அனுசரிக்கப் பெற்றுள்ள முறை இந்திய சரிதத்தில் மிகவும் முக்கியமானதாகும். இஃது ஆத்திரத்துடன் கைக்கொள்ளப்படவில்லையென நான் உறுதி கூறுகின்றேன். நான் இவ்விஷயத்தில் பல இரவுகளைத் தூக்கமின்றிக் கழித்திருக்கிறேன். நான் அரசாங்கத்தாரின் நிலைமையை உணர்ந்து கொள்ள என்னாலானவரை முயன்றிருக்கிறேன். ஆனால் இவ்விபரீத மசோதாக்கள் நியாயமானவைகளென்றெண்ணச் சிறிதும் இடமுண்டாகவில்லை. நான் ரௌலட் கமிட்டியாரின் அறிக்கையைப் படித்திருக்கிறேன். நான் ஆச்சரியத்துடன் அதிலடங்கியுள்ள வரலாற்றைப் படித்திருக்கிறேன். அறிக்கையைப் படித்ததிலிருந்து நான் கமிட்டியார் கொண்டுள்ள அபிப்பிராயத்திற்கு நேர் விரோதமான அபிப்பிராயங் கொள்ளலானேன். இரகசியமான கொடுஞ்செயல்கள் இந்தியாவின் மிகச் சில பாகங்களிலேயே மிகச் சிறு தொகையினரிடமே காணப்படுகின்றனவென நான் அறிக்கையினின்றும் அறியலானேன். அத்தகைய மனிதர் இருந்துவருவது ஜனசமூகத்திற்கு உண்மையில் அபாயம் விளைப்பதாகும். ஆனால் இந்தியா முழுவதையும் அதன் ஜனங்களையும் பாதிக்கவும், நிலைமையின் தன்மைக்கு எற்றனவல்லாதவாறு அரசாங்கத்தாருக்கு அளவுக்கு மிஞ்சிய அதிகாரங்கள் வழங்கவும் நிறைவேற்றப்பெற்ற இம்மசோதாக்கள் மேற்கூறிய அபாயத்திலும் அதிக அபாயமாகும். இந்தியாவிலுள்ள லக்ஷக்கணக்கான ஜனங்கள் சுபாவத்தில் மிகவும் சாந்த முள்ளவர்களென்பதை விசாரணைக் கமிட்டியார் கவனியாமல் விடுத்திருக்கின்றனர்.

" இப்பொழுது மசோதாக்களின் அமைப்பைப் பாருங்கள். அவைகளைக் கொண்டுவரும் போது இராஜப்பிரதிநிதியார் சிவில்

சர்விஸ் உத்தியோகஸ்தர்களைப் பற்றியும் பிரிட்டிஷ் வியாபாரி களைப்பற்றியும் சில உறுதி மொழிகள் கூறியுள்ளார். இராஜப் பிரதிநிதியார் இங்ஙனம் கூறியிருத்தல் நம்மிற் பலருக்கு மிக்க சந்தேகத்தை விளைவித் திருக்கிறது, அவர் உட்கருத்தை நான் சிறிதும் அறிந்து கொண்டேனல்லேன். சிவில் சர்விஸ் உத்தி யோகஸ்தர்களும் பிரிட்டிஷ் வியாபாரிகளின் நலன்களும் இந்தி யாவின் நலன்களுக்கும் அரசியல் வியாபாரத் தேவைகளுக்கும் மேலாகக் கருதப்படவேண்டுமென்பது அவர் கருத்தாயின் நாம் அவர் கொள்கையை ஏற்றுக் கொள்ளுதல் கூடாததாகும். இக் கொள்கையினுல் இராஜ்யத்திற் குள்ளாகவே வகுப்புத்துவேஷங் கள் பெருகிவரும். சீர்திருத்தங்கள் வழங்கப் பெறினும் வழங் கப் பெறுவிடினும், இப்பொழுது தோன்றியுள்ள முக்கியமான விஷயத்தை நன் குணர்ந்து கொள்ளுதலே மிகவும் அவசிய மாகும். அதனை வைத்துக்கொண்டு மெழுகுவதனுல் உண்மை மையில் திருப்தி யுண்டாகாது. தாங்கள் இந்தியாவின் வேலைக் காரராகவும் பாதுகாப்பாளராகவும் செய்கையில்காட்டிக்கொண்டே இந்தியாவி லிருக்க முடியுமென்பதை சிவில் ஸர்விஸ் கூட்டத் தினர் நன் குணர்ந்து கொள்ளட்டும். இந்தியாவின் தேவை களைக் கவனிக்கவே யன்றிச் சுதேச வியாபாரத்தையும் கைத்தொ ழில் களையும் கலைகளையும் நாசப்படுத்தத் தாங்கள் இந்நாட்டி லிருக்கவில்லை யென்பதைப் பிரிட்டிஷ் வியாபாரக் கூட்டத்தார் அறிந்து கொள்ளட்டும். ரௌலட் மசோதாக்களுக்குப் பதிலாக உங்களுக்கு இரண்டு முறைகள் இருக்கின்றன. அவைகள் அர சாங்கத்திற்கு விரோதமாக ஏற்படும் கலகத்தைத் தக்கவாறு அடக்கவல்லன வென்று நான் உறுதிகூறுகின்றேன்.

"ஸர் ஜார்ஜ் லௌண்டிஸ் பொதுஜன அபிப்பிராயத்தைப் பொருட் படுத்தாதிருந்ததனுல் எரியும் நெருப்பில் எண்ணெய் வார்க்கலானுர். அவர் தமது இந்திய சரித்திரத்தை மறந்து

விட்டனர். இல்லாவிடில் அவர் தம்மைப் பிரதிநிதியாக நியமித்துள்ள அரசாங்கத்தார் பொதுஜன அபிப்பிராயத்தை ஏற்றுக்கொண்டு தம்முடைய முடிவான சொந்த அபிப்பிராயத்தை விட்டுவிட்டன ரென்பதை அறிந்து கொண்டிருப்பார்.

"ரௌலட் மசோதாக்கள் ஆட்சி செய்யும் வகுப்பினரிடம் வேரூன்றியுள்ள வியாதிக் குறியாகுமென நான் ஏன் கருதுகிறேனென்பதை எளிதில் அறிந்து கொள்ளலாம். எனவே அவ்வியாதி தக்க பரிகார முறைகளினால் சிகிச்சை செய்யப்படவேண்டும். மசோதாக்களின் போக்கையும் அவை கொண்டுவரப்பட்டபொழுது ஏற்பட்ட நிகழ்ச்சிகளையுங் கண்டு பொறுமை யிழந்து நிற்கும் சிறுவர் இரகசியத்தில் கொடுஞ்செயல் புரிதலே தக்க பரிகாரமெனக் கருதியிருப்பர். இம்மசோதாக்கள் அரசாங்கத்தினிடம் விரோதத்தையும் கெட்ட எண்ணத்தையும் அதிகப்படுத்துவனவாகும். கொடுஞ்செயல்களே அவைகளின் அறிகுறியாகும். (சத்தியாக்கிரஹ) உறுதிமொழியை வெளியிடுவோர் தாங்கள் எத்தகைய கஷ்டத்தையும் தாங்கிக்கொள்ள வேண்டுமென்னும் மனவுறுதி யுடைமையினால் அரசாங்கத்தாரின் அனுதாபத்தைப் பெறுகின்றனர். அவர்கள் அரசாங்கத்தாரிடம் சிறிதும் விரோதங்கொண்டிருக்கவில்லை. கொடுஞ்செயல்கள் புரிதலே தக்க பரிகார முறை என்று கருதியிருப்போர்க்கும் அவர்கள் நிச்சயமாய் வெற்றியளிக்கக்கூடிய பரிகார முறையை வழங்குகிறார்கள். இப்பரிகார முறை உபயோகிப்போருக்கும் உபயோகிக்கப்பெறுவோருக்கும் பெருநலம் விளைக்கும். இதனை ஏற்றுக்கொள்வோர் இதன் உபயோக முறையை அறிந்துகொள்வாராயின், இதனால் யாதொரு தீங்கும் நேரிடாதென எண்ணுகிறேன். அவர்களுடைய சக்தியை நான் சந்தேகித்தல் கூடாது. பலமான பரிகார முறை உபயோகிக்கப்படுமாறு வியாதி முற்றியிருக்கிறதா வென்பதையும் சாந்தமான

முறைகளெல்லாம் உபயோகித்துப் பார்க்கப்பட்டனவா வென்பதையும் அவர்கள் தெரிந்துகொள்ளுதல் வேண்டும். வியாதி பலமானதென்பதையும், சாந்தமான பரிகார முறைகள் பயன் விளைக்கவில்லை யென்பதையும் அவர்கள் நன்குணர்ந்திருக்கிறார்கள். மற்றவை கடவுளரின் சித்தப்படி நடைபெறும்.

தங்கள்,

(ஒப்பம்) **மோ. க. காந்தி.**"

## சத்தியாக்கிரஹ உறுதிமொழி.

மேற்கூறிய கடிதத்தில் மகாத்மா காந்தி குறிப்பிட்டுள்ள சத்தியாக்கிரஹ உறுதிமொழியைக் கீழே பெயர்த்து வெளியிடுகின்றோம்:—

"1919-ம் வருஷத்திய இந்திய கிரிமினல் சட்டத் திருத்த முதல் மசோதாவென்றும், 1919-ம் வருஷத்திய கிரிமினல் சட்ட அவசர அதிகார இரண்டாவது மசோதாவென்றும் வழங்கப் பெறும் மசோதாக்கள் நியாயவிரோதமானவையென்றும், சுதந்தர நியாயக்கொள்கைகளைப் புறக்கணிப்பவையென்றும், ஜன சமூகத்தின் பத்திரத்தையும் அரசாங்கத்தின் பத்திரத்தையும் தாங்கி நிற்கவல்ல மனித சுதந்தரங்களையும் நியாயத்தையும் அழிப்பவையென்றும் நாங்கள் அபிப்பிராயப் படுகிறபடியால், இம்மசோதாக்கள் சட்டமாகி அவை ஒழிக்கப்பெறும்வரையில், இச்சட்டங்களுக்கும் இனி ஏற்படுத்தப்பெறும் கமிட்டியார் தெரிவிக்கும் மற்றச் சட்டங்களுக்கும் கீழ்ப்படிந்து நடக்கமாட்டோமென்றும், இவ்விவாதத்தில் நாங்கள் உண்மையையே கடைப்பிடித்து, உயிருக்கேனும் உடலுக்கேனும் பொருளுக்கேனும் தீங்கிழைத்தலைத் தவிர்ப்போமென்றும் உறுதி கூறுகின்றோம்."

ரௌலட் சட்டமென வழங்கப்பெறும் இரண்டாவது மசோதாவை ஈண்டுச் சுருக்கமாக ஆராய்ச்சிசெய்ய விரும்புகிறோம். முதல் மசோதா அரசாங்கத்தாரால் தள்ளிவிடப்பட்டதாகத் தோற்றுகின்றமையின், அதனைப்பற்றி நாம் இங்கொன்றும் கூற வேண்டுவதில்லை.

இச்சட்டம் இராஜத்துரோக விசாரணைச் சங்கத்தின் தலைவரது பெயரைத் தாங்கிநிற்கின்றது. அவ்விசாரணைச் சங்கம் நீதிபதி மிஸ்டர் ரௌலட் துரைமகனாரைத் தலைமையாகக் கொண்டு (1) இந்தியாவில் புரட்சி விஷயமாக நடைபெறும் தன்மையையும் அளவையும் விசாரித்து அறிவிக்கவும், (2) அத்தகைய சதியாலோசனைகளைக் கண்டிக்கும் விஷயத்தில் ஏற்படும் கஷ்டங்களைப் பரிசோதித்து ஆராய்ந்து, அரசாங்கத்தார் அவைகளை எளிதில் அடக்குமாறு ஏதேனும் சட்ட முறையைத் தெரிவிக்கவும், 1917-ம் வருஷம் டிசம்பர் மாதம் 10-ந்தேதி ஏற்படுத்தப்பட்டது. இவ்விசாரணைச் சங்கத்தார் இரகசியத்திலேயே விசாரணை புரியவேண்டியவராயினர். அவர்கள் தங்கள் அறிக்கையை 1918-ம்வருஷம் ஏப்ரல் மாதம் 15-ந்தேதி வெளியிடலாயினர். லாகூரில் நான்குமுறை கூடியதைத் தவிர, அவர்களுடைய ஏனைய கூட்டங்கள் கல்கத்தாவிலேயே நடைபெறலாயின. நீதிபதி மிஸ்டர் ரௌலட் அரசாங்கத்தாருக்கு அனுப்பியுள்ள முகவுரைக் கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கின்றனர்: "எங்களை நியமிக்கும்போது உத்தரவு செய்யப்பட்டவாறே நாங்கள் ஒவ்வொரு முறையும் இரகசியத்தில் விசாரணை புரியலானோம்."

இவ்விசாரணைச் சங்கத்தா முன் எத்தகைய சாட்சியம் கொடுக்கப்பட்ட தென்பதையும், கொடுத்தவர்கள் யாவரென்பதையும் பொதுஜனங்கள் இதுகாறும் அறிந்துகொண்டார்களில்லை. சாட்சி கொடுத்தவர்கள் பொது ஜனங்களுக்காகக்

குறுக்கு விசாரணை செய்யப்படவில்லை யென்பது இதனால் நன்கு விளங்குகிறது. ஏனெனில் விசாரணைச் சங்கத்தார் முன் ஜனப் பிரதிநிதிகள் சென்றிருந்தார்களில்லை.

இவ்விசாரணைச் சங்கத்தாரின் சிபார்சுக் கிணங்கவே மசோதாக்கள் வெளி வரலாயின. நாங்கள் அறிக்கையையும் சிபார்சுகளையும் படித்திருக்கிறோம். சிபார்சுகள் அச்சமயம் இல்லாத விஷயங்களுக்குப் பரிகாரந் தேடுவனவாக விருப்பதன் காரணமாக அவைகளை எளிதில் அறிந்துகொள்ளுதல் கூடாததாகும். இந்தியப் பாதுகாப்புச் சட்டமேனும் அதற்குப் பதிலான சட்டமேனும் இல்லாமல் கொடுஞ்செயல்களைத் தவிர்த்தல் முடியாதென்னும் வாதத்தை நாங்களறிவோம். இவ்வாதம் இரண்டு துணிவுகளைக் கொண்டிருக்கின்றன: முதலாவது புரட்சி சம்பந்தமான குற்றத்தை அடக்க அடக்குமுறைச் சட்டம் அவசியமென்பது மாத்திரமன்றி, அச்சட்டம் இருக்கும்வரையில் தான் குற்றம் அடங்கியிருக்கும் என்பதாம். இரண்டாவது. புரட்சிக்காரர்களெனச் சந்தேகிக்கப்பட்டவர்கள் அல்லது படுவோர்கள் இன்னும் திரிந்து கொண்டிருக்கிறார்கள் அல்லது இருந்தார்களென்பது.

## அரசதந்திர முறையின் அழிவு.

முதல் துணிவு அரசதந்திர முறையின் அழிவை வெளிப்படுத்தித் தோல்வியை ஒப்புக் கொள்ளுகிறது. இரண்டாவது, உண்மையாயின், திறமை யின்மையைக் காட்டுவதாகும். அடக்குமுறைச்சட்டம் வேண்டப்படுதல் ஜனங்களின் இஷ்டத்திற்கு இணங்க மனமில்லாமையைக் காட்டுகின்றது. அதாவது ஜனங்களை அவர்கள் இஷ்டத்திற்குமாறாக ஆட்சிபுரிய வேண்டுமென்ற விருப்பம் தோன்றியிருக்கிறது. ரௌலட் சட்டம் கொண்டுவரப்பட்ட காலையில் பேசிய பேர்போன பேச்சில் கனம் மிஸ்டர் சாஸ்

திரி இவ்வுண்மையைத்தெளிவாகஉணர்த்தியிருக்கிறார். அரசியல் முன்னேற்றம் நிலையான அராஜகக் கொள்கை யுடையவனுக்குத் திருப்தி விளையாதெனினும், அடக்குமுறையை விடுத்துச் சீர் திருத்த முறையையே பரிகாரமாகக் கொள்ளவேண்டுமெனக் கூறி அவர் பின்வருமாறு பேசியுள்ளார் :—" அராஜகக்கொள்கை யுடையவர்கள் இங்ஙனம் தம் மனநிலை தடுமாறியிருப்பதன் காரணமாக அரசியற் சீர்திருத்தங்கள் அவர்களுக்குத் திருப்தி விளைப்பதெனக்கொண்டு நாம் அவைகளைப்பற்றி நினையாமலே இருந்துவிடலாமோ? அவர்கள் விஷயத்தில் நாம் சட்டவிதி களைத்தான் கைக்கொள்ளல் வேண்டுமோ? இம்முறையைக் கைக் கொள்ளுதல் சிறந்த அரசதந்திர முறை யாகாதென்பது என் னுடைய அபிப்பிராயம். நாம் அவர்களுக்குத் திருப்தி விளைக் கக்கூடிய அரசியல் முன்னேற்ற முறைகளை வழங்குதல் வேண் டும். நாம் திருப்தி செய்யவேண்டுவது இச்சதியாலோசனைக் காரர்களை மாத்திரமன்று. சாதாரணமான நிலைமையே அரா ஜகத்தை வளர்ப்பதாகும். தனக்கு எங்கும் அனுதாபங் கிடை க்கவில்லை யென்றும், திருப்தியும் அரசியல் முன்னேற்றமு முள்ளவிடத்தில் தன் கொள்கையைப் பரப்ப முடியாதென்றும் சதியாலோசனைக்காரன் கண்டு கொள்வானாயின், சட்டத்தின் நீண்டபுஜம் அவனை எட்டிப் பிடியாவிடினும், அவன் இயற்கை யாக இறந்துபோவான்."

## ஸ்ரீமான் சாஸ்திரியாரின் வீரமொழி.

குற்றமற்றவர்கள் இவ்வடக்குமுறைச் சட்டத்தைக்கண்டு அஞ்சவேண்டுவதில்லையெனக் கூறப்பட்டதன்மேல் ஸ்ரீமான் சாஸ்திரியார் வழங்கிய உரைகள் ஈண்டுக் குறிப்பிடத்தக்கன. "ஒருமுறை நிறைவேற்றப்படும் கொடிய சட்டம் எப்பொழுதும் கெட்டவர்கள் விஷயத்திலேயே உபயோகிக்கப் பெறுவதில்லை...

......................கலவர முண்டாகுங் காலங்களில், மிகச் சிறு நிகழ்ச்சிகளைக் கண்டும், அரசாங்கத்தார் நிலை தடுமாறிப்போவதை நான் கண்டிருக்கிறேன்; அதன் பயனாகக் கொடுங்கோன்மை தோன்றுவதையும் கண்டிருக்கிறேன். அந்நிலையில் மிகச்சிறந்த இந்தியரும், நம்மில் ஒழுக்கத்திற் சிறந்த உத்தமர்களும், சந்தேகிக்கப்பெற்று, குற்றபரிசீலனை இலாகா உத்தியோகஸ்தர்களின் அருவருக்கத்தக்க தொந்தரவுகளுக்கு உள்ளாகவேண்டியர்களாயிருந்திருக்கிறார்கள்.........................அரசாங்கத்தார் அடக்குமுறையைக் கைக்கொள்ளுங்காலத்துக் குற்றமற்றவர்கள் பத்திரமாயிருத்தல் முடியாது. என்போன்றவர்கள் குற்றமற்றவர்களெனக் கருதப்படமாட்டார்கள். அரசியல் துறையில் தலைகாட்டாமல், பொதுஜன இயக்கங்களில் சம்பந்தப்படாமல், தன் வீட்டிற்குள்ளேயே பதுங்கிக்கொண்டு, கடவுளைத்தொழுது, வரி செலுத்தி, அரசாங்க அதிகாரிகளுக்குச் சலாம் செய்பவனே குற்றமற்றவனெனக் கருதப்படுவான். அரசியலில் தலையிடுபவன், ஏதேனுமொரு பொது விஷயத்தை முன்னிட்டுப் பணம் வசூலிப்பவன், பொதுக்கூட்டத்தில் பேசுபவன் சந்தேகிக்கப்படுகின்றான். நான் எப்பொழுதும் எல்லைப்புறத்தி லிருப்பவன். வேறொன்றிற்காக இல்லாவிடினும், சொந்தக் காரணங்களை முன்னிட்டேனும், இத்தகைய கொடிய அதிகாரம் நிர்வாக அதிகாரிகளிட மிருத்தல் கெட்டவர்களை மாத்திரம் வருத்தாதெனக் கூறத் துணிவேன். அது நல்லோரையும் தீயோரையும் ஒருங்கே வருத்துவதாகும். இதனால் பொது ஜனங்களின் ஊக்கங் குலைந்துபோம்; நாட்டின் அரசியல் வாழ்க்கை மந்தித்துவிடும். பொறுப்பாட்சி யென நீங்கள் பேசிக்கொள்வது பரிகசிக்கத்தக்க வெற்றுரையாகும். நீங்கள் உங்கள் சபைகளைப் பெருக்கலாம்; ஜனப் பிரதிநிதிகளைத் தெரிந்தெடுப்போரின் தொகையை அதிகப்படுத்தலாம். ஆனால் அப்பொழுது உங்கள்

சபைகளுக்கு வருவோர் பயங்காளிகளா யிருப்பர். அதிகார வர்க்கத்தவர் அடக்குமுறை அதிகாரங்களைக் கைக்கொண்டு குடிப்பொருப்பாட்சியின் உடையை வெளிக்குக் காட்டிக்கொண்டே தடையின்றித் தம் இஷ்டப்படி ஆட்சி செய்துவருவர். நாமெல்லோரும் கொடியவர்களைத் தண்டிக்கக் கருதியிருக்கிறோம். கொடியவர்கள் தண்டனை யில்லாமல் தப்பிப்போக வேண்டுமென நாமொருவரும் விரும்பவில்லை. ஆயினும்........................
கொடியவர்களும் சில வழிகளில்தான் தண்டிக்கப்படவேண்டும். ஷெபிங்டன் சுடப்பட்ட காலையில் உலகம் முழுவதும் நடுக்குற்றுப் போய்விட்டது எனக்கு ஞாபகமிருக்கிறது..................
இப்பொழுது யுத்தத்திலும், ஜனசமூகம் முழுவதும் ஆபத்திற்குள்ளாகிக் கலங்கும்போதும், சத்துருவை வெல்லவேண்டுமென்பதையன்றி வேறெதையும் ஒருவரும் நினையாதிருக்கும்போதும் யுத்த விதிகள் அனுசரிக்கப்படவேண்டி யிருக்கின்றன. நீங்கள் ஆட்டமாடவேண்டியவர்களா யிருக்கிறீர்கள்......................
ஒரு நாட்டில் குற்றவாளிகள் திரிந்துகொண்டிருப்பின், அவர்களைத் தண்டிக்கச் சில வழிகளுண்டு. நீங்கள் அவர்களைக் காலைப் பிடித்துக் கிடத்தி நியாய உணர்ச்சியைப் பாழ்படுத்துமாறும், நாட்டில் சட்டமில்லை யென அறிவில்லாதவர்கள் கருதுமாறும், ஒழுங்கான பொதுஜன வேலையைப் பாழ்படுத்துமாறும் தண்டித்தல் கூடாது. எனவே கொடுமையை ஒழிப்பதற்காகக் கொடுக்க வேண்டிய விலை மிகவும் அதிகமாயிருக்கிறது......................
யோக்கியன் சட்டத்திற்குப் பயந்து வீட்டிற் பதுங்கி, இயற்கையாகத் தனக்கு விருப்பமுள்ள வேலைகளில் தலையிடாமல் ஒதுங்கி நாட்டில் பயப்படக்கூடிய சட்டமிருப்பதன் காரணமாக அரசியல் துறையிலும் பொதுஜன ஊழியத்திலும் ஈடுபட்டு வேலை செய்யாதொழிதலைக் காட்டிலும் கொடியவர் சிலர் வெளியே திரிந்துகொண்டிருத்தல் மேலானதாகும்."

தம் பொறுப்பிலுள்ள மசோதா அரசியலைச் சுத்தப்படுத்த வல்லாது அடக்குவதற்காகக் கொண்டுவரப்படவில்லை யென ஸர் வில்லியம் வின்சென்ட் கூறிய கூற்றை ஸ்ரீமான் சாஸ்திரியார் அங்கீகரித்தாரில்லை. அவர் நல்ல எண்ணங்களுக்கு மதிப்புக் கொடுத்தார். ஆனால் அவர் அச்சந்தர்ப்பத்தில் "ஆ! இவ்வுலகில் எப்பொழுதும் நல்ல எண்ணங்கள் பயன்விளைத்திருக்குமாயின் நன்றாயிருந்திருக்கும்..........................அரசியல் சம்பந்தமாகவும் ஜனசார சம்பந்தமாகவும் செய்யப்பட்டுள்ள சட்ட வரலாற்றை உற்றுநோக்குங்கால் நல்ல எண்ணங்கள் பாழ்பட்டிருக்கின்றனவென்பது நன்கு விளங்கும். வறுமையை ஒழிக்கும்பொருட்டுச் செய்யப்பட்ட சட்டங்கள் அதனை அதிகப்படுத்தி யிருக்கிறது.....................அரசியலைச் சுத்தப்படுத்தும் நோக்கத்துடன் நம்முன் கொண்டுவரப்பட்டுள்ள சட்டங்கள் அதை அடக்குமளவாக ஆபத்து விளைக்குமென்பதை ஸர் வில்லியம் வின்செண்ட் துரைமகனாருக்குப் பணிவுடன் அறிவிக்கிறேன். சமாதானத்தை நிலைநாட்டும் பொருட்டுக் குறுக்கு வழியாகச் செல்லும் அதிகாரமுறைகளை நிர்வாக அதிகாரிகளுக்கு வழங்காமல் இத்தகைய சட்டம் சட்ட புத்தகத்தில் பதிய வைக்கப்பெறுதல் முடியாது"—என்று பேசியிருக்கிறார்.

இவ்வடக்குமுறை பொது ஜன அபிப்பிராயத்தால் ஆதரிக்கப்பெறவில்லை. தம் இந்திய சகாக்கள் ஏகோபித்த மனத்துடன் எதிர்க்கும்போது இச்சட்டத்தை நிறைவேற்றுதல் கூடாதென எச்சரிக்கை செய்கையில் ஸ்ரீமான் சாஸ்திரியார் இந்தியச் சட்ட சபையாரைப் பின்வருமாறு கேட்டிருக்கின்றனர். "இந்தியர்களுள் யாவர் உங்கள் சார்பாக நிற்கின்றனர்? இந்தியாவின் விசனகரமான கதையைக் கீழ்க்கண்டவாறு சுருக்கிக் கூறலாம். இத்தனை நூற்றாண்டுகளாக நீங்கள் பொதுஜன அபிப்பிராயத்தைப் பொருட்படுத்தாமலே இந்நாட்டை ஆண்டு

வந்திருக்கிறீர்கள்..................பொதுஜன அபிப்பிராயத்தின் எந்தப் பகுதியும் உங்களை ஆதரிக்கவில்லை. நியமிக்கப்பட்ட அங்கத்தினர் தங்கள் ஆசீர்வாதத்தை இம்மசோதாவிற்கு வழங்கினரில்லை. ஜமீன்தார் அங்கத்தினர்களும் இதனை ஆசீர்வதித்தார்களில்லை. சட்ட அங்கத்தினரும் அதனை ஆதரிக்கவில்லை. வியாபார அங்கத்தினரும் ஆதரிக்கமாட்டார்கள். ஆயினும் கனம் ஸர் ஜார்ஜ் லௌண்டிஸ் 'இச்சட்டம் நியாயமானதென நாம் கருதுகின்றபடியால் இதனை நிறைவேற்றவேண்டும். உங்கள் உதவியை நாங்கள் சந்தோஷத்துடன் பெற்றுக்கொண்டிருப்போம். ஆயினும் எங்கள் பொறுப்பை முன்னிட்டு, நாங்கள் எவ்வளவு விரும்பியபோதிலும், உங்கள் உதவியின்றியும் இதனை நிறைவேற்ற வேண்டியவர்களா யிருக்கிறோம்' என்று சொல்லியிருக்கிறார். கனம் சட்ட அங்கத்தினரின் தைரியத்தை நான் பாராட்டுகிறேன். அவர் 'இன்று எங்களிடம் பொறுப்பிருக்கிறது. உங்களுக்குப் பொறுப்பில்லை' என்று வெளிப்படையாகச் சொல்லியதையும் நான் பாராட்டுகிறேன். நாங்கள் அந்நிலைமையை உணர்ந்திருக்கிறோம்' பிரபுவே, இச்சட்டத்தில் எங்களுக்குச் சிறிதும் பொறுப்பில்லை. இவ்விஷயம் பொதுஜன அபிப்பிராயத்தின் முன் விடப்படும்போது, இங்கிலீஷ் பொது ஜனங்களில் சில பகுதியினர் நினைப்பரென ஸர் வில்லியம் வின்செண்ட் கருதுவதுபோல், பொது ஜனங்கள் எங்களுக்குப் பொறுப்பிருந்ததாகவும் நாங்கள் அதனைக் கழித்துக்கொண்டதாகவும் நினைப்பார்களென்பதை நான் நம்பமாட்டேன். எங்களுக்கு ஒன்றுமில்லை."

## அரிய எச்சரிக்கை.

ஸ்ரீமான் சாஸ்திரியார் கீழ்க்கண்ட அரிய எச்சரிக்கையுடன் தம் பேச்சை முடிக்கலானார்: " தற்போழ்து என்னைப் பிரதிநிதி

காகக் கொண்டுள்ள நாட்டின் அபிப்பிராயத்தை முன்னிட்டு நான் இப்பொழுது ஒரு வார்த்தை சொல்லவேண்டியவனு யிருக்கிறேன். எங்களிற் சிலர் கிளர்ச்சி செய்வதாகப் பயமுறுத்துகின்றனரெனச் சொல்லியபோது கனம் சட்ட அங்கத்தினர் தாம் சொல்லியவற்றை யெல்லாம் உண்மையாக நினைத்திருப்பரென்று நான் கருதவில்லை. இங்கே இம்மசோதாவைக் கண்டித்துப் பேசியவருள் எவரும் பெருங் கிளர்ச்சி செய்வதாகப் பயமுறுத்தவில்லையென நான் நினைக்கிறேன். எங்களுள் ஒருவரும், மிதவாதிகளுள் ஒருவரும், நாட்டில் கொடிய கிளர்ச்சியைக் கிளப்பிவிடச்சக்தியுள்ளவரா யிருக்கவில்லை. அங்ஙனஞ் செய்தல் கூடாத காரியமாகும். கிளர்ச்சி முன்னரே தோன்றியிருத்தல் வேண்டும். சாதாரண அரசியல் துறையில் நாம் இங்கே பேசும் மொழிகள் பயன்பெறவேண்டுமாயின் இருதயம் துடித்துக்கொண்டிருக்க வேண்டும். கிளர்ச்சி அங்கே யிருக்கிறது. அதில் எங்களில் ஒருவரும் இதுகாறும் கலந்திருக்கவில்லையென என் உத்தியோக நண்பர்களுக்குத் தெரிவிக்கிறேன். எங்கள் வேண்டுகோள் பலியாமல் மசோதா சட்டமாக்கப்பெறின், இங்குள்ளவருள் எவரேனும் கிளர்ச்சியிற் சேர்ந்திராவிடில் தம் கடமையைச் செய்து கொண் டிருப்பரென்று நான் நம்பமாட்டேன்.''

இத்தகைய ஆவேசத்துடன் கண்டிக்கப்பெற்றும், மசோதா செலெக்ட் கமிட்டியாரின் ஆலோசனைக்கு விடப்படவேண்டுமென்னும் பிரரேபணை நிறைவேற்றப்பட்டது; இம்மசோதா ஆலோசிக்கப்படும் விஷயம் சட்டசபையின் உத்தியோக காலம் முடிந்த ஆறுமாத காலம் வரை தள்ளிவைக்கப்படவேண்டுமென்ற திருத்தம் 1919-ம் வருஷம் பெப்ருவரி மாதம் 6-ந்தேதி தோற்றுப்போய்விட்டது. 22 அங்கத்தினர் திருத்தத்தை ஆதரித்தனர்; 35 பேர் மறுத்தனர். திருத்தத்தை எதிர்த்து மசோதாவை ஆதரித்த 35 அங்கத்தினர் பெயர்களையும், திருத்தத்தை ஆத

ரித்து மசோதாவை எதிர்த்த 22 அங்கத்தினர் பெயர்களையும் கீழே வெளியிடுகின்றோம். 35 அங்கத்தினருள் இந்திய அங்கத்தினராயிருக்கும் ஒருவரும் இராஜப் பிரதிநிதியார் நிர்வாக சபையின் இந்திய அங்கத்தினரென்பது எளிதில் விளங்கும். அவர் தம் பதவியினின்றும் விலகிக்கொள்ளாமல் வேறு வழியில் தம் அபிப்பிராயத்தை வெளியிடக் கூடாமலிருந்தார்.

**திருத்தப் பிரரேபணையை ஆதரித்தவர்கள்—22 பேர்.**

கனம் ஸர் கங்காதர சிட்னவிஸ்.
,, பாபு சுரேந்திரநாத் பானர்ஜி.
,, மகமதபாத் ராஜா.
,, டாக்டர் டெஜ்பகதூர் ஸப்ரு.
,, பண்டித மதன்மோகன் மாளவ்யா.
,, மிஸ்டர் ஸ்ரீநிவாஸ சாஸ்திரி.
,, மிஸ்டர் பி. என். சர்மா.
,, மீர் அஸத் அலிகான் பகதூர்.
,, மிஸ்டர் வி. ஜே. பேடல்.
,, மிஸ்டர் மகமத் அலி ஜின்னு.
,, ஸர் பஸூல்பாய் கரிம்பாய்.
,, ராய் சீதாநாத் ராய் பகதூர்.
,, ராஜா ஸர் ரம்பல் சிங்க்.
,, ராய் கிருஷ்ண ஸஹாய் பகதூர்.
,, கனிகா ராஜா.
,, மிஸ்டர் மஸருல் ஹேக்.
,, கான்பகதூர் மியான் மகமத் ஷாபி.
,, கான் ஜுல்பிகர் அலிகான்.
,, மிஸ்டர் ஜி. எஸ். கபார்தே.
,, ராய் பி. டி. ஷுகுல் பகதூர்.

கனம் கே. கே. சந்தா.
,, மௌங்க் பா டூ.

## திருத்தப் பிரரேபணையை மறுத்தவர்கள்—35 பேர்.

ஹிஸ் எக்ஸெலென்ஸி கமாண்டர்-இன்-சீப்.
கனம் ஸர் க்ளாட் ஹில்.
,, ஸர் சங்கரன் நாயர்.
,, ஸர் ஜார்ஜ் லௌண்டிஸ்.
,, ஸர் வில்லியம் வின்செண்ட்.
,, ஸர் ஜேம்ஸ் மெஸ்டன்.
,, ஸர் ஆர்தர் ஆண்டெர்ஸன்.
,, மிஸ்டர் டபுல்யூ. ஏ. ஐரன்ஸைட்.
,, ஸர் வெர்னி லவெட்.
,, மிஸ்டர் எச். எப். ஹவர்ட்.
,, ஸர் ஜேம்ஸ் குபுலே.
,, மிஸ்டர் ஏ. எச். லீ.
,, மிஸ்டர் எச். ஷார்ப்.
,, மிஸ்டர் ஆர். ஏ. மாண்ட்.
,, மேஜர் ஜெனரல் ஸர் ஆல்பர்ட் பிங்க்லீ.
,, ஸர் காட்ப்ரே பெல்.
,, மிஸ்டர் எப். சி. ரோஸ்.
,, மிஸ்டர் சி. எச். கெஸ்டெவென்.
,, மிஸ்டர் டி. டி. எஸ். ப்ரே.
,, லெப்டினெண்ட் கர்னல் ஆர். இ. ஹாலண்ட்.
,, ஸர்ஜன் ஜெனரல் டபுல்யூ. ஆர். எட்வர்ட்ஸ்.
,, மிஸ்டர் ஜீ. ஆர். க்ளார்க்.
,, மிஸ்டர் ஏ. பி. மட்டிமன்.
,, மிஸ்டர் சி. ஏ. பாரன்.

கனம் மிஸ்டர் பி. எல். மூர்.
,, மிஸ்டர் எம். என். ஹாக்.
,, மிஸ்டர் டி. எமெர்ஸன்.
,, மிஸ்டர் இ. எச். சி. வாஷ்.
,, மிஸ்டர் சி. ஏ. கின்கேய்ட்.
,, ஸர் ஜான் டானல்ட்.
,, மிஸ்டர் பி. ஜே. பாகன்.
,, ஜே. டி. மார்ட்டென்.
,, டபுல்யூ. ஜே. ரெயிட்.
,, டபுல்யூ. எப். பைஸ்.
,, எச். மான்க்ரீட் ஸ்மித்.

இம்மசோதாவின் போக்கையும் நோக்கத்தையும் பாதியாத சில மாற்றங்களைச் சட்ட அங்கத்தினர் ஏற்றுக்கொண்டதும், மார்ச்சுமாதம் 18-ந்தேதி அது நிறை வேற்றப்பட்டபொழுது, பண்டித மதன் மோகன் மாளவ்யா, மிஸ்டர் மஸருல் ஹேக், மிஸ்டர் மகமத் அலி ஜின்னு ஆகிய மூவரும் சட்டசபை அங்கத்தினர் பதவியை இராஜினாமா செய்யலாயினர்.

## இச்சட்டத்தின் நிபந்தனைகள்.

ரௌலட் சட்டத்தின் நிபந்தனைகளை ஈண்டு ஒரு சிறிது ஆராய்ச்சி செய்து, அதை முன்னிட்டுத் தோன்றிய பிரமாதமான கிளர்ச்சி நியாயமானதா என்பதை உற்று நோக்குவோம்.

முதலில் இச்சட்டம் நிலேயானதாகச் செய்யப்படவேண்டுமென யோசிக்கப்பட்டிருந்தது. யுத்தம் முடிவுற்ற மூன்று வருஷங்கள் வரையிலேயே இச்சட்டம் அமுலி லிருக்கலாமென ஸெலெக்ட் கமிட்டியில் கொண்டுவரப்பட்ட திருத்தப் பிரரேபணை அங்கீகரிக்கப்பட்டது. இச்சட்டம் கண்டிக்கப்பட்ட

கொள்கை இந்தத் திருத்தப்பிரரேபணையால் பாதிக்கப்படவில்லையென நாங்கள் கருதுகின்றோம்.

இச்சட்டம் 43 செக்ஷன்களை யுடையதாய் ஐந்து பிரிவுகளாக வகுக்கப்பெற்றிருக்கிறது. சட்டத்தின் முன்னுரை படிப்பதற்கு வேடிக்கையா யிருக்கும்: "சாதாரண கிரிமினல் சட்டத்தைப் பலப்படுத்தி, அராஜகக் குற்றத்தையும் புரட்சிக் குற்றத்தையும் அடக்குமாறு அரசாங்கத்தாரிடம் அவசர அதிகாரங்கள் வழங்க வசதிகள் ஏற்படுத்தப்படவேண்டி யிருப்பதால்" என்று முன்னுரை தொடங்குகின்றது.

இச்சட்டம் பிரிட்டிஷ் இந்தியா முழுவதிலும் அமுலுக்குக் கொண்டுவரப்படும். பிரிட்டிஷ் இந்தியாவின் எந்தப் பாகத்திலேனும் அராஜக இயக்கங்களேனும் புரட்சி இயக்கங்களேனும் பரவச்செய்யப்படுகின்றனவென்றும், அவ்வியக்கங்கள் சம்பந்தமாக ஷெடியூலிற் காணப்பட்டுள்ள குற்றங்கள் பொதுஜன பத்திரத்தை நாடி விரைவில் விசாரணை செய்யப் படுமளவாகப்பரவி யிருக்கின்றனவென்றும் தமக்குத் தோன்றினால், இராஜப் பிரதிநிதியார் அதனை வெளியிடலாம். உடனே அறிக்கையிற் காணப்படும் எல்லைக்குள் இச்சட்டத்தின் முதற்பகுதி அமுலுக்குக் கொண்டுவரப்படும். நிர்வாக அதிகாரிகளுக்கு வழங்கப்பெறும் அதிகாரங்கள் அதிகமானவை யென்பதை இச்சட்டத்தை ஆதரிப்போர் அங்கீகரிக்கின்றனரெனினும், நியாயம் தவறாகச் செலுத்தப்படுவதைத் தடுக்க ஏற்படுத்தப்பட்டுள்ள சாதாரண பாதுகாப்புக்களை விலக்குமளவாக அராஜகப் புரட்சி இயக்கங்களும் ஷெடியூலிற் காணப்படும் குற்றங்களும் பரவி வருகின்றனவென்பதை இராஜப்பிரதிநிதியாரே அங்கீகரிக்கவேண்டி யிருப்பதால், மேற்கூறிய பிரத்தியேக அதிகாரங்களினால் தீங்கொன்றும் விளையாதென வாதஞ்செய்கின்றனர். பெரிய அதிகாரி சாதாரணமாக எங்ஙனம் அங்கீகாரம் கொடுக்கின்றனரென்பதைப்

பார்ப்போம். மிகத் தாழ்ந்த வகுப்பிலுள்ள போலீஸ் உத்தியோகஸ்தனிடமிருந்தே குற்ற விஷயமான செய்தி கிடைத்துவருகின்றது. அத்தகைய போலீஸ் உத்தியோகஸ்தன் பல முறைகளில் குற்றத்தை மிகைபடக் கூறுபவனுயிருக்கின்றான்; அறியாமை காரணமாக அவன் தன் முன்னுள்ள உண்மைகளைக் கவனிக்கச் சக்தியற்றவனுகின்றான்; பல முறைகளில் லஞ்சம் முதலியவைகளினுல் திருப்தியடைபவனுயிருக்கிறான். புரட்சிக் கலகம் பரவிவருகிறதென்றும், அது சம்பந்தமான குற்றங்கள் நடைபெற்று வருகின்றனவென்றும் அவன் தன் மேலதிகாரியிடம் தெரிவிக்கிறான். மேலதிகாரி விசாரணை செய்கிறார். அவர் திருப்தி கொள்ளுகிறார். இல்லாவிடில் குற்றமிருப்பதாகத் தெரிவித்த போலீஸ் உத்தியோகஸ்தன் சாட்சியங்கள் தயார் செய்துகொண்டு வருகிறான். குற்றமிருக்கிறதென்னும் வதந்தி, சந்தேகாஸ்பதமாகவும் மாசுற்றதாகவுமிருப்பினும், மேலே செல்லச் செல்ல மிகவும் முக்கியமானதாகி வடிவிற் பெருத்துக் கடைசியில் தகாத அங்கீகாரத்தையும் அதிகாரத்தையும் இராஜப் பிரதிநிதியிடம் பெற்று விடுகின்றது. பஞ்சாப் சம்பவங்களைக் கவனித்தால் நாங்கள் சொல்வதன் உண்மையும், வதந்திகளும் சந்தேகங்களும் வளர்ந்து புரட்சி இயக்கங்களாக மாறியதும், ஒன்றுமறியாதவர்கள் கெட்ட எண்ணத்துடன் எங்ஙனம் துன்புறுத்தப்படுகின்றனரென்பதும் பஞ்சாப் சம்பவங்களைப் படிப்போர்க்கு நன்கு விளங்கும்.

## ஷெடியூலிற் காணப்பட்ட குற்றங்கள்.

ஷெடியூலிற் காணப்பட்டுள்ள குற்றங்கள் எத்தன்மையனவென்பதைக் கவனிப்போம். அவை இராஜத்துரோகம், கொடிய ஆயுதங்களேந்தி கலகஞ்செய்தல், வகுப்புத்துவேஷம் விளைத்தல், அபாயகரமான ஆயுதங்களினுல் பலத்த காயமுண்டாக்குதல்,

பணம் பறிக்கவேனும் அநியாயச் செயலை அடக்கவேனும் காயப் படுத்துதல், பணம் பறிக்கவோ கொள்ளை யடிக்கவோ வருத்துவ தாக ஒருவரைப் பயமுறுத்துதல் என்பனவற்றைத் தம்முள் அடக்கிக்கொண் டிருக்கின்றன. புரட்சிக்கலக மிருப்பதாகச் சந்தேகிக்கப்பெறின், அரசாங்கத்தாரின் செயலைப் பலமாகக் கண்டித்தலும், மதசம்பந்தமான கலகமும், ஹிந்து மகம்திய விவாதமும், பிரத்தியேக விஷயங்களை முன்னிட்டுப் பணம் பறித்தலும், ஜீவனத்தை முன்னிட்டுக் கொள்ளையடித்தலும் புரட்சிக் கலகத்தோடு சம்பந்தப்பட்டிருப்பதாகக் கருதப்படும்.

இவ்விரைவான விசாரணை முறை எத்தன்மையது? மசோ தாவைப் பிரரேபித்தவர் கூறியவாரே நாம் அதனைக் கூறுகின் றோம். இவ்விசாரணைகள் "மேல் நியாயஸ்தலத்திற்கு ஒப்பு விக்கப்படாமலும், அப்பீல் உரிமை யில்லாமலும், அந்தரங்கத்தி லும்" நடத்தப்பெறலாம். அட்வகேட் ஜெனரலின் விருப்பப் படி, ஹைகோர்ட் வழக்கமாகக் கூடுமிடத்தைத் தவிர்த்து, மாகா ணத்தின் எந்த இடத்திலேனும் கோர்ட்டார் விசாரணை நடத்தலாம்.

கிரிமினல் புரொஸீஜர் கோட் இச்சட்டத்தின் முதற்பாகத் திற்கு முரண்படுவதாயிருக்கும் விஷயங்களில் அதன்கீழ் நடை பெறும் விசாரணைகளில் அனுசரிக்கப்படவேண்டாமென 7-வது செக்ஷன் கூறுகின்றது. மரண தண்டனை விதிக்கப்பெறத் தக்க விசாரணைகளிலும், மாஜிஸ்டிரேட்டுகள் வாரண்ட் கேசுக ளில் அனுசரிக்கும் முறை அனுசரிக்கப்படலாமென 8-வது செக்ஷன் கூறுகின்றது. குற்றவாளி பதினைந்து நாட்களுக்கு அதிகப்படாத ஒரே வாயிதா கேட்கலாம். சாட்சிச் சட்டத்தின் முக்கியமான இரண்டு செக்ஷன்களை 18-வது செக்ஷன் புறக் கணித்துவிடுகின்றது. இறந்துபோனவனுடைய வாக்குமூலம் அவனுடைய பண நலன்களுக்கு விரோதமானதாகவும் முன்

னரே குறுக்கு விசாரணை செய்யப்பட்டதாகவும் இருந்தால் மாத்திரம் ஏற்றுக்கொள்ளப்படலாமென இந்தியச் சாட்சியச் சட்டத்தின் 32, 33-வது செக்ஷன்கள் கூறுகின்றன. மாஜிஸ்டிரேட்டின்முன் வாக்குமூலங் கொடுப்பவன் இறந்துபோனாலும், அகப்படாவிட்டாலும், சாட்சியங் கொடுக்கமுடியாவிட்டாலும், அவன் இறந்ததோ, காணமற் போனதோ, சாட்சியங் கொடுக்கமுடியாமலிருப்பதோ குற்றவாளியின் நன்மையை நாடி ஏற்பட்டதாகக் கோர்ட்டார் கருதினால், 18-வது செக்ஷன்படி மேற்கூறிய பாதுகாப்புக்களிரண்டும் தள்ளிவிடப்படும். இந்தப் பிரிவு நியாயத்தைச் சீர்குலைக்குந் தன்மையதா யிருக்கிறது. குற்றவாளியின் நன்மையை முன்னிட்டு மரணமோ, மறைவோ, சக்தியின்மையோ எப்பொழுது நேர்ந்ததென்பதைக் கோர்ட்டார் கண்டுபிடித்தல் மிகவும் கஷ்டமான காரியமாகும். எனவே முன்னர்க் குறுக்கு விசாரணை செய்யப்படாதவனும் தன் நன்மையை நாடியிருப்பவனுமான ஒருவன் வாக்குமூலத்தினால் குற்றமற்ற ஒருவன் எளிதில் சங்கடத்திற்குள்ளாக்கப்படலாம்.

17-வது செக்ஷன்படி, இத்தகைய விசாரணைகளில் செய்யப்பெறும் தீர்ப்புகள் கடைசியானவைகளாகவும் மாற்றக்கூடாதனவாயும் அப்பீல் உரிமை பெறாதனவாயும் கருதப்படும். இவ் விசாரணை ஸ்தலத்தில் ஹைகோர்ட்டில் நிலையாக நீதிபதி உத்தியோகம் பார்த்துள்ள மூவர் விசாரணை நடத்துவாராகலின், கிரிமினல் புரொசீஜர் கோட், சாட்சிச் சட்டம் முதலியவைகளால் வழங்கப்பெறும் பாதுகாப்புகள் சிறிதளவு தள்ளிவைக்கப்படுவதாலும், அப்பீல் உரிமையும் தீர்ப்பை மாற்றுதலும் இல்லாமலிருப்பதாலும் கவலை ஏற்படவேண்டிய அவசிய மில்லையென வாதிக்கப்படுகிறது. சென்ற ஏப்ரல் மாதம் நடைபெற்ற சம்பவங்களை ஆராய்ச்சி செய்யுமிடத்தில் நாங்கள் காட்டுவதுபோல், ஹைகோர்ட் அமைப்பினின்றும் விலகி ஹைகோர்ட் நீதிபதிகள்

விசாரணை ஸ்தலத்தை ஏற்படுத்திக்கொள்ளுதல் ஏமாற்றந்தரும் ஆறுதலேயாகும். நன்கு ஆலோசிக்கப்பட்ட நடைமுறையேனும் சாட்சிய விதிகளேனும் இல்லாவிடத்து, சிறந்த நீதிபதியும் சாட்சியத்தை மதிப்பிடுவதிலும் விதிகளை அனுசரிப்பதிலும் தவறிப்போதல் கூடும்.

## இரண்டாம் பாகம்.

ரௌலட் சட்டத்தின் முதற் பாகம் இவ்வளவே. அது தண்டிக்குமுறையைக் கொண்டுளது. இரண்டாம் பாகம் தடுக்குமுறைகளைக் கொண்டுளது. மசோதாவைப் பிரரேபித்தவர் கூறியதுபோல் இரண்டாம் பாகம் இன்னும் அதிகமாகக் கண்டிக்கத் தக்கதாயிருக்கிறது. ஷெடியூலில் காணப்பட்டுள்ள குற்றங்கள் நடைபெறுவதாக முதற்பாகம் கருதுகின்றது. இரண்டாம் பாகமோ, ஷெடியூலிற் காணப்பட்டுள்ள குற்றங்கள் நடைபெறுமாறு புரட்சிக் கலகங்கள் இருந்து வருவதாக நிர்வாக சபையோடு கூடிய இராஜப் பிரதிநிதியார் கருதுவாராயின், குறிப்பிட்ட எல்லைக்குள் சட்டத்தின் இரண்டாம்பாகம் நடவடிக்கைக்குக் கொண்டுவரப்படுமென அவருக்கு அதிகாரம் வழங்குகின்றது. யாரேனுமொருவன் புரட்சிக் கலகத்தில் சம்பந்தப்பட்டிருந்ததாகவோ இருப்பதாகவோ பிரதேச அரசாங்கத்தார் நம்பப்போதிய காரணங்களிருப்பின், அவ்வழக்குச் சம்பந்தமான விஷயங்கள் யாவையும் ஹைகோர்ட் நீதிபதியாகும் யோக்கியதையுடைய ஒரு நியாய இலாகா உத்தியோகஸ்தரிடந் தெரிவித்து அவருடைய அபிப்பிராயத்தைப் பெறலாமென 22-வது செக்ஷன் கூறுகின்றது. அதன் பிறகு, இரண்டாம் பாகத்தின்படி நடவடிக்கை யெடுத்துக்கொள்ளுதல் அவசியமெனப் பிரதேச அரசாங்கத்தார் கருதுவாராயின், அவர்கள் ஷெடியூலிற் கண்டுள்ள

குற்றங்களைச் செய்வதையும் செய்ய முயல்வதையும் தவிர்ப்பதாகவும், அரசாங்கத்தாருக்கு அறியாமல் தன் இருப்பிடத்தை மாற்றுவதில்லையென்றும், தான் குறிப்பிட்ட எல்லைக்குள் கட்டுப்படுத்தப்படுவதாகவும், பொதுஜன அமைதியைக் குலைப்பதாகவேனும் பொதுஜன பத்திரத்திற்கு விரோதமாகவேனுமுள்ள எந்தச் செய்கையையும் செய்கிறதில்லையென்றும், குறிப்பிடுங்காலத்தில் சமீபத்திலுள்ள போலீசாரை வந்து கண்டு போவதாகவும் ஏற்றுக்கொண்டு, சந்தேகிக்கப்படுபவனிடமிருந்து ஒருவருஷத்திற்கு மேற்படாமல் ஜாமீன் பெற்றுக் கொள்ளலாம்.

தமது உத்தரவுகளை நடவடிக்கைக்குக் கொண்டுவரும் விஷயத்தில் அரசாங்கத்தார் அவசியமான முறைகளையெல்லாம் கைக்கொள்ளலாமென 24-வது செக்ஷன் அதிகாரம் வழங்குகின்றது. எனவே, வெறும் சந்தேகத்தின்மேல், மிக்க மதிப்புள்ள ஒருவரும் போலீசாரின் கையிற் சிக்கியிருகக நேரிடும். இது தடுக்கு முறையாயின், இது வியாதியைக்காட்டிலும் கொடியதாயிருக்கிறது. தடுக்கவேண்டிய வியாதியையே இந்தத் தடுக்குமுறை உண்டாக்குவதாயிருக்கிறது.

பிரதேச அரசாங்கத்தாரின் செய்கையை மேற்பார்வை செய்வதற்காக இவ்விரண்டாம்பாகம் ஒரு பிரத்தியேக வசதியை ஏற்படுத்துகிறது. அதுதான் விசாரணை செய்யும் அதிகாரமெனப்படுவது. இவ்வதிகாரத்தை வகிப்போர் 22-வது செக்ஷன்படி பிரதேச அரசாங்கத்தார் செய்யும் உத்தரவுகளை ஆராய்ச்சிசெய்ய வேண்டியவராயிருக்கிறார். அவர் தம் விசாரணையைக் கட்டாயமாக அந்தரங்கத்திலேயே நடத்த வேண்டும். "அவ்வதிகாரி விசாரணை நடந்துகொண்டிருக்குங்காலை, தாவா மனிதனைத் தம்முன் வரவழைத்து, அவன்மேல் ஏற்படுத்தப்பட்டுள்ள குற்றத்தை அவனுக்கு விளக்கிக்கூறுவார்."

## குற்றவாளிக்காக நியாயவாதி வருதல்கூடாது.

நாங்கள் எடுத்துக்காட்டியுள்ள 26-வது செக்ஷன், குற்றஞ் சாட்டப்படுபவனுக்காக நியாயவாதி வந்து வாதித்தல் கூடா தென்றும், பிரதேச அரசாங்கத்தாரும் அங்ஙனம் உரிமை கொடுக்கப்படலாகாதென்றும் கூறுகின்றது. பொதுஜன பத்திரத்தையேனும் யாரேனுமொருவனுடைய பத்திரத்தையேனும் பாதிப்பதாயுள்ள எந்த விஷயத்தையும் தாவா மனிதனுக்குத் தெரிவித்தல் கூடாதென இந்தப் பிரிவு விசாரணை செய்யும் அதிகாரிக்குக் கட்டளை யிடுகின்றது. தாவா மனிதன்—இத்தகைய மனிதர் சாதாரணமாகக் குற்றவாளிகளென வழங்கப்பெறினும், தாவா மனிதன் விசாரணைகளிலுள்ள பாதுகாப்புக்களின்றியும் அவைகளினு லேற்படும் கஷ்டங்களை யெல்லாம் அனுபவிக்கவேண்டியவனு யிருக்கிறானெனினும் அவன் 'குற்றவாளி' யென்று வழங்கப்பெறுதிருத்தல் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது—யாராவது ஆஜராகவேண்டுமென்றேனும் ஏதேனும் தஸ்தாவேஜுகள் கொண்டுவரப்பட வேண்டுமென்றேனும் விசாரணை செய்யும் அதிகாரியைக் கேட்டுக்கொண்டால், அவ்வதிகாரி அவ் வேண்டுகோளுக் கிணங்குதல் அநாவசியமென எழுத்து மூலமாகக் காரணங் காட்டினுலன்றி, கேட்டுக்கொள்ளப்படும் மனிதன் ஆஜராகும்படியோ, தஸ்தாவேஜோ பொருளோ கொண்டுவரப்படும்படியோ உத்தரவு செய்யலாம். இத்தகைய நியாய ஆபாசங்களெல்லாம் போதாதெனக்கருதி, 26-வது செக்ஷன் "விசாரணை செய்யும்போது, விசாரணை செய்பவர் சாட்சியச் சட்ட விதிகளை அனுசரிக்கவேண்டிய அவசியமில்லை" என்று கூறுகிறது. நியாய மார்க்கத்திலேயே ஊறிக்கிடக்கும் மனமும் மேலே காட்டப்பட்ட நிபந்தனைகளாற் சூழப்பெற்றிருப்பின்

தக்கபடி நியாயஞ் செலுத்துதல் முடியாதென நாங்கள் துணி வுடன் கூறுவோம்.

27-வது செக்ஷன் விசாரணை செய்வோரின் அறிக்கை யை ஏற்றுக்கொள்ளும் விஷயத்தைப்பற்றிக் கூறுகிறது. அவ் வறிக்கை அரசாங்கத்தாரைக் கட்டுப்படுத்தாதென இந்தப் பிரிவு கூறுகின்றது. முன் உத்தரவில் காணப்பட்டுள்ள பன்னிரண்டு மாதங்களை இன்னும் பன்னிரண்டு மாதங்களாக அதிகரித்து ஜாமீன் வாங்கலாமென இந்தப் பிரிவு அதிகாரம் வழங்குகிறது. விசாரணை செய்யும் அதிகாரிகள் மூவராயிருத்தல் வேண்டுமென் றும், அவர்களுள் இருவர் ஜில்லா செஷன்ஸ் நீதிபதி அந்தஸ் திற்குக் குறையாதவராகவும் மற்றொருவர் இந்தியாவில் அர சாங்க உத்தியோகத்தில் இல்லாதவராகவும் இருத்தல் வேண்டு மென்றும் அந்தப் பிரிவு வரையறை செய்திருக்கின்றது.

## இன்னுங் கொடியது.

இரண்டாம் பாகம் முதல் பாகத்தைக் காட்டிலும் கேவல மானதெனின், மசோதாவைப் பிரரேபித்தவர் சொல்லியபடியே, "மூன்றும் பாகம் இன்னுங்கொடியதாகவிருக்கிறது." ஆறுதல் சொல்லும் நோக்கத்துடன், ஸர் வில்லியம் வின்செண்ட், "பொதுஜன பத்திரத்தை அபாயத்திற்குள்ளாக்கு மளவாக ஷெடியூலிற் காணப்பட்டுள்ள குற்றங்கள் செய்யப்பட்டிருப்ப தாகவேனும் செய்யப்படுவதாகவேனும் நிர்வாக சபையோடு கூடிய இராஜப்பிரதிநிதியார் கருதும்பொழுதே இந்தப் பாகம் அமுலுக்குவரும்" எனக்கூறுகிறார். பொதுஜன பத்திரத்தை முன்னிட்டு விரைவில் விசாரணை நடத்தப்பெறுமளவாக ஷெடி யூலில் காணப்பட்டுள்ள குற்றங்கள் பரவியிருப்பின் முதற்பாகம் அமுலுக்குக் கொண்டுவரப்படும். பொதுஜன பத்திரத்தை ஆபத் திற்குள்ளாக்குமளவாக அத்தகைய குற்றங்கள் பரவியிருப்பின்

மூன்ரும் பாகம் அமுலுக்குக் கொண்டுவரப்படும். எனவே இரண்டு பாகங்களையும் பிரிக்கும் எல்லை மிகவும் மெல்லியதா யிருக்கிறது. ஆயினும் மூன்ரும் பாகத்தின் 34-வது செக்ஷன் பிரதேச அரசாங்கத்தார் சந்தேகிக்கப்பட்டவனை ஒரு நியாய உத்தியோகஸ்தர் முன்னிலையிற் கொண்டு வரலாமென்றும்; அவருடைய அபிப்பிராயத்தை ஆலோசித்தபின் இரண்டாம் பாகம் 22-வது செக்ஷன்படி எந்த உத்தரவை வேண்டுமாயினும் பிறப்பிக்கலாமென்றும், சந்தேகிக்கப்பட்ட எவரையும் வாரண்டில்லாமல் பிடிக்கவும் தாங்கள் விரும்புவதுபோல் தேவையான நிபந்தனைகளுடனும் கட்டுப்பாடுகளுடனும் காப்பில் வைக்கவும் உத்தரவு செய்யலாமென்றும், ஆனல் காப்பில் வைத்தல் குற்றவாளிகளுக்கெனப் பிரத்தியேகப்படுத்தி வைக்கப்பட்டதா யிருத்தல் கூடாதென்றும், உத்தரவிற் குறிப்பிடும் எந்த இடத்தையும் தேடிப்பார்க்க உத்தரவு செய்யலா மென்றும் அதிகாரம் வழங்குகின்றது. பிறகு உத்தரவுகள் பிறப்பிக்கப்படும்பொழுது கைக்கொள்ளப்பெறவேண்டிய நடைமுறை இரண்டாம் பாகத்தின்படி கைக்கொள்ளப்படும் நடைமுறை போல்வதேயாம். விசாரணை அதிகாரிகள் விசாரணை செய்வதற்கிணங்க, அரெஸ்டு செய்யப்படுபவன் கிரமமான விசாரணை யின்றி இரண்டு வருஷமளவும் காப்பிலிருக்க நேரிடலாம். இச்சட்டம் எப்பொழுதேனும் சிலசமயங்களில் சந்தேகிக்கப்படும் ஒருவனைக் காப்பில் வைக்கும் நோக்கத்துடன் செய்யப்படாமல், கவலையுங் குழப்பமும் ஏற்படுங் காலை பெருங் கூட்டத்தினரைப் பாதிக்குமாறே செய்யப்பட்டதென்பதை ஞாபகப்படுத்திக்கொள்வோமாயின், இதனல் சட்டப்படியும் ஒழுங்குடனும் நிர்வாகம் நடைபெறுதென்றும், இராணுவச் சட்டமென்ற பெயரில்லாமலே குழப்பமும் பயமும் விளைக்கும் ஆட்சி அமுலிலிருக்குமென்றும் எளிதில் உணர்ந்து கொள்ளலாம்.

நான்காம் பாகம் முன்னரே இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்படி நடத்தப்பெற்றவர்களைப் பாதித்து இச்சட்டத்தின் இரண்டாம் பாகத்தின் நிபந்தனைக்கு உட்படுத்துகின்றது; வங்காள அரசாங்கக் கைதிகள் ரெகுலேஷன்படி காப்பில் வைக்கப் பட்டவர்களை இச்சட்டத்தின் மூன்றும் பாகத்திற்கு உட்படுத்துகின்றது. இன்க்ரெஸ் இண்டு இந்தியா சட்டம் காலஞ்சென்றவுடன், அதனுல் பாதிக்கப்பட்டவர்களை இரண்டாம்பாகத்திற்கு உட்படுத்துகிறது.

1, 2, 3-வது பாகங்களின்படி பாதிக்கப்பட்ட எல்லையைப் பற்றிப் பிறப்பிக்கப்பட்ட அறிக்கைகள் தள்ளுபடி செய்யப்படுகின்றனவென வைத்துக்கொள்வோம். அங்ஙனம் தள்ளுபடி செய்யப்பட்டிருந்தும், இச்சட்டத்தின்படி தொடங்கப்பெற்ற விசாரணையேனும், ஆராய்ச்சியேனும், உத்தரவேனும் மறுபடியும் பிறப்பிக்கப்படலாமென்றும், நடவடிக்கைக்குக் கொண்டுவரப் படலாமென்றும், அத்தகைய விசாரணை முடிவுபெற்றவுடன் செய்யப்படக்கூடிய எந்த உத்தரவேனும் பிறப்பிக்கப்பட்டு, அறிக்கை தள்ளுபடி செய்யப்படாததுபோலவே நடவடிக்கைக்குக் கொண்டுவரப்படலாமென்றும் ஐந்தாம் பாகம் அதிகாரம் வழங்குகின்றது. பிரிட்டிஷ் இந்தியாவுக்கு வெளியில் இச்சட்டத்தின் இரண்டாம் பாகம் நடவடிக்கைக்குக் கொண்டுவரப் படக் கூடாத எல்லைக்குள் இருந்து மூன்றும் பாகத்திற்கு உட்படுத்தப்பட்டுள்ள ஒருவனை அரெஸ்ட் செய்யவும் இஃது அதிகாரமளிக்கின்றது. அங்ஙனம் பிடிக்கப்படுபவன், அவன் விஷயத்தில் பிரிட்டிஷ் இந்தியாமுழுவதும் மூன்றும்பாகம் நடவடிக்கைக்குக் கொண்டுவரப்பட்டதுபோலவே, மூன்றும் பாகத்திலுள்ள நடைமுறைக்கு உட்படுத்தப்படுவான்.

## 42-வது சேக்ஷன்.

இச்சட்டத்தின்படி பிறப்பிக்கப்படும் உத்தரவுகள் எந்த நியாயஸ்தலத்திலும் வாதிக்கப்பெறலாகாவென்றும், இச்சட்டத்தின்படி நன்னோக்கத்துடன் செய்யப்படும் எந்தச் செய்கைக்காகவும் யார் மேலும் யாதொரு வழக்கேனும் பிராசிகியூஷனேனும் ஏனைய சட்ட நடவடிக்கையேனும் நடத்தப்பெறலாகாதென்றும் 42-வது செக்ஷன் கூறுகிறது. இச்சட்டத்தின்படி வழங்கப் பெறும் அதிகாரங்கள் பிரதேச அரசாங்கத்தாருக்குள்ள வேறு அதிகாரங்களைக் குறைக்காமல் பலப்படுத்துவனவா யிருத்தல் வேண்டுமெனக் கடைசி செக்ஷன் கூறுகின்றது.

இந்தச் சட்டமே இந்தியாவில் இதுகாறும் ஏற்பட்டிராத ஒரு பெரிய மறுப்பை எழுப்பிவிட்டது. இச்சட்டம் தவறாக அறிவிக்கப்பட்டதென்றும், மிகைபடக் கூறப்பட்டதென்றும் அரசாங்கத்தார் சார்பாக வாதிக்கப்படுகின்றது. இச்சட்டத்தைத் தவறாகக் கூறுதல் முடியாதென நாங்கள் கருதுகிறோம். அதிகாரிகளே அதனைத் தவறாகக் கூறியிருக்கிறார்கள். "அப்பீலில்லை, வாதமில்லை, வக்கீலில்லை" என்று ஜனங்களுக்குக் கூறப்பட்டதெனக் குறைகூறப்படுகிறது. ஜனங்கள் சார்பாகச் சட்டம் இங்ஙனம் விளக்கப்பட்டிருப்பின், அது சட்டத்தின் கொடுமையை மிகைபடக் கூறாது குறைவாகவே கூறுகின்றதென்பது எங்களுடைய அபிப்பிராயம். ஜன சமூகத்தை இழிவு படுத்தும் சட்டத்தைச் சுயமதிப்புள்ள எவனும் பொறுத்துக்கொண்டிரானென நாங்கள் கருதுகிறோம். ஏகோபித்த அபிப்பிராயத்துடன் எதிர்க்கப்பட்டபோதும் அரசாங்கத்தார் இச்சட்டத்தை நிறைவேற்றியது அவர்கள் செய்த குற்றத்தை முற்றுப்பெறச் செய்துவிட்டது. அசாதாரணமான சந்தர்ப்பங்களில் உபயோகிக்குமாறு இராஜப் பிரதிநிதியார் போதிய அதிகாரங்கள் வழங்

கப்பெற்றிருக்கின்றன ரென்பதையும் நாங்கள் ஈண்டுக் குறிப்பிட வேண்டும். தாராளமான சீர்திருத்தம் வழங்கப்பெறவிருந்த தறுவாயில், அராஜகம் இந்தியாவில் அருகியிராமல் பரவியிருப்பதுபோல் கருதி, அதனை அடக்குமாறு அசாதாரணமான சட்டமொன்றை அரசாங்கத்தார் சட்ட புத்தகத்தில் பதியவைத்தது சிறிதும் நியாயமானதன்று.

---

## அதிகாரம்—4.

### சத்தியாக் கிரஹம்.

இந்தியச் சட்ட சபையில் இந்திய அங்கத்தினராலும், சட்ட சபைக்கு வெளியில் பத்திரிகைகளாலும், இதுகாறும் ஏற்பட்டிராத மறுப்பை எழுப்பிய ரௌலட் சட்டத்தை எதிர்க்கும் பொருட்டே மகாத்மா காந்தி தம் சத்தியாக்கிரஹ இயக்கத்தை வெளிப்படுத்தலானர்.

சத்தியாக்கிரஹம் யாதென்பதைப்பற்றியும், அஃது எங்ஙனம் கையாளப்படுகிறதென்பதைப் பற்றியும் ஜனங்கள் தெளிவான அபிப்பிராயங் கொண்டிருக்கவில்லை. எனவே அதைப் பற்றி எங்களுக்காகத் தனிக் குறிப்பெழுதிக் கொடுத்துள்ள அதன் ஆசிரியர் உரைகளிலேயே அதனை வெளியிடுகின்றோம் :

"சென்ற முப்பது வருஷங்களாக நான் சத்தியாக்கிரஹத்தைப் போதித்துக்கொண்டும் அனுஷ்டித்துக்கொண்டும் வந்திருக்கிறேன். நான் இன்று அதனை உணர்ந்துகொண்டுள்ளபடி, சத்தியாக்கிரஹத்தின் கொள்கைகள் படிப்படியான வளர்ச்சியையுடையது.

"தென்னுப்பிரிக்காவிலுள்ள இந்தியர் எட்டுவருஷ காலம் கைக்கொண்டிருந்த சக்தியை விளக்குவதற்காகவும், ஐக்கிய

இராஜ்ஜியத்திலும் தென்னாப்பிரிக்காவிலும் பொறுமை எதிர்ப்பு என்னும் பெயருடன் தோன்றியிருந்த இயக்கத்தினின்றும் அதனை வேறுபடுத்திக் காட்டுவதற்காகவும் நான் '**சத்தியாக்கிரஹ**' மென்னும் மொழியை ஆக்கினேன்.

## உண்மை கடைப்பிடித்தல்.

" இம்மொழியின் பிறப்படியான பொருள் ' உண்மை கடைப்பிடித்தல் ' என்பது. எனவே அஃது உண்மை பலம், அன்பு பலம், ஆன்ம பலம் என்ற பல பெயர்களாலும் வழங்கப்பெறும். உண்மை கடைப்பிடிக்குங்கால், ஒருவருடைய சத்துருவைத் துன்புறுத்துதல் சத்தியாக்கிரஹ முறைக்கு ஏற்றதல்லவென்பதையும், பொறுமையினாலும் அனுதாபத்தினாலும் சத்துருவைத் தவறான வழியினின்றும் விலக்கவேண்டு மென்பதையும் முதலிற் கண்டுகொண்டேன். ஏனெனில் ஒருவனுக்கு உண்மை யெனப் புலப்படுவது இன்னொருவனுக்குக் குற்றமாகக் காணப்படலாம். பொறுமை யென்பது தான் வருந்தலெனப் பொருள்படும். எனவே இக்கொள்கை எதிரியை வருத்தாமல் தானே வருந்தி உண்மை கடைப்பிடித்தலென்று பொருள்படும்.

" வடதுருவத்திற்கும் தென் துருவத்திற்குமுள்ள வித்தியாசம் பொறுமை எதிர்ப்புக்கும் சத்தியாக்கிரஹத்திற்கு முளது. பொறுமை யெதிர்ப்பு பலமற்றவர்களின் ஆயுதமெனக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஒருவர் தம் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளும்பொருட்டுக் கொடுஞ்செயல் புரிவதையும் அது தடுக்கவில்லை. சத்தியாக்கிரஹமோ மிக்க பலமுள்ளோரின் ஆயுதமாகக் கொள்ளப்படுவது. அஃது எவ்வழியிலும் கொடுஞ்செயலைத் தவிர்க்கின்றது.

" தன் மனச்சாட்சிக்கு விரோதமான மீட் பாரசீக வகுப்பினராற் செய்யப்பெற்ற சட்டங்களுக்குக் கீழ்ப்படியாமல் தானி

யேல் கீழ்ப்படியாமைக்காக விதிக்கப்பெற்ற தண்டனையை ஏற்றுக்கொண்டபோது, சுத்தமான நிலைமையிலுள்ள சத்தியாக்கிரஹத்தைக் கடைப்பிடிக்கலானர். தாம் உண்மையெனக் கருதியவைகளை ஸாக்ரடீஸ் ஆதென்ஸ் நகரச் சிறுவர்களுக்குப் போதிக்கப் பின்வாங்காமல் மரண தண்டனையைத் தைரியத்துடன் ஏற்றுக்கொண்டார். இவ்விஷயத்தில் அவர் ஒரு சத்தியாக்கிரஹியாவர். தன் தகப்பனிட்ட கட்டளைகள் தன் மனச்சாட்சிக்கு விரோதமானவைகளெனத் தான் கருதியபடியால் பிரஹ்லாதன் அவைகளை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டான். அவன் முணுமுணுக்காமலும் சந்தோஷத்துடனும் தனக்குச் செய்யப்பட்ட கொடுமைகளை ஏற்றுக்கொண்டான். மீராபாய் தன் மனச்சாட்சியின்படி நடந்ததால் தன் கணவனுக்குக் கோபமூட்டியதாகவும், அவனை விட்டுப் பிரிந்து திருப்தியுடன் வாழ்ந்து வந்ததாகவும், தன் கணவன் மனதின்படி நடக்கும் பொருட்டுத் தனக்குச் செய்யப்பட்ட கொடுமைகளை யெல்லாம் அவள் பெருமையுடனும் பொறுமையுடனும் தாங்கிக் கொண்டதாகவும் சொல்லப்படுகின்றன. பிரஹ்லாதனும் மீராபாயும் சத்தியாக்கிரஹத்தைக் கடைப்பிடித்து ஒழுகியவர்களே. தானியேலேனும் சாக்ரடீஸேனும் தங்களைத் துன்புறுத்தியவர்களிடம் விரோதங் கொள்ளவில்லை யென்பது ஞாபகத்தில் வைத்துக்கொள்ளப்பட வேண்டும். தானியேலும் சாக்ரடீசும் தங்கள் சொந்த நாடுகளின் உத்தம குடிமக்களென்றும், பிரஹ்லாதன் உத்தம புத்திரனென்றும், மீராபாய் உத்தம மனைவியென்றும் கருதப்படுகின்றனர்.

## புதிய கொள்கையன்று.

" இந்தச் சத்தியாக்கிரஹக் கொள்கை புதியதன்று. அஃது இல்வாழ்க்கையின் விதி அரசியல் வாழ்க்கைக்குக் கொண்டுவரப்

படுவதேயாம். குடும்ப விவாதங்களும் வித்தியாசங்களும் அன்பு விதியின்படியே சாதாரணமாகத் தீர்மானிக்கப்படுகின்றன. துன் புறுத்தப்படுபவன் மற்றவர்களிடம் மிக்க மதிப்புள்ளவனு யிருக் கிறபடியால் தன் கொள்கைகளை நிலைநாட்டும்பொருட்டு, தனக்கு விரோதமாக நிற்பவர்களைப் பதிலுக்குப் பதில் வருத்தாமலும் அவர்கள் மேல் கோபங்கொள்ளாமலும் துன்பத்தை ஏற்றுக் கொள்ளுகிறுன். கோபத்தை அடக்குவதும் தான் வருந்துதலும் கஷ்டமான முறைகளானபடியால், அவன் அற்பவிஷயங்களைக் கொள்கைகளெனப் பாராட்டிக் கொள்ளாமல், அற்ப விஷயங் களிலெல்லாம் குடும்பத்திலுள்ள மற்றவர்களோடு விரைவில் ஒத் துப்போகிறுன். இதனுல் அவன் மற்றவர்களுடைய சமாதானத் தைக் கெடுக்காமல் தனக்கு மிக்க சமாதானத்தைப் பெறுகிறுன். இங்ஙனம், அவன் தடுத்தாலும் விட்டுவிட்டாலும், அவனுடைய செய்கை குடும்பத்தின் பொதுநலத்தை விருத்திசெய்வதாயிருக் கிறது. இந்த அன்பு விதியே நாகரிகமுள்ள உலகின் பெரும் பாகத்தில் குடும்பங்களைச் சாந்தமாகவும் நிச்சயமாகவும் பாதித்து வருகிறது.

"தேசீய விஷயங்களிலும் சர்வதேச விஷயங்களிலும், அதாவது அரசியல் மேடையின்மேல், இந்தக் குடும்பவிதி அங்கீ கரிக்கப்பட்டாலன்றி, உண்மையில் இனத்தவர்கள் ஒன்றுயிருத் தல் முடியாது; அவர்களுடைய வேலைகளும் மனித சமூகத் தினர்க்குப் பயன் விளைக்கமாட்டா.

" இவ்வன்பு விதி உண்மை விதியேயன்றி வேறன்று. உண்மையின்றி அன்பில்லை. உண்மையில்லாவிடின், அது பிறர்க்குத் தீங்குண்டாகுமாறு ஒருவன் தன் நாட்டினிடம் கொள் ளும் அபிமானமாகவும், ஒரு சிறுவன் சிறுமியிடத்திற் கொள் ளும் மோகமாகவும், அறியாமையிலாழ்ந்துள்ள பெற்றோர் தங் கள் பிள்ளைகளிடத்துக் கொள்ளும் யோசனையற்ற குருட்டு

வாஞ்சையாகவுமிருக்கும். அன்பென்பது மிருக சுபாவத்தை யெல்லா மொழித்துப் பக்ஷபாதமின்றி யிருப்பது. எனவே சத்தியாக்கிரஹம் ஒரு நாணயமாக வருணிக்கப்பட்டிருக்கிறது. அதன் முன் புறத்தில் அன்பையும் பின் புறத்தில் உண்மையையும் படிக்கலாம். இந்த நாணயம் எங்குஞ் செல்வது ; அளவிடமுடியாத மதிப்புடையது.

## தன்னைத் தாங்கி நிற்றல்.

"சத்தியாக்கிரஹம் தன்னைத்தானே தாங்கிநிற்கின்றது. அஃது அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரப்படுமுன், எதிரியின் சம்மதத்தைப்பெற வேண்டிய அவசியமில்லை. எதிரி பலமாக எதிர்க்கும்போதே அது மிகுதியாகப் பிரகாசிக்கின்றது. எனவே அஃது எதிர்க்கமுடியாதது. சத்தியாக்கிரஹி தோல்வி என்ன வென்பதை அறிந்து கொள்ளுகிறானில்லை. ஏனெனில் அவன் களைப்புறாமல் உண்மைக்காகப் போர்புரிகிறான். போரில் நேரிடும் மரணம் விடுதலையாகும். சிறைச்சாலை சுதந்தரத்தின் நுழைவாயில்.

"சத்தியாக்கிரஹி மரணம் போரை முடித்து விடுகிறதென்றெண்ணாமல் உச்சநிலைக்குக் கொண்டுவருவதாகக் கருதவேண்டுமாயின், உள்ளேயுள்ள ஆன்மாவை அங்கீகரித்தல் அவசியமாகலின், இஃது ஆன்மசக்தியெனவும் வழங்கப்பெறும். தேகம் சுய உணர்ச்சியை வெளியிடும் கருவியாகவே கருதப்படல்வேண்டும். எதிரி உண்மையைக்காண முடியாதபடி தடுக்கும்போது சத்தியாக்கிரஹி சந்தோஷத்துடன் தன் தேகத்தைத் தியாகஞ் செய்து விடுகின்றான். தன் எதிரியை மாற்றக்கூடியது ஏதேனுமிருப்பின், மனப்பூர்ணமாகத்தான் அர்ப்பணஞ் செய்தலே அங்ஙனஞ் செய்யுமென்ற நம்பிக்கையின்மேல் சத்தியாக்கிரஹி தன் உடலைத் தியாகஞ் செய்கிறான். ஆன்மா தேகத்தைவிட்டு நீங்

கிய பிறகும் ஜீவித்திருக்கிறதென்ற ஞானத்துடன், இந்த உடலி லேயே உண்மை வெற்றியடைவதைப் பார்க்கவேண்டுமென்று சத்தியாக்கிரஹி அவசரப்படுவதில்லை. சத்தியாக்கிரஹி வெளி யிடும் உண்மையை எதிரி கண்டுகொள்ளுமாறு செய்யப்படும் முயற்சியிலேயே, இறக்கும் சக்தியிலேயே, வெற்றி அடங்கி யிருக்கிறது.

## இருமுறை மேம்படுகிறது.

" சத்தியாக்கிரஹி தன் எதிரியை வருத்தாமல், சாந்தமான வாதத்தினால் அவனுடைய நியாய உணர்ச்சியையாவது சுய அர்ப் பணத்தால் அவன் இருதயத்தையாவது தன் சார்பாகத் திருப் பிக்கொள்ளுகிறபடியால் சத்தியாக்கிரஹம் இருமுறை மேம்படு கிறது. அஃது அனுஷ்டிப்போனையும் யாரை முன்னிட்டு அனுஷ் டிக்கப்படுகிறதோ அவனையும் மேம்படுத்துகிறது.

"நாம் அழைத்துக்கொண்டுள்ள சத்தியாக்கிரஹம் இவரா லேயே அனுஷ்டிக்கப்படுதல் கூடுமென ஆக்ஷேபிக்கப்படுகிறது என்னுடைய அனுபவம் இதற்கு மாறுகக் கூறுகின்றது. அதன் சாதாரணக் கொள்கைகள்—உண்மை கடைப்பிடித்தலும் சுய அர்ப்பணத்தால் அதனை வற்புறுத்தலும்—நன்குணர்ந்துகொள் ளப்படின், யாவரும் சத்தியாக்கிரஹத்தை அனுஷ்டித்தல் கூடும். முற்றுந் துறத்தல் எங்ஙனம் கஷ்டமானதோ அங்ஙனமே சத்தி யாக்கிரஹக் கொள்கைகளை யாவருமுணர்ந்துகொள்ளுமாறு அனுஷ்டித்தல் கஷ்டசாத்தியமாகும்.

"ஒருவர் உணர்ந்துகொள்ளு மளவாக உண்மையை வற் புறுத்துதலை ஒருவரும் வாதிக்கவில்லை. மிருகபலத்தை உப யோகித்து எதிரி அதனை எற்றுக்கொள்ளுமாறு கட்டாயப்படுத்த முயலுதல் இழிந்ததென்பதை எளிதில் உணர்ந்துகொள்ளலாம். வாதம் உண்மையை உணர்த்தத் தவறியதன் காரணமாகத்

தீமைக்குக் கீழ்ப்படிதல் இழிந்ததாகும். ஒருவர் உயிரிழப்பதாயினும் தீயவழி நிற்றல் கூடாது. அப்பொழுதுதான் உலகம் தீமையினின்றும் காக்கப்படலாம். ஆன்மாவை வருத்தும் தீமையை எப்பொழுதும் சமாதான முறையாகக் கொள்ளுதல் முடியாது.

"ஆனல் அரசியல் துறையில் ஜனங்கள் சார்பாகச் செய்யப்படும் சண்டை அநீதியான சட்டங்கள் வடிவமாயுள்ள தீமையை எதிர்க்கும்பொருட்டே நடைபெறுகின்றது. விண்ணப்பம் முதலியவற்றால் சட்டஞ் செய்வோனுக்கு அவனுடைய குற்றத்தை உணர்த்த நீ தவறிப்போவாயாயின், அவன் செய்யுஞ் சட்டத்திற்குக் கீழ்ப்படிய உனக்கு இஷ்டமில்லாவிடில், அச்சட்டத்திற்குக் கீழ்ப்படியா திருப்பதற்காக விதிக்கப்படும் தண்டனையை ஏற்றுக்கொண்டு சட்டஞ் செய்தவனைப் பின்னடையச் செய்தலே உனக்குள்ள வழியாகும். எனவே சத்தியாக்கிரஹம் சாதாரணமாகச் சட்டத்திற்குக் கீழ்ப்படியாமையாகவும் சட்டத்தை எதிர்ப்பதாகவும் காணப்படுகின்றது. இங்ஙனங் கீழ்ப்படியாதிருத்தல் குற்றமாகக் கருதப்படுதல் கூடாது.

"குற்றவாளி, அதாவது சாதாரணமாகச் சட்டத்தை மீறி நடப்பவன், வஞ்சகமாகச் சட்டத்தை மீறி நடந்து தண்டனையினின்றும் தப்புவித்துக்கொள்ள முயல்கிறான். சத்தியாக்கிரஹி அங்ஙனஞ் செய்வதில்லை. அவன் சட்டங்களுக்குப் பயந்து கீழ்ப்படியாமல் தன் நாட்டின் ஜனசமூகத்திற்கு நலம் விளைப்பனவென்னுங் காரணத்தைக்கொண்டு அவைகளுக்குக் கீழ்ப்படிகிறான். சில சமயங்களில் சில சட்டங்கள் அவைகளுக்குக் கீழ்ப்படிதலால் மதிப்புக் குறைவென எண்ணும்படியிருப்பதாக அவன் எண்ணுகிறான். அவன் அச்சட்டங்களுக்குப் பகிரங்கமாகக் கீழ்ப்படியாதிருந்து தண்டனையை ஏற்றுக்கொள்ளுகிறான். சட்டஞ் செய்வோனின் செய்கையைத் தான் மறுப்பதை வெளியிட்

டுக்கொள்ளுமாறு அவன் மனேநிலையைப் பாழ்படுத்தாதவிதமாக இன்னுஞ் சில சட்டங்களையும் மீறி நடக்க முற்பட்டு அரசாங்தாருடன் சேர்ந்துழைக்க மறுக்கின்ருன். சத்தியாக்கிரஹத்தின் அழகும் சக்தியும் சிறந்தனவாகலின் அது குழந்தைகளுக்கும் போதிக்கப்படலாமென்பது என்னுடைய அபிப்பிராயம். ஒப்பந்த இந்தியர் என்று சாதாரணமாக வழங்கப்பெறும் ஆயிரக்கணக்கான ஆண்மக்களுக்கும் பெண்மக்களுக்கும் குழந்தைகளுக்கும் நான் அதனைப் போதித்துச் சிறந்த பயனைக் கண்டிருக்கிறேன்.

## "அவை கூடியவரை எதிர்க்கப்படவேண்டும்."

"ரௌலட் மசோதாக்கள் வெளியிடப்பட்ட பொழுது அவை மனித சுதந்தரத்தைக் கட்டுப்படுத்துவனவா யிருத்தலின், அவை கூடியவரை எதிர்க்கப்படல் வேண்டுமென நான் கருதலானேன். அவைகளை இந்தியரெல்லோரும் ஒரே மனத்தினராய் எதிர்த்தனரென்பதையும் நான் கண்டுகொண்டேன். ஓர் அரசாங்கம், எவ்வளவு கொடுங்கோன்மையுடையதாயினும், குடிமக்க ளெல்லோராலும் எதிர்க்கப்படும் சட்ட மொன்றைச் செய்ய உரிமை பெற்றிருக்கவில்லை. நிர்வாக முறை வழக்கத்தினாலும் பழைய கொள்கைகளினாலும் கட்டுப்படுத்தப்பட்ட இந்தியா அரசாங்கம் போன்ற ஓர் அரசாங்கம் அங்ஙனஞ் செய்தல் எவ்வழியிலும் ஏற்றதன்று. ஏற்படும் கிளர்ச்சி அழிவுருமலும் தீயநெறியிற் செல்லாமலு மிருக்கவேண்டுமாயின், சரியான வழியில் செலுத்தப்படவேண்டுமென்பதை உணர்ந்தேன்.

"எனவே நான் சட்டத்திற்குக் கீழ்ப்படியாதிருக்கும் பாகத்தை வற்புறுத்திச் சத்தியாக்கிரஹத்தை இந்நாட்டினருக்கு வெளியிட்டேன். அஃது உள்ளதாகவும் சுத்தப்படுத்துவதாகவுமுள்ள இயக்கமாகலின், ஏப்ரல் மாதம் 6-ந்தேதி விரதமும்,

தொழுகையும், ஓய்வு மிருத்தல் வேண்டுமென நான் தெரிவிக்க லானேன். முன்னதாக யாதொரு ஏற்பாடுமின்றியே இந்தியாவின் எல்லை முழுவதும், சிறு கிராமங்களிலும், என் ஆலோசனை எடுத்துக்கொள்ளப்பட்டது. இந்த எண்ணம் தோன்றியவுடனே பொது ஜனங்களுக்கு அறிவிக்கப்பட்டது. ஏப்ரல் மாதம் 6-ந் தேதி ஜனங்கள் யாதொரு தீங்கும் இழைக்கவில்லை. போலீசாருக்கும் ஜனங்களுக்கும் ஓரிடத்திலும் சச்சரவு நேரிடவில்லை. வேலை செய்யாதிருத்தல் தானுகவும் திடீரென்றும் உண்டானது. சென்னையில் சென்ற மார்ச்சு மாதம் 24-ந் தேதி கீழ்க்கண்ட செய்தியை வெளியிட்டதைத் தவிர நான் இவ்வெண்ணத்தைப் பலப்படுத்த வேறொன்றுஞ் செய்யவில்லை.

" 'நான் பல கூட்டங்களில் விளக்கிக் கூற முயன்றதற்கேற்ப, சத்தியாக்கிரஹம் மதசம்பந்தமான ஓர் இயக்கமாகும். அது தவமியற்றிப் புனிதப்படுத்தும் ஒரு முறையாகும். அது சுய அர்ப்பணத்தினுல் சீர் திருத்தத்தையும் குறைகளின் நிவர்த்தியையும் பெற நாடுவது. எனவே இரண்டாவது மசோதா இராஜப் பிரதிநிதியாரின் அங்கீகாரத்தைப்பெற்ற இரண்டாவது ஞாயிற்றுக்கிழமை (அதாவது ஏப்ரல் மாதம் 6-ந்தேதி) தாழ்மையுள்ள நாளாகவும் தொழுகை நாளாகவும் கொண்டாடப்பெறலாம். பொது ஜனங்கள் பயன் விளைக்குமளவாகத் தங்கள் குறிப்பை உணர்த்துதல் அவசியமாகலின், நான் கீழ்க்கண்ட ஆலோசனைகளை வணக்கத்துடன் தெரிவிக்கிறேன் :

(1) 'மதக் கொள்கையினுலாவது தேகசௌக்கியத்தினுலாவது தடுக்கப்பட்டாலொழிய, வயதடைந்தவர் ஒவ்வொருவரும் முதல்நாளிரவு உட்கொண்ட கடைசி போஜன வேளையிலிருந்து இருபத்து நான்கு மணி நேரம் உண்ணு விரதமிருத்தல் வேண்டும். இவ்வுண்ணுவிரதம் அரசாங்கத்தாரை வருத்தும்பொரு

ட்டு உண்ண மறுத்தலாகக் கருதப்படலாகாது. தாங்கள் வாக்களித்தவாறு சில சட்டங்களுக்குக் கீழ்ப்படியாம லிருப்பதற்காகச் சத்தியாக்கிரஹிகள் பெற வேண்டிய அவசியமான பயிற்சியென்றே கொள்ளப் படல்வேண்டும்.'

(2) 'பொது ஜன நன்மைக்கு இன்றியமையாதனவாயுள்ளவைகள் நீங்கலாகவுள்ள மற்ற வேலைகளெல்லாம் அன்றையதினம் நிறுத்திவைக்கப்படல் வேண்டும். கடைகளும் மற்றுமுள்ள வியாபார ஸ்தலங்களும் மூடப்பெறல்வேண்டும். ஞாயிற்றுக்கிழமைகளிலும் வேலை செய்ய வேண்டியுள்ளவர்கள் முன்னதாக அனுமதி பெற்றால்தான் அன்று வேலைசெய்யாதிருக்கலாம்.

'அரசாங்க உத்தியோகஸ்தர்களும் மேற்கூறிய இரண்டு ஆலோசனைகளையும் ஏற்றுக் கொள்ளலாமென நான் தாமதமின்றிக் கூறுவேன். ஏனெனில், அவர்கள் அரசியல் வாதங்களிலும் கூட்டங்களிலும் தலையிடுதல் ஏற்றதல்ல வெனினும், முக்கியமான விஷயங்களில் மேற்கூறிய கட்டுப்படுத்தப்பட்ட வழியிலேனும் அவர்கள் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க உரிமை பெற்றிருக்கிறார்களென்பது என்னுடைய அபிப்பிராயம்.

(3) 'அன்றையதினம் இந்தியா முழுவதிலும், கிராமங்கள் உட்பட, பொதுக்கூட்டங்கள் கூட்டப்பெறல் வேண்டும். அக்கூட்டங்களில் இரண்டு மசோதாக்களும் விலக்கப்பட வேண்டுமெனக் கேட்டுக்கொள்வதாகத் தீர்மானங்கள் செய்யப்படல் வேண்டும்.

'என் ஆலோசனை ஏற்றுக்கொள்ளத் தக்கதெனத் தோன்றினால், வேண்டிய ஏற்பாடுகள் செய்யும் பொறுப்பு சத்தியாக்

கிரஹ சங்கங்களிடமே யிருக்கும். ஆயினும் இவ்வாலோசனை நிறைவேறும் வண்ணம் மற்றச் சங்கங்களும் ஒத்துழைக்குமென நம்புகின்றேன்.''

மகாத்மா காந்தி விளக்கிக் காட்டியுள்ள சத்தியாக்கிரஹக் கொள்கை பிரசின பூர்வமான சித்தாந்தத்தைப்போல் தெளிவாகக் காணப்படுகின்றது. ஆனால் ஒவ்வொரு ஜீவனோபாய முறையிலும் அதனை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவருதல் அவ்வளவு எளிதல்லவென நாங்கள் கருதுகிறோம். அத்தகைய சத்தியாக்கிரஹத்தை அனுஷ்டிக்கவேண்டுமாயின் பொறுமையிலும் தன்னை யடக்கிக் கொள்வதிலும் மிக்க பயிற்சி எற்படல் வேண்டும். அவசியம் வேண்டியுள்ளபோது இக்குணங்களே பலரிடம் காணப்படாமலிருக்கின்றன. சத்தியாக்கிரஹம் நித்திய வாழ்க்கையின் கொள்கையாகப் பலரால் அனுஷ்டிக்கப்பட வேண்டுமாயின், சாதாரண மனிதன் அதை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவருந் தன்மையதாக விருத்தல்வேண்டும். சாதாரண மனிதன் தனக்குப் பிறர் தீங்கிழைத்ததாகக் கருதி வருந்தும்போது தான் கஷ்டப்பட நினையாமல் பிறரை வருத்த எண்ணுதலே இயற்கையாயிருக்கின்றது. சாதாரணமனிதன் இவ்வுயரிய கொள்கையைத் தன் குடும்ப வாழ்க்கையில் அனுஷ்டித்து வருகிறானென்றும், இக்கொள்கை அரசியல் துறையிலும் கையாளப்பட வேண்டுமென்றும் மகாத்மா காந்தி பதிலுரைக்கிறார்.

## சத்தியாக் கிரஹம் தடுத்தது.

இக் கொள்கை அநுஷ்டானத்திற்குக் கொண்டுவரப்படுந்தன்மையைப்பற்றி இன்னும் விரிவாக விளக்கிக் கூற இங்கே இடமில்லை. இத்தகைய தீங்கற்ற கொள்கை போதிக்கப்படுவதனால் ஜனசமூகத்திற்கு நன்மையுண்டாகுமென்பது தெளிவாக விளங்

காமிற்கும். கிளர்ச்சியில் தலையிட்டவர்கள் சத்தியாக்கிரஹக் கொள்கையினால் கட்டுப்படுத்தப் பெறாதிருப்பின், அதனால் விளைந்த தீங்குகள் இன்னும் பன்முறை கொடியவைகளா யிருந் திருக்குமென்பது நாங்கள் நூற்றுக்கணக்கானவர்களை விசாரித் தறிந்ததனாலேற்பட்ட நம்பிக்கையாகும். இந்தியாவின் மற்றப் பாகங்களி லுள்ளவர்கள் பலரும் பாராட்டும் வண்ணம் தங்களை அடக்கிக்கொண்டது அவர்கள் பஞ்சாப் வாசிகளின் மனப்போக் குக்கு மாறான மனப்போக்குள்ளவர்களென்று காட்டவில்லை; ரௌலட் சட்டத்தை இந்தியரின்மேல் பலவந்தமாகக் கொண்டு வந்துவிட்டதற்காக அவர்கள் அரசாங்கத்தாரிடம் கொண்டிருந்த கோபம் சத்தியாக்கிரஹத்தின் கட்டுப்படுத்தும் சக்தியால் தணிக் கப்பட்ட தென்பதையே காட்டுகின்றது. அரசாங்க பட்டங்க ளுக்குக் கீழ்ப்படியாம லிருப்பதில் ஜனங்கள் தடையையும் ஒழுங் கையும் பொருட்படுத்தாம லிராமல் தங்கள் மறுப்பை வெளியிட் டிருப்பின், அரசாங்கத்தார் இதற்கு வெகுநாள் முன்னரே ஜனங் களின் விருப்பத்திற்கு இணங்கியிருத்தல் கூடும்.

ஆனால் சத்தியாக்கிரஹத்தின் கட்டுப்படுத்தும் சக்தி, பஞ் சாப் அரசாங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்ட தடைகளுக்கு முன் நிற்கச் சக்தியற்றதாய்விட்டது. ஸர் மைகல் ஓட்வியர் சத்தியாக் கிரஹத்தின் சம்பந்தமான சக்தியை உணர்ந்து, மற்ற மாகாணங் களின் அரசாங்கத்தாரைப்போல் ஜனங்களுடன் ஒத்துழைத் திருப்பாராயின், பஞ்பாப் கொடிய சம்பவங்கள் விலக்கப்பட் டிருக்கும்; சென்ற சில மாதத்திய சரித்திரம் வேறுவிதமாக எழுதப்பெற்றிருக்கும்.

சத்தியாக்கிரஹம் தக்க முறையில் அனுஷ்டிக்கப்படின், மிருக பலத்தினால் குடிமக்களை ஆட்சி செய்தல் கஷ்டசாத்திய மாகுமென்பதையும், ஜனங்களால் வெறுக்கப்படும் சட்டங்களை நடவடிக்கைக்குக் கொண்டுவரப்படுதல் முடியாதென்றும் நாங்கள்

ஒத்துக்கொள்ளுகிறோம். ஆனல் குறிப்பிட்டவிதமாக ஆட்சி செல்வதில் குடிமக்களின் சம்மதத்தைப் பெற வேண்டிய ஒரு நாட்டில் இங்ஙனம் குறைகூற இடமிராது.

பஞ்சாபில் நிகழ்ந்த கொலைகளுக்கும், கொள்ளைகளுக்கும், கலகங்களுக்கும் சத்தியாக்கிரஹம் பொறுப்புடையதா வென்ப தொன்றையே நாங்கள் இப்பொழுது பரிசோதித்துப் பார்த்தல் வேண்டும். சத்தியாக்கிரஹத்தைப்பற்றிப் போதிப்பதனுல் எத் தகைய தீமையும் விளைந்திராது. ஏனெனில் அது தீமையை எதிர்ப்பதாகும். சத்தியாக்கிரஹத்தின் சட்டத்திற்குக் கீழ்ப் படியாதிருக்கும் பாகம் எளிதில் தவருகக் கூறப்படலாம். மிக்க எச்சரிக்கையுடனேயே அது கைக்கொள்ளப்படலாம். சட்டத் திற்குக் கீழ்ப்படியாதிருக்கும் விஷயத்தில் மிக்க எச்சரிக்கை அவசியமென்பதை நாங்கள் அங்கீகரிக்கிறோம். சட்டத்தை மதிக் கும் விஷயத்தை எளிதில் அறிந்து கொள்ளலாம். சட்டத்திற் குக்கீழ்ப்படியாதிருத்தலினுல் ஏற்படும் கஷ்டங்களை விளக்கிக் கூறுதல் எளிதன்று. எனவே தான் வருந்துதலுக்கு முன்னரே பயிற்சி ஏற்பட்டிருந்தால் தான் சட்டத்திற்குக் கீழ்ப்படியாதிருத் தல் கைக்கொள்ளப்படலாகாது. ஜனங்களெல்லோரும் சட்டத் திற்குக் கீழ்ப்படியாதிருக்க வேண்டுமென்று மாத்மா காந்தி பக்கு வமில்லாத நிலையில்வெளியிட்டது தவறென்பதை அவரே ஒத் துக்கொண்டிருத்தலை நாங்கள் குறிப்பிட வேண்டியவர்களா யிருக்கிறோம். அதனுலேயே அவர் அதனை உடனே நிறுத்தி வைக்க வேண்டியவரானுர்.

பஞ்சாபில் சத்தியாக்கிரஹத்தின் சட்டத்திற்குக் கீழ்ப்படி யாதிருக்கும் பாகம் அறிந்து கொள்ளப்படவுமில்லை ; பாராட்டப் படவுமில்லை. விரதமிருந்து வேலை செய்யாதிருப்பதற்கும் சட் டத்திற்குக் கீழ்ப்படியாதிருப்பதற்கும் யாதொரு சம்பந்தமு மில்லை. அது சுயேச்சையானதாகவும் கொடுமையில் சம்பந்தப்

படாததாகவும், தீங்கிழைப் போரிடம் துவேஷங் காட்டவன்றி அவர் செய்கையை அங்கீகரியாமையைக் காட்டுவதாகவு மிருப்பின், அது சத்தியாக்கிரஹத்தின் ஒரு பாகமாகும். மேலும் பஞ்பாபில் ஏப்ரல் மாதத்தில் ஏற்பட்டிருந்த சந்தர்ப்பங்கள் போல்வனவற்றில் இங்ஙனம் விரதமிருந்து வேலை செய்யாதிருத்தல் இந்தியாவில் பழைய வழக்கமாக இருந்து வந்திருக்கிறது. எனவே சத்தியாக்கிரஹமேனும், விரதமிருந்து வேலை செய்யாதிருந்ததேனும் ஜனங்களின் தீச்செயல்களுக்குக் காரணமாகாது. அவர்களை அங்ஙனஞ் செய்யத் தூண்டியது யாதென்பதைப் பின்வரும் பக்கங்களில் எடுத்துரைப்போம்.

---

## அதிகாரம்—5.

## இ ரா ணு வ ச் ச ட் ட ம்.

### முதற்பாகம்.

### பொது.

ஸர் மைகல் ஓட்வியர் படித்த வகுப்பினரை நடத்திய வரலாற்றையும் சேனைக்கு ஆள் சேர்ப்பதில் கைக்கொண்ட முறையையும் விளக்கிக் கூறியுள்ளோம். அவர் பஞ்சாபிலுள்ள எல்லா வகுப்பினரையும் எங்ஙனம் பகைத்துக் கொண்டன ரென்பதை இயன்றவரை எடுத்துக்காட்டியுள்ளோம். ரௌலட் சட்டத்தையும் அதனால் விளைந்தவைகளையும் தேவையான வளவு தெளிவுற விளக்கியுள்ளோம். ரௌலட் சட்டம் தொலைக்கப்படவேண்டுமென இந்தியா முழுவதும் தோன்றிய கிளர்ச்சி எத்தன்மையதென்பதையும் காட்டியுள்ளோம். சத்தியாக்கிரஹக் கொள்கைகளை அதனை ஆக்கியோர் உரைகளிலேயே விளக்கியிருக்கின்றோம். ஏப்ரல் மாதம் 6-ந் தேதி பொங்கி யெழுந்த ரௌலட் சட்

டக்கிளர்ச்சி சிறிதும் தீங்கு விளைக்கவில்லை யென்பதையும்போதி யவளவு எடுத்துக் காட்டியுள்ளோம். சத்தியாக்கிரஹம் போதிக் கப்பட்டுப் பரவி வருவதால் மிக்க சமாதானமும் உயிர்பொருள் முதலியவைகளுக்குப் பத்திரமும் பெருகிவரும். ரௌலட்சட்டக் கிளர்ச்சியும் சத்தியாக்கிரஹமும் ஜனங்களுக்கு அவர்களுடைய சக்தியை உணர்த்தி ஊக்கங் கொளுத்தலாயிற்று. பஞ்சாப் வாசிகள் ஸர் மைகல் ஓட்வியரைப் பிரதிநிதியாகக் கொண்ட அரசாங்கத்தினிடம் அன்பு கொண்டிருந்தார்களில்லை; அவர்கள் மிக்க அதிருப்தி கொண்டிருந்தார்கள். உணவுப் பொருள்கள் விலையேறியதன் காரணமாக அவர்களுடைய அதிருப்தி அதிகரிக்கலாயிற்று. யுத்தத்திற்குப் பிறகு ஒவ்வொரு வழியிலும் தங்களுக்கு நற்காலம் பிறக்குமென அவர்கள் எதிர்பார்த்திருந்தார்கள். அதற்கு மாறாக, யுத்தம் நின்ற பிறகு அவர்களுடைய கஷ்டம் இன்னும் விளக்கமாகக் காணப்பட்டது. இங்ஙனம் ஏற்பட்டிருந்த அமைதியின்மை கிலாபத் கிளர்ச்சியினால் அதிகரியாநின்றது. மகமதீயர் தக்க காரணங்கொண்டே பிரிட்டிஷ் அரசாங்கத்தாரின் நோக்கங்களைச் சந்தேகிக்கலாயினர்.

சென்ற ஏப்ரல் மாதத்தில் நிகழ்ந்த சம்பவங்களைச் சரியாக உணர்ந்து கொள்ளவேண்டின், வாதிக்கப்பெறக் கூடாதவைகளான மேற்கூறிய உண்மைகளை உணர்ந்துகொள்ளுதல் அவசியமாகும்.

ஏப்ரல் 6-ந்தேதி பஞ்சாப் பூரண விரதம் பூண்டிருந்தது. அக்காட்சி பஞ்சாபில், இந்தியாமுழுவதிலும், அதற்குமுன் காணப்பட்டிராத ஓர் அரிய காட்சியாக விளங்கியது. அன்றைய தினம் தலைவர்களும் ஜனங்களும் ஒரே மனிதரைப்போல் நடந்து கொள்ளலானார்கள். ஹிந்துக்களுக்கும் மகமதியர்களுக்கும் முழுச் சகோதரத்வம் ஏற்பட்டிருந்தது. ரௌலட் சட்டத்தைக் கண்டித்தும், அஃது ஒழிக்கப்படவேண்டுமெனக் கேட்டுக்

கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பெற்றன. எப்ரல்மீ 6-ந் தேதி தோன்றிய எழுச்சி ஜனங்களின் மனநிலையைச் சமாதான முறையிற் காட்டியதாகும்.

ஆனல் ஸர் மைகல் ஓட்வியருக்கு இது பிரமாதமாகத் தோன்றிவிட்டது. விரதத்தினுலும் ஹிந்து மகமதிய ஒற்றுமையினுலும் பிரிட்டிஷ் ஆட்சிக்குத் தீங்கு விளையுமென அவர் அச்சங்கொள்ளலானுர். அவர் இவ்வொற்றுமை பிரிட்டிஷாருக்கு விரோதமான சேர்க்கையெனக்கொண்டு அதனை எவ்வழியிலேனும் அடக்கவேண்டுமென எண்ணங்கொண்டனர். லாகூர் தலைவர்கள் குற்றஞ்சாட்டப்பட்டபோது, அவர்கள் சதியாலோசனை செய்ததாகவும் போர்புரிந்ததாகவும் அறிவிக்கப்பட்டார்கள். லாகூர் வழக்கின் சுருக்கம் பின்வருமாறு கூறுகின்றது: "ரௌலட் மசோதாவென்று சாதாரணமாக வழங்கப்பெறும் சட்டம் 1919-ம் வருஷம் மார்ச்மாதம் 18-ந் தேதி இம்பீரியல் சட்டசபையாரால் நிறைவேற்றப்பட்டது. அதன்மேல் பஞ்சாபிற்கு வெளியிலுள்ள சிலர் ஒன்றுசேர்ந்து, பொது ஜனங்களை அரசாங்கத்தாருக்கு விரோதமாக எழுப்பவும் சட்டத்தை ஒழிக்குமாறு அரசாங்கத்தாரைப் பயமுறுத்தவும் ஆரவாரமான கூட்டங்கள் கூட்டவும் ஒற்றுமையுடன் வேலை நிறுத்தஞ்செய்யவும் ஒரு சதியாலோசனை செய்யலானுர்கள். அங்ஙனமே இந்தியா முழுவதும் சிறப்பாகப் பஞ்சாப் முழுவதிலும், குற்றவாளிகள் உட்பட மேற்கண்ட சதியாலோசனைக்காரர்கள், ஒழுங்கீனத்தை உண்டுபண்ணவும், நாட்டின் பொருளாதார வாழ்க்கை நிலையைச் சீர்குலைக்கவும், அரசாங்கத்தாரிடம் அன்பின்மையையும் பகைமையையும் எழுப்பவும் மார்ச்மாதம் 30-ந் தேதி எங்கும் வேலை நிறுத்தஞ்செய்யப்பட வேண்டுமெனத் தெரிவிக்கலானுர்கள்."

## பல கூட்டங்களின் நடைமுறை.

பிறகு 'கலகக்கூட்டம்' என்ற அடைமொழியுடன் பல கூட்டங்களின் நடைமுறை விளக்கப்பட் டிருக்கின்றது. அதன் மேல் வரையப்பெற்றுள்ள இரண்டு பத்திகளையும் அரசாங்க லேக்கனது உரையின்படியே வெளியிடல்வேண்டும்: "அரசாங்கத்தாரின் மேல் அன்பின்மையையும் பகைமையையும் எழுப்ப வேண்டுமென முன்னமே ஆலோசிக்கப்பட்டிருந்ததற் கேற்ப, ஏப்ரல்மாதம் 9-ந் தேதி, ராமநவமி உற்சவம் நடைபெற்ற பொழுது, குற்றவாளிகளான ராம்பஜ்தத்தர், கோகுலசந்த், தர்மதாஸ் ஸூரி, துனிச்சந்த் முதலானோர் சட்டப்படி ஏற்படுத்தப் பெற்றுள்ள அரசாங்கத்திற்கு விரோதமாக ஹிந்து மகமதிய சகோதரத்வத்தை எழுப்பலாயினர். ஏப்ரல் 10-ந் தேதி, பஞ்சாப் அரசாங்கத்தார் சமாதனத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டுவான் வேண்டிக் கலகக்காரர்களுள் ஒருவரான காந்தி பஞ்சாப்பிற் பிரவேசிக்கக் கூடாதெனத் தடுத்தனர். அன்றையதினமே அம்ருதசரஸிலுள்ள இன்னுமிரண்டு கலகக்காரர்களான கிச்லு, சத்யபால் என்பவர்கள் வெளியேற்றப்பட வேண்டுமென உத்தரவு பிறப்பிக்கப் பட்டது. சமாதனத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டும் பொருட்டு அரசாங்கத்தார் கைக்கொண்ட இவ்வெச்சரிக்கையான முறைகளைக் கலகக்காரர்கள் அரசர் மீது போர் தொடங்கும் அறிகுறியாகக் கொள்ளலானார்கள். விரதமும், அதற்கு முன்னும் பின்னும் நடைபெற்ற கூட்டங்களும், ஹிந்து மகமதிய சகோதரத்வமும் அரசாங்கத்திற்கு அபாயம் விளைப்பன வெனக் கொள்ளப்பட்டன வென்பதை வற்புறுத்தும் பொருட்டே நாங்கள் இவ்வுரைகளை எடுத்தாள்கின்றோம். விரதத்தையும் ஹிந்து மகமதிய ஒற்றுமையையும் இங்ஙனம் கொண்டது பின்யோசனையினாலன்று. ஏப்ரல் 7-ந் தேதி ஸர் மைகல் ஓட்வியர் இதனைப்பற்றி

விளக்கமாகக் கூறியிருக்கிறார். அவர் அன்று பேசியதினின்றும் நாங்கள் முன்னரே சில பகுதிகளை எடுத்துக்காட்டியிருக்கிறோம். அவர் ஜலந்தர் பாரிஸ்டர் கனம் ராய்ஸாடா பகத் ராம் அவர்களைக் கண்டிருந்தார். கீழ்க்கண்ட வாக்குமூலத்திற் குறிப்பிட்டுள்ளபடி, ஸர் மைகல் விரதமனுஷ்டிக்கப்படுவதில் தமக்குச் சம்மதமில்லையென்பதை அவரிடந் தெரிவித்திருக்கிறார்.

## "ஆன்ம சக்தியினுஞ் சிறந்த சக்தி."

ராய்ஸாடா பகத்ராம் சொல்லுகிறார் :—

"(பஞ்சாப் சட்ட சபைக்) கூட்டத்திற்குப் பிறகு நான் லெப்டினண்ட் கவர்னரைச் சித்திராலயத்திற் சந்தித்தேன். ஜலந்தரில் நாங்கள் எத்தகைய விரதம் அனுஷ்டித்தோமென அவர் என்னைக் கேட்டார். விரதம் முழுவிரதமென்றும், யாதொரு தொந்தரவும் ஏற்படவில்லை யென்றும் நான் பதிலளித்தேன். அஃது எதனால் அங்ஙனம் நடைபெற்றதென ஸர் மைகல் என்னைக் கேட்டனர். 'எனக்குத் தெரிந்தவரை அது மிஸ்டர் காந்தியின் ஆன்மசக்தியினாலேயே நிகழ்ந்தது' என்று நான் விடை பகர்ந்தேன். இதன்மேல் ஸர் மைகல் தம் முஷ்டியை உயர்த்தி 'ராய்ஸாடா சாகிப்! காந்தியின் ஆன்ம சக்தியினுஞ் சிறந்தவொரு சக்தியுள தென்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்' என்று சொன்னார்."

இங்ஙனம் அரசியலுணர்ச்சியை எவ்வழியிலேனும் நசுக்கிவிடவேண்டுமென ஸர் மைகல் தீர்மானங் கொண்டிருந்தனர். அவர் ஜனங்கள் மனநிலை குலையுமளவாகவும் அவர்களைத் துன்புறுத்த ஆயத்தமாயிருந்தனர். அவர் சிறிதளவு எங்ஙனம் வெற்றிபெற்றனரென்பதைக் கீழே காண்போம்.

---

# இராணுவச் சட்டம்.

---

## இரண்டாம் பாகம்.

---

### 1. அமிர்தசரஸ்.

அமிர்தசரஸிலேயே ஸர் மைகல் தாற்றுக்கோல் போடும் முறையை நடவடிக்கைக்குக் கொண்டுவந்தபடியால் நாம் அதனை முதலில் எடுத்துக்கொள்வோம். மற்ற வழிகளில் அமிர்தசரஸ் லாகூரைக் காட்டிலும் சிறந்த நகரமெனினும், மதிப்பில் அது லாகூருக்கு அடுத்ததாகவே யிருக்கின்றது. அது 1,60,000 ஜனத் தொகையுள்ளது. அந்நகரில் சீக்கியரின் தொழுகை ஸ்தானங்களுள் மிகப்பெரிதான பொற்கோயில் அமைக்கப் பெற்றிருக்கின்றது. பஞ்சாபிலுள்ள வியாபார ஸ்தலங்களுள் மிகப்பெரிதாயும் பொற்கோயிலையுடையதாயு மிருக்கிறபடியால் பஞ்சாபின் எல்லாப் பாகங்களிலிருந்தும் வெளியிடங்களிலிருந்தும், பிரயாணிகளும் மற்றவர்களும் அந்நகரில் வந்து கூடுகிறார்கள்.

ஏப்ரல் மாதத்தினிடையில் ஹிந்து ஆண்டு தினம் வருகின்றது. அப்பொழுது அமிர்தசரஸில் கால் நடைகள் சந்தையொன்று நடைபெறுகின்றது. புதிய ஆண்டு தினம் வைசாகி என்று வழங்கப் பெறுகின்றது. இவ்விழா வியாபார சம்பந்தமானதும் மதசம்பந்தமானது மாயிருக்கிறது. ஒவ்வோராண்டும் இவ்விழாவிற்குப் பல இடங்களிலிருந்தும் ஜனங்கள் திரள் திரளாக வந்து கூடுகிறார்கள். வைசாகி விழாவுக்கு முன் ராமநவமி உற்சவம் வருகின்றது.

அமிர்தசரஸ் ஏப்ரல் மாதம் 6-ந் தேதியை முழுமன விரத தினமாகக் கொண்டாடியது. மகமதியரும் சீக்கியரும் ஹிந்துக் களும் விரதத்தை அனுஷ்டித்தார்கள். அவர்கள் இவ்விரதத்தை மனப் பூர்வமாகவும் சுயேச்சையாகவும் கைக்கொள்ளலானார்கள். கூட்டத்தின் நடவடிக்கை மிகவும் பாராட்டத்தக்கது. வருத்தப் படுமாறேனும் தெரிவிக்கும்படியேனும் யாதொரு விபத்தும் நேரிடவில்லை.

ஏப்ரல் மாதம் 9-ந் தேதி ராமநவமி நாள். அது முக்கியமாக ஹிந்துக்களின் மதவிழா. ஆனால் இம்முறையே அது ஹிந்து மக மதிய ஒற்றுமையின் பொருட்டு உபயோகிக்கப்பட்டது. மகமதி யர் அதில் மிக்க ஊக்கங்கொண்டிருந்தனர். டாக்டர் கிச்லுவும், டாக்டர் சத்யபாலும் சகோதரத்வ பாவத்தை ஒழுங்குபடுத்துங் கருவிகளாக நின்றனர். இதற்கு வெகுகாலம் முன்னரே இரு வரும் தங்கள் பொதுஜன ஊழியத்தினால் பேர் பெற்று விளங்கி வந்தனர்.

டாக்டர் ஸியாப்-உத்-தீன் கிச்லு நல்ல வருமானமுள்ள மக மதிய பாரிஸ்டர். அவர் மன்ஸ்டரில் பயிற்சிபெற்ற தத்துவ சாஸ்திர விற்பன்னர். கேம்ப்ரிட்ஜ் சர்வகலாசாலைப் பட்டதாரி. அவர் அலிகாரிலும் மாணவரா யிருந்தவர். அவர் 35-வயதுள்ள வர்; விவாகமானவர்; இரண்டு குழந்தைகளையுடையவர். ஹிந்து மகமதிய ஒற்றுமையை நிலை நாட்டும் விஷயத்தில் அவர் பல் லாண்டுகளாக ஊக்கங்கொண்டிருந்திருக்கிறார்.

டாக்டர் சத்யபால் காத்ரி மரபினைச்சார்ந்த ஹிந்து மதத்தி னர். அவர் பஞ்சாப் சர்வகலாசாலையில் பி. ஏ. பட்டமும் எம். பி. பட்டமும் பெற்றவர். யுத்த காலத்தில் அவர் ஏடென் நகரில் ஒரு வருஷகாலம் லெப்டினெண்ட், ஐ. எம். எஸ். பதவியிலிருந்து அர சர் கமிஷனை வகித்துள்ளார். அவர் டாக்டர் கிச்லுவின் சகாவாக விருந்து உழைத்து வந்தவர். அமிர்தசரஸ் ரெயில்வே ஸ்டேஷ

ணில் இந்தியர்களுக்குப் பிளாட்பாரம் டிக்கெட்டுகள் கொடுக்கப் படாமல் நிறுத்தப்பட்ட விஷயத்தில் வெற்றியுடன் கிளர்ச்சி செய்ததன் காரணமாக அவர் பேர்பெற்று விளங்கினர். ரௌலட் சட்ட சம்பந்தமான கிளர்ச்சியில் இருவரும் இன்னும் அதிகமாகப் பிரகாசிக்கலாயினர். இருவரும் சத்தியாக்கிரஹத்தை அங்கீகரித்தனர். மற்ற விடங்களில் இருந்தது போலவே அமிர்தசரஸிலும் ரௌலட் சட்டக் கிளர்ச்சி முன்னிலும் அதிகமான கூட்டங்களை வசீகரித்தது. கிளர்ச்சி வலுக்கவும், கிச்லுவும் சத்யபாலும் தங்கள் தளரா உழைப்பினுல் ஜனங்களுடைய தெய்வங்களாக விளங்கலாயினர்.

பஞ்சாப் அரசாங்கத்தாரின் உத்தரவின்படி, டாக்டர் சத்யபால் பகிரங்கத்திற் பேசக்கூடாதென 1919-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 26-ந்தேதி தடுக்கப்பெற்றனர். அவர் அமிர்தசரஸில் காப்பில் வைக்கப்பெற்றனர்.

முன் அதிகாரத்தில் சொல்லியபடி மார்ச் மாதம் 30-ந்தேதியும் இந்தியாவின் சில பாகங்களில் விரத மனுஷ்டிக்கப்பட்டது. அன்றைய தினம் அமிர்தசரஸிலும் விரத மனுஷ்டிக்கப்பட்டது.

மார்ச் மாதம் 30-ந் தேதி அமிர்தசரஸில் நடைபெற்ற கூட்டத்திற்கு 30,000 முதல் 35,000 பேருக்குள்ளாக வந்திருந்திருந்தனரென அரசாங்க அறிக்கையே கூறுகின்றது. அக்கூட்டத்தில் விபரீத சம்பவம் ஒன்றும் நடைபெறவில்லை யென்பதில் எல்லா வரலாறுகளும் ஒத்திருக்கின்றன. அக்கூட்டத்திற் பேசியவர்கள் விரதத்தின் சமாதானமான தன்மையையும் மத சம்பந்தத்தையும் விளக்கிக் கூறலானுர்கள். டாக்டர் கிச்லுவின் முடிவுரை வருமாறு :

" நாட்டின் நன்மையை நாடி நாம் நம் நலத்தை அர்ப்பணஞ் செய்ய எப்பொழுதும் ஆயத்தமாயிருப்போம். மகாத்மா காந்தியின் கடிதம் உங்களுக்குப் படித்துக் காட்டப்பட்டது. இந்நாட்

டின ரெல்லோரும் எதிர்க்கச் சித்தமாயிருத்தல் வேண்டும் ஆனல் இப்புனித நகரம் இரத்த வெள்ளத்தால் நிரம்பப் பெற்றிருக்க வேண்டுமென்பது இதன் பொருளன்று. எதிர்ப்பு பொறுமையானதாயிருத்தல் வேண்டும். நீங்கள் இதனல் சிறைச்சாலைக்கு அனுப்பப்பெறினும், காப்பில் வைக்கப்பெறினும், உங்கள் மனச் சாட்சியின்படி நடக்கச் சித்தமாயிருங்கள்.''

பின்னும் அவர் ''ஒருவருக்கும் துன்பத்தையேனும் வருத்தத்தையேனும் விளைவியாதீர்கள். சமாதானமாக வீட்டுக்குப் போங்கள். தோட்டத்தில் சிறிது உலவுங்கள். அவருக்குத் துன்பம் விளைக்கும்படியாவும், சமாதானம் குலையும்படியாகவும், கலகம் விளைக்கும்படியாகவும் நீங்கள் எந்தப் போலீஸ் உத்தியோகஸ்தனிடமும் தேசத் துரோகியிடமும் கடுஞ்சொல் சொல்லாதீர்கள்'' என்று கூறினர்.

ஆனல் ஸர் மைகல் ஓட்வியர் விரதத்தையும் அமிர்தசரஸ் கூட்டத்தையுங் கண்டு திகைப்புறலானர். எனவே அவர் டாக்டர் சத்யபால் மீது பிறப்பித்திருந்த உத்தரவை டாக்டர் கிச்லுவின் மீதும் பிறப்பிக்கலானர். அவ்வுத்தரவு ஏப்ரல் மாதம் 3-ந் தேதி பிறப்பிக்கப்பெற்றது. அது ''(a) மறு உத்தரவு வரையில் அவர் அமிர்தசரஸ் நகரின் நகர பரிபாலன எல்லைக்குள்ளாகத் தங்கி வசித்தல் வேண்டும், (b) நேராகவோ மறைவாகவோ பத்திரிகைகளோடு கடிதப் போக்குவரவு செய்யாமலிருத்தல் வேண்டும், (c) எழுத்து மூலமாகவோ வேறு வழியிலோ பொதுக் கூட்டங்கள் கூட்டாமலும், அவைகளுக்குச் செல்லாமலும், அவைகளிற் பேசாமலுமிருத்தல் வேண்டும்'' என்ற நிபந்தனைகளைக் கொண்டிருந்தது.

பண்டித கோடுமால், பண்டித தீனநாதர், சுவாமி அநுபவாநந்தர் முதலியவர்கள் அங்ஙனமே கட்டுப்படுத்தப் பட்டார்கள். இவ்வுத்தரவுகள் பொது ஜனங்களின் மனதைக் கலக்கிவிட்டன

வென்பது உண்மையேயெனினும், அவர்கள் அவைகளினுல் அதைரியங் கொள்ளவில்லே. எனவே ஏப்ரல் மாதம் 6-ந் தேதி இன்னெருமுறை முழுவிரதம் அனுஷ்டிக்கப்பெற்றது. மார்ச் மாதம் 30-ந் தேதி கூடிய கூட்டத்தைக் காட்டிலும் பெரிய பொதுக்கூட்டமொன்று அன்று கூடலாயிற்று. அமிர்தசரஸ் பாரிஸ்டர் மிஸ்டர் பத்ருல் இஸ்லாம்கான் அக்கூட்டத்தில் தலைமை வகித்தனர். கூட்டத்திற்கு 50,000 பேர் வந்திருந்தனர். உத்தியோகஸ்தர்களின் அறிக்கையிற் கூறியுள்ளபடி, டாக்டர் சத்யபால் முதலியவர்கள்மீது பிறப்பிக்கப் பெற்ற உத்தரவுகள் ஒழிக்கப் பெறவேண்டுமென அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொண்டு அக்கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பெற்றது. எங்கள் முன்னுள்ள குறிப்பில், உத்தரவு சம்பந்தமாகக் கீழ்க்கண்ட வாக்கியம் காணப்படுகின்றது:—

"அவர்கள் செய்த குற்றம் யாதெனில், ரௌலட் சட்டத்தின் உண்மையான நோக்கங்களே எங்களெல்லோருக்கும் அறிவித்ததே யாகும்."

ரௌலட் சட்டம் ஒழிக்கப்பெறவேண்டுமென்று இன்னெரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. கூட்டத் தலைவர் கூட்டத்தின் நடை முறையை முடிவுக்குக் கொண்டுவரும்போது பின்வருமாறு கூறியுள்ளார்:—

"இன்றைய கூட்டம் சென்ற ஞாயிற்றுக்கிழமை நடைபெற்ற கூட்டத்தைக்காட்டிலும் மிக்க வெற்றியுடன் கூட்டப்பெற்றது. உங்கள் அபிப்பிராயத்தை வெளியிடும் விஷயத்தில் நீங்கள் கொண்டிருந்த நோக்கம் நிறைவேறிவிட்டது. இக்காலத்தில் ஜனங்கள் கோபம் முதலிய தீவிர குணங்களே வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல் பொறுமையுடனிருத்தல் வேண்டும். 'இப்போரில் நாம் துக்கத்தையும் வருத்தத்தையும் பொறுமையுடன் தாங்கிக்கொண்டு கொடுமையினின்றும் முரட்டுத் தனத்தினின்

னும் நம்மை விலக்கிக்கொள்வோம்" என்பதே மகாத்மா காந்தியின் புத்திமதி. பொய் தோல்வியடைந்து உண்மையே வெற்றி பெறும். நீங்கள் மனச்சமாதானத்தையும், பொறுமையையும், சாந்தத்தையும் கைக்கொண் டிருப்பீர்களாயின், இக்கூட்டம் பயன்விளைப்பதேயாகும். ஆனால் சமாதானக்குறைவு சிறிதளவு ஏற்படினும், இருவர் தம்முள் சண்டையிட்டுக்கொள்ளினும், இதனால் பெருந்தீங்குகள் சம்பவித்து, கூட்டம் பயனற்றதாய்விடும். எனவே இக்கூட்டத்திற்கு வந்திருப்போர் சாந்தமாக இவ்விடம் விட்டுச்சென்று, யாதொரு விதமாகவும் ஊர்வலம் வராம லிருத்தல்வேண்டுமெனக் கேட்டுக்கொள்ளுகிறேன்."

நாங்கள் மேலே எடுத்தாண்டுள்ள உரைகளைக் கொண்டுள்ள குறிப்பு ஏப்ரல் மாதம் 8-ந்தேதி எழுதப்பெற்றது. அது "கூட்டத்தலைவரின் வேண்டுகோளைப் பொது ஜனங்கள் முழுவதும் அங்கீகரித்து அங்ஙனமே நடந்துகொண்டார்கள்" என்று முடிகின்றது.

முன்னமே சொல்லியுள்ளபடி, ஏப்ரல் மாதம் 9-ந் தேதி ராமநவமி விழா. அவ்வமயம் ஹிந்துக்களுக்கும் மகமதியருக்கும் பூரண சகோதரத்வம் ஏற்படல் வேண்டுமெனத் தலைவர்கள் தீர்மானித்திருந்தார்கள். சாதாரணமாக ராம நவமி மதசம்பந்தமான விழாவாகக் கொண்டாடப்பெறும். ஆனால் மகமதியர் அதில்கலந்திருக்க வேண்டுமெனத் தீர்மானித்திருந்தபடியால், அது மிக்க விசேஷ தினமாகக் கொள்ளப் பெற்றது. அது பெரிய ஊர்கோலமாயிருந்தது. அதில் மகமதியர் பலர் சேர்ந்து சென்றனர். டாக்டர் கிச்லுவும் டாக்டர் சத்யபாலும் ஊர்வலத்தைப் பல விடங்களின்றும் கண்டனர். அவர்களைத் தாண்டிச் சென்ற போதெல்லாம் ஊர் வலத்திலிருந்தவர்கள் சந்தோஷ ஆரவாரஞ் செய்யலானார்கள். அமிர்தசரஸ் டெபுடி கமிஷனரும் ஊர்வலத்தைக் கண்டனர். அதிலுள்ள பாண்ட் வாத்தியக் கூட்

டத்தார் அவரைத் தாண்டிச் சென்றபோது, 'கடவுள் அரசனைக் காக்க' வென்று வாசித்துக் கொண்டே போனார்கள். விழா மிக்க கொண்டாட்டத்துடன் நடைபெற்ற தெனினும், வருத்தப்பட வேண்டிய நிகழ்ச்சியேனும் அபாயமேனும் ஒன்றும் நடை பெற்றிலது.

ஜனங்கள் இவ்வளவு குதூஹலத்துடனிருந்தது, ஆலோசனையும் ஜனங்களின் அவாவில் அநுதாபமுமுள்ள ஆட்சி செய்பவன் எவனுக்கும் மகிழ்ச்சியை விளைத்திருக்கும். அது ஸர் மைகல் ஓட்வியருக்குக் கோபத்தையே உண்டுபண்ணியது. நாங்கள் குறிப்பிட்டுள்ள உத்தரவுகள் ஜனங்களைப் பயமுறுத்தாமல், தங்கள் வேண்டுகோளைத் தெளிவாகவும் தைரியமாகவும் வெளியிடத் தூண்டியதுபற்றி அவர் வெகுண்டெழுந்தனர். எனவே பொது ஜனங்கள் ஒழுங்காகவும் நியாய வரம்பு மீறாமலும் குதூஹலித்துக் கொண்டிருந்த அதே சமயத்தில், ஜனங்களின் சமாதானத்தைக் குலைத்து அழிக்கும் பொருட்டுப் பஞ்சாப் செக்ரிடேரியட்டில் ஓர் உத்தரவுசித்தஞ் செய்யப்பட்டு வந்தது. டாக்டர்கள் சிச்லுவையும் சத்யபாலையும் வெளியேற்றி விடவேண்டுமென லெப்டினண்ட் கவர்னர் தீர்மானித்திருந்தனர். அவ்வுத்தரவுகள் ஏப்ரல் 9-ந் தேதி இரவு வெகு நேரஞ்சென்ற பிறகு அமிர்தசரஸிற்குவந்து சேர்ந்தன. ஏப்ரல் மாதம் 10-ந்தேதி டெபுடி கமிஷனர் டாக்டர்கள் சிச்லு சத்யபால் இருவரையும் வரவழைத்து, உத்தரவுகளை அவர்களிடங் கொடுத்து, அவர்களை மோட்டார் வண்டியிலேற்றித் தெரியாத இடத்திற்கு அனுப்பி விட்டனர். இச்செய்தி அமிர்தசரஸ் முழுவதும் மின்னல் போலப் பரவியது. உடனே ஒருபெருங்கூட்டம் கூடிவிட்டது. அக்கூட்டத்திற்கு வந்திருந்தவர்கள் துக்கங் கொண்டாடியவர்களாகலின், தலைப்பாகை யணியாமலும், பலர் பாதரட்சையின்றியும், எல்லோரும் கையில் தடியின்றியு மிருந்தார்கள். தங்கள்

அன்பைக் கொள்ளைகொண்டிருந்த தலைவர்கள் விடுதலை செய்யப் படவேண்டுமென்று கேட்டுக்கொள்ளும்பொருட்டு அவர்கள் டெபுடி கமிஷனர் பங்களாவை நோக்கிச் சென்றுகொண் டிருந் தார்கள். அவர்கள் அமிர்தசரஸின் முக்கியமான தெருக் கள் வழியாகச்சென்று, சிறிது நேரத்திற்குள்ளாகத் தங் களிற் சிலரால் அழிக்கப்பட்ட நாஷனல்பாங்க், டவுன் ஹால், கிறிஸ்துவ மிஷன்ஹால் முதலிய கட்டிடங்களைக் கடந்து செல்லலானார்கள். கூட்டம் இராணுவ வீரர்கள் சிலரால் காக்கப்பெற்ற இருப்புப்பாதை மேல்வாராவதியை யடைந்ததும் நிறுத்தப்பட்டது. கூட்டத்திலுள்ளவர்கள் வழிவிடுமாறுகேட்டு, தாங்கள் டெடிபுகமிஷனர் பங்களாவுக்குச் சென்று பிரார்த்தனை செய்துகொள்ளப் போவதாகத் தெரிவித்தார்கள். அவர்கள் தள் ளிக்கொண்டு முன்னே செல்லவும், போர்வீரர்கள் சிறிது ஒதுங்கி நின்றார்கள். கூட்டம் சிறிது முன்னடைந்தவுடன் போர்வீரர்கள் துப்பாக்கிகளாற் சுடலானார்கள். அதனால் சிலர் காயமுற்றனர்; மற்றுஞ் சிலர் கொலையுண்டனர். அதன்மேல் கூட்டம் பின்னடைந்தது. பிறகு கூட்டம் சமாதானத்துட னிருக்கவில்லை. தங்கள் தலைவர்களின் விடுதலையை வேண்டிச் சென்றது பாழ்பட்டதாலும், தங்களுள் சிலர் கொலையுண்டு காய முற்றதாலும் கூட்டத்திலுள்ளவர்கள் கோபாவேசங் கொண்டவர் களானார்கள். கோபங்கொண்டவர்கள் இருப்புப்பாதைக் காலடிப் பாதையண்டை சென்றார்கள். சிலர் இறந்து பட்டவர்களையும் காய முற்றவர்களையும் தூக்கிக்கொண்டு ஹால் பஜாருக்குச் சென்றனர். காயமுற்றவர்களையும் சவங்களையும் கண்ட ஜனங் கள் கோபாவேசங் கொண்டார்கள். சிறிது நேரத்திற்குள் இருப் புப்பாதை மேல்வாராவதியினருகிலும் காலடி பாதையினருகி லும் பெருங்கூட்டங் கூடிவிட்டது. இம்முறை ஜனங்கள் தடி

களையும் மரத்துண்டுகளையும் எடுத்து வைத்துக் கொண்டிருந்தார்கள். இரண்டு வாராவதிகளும் போர்வீரராற் காக்கப்பட்டன.

இதனிடையில், குழப்பத்தைக்கேட்ட நியாயவாதிகள் டெபுடி கமிஷனரோடு ஒத்துழைப்பதாக முன் வந்தார்கள். அவர்கள் அங்ஙனஞ் செய்ய அனுமதி யளிக்கப்படடார்கள். அவர்கள் வந்ததும், ஒரு பெருங் கூட்டம் இருப்புப்பாதைச் சதுக்கத்தை நோக்கிச் சென்றிருப்பதாக அமிர்த சரஸ் போலீஸ் டெபுடி சூபரின்டெண்டெண்ட் மிஸ்டர் ப்ளோமர் அறிவிக்கலானூர். எனவே சிலர் அவ்விடம் நோக்கிச் சென்றனர். மற்றுஞ் சிலர் வாராவதிகளுக் கருகில் தங்கியிருந்தனர். இருப்புப் பாதைச் சதுக்கத்திற்குச் சென்றவர்கள் அங்கிருந்த கூட்டத்தைக் கலைத்துவிட்டார்கள். வண்டித் தொடர்மேல் வாராவதிக் கருகில் சிறிது கஷ்ட மேற்பட்டது. மிஸ்டர் சலேரியா, மிஸ்டர் மக்புல் மாமூத் ஆகிய இருவரும் ஒரு புறம் கூட்டத்திற்கு நியாயங் கூறவும் இன்னொரு புறம் அதிகாரிகளைச் சுடாமலிருக்கச் செய்யவும் முயன்றுகொண்டிருந்தனர். அவர்கள் வெற்றி பெறுவார்களென ஒரு சமயம் தோற்றியது. ஆனால் கூட்டத்திலுள்ள சிலர் போர்வீரர்மீது கற்களையும் மரத்துண்டுகளையும் விட்டெறியவும், போர்வீரர்கள் துப்பாக்கிகளாற் சுட்டு, சுமார் இருபது பேரைக் கொன்று பலரைக் காயப்படுத்தினர்கள். மிஸ்டர் சலேரியாவும் மிஸ்டர் மக்புல் மாமூதும் தப்பிப் போனதே பெருங் காரியமாயிருந்தது. அவ்விருவரும் கூட்டத்தினிடையிலிருந்து கொண்டு அதைக் கலைக்க அதிகாரிகளோடு ஒத்துழைத்துக் கொண்டிருந்தபோது துப்பாக்கிப் பிரயோகஞ் செய்யுமாறு கட்டளை யிட்டதற்காக அங்கிருந்த இராணுவ அதிகாரி வருந்தியதாகக் கூறினர். மிஸ்டர் மக்புல் மாமூத் பிறகு சிவில்ஆஸ்பத்திரிக்குச் சென்று, காய முற்றவர்களுக்குச் சிகிச்சை செய்விப்பதற்காக டாக்டர் தனபதிராயை அழைத்து வந்தனர். காய

முற்றவர்களைப் படுக்க வைத்து எடுத்துப்போகும் சாதனங்கள் ஆஸ்பத்திரியினின்றும் கொண்டுவரப்பெற்றன. ஆனால் மிஸ்டர் ப்ளோமர் ஜனங்கள் தாங்களே ஏற்பாடு செய்து கொள்வார்களெனக் கூறி அவைகளைத் திருப்பி யனுப்பிவிட்டனரென்று சொல்லப்படுகிறது. காய முற்றோர் சிலர் டாக்டர் கிதாரநாதரின் வீட்டுக்குக் கொண்டுபோகப் பெற்றனர். அவர் அந்தப்புர வைத்தியசாலையினருகில்வசித்து வந்தனர். மிஸஸ் ஈஸ்டன் காய முற்றவர்களைக் கண்டபொழுது சிரித்து ஹிந்துக்களும் மகமதியரும் தங்களுக்கு ஏற்றதையே பெற்றனரெனச் சொன்னதாகச் சொல்லப்படுகிறது. அதன் மேல் ஒரு கூட்டத்தினர் வைத்திய சாலைக்குள் நுழைந்து மிஸஸ் ஈஸ்டனைக் கண்டு பிடிக்க முயன்றனர். ஆனால் அம்மாது அதற்குள்ளாக மிஸஸ் பெஞ்சமின் என்னும் மாதினால் ஒளிக்கப்பெற்று, கூட்டத்தினின்றும் மெதுவாகத் தப்பிப் போய்விட்டனர். கோபாவேசங்கொண்டிருந்த கூட்டம் நாஷனல் பாங்கை நாசஞ்செய்து மானேஜர் மிஸ்டர் ஸ்டீவர்ட் என்பவரையும் கணக்கர் மிஸ்டர் ஸ்காட் என்பவரையும் கொலை புரிந்தது. சாமான் கொட்டகைக்குச் சென்றிருந்தவர்கள் ரெயில்வே கார்ட் மிஸ்டர் ராபின்ஸனைக் கொன்றுவிட்டனர். கூட்டம் அலையன்ஸ் பாங்கைத் தாக்கியது. மானேஜர் மிஸ்டர் தாம்ஸன் ரிவால்வரால் சுட்டதைக் கண்ட கூட்டத்தினர் சினங்கெழுந்து அவரைக்கொன்று அவர் உடலைக் கீழே எறிந்து பாங்க் சாமான்களைக் கொண்டு சவத்தை எரித்து விட்டனர். கண்டோன்மெண்ட் மின்சார உத்தியோகஸ்தர் ஸார்ஜண்ட் ரௌலண்ட் ரிகோ வாராவதிக்கருகில் விண்ணுலக கனுப்பப்பெற்றனர். டவுன்ஹால், தபாலாபீஸ், மிஷன்ஹால், பக்தன் வாலா, ரெயில்வே ஸ்டேஷனின் ஒரு பகுதி ஆகிய இவை யெல்லாம் நெருப்புக்கிரையாக்கப் பெற்றன. சார்ட்டர்ட் பாங்கைத் தாக்கவும் முயற்சி செய்யப்பட்டது.

ஆனல் அதிலுள்ள இந்திய உத்தியோகஸ்தர்களினுழைப்பால் அதற்கு அதிக நஷ்ட முண்டாகவில்லை. சைகிலிற் சென்று கொண்டிருந்த மிஸ் ஷெர்வுட் மிருகத்தனமாய்த் தாக்கப்பெற்ற னர். ஆனல் அவர் தம் இந்திய மாணவிகளுள் ஒருத்தியின் தகப்பனுரால் தப்புவிக்கப் பெற்றனர். கூட்டத்திற் கேவல மான சிலர் கலந்திருந்தனர் என்பதிற் சந்தேகமில்லை. அவர்கள் வாய்த்த சந்தர்ப்பத்தைக் கைவிடாது நாஷனல் பாங்க் கிடங்குகளைக் கொள்ளையாடினுர்கள். பாங்குகளினின் றும் கொள்ளையடிக்கப்பெற்றுள்ள பொருள்களுள் சில போலீசார் சிலரிடம் இருப்பதாகச்சந்தேகிக்கப்படுகின்றதெனச்சொல்லப்படு கிறதென்பதை ஈண்டுக் குறிப்பிடுகின்றேம். கொள்ளையும் அழிவும் எப்ரல் மாதம் 10-ந்தேதி மாலை 5 மணிக்கு முன்னமே முடிவுபெற்றன.

அவர்களுடைய அன்புள்ள தலைவர்களை வெளியேற்றிப் பஞ்சாப் வாசிகளுக்குக் கோபமூட்டியது அநாவசியமானதும் அநீதியானதுமாகும். ஆயுதமில்லாத ஜனங்கள் சமாதானமாக நாடிச் சென்ற வேலையைத்தடுத்து, அவர்கள் பிடிவாதத்துடன் செல்ல முயன்றபொழுது துப்பாக்கியாற் சுட்டதனுல் அவர்களு டைய கோபம் இருமடங்கு அதிகரித்தது. வண்டித்தொடர் மேல் வாராவதியையடைந்து துப்பாக்கியாற்சுடப்படு முன் கூட்டம் கொடுஞ்செயலொன்றும் புரியவில்லையென்பதை ஈண்டு ஞாபகப் படுத்திக்கொள்ளவும் வற்புறுத்தவும்வேண்டும். கூட்டம் டெபுடி கமிஷனர் பங்களாவுக்குச் செல்லுமாறு விடப்பட்டு அவர் களுடைய வேண்டுகோளும் மறுக்கப்பட்டிருப்பின், என்ன நிகழ்ந் திருக்குமென்பதைச் சொல்லுதல்கஷ்டசாத்தியமாகும். டெபுடி கமிஷனர் ஜனங்களை நடத்தியதற்கேற்றவாறே எல்லாம் நடை பெற்றிருக்கும். கூட்டம் பிடிவாதத்துட னிருந்ததென்பது ஏற்றுக்கொள்ளப்படல்வேண்டும். கூட்டம் கொடுஞ்செயல்புரிந்

திருக்குமென வெண்ணியிருப்பின், அதிகாரிகள் அதன் முன்னேற்றத்தைத் தடுத்ததற்காக நாங்கள் அவர்களிடங்குற்றங்காண மாட்டோம். இராணுவச்சட்டக் கமிஷன்கள் முன் கொடுக்கப்பெற்ற சாட்சியத்தையும், ஹண்டர் கமிட்டியிற் கூறப்பெற்ற சாட்சியத்தையும், நாங்கள் சேகரித்துள்ள சாட்சியத்தையும் கவனிக்குங்கால் ஜனங்களைச் சுட யாதொரு நிமித்தமுமேற்படவில்லையென அபிப்பிராயப்படுகின்றோம். நாகரிகமுள்ள நாடுகளெல்லாவற்றிலும் கைக்கொள்ளப்பெறும் இடைப்பட்ட முறைகளெல்லாவற்றையும் அதிகாரிகள் விட்டுவிட்டார்கள். ஜனங்களிடம் விவாதமேனும் அமைதியான அறிவிப்பேனும் சாந்தமான அடக்குமுறையேனும் உபயோகிக்கப்பெறவில்லை. கூட்டம் பிடிவாதத்தைக் கைக்கொண்டவுடன் துப்பாக்கிப் பிரயோகஞ் செய்ய உத்தரவு கொடுக்கப்பெற்றது. இந்நாட்டிலுள்ள நிர்வாக அதிகாரிகளும் இராணுவ அதிகாரிகளும் எப்பொழுதும் அபாயத்திற் குள்ளாகாமல் ஜனங்களின் உயிரைப் பொருட்படுத்தாதிருந்து வருதல் வழக்கமா யிராநின்றது.

மிஸ்டர் ஸலேரியாவுடன் கூட்டத்திற்கு நியாயங்கூற முயன்றுகொண்டிருந்த ஹைகோர்ட் வக்கீல் மிஸ்டர் மக்புல் மாமூத் இரண்டாமுறை சுடப்பட்ட விஷயமாகப் பின்வருமாறு கூறுகிறார் :—

" ஸலேரியாவும் நானும் இன்னும் கூட்டத்தை அப்பாற் கொண்டு போக முடியுமென்று எண்ணி யிருந்தபடியால் சுட வேண்டாமென்றும் அப்பாற் செல்லுமாறும் டெபுடி கமிஷனரையும் பிற அதிகாரிகளையும் கூவிக்கேட்டுக் கொண்டோம். கூட்டத்திலிருந்த சிலர் கற்களையும் மரத்துண்டுகளையும் சிப்பாய்களின் மீது எறிந்தனர். உடனே சிப்பாய்கள் எச்சரிக்கை செய்யாமலும் அறிவியாமலும் துப்பாக்கிப் பிரயோகஞ் செய்யத் தொடங்கிவிட்டார்கள். என் வலது பக்கத்திலும் இடது பக்கத்

திலும் குண்டுகள் இரைந்து கொண்டே சென்றன. கூட்டம் இறந்துபட்டவரும் காயமுற்றோருமான 20 அல்லது 25 பேரை விட்டுவிட்டுக் கலைந்துபோயிற்று. துப்பாக்கிப் பிரயோகம் நின்ற வுடன், நான் சிப்பாய்களிடஞ் சென்று அவர்களிடம் பிணியாளரைக் கொண்டு போகும் வண்டியேனும், காய முற்றோருக்குச் சிகிச்சை செய்யப் பிறவசதிகளேனும் இருக்கின்றனவாவென அவர்களைக் கேட்டேன். உதவிபெறும் பொருட்டுச் சமீபத்திலிருந்த வைத்திய சாலைக்கு ஓட வெண்ணினேன். சிப்பாய்கள் என்னைப் போகவிடவில்லை. ஆயினும் மிஸ்டர் ஸெய்மூர் என்னை விட்டனர்...........துப்பாக்கியாற் சுடுதல் தொடங்கப் பெற்ற பொழுது டெபுடி கமிஷனர் அங்கிருந்தனர். நானும் ஸலேரியாவும் நியாயவாதிகளென்பதும் ஜனங்களைப் பட்டணத்துக்குத் திருப்பியழைத்துச் செல்ல முயன்று கொண்டிருந்தோ மென்பதும் அவருக்குத்தெரியும். நாங்கள் உயிர் பிழைத்துச் சென்றது தற்செயலாலேயாம். அதிகாரிகள் இன்னுஞ் சிறிது பொறுமையுடனிருந்திருப்பின், நாங்கள் கூட்டத்தைத் திரும்ப அழைத்துச் சென்றிருத்தல் முடியுமென நான் இன்னும் நம்புகிறேன். அதிகாரிகள் சுடத்தீர்மானித்த பொழுது, இறந்து பட்டோரையும் காயமுண்டோரையுங் கொண்டு செல்ல வண்டியையேனும் வைத்திய வசதிகளையேனும் தேடாதிருந்தது விசனிக்கத் தக்க தொன்றும். தக்கதறுவாயில் வைத்தியவுதவி கிடைத்திருப்பின், காயமுற்றோருள் சிலர் காக்கப்பட்டிருக்கலாமென நம்புகின்றேன். முதலிற் சில குண்டுகள் எறியப் பெற்றதும், கூட்டம் பின்னடைந்து சென்றது. ஆனல் அவர்கள் ஓடத்தொடங்கிய பின்னரும் துப்பாக்கிப் பிரயோகஞ் செய்யப்பெற்றுவந்தது. கூட்டத்திற் பலர்க்கு முதுகில் அடிபட்டது. காய முற்றோருள் பலர்க்கு இடுப்பின் மேற்புறத்திலேனும் முகத்திலேனும், தலையிலேனும் அடிபட்டது."

கூட்டத்திலிருந்தவர்கள் இதுகாறும் மிதமிஞ்சிய கொடுஞ் செயல் புரியவில்லையென்பது ஈண்டு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளப்படல் வேண்டும். இச்சாட்சியத்தின்படி அதிகாரிகள் அவசரப்பட்டதற்கும் அஜாக்கிரதையாயிருந்ததற்கும் கொடுஞ் செயல் புரிந்ததற்கும் யாதொரு நிமித்தமு மேற்படவில்லை.

வெளியேற்று முத்தரவும் துப்பாக்கிப் பிரயோகமும் நியாய மற்றவையென்றும், காயமுற்றோரையும் கொல்லப்பட்டவர்களை யும் கொண்டு செல்ல வசதிகள் தேடப்படாமலிருந்தது மனிதத் தன்மைக்கு மாறுபட்டதென்றும் கொண்டு வருந்துவதோடு, தீங் கற்ற உயிர்களையும் பொருள்களையும் கூட்டத்தவர் அழித்தது எவ்வழியிலும் ஏற்றதாகாதெனவும் கருதுகின்றோம். பாங்க் மானேஜர்கள் ஜனங்களால் நன்கு நேசிக்கப்பெற்றவர்கள். கொல்லப்பெற்ற மற்றவர்கள் கூட்டத்தவர்க்குத் தெரிந்தவர்க ளல்லர் ; அவர்கள் நிரபராதிகள். மிஸ் ஷெர்வுட் பக்தி மிக்க கிறிஸ்துவ உபாத்தினியாக விளங்கினர். மிஸஸ் ஈஸ்டன் ஆக்ஷேபிக்கத் தக்க உரையை வழங்கியிருப்பினும், கூட்டம் அவர் விஷயத்தில் நடந்து கொண்டது சிறிதும் நியாயமானதாகாது. கட்டடங்கள் அழிக்கப்பெற்றது பைத்தியக்காரச் செயலாகும். அமிர்தசரஸ் ஜனங்கள் தங்கள் சுய அடக்கத்தினால் முன்னே செய்துள்ள நன்மையெல்லாம் கூட்டத்தின் தகாச்செயலாற் பாழ்படுத்தப்பட்டது.

இவ்வதிக்கிரமச் செய்கைகள் தடுக்கப்பெற்றிருத்தல்கூடுமா? போலீசார் யாது செய்து கொண்டிருந்தனர்? போலீஸ் ஸ்டே ஷன் டவுன்ஹால் கட்டடத்திலேயே இருக்கின்றது. ஸ்டேஷ னில் போதியவளவு போலீஸ் உத்தியோகஸ்தர்களிருந்தார்கள். கூட்டம் பக்கத்திலிருந்த டவுன்ஹாலைக் கஷ்டமின்றிக் கொ ளுத்தியிருக்க, போலீஸ் ஸ்டேஷனைத் தொடவில்லை. கொளுத் தப்பெற்ற ஏனைய கட்டடங்களுள் பல ஸ்டேஷனுக்கு அருகாமை

யிலிருந்தவைகளே. பாங்குகள் கொளுத்தப்பட்டனவெனப் போலீசாருக்குச் செய்தி கிடைத்தது. போலீசார் உடனே சென்று, தங்கள் உயிர்போவதாயினும், கொலே செய்யப்பட்ட இங்கிலீஷ்காரரைக் காத்திருத்தல் கடமையாகும்.

ஜனங்கள் கொலே செய்ததும் கட்டடங்களைக் கொளுத்திய தும் திடீரெனத் தோன்றிய சம்பவங்களானபடியால் அதிகாரிகள் அப்பொழுது மனத் தளர்ச்சி யடைந்தார்கள். லெப்டி னண்ட் கவர்னர் லாகூரிலிருந்து மிஸ்டர் கிச்சின் என்பவரை உடனே வரவழைத்தார். அவர் ஹண்டர் கமிட்டியார் முன்சொல் லிய சாட்சியத்தில் தாம் ஜனங்களை ரஸ்தாவிற் கண்டதாகச் சொல்லுகிருர். அவர் லாகூரிலிருந்து 30 மைல் தூரத்திலுள்ள அமிர்தசரஸிற்கு யாதொரு இடையூறுமின்றி மோட்டார் வண் டியில் வந்து சேர்ந்தார். அவர் ஏப்ரல் 10-ந் தேதி காலே 4 மணி க்கு வந்து சேர்ந்தார். இரவு சுமார் 11 மணிக்கு மேஜர் மக்டா னல்ட் என்பவரின் கீழ் அடங்கிய துருப்புகளுடன், ஒரு துருப்பு வண்டித் தொடர் வந்து சேர்ந்தது. அப்பொழுதிருந்த நிலைமை தங்கள் சக்தியை மீறிச் சென்றுவிட்டதென்றும் இராணுவ நிலே மைக் கேற்றவாறு அவர் நடவடிக்கை யெடுத்துக் கொள்ளவேண் டுமென்றும் மிஸ்டர் கிச்சின் அவரிடம் தெரிவித்தார். நகரத்திற் குள் தேவையான துருப்புகளை யனுப்பிச் சமாசாரத்தை அறி ந்து கொள்ளுமாறு தாம் அவருக்குச் சொன்னதாகவும் தாம்கூறி யவாறே செய்யப்பட்டதென்றும் மிஸ்டர் கிச்சின் தம் சாட்சியத் திற்கூறுகிருர். " ஒரு சிவில் மாஜிஸ்டிரேட் என் அனுப்பப்பட வில்லே?" என ஹண்டர் பிரபு வினவினர். அதற்கு மிஸ்டர் கிச் சின் பின்வருமாறு பதிலுரைத்தனர்: " கூட்டத்தவர் கஷ்டத்து டன் வழியேற்படுத்திக் கொண்டு செல்ல வேண்டியிருக்குமென எதிர் பார்த்தேன். இராணுவ சம்பந்தமான வேலே ஒரு சிவில் மாஜிஸ்டிரேட் செல்வதனுல் குழப்பமடைவது இயற்கையே.

எஞ்சி நின்றவர்கள் வெளியே கொண்டுவரப்பட்டார்கள். போலீஸ் ஸ்டேஷன் யாதொரு தடையும் சண்டையுமின்றி பலப்படுத்தப்பட்டது."

அவர் 11-ந் தேதி லாகூருக்குத் திரும்பிச் சென்றார். நகரத்தின் பொறுப்பை மிஸ்டர் மைல்ஸ் இர்விங் இராணுவ அதிகாரிகளிடம் கொடுத்துவிட்டனர். லாகூரையடைந்ததும் அவர் இதனை லெப்டினண்ட் கவர்னருக்கு அறிவித்தனர். லெப்டினண்ட் கவர்னர் அதை அங்கீகரித்தனர். மறுநாட் காலையில் மிஸ்டர் கிச்சின் அமிர்தசரஸிற்கு மோட்டாரில் வந்தனர். ஆனால் குழப்பத்தின் அறிகுறியொன்றும் அவருக்குத் தென்படவில்லை. இதற்குள்ளாக ஜெனரல் டையர் வந்து, ராம்பாக் என்னுமிடத்தில் தம் காரியஸ்தலத்தை அமைத்துக்கொண்டு, முழுப்பொறுப்பையும் ஏற்றுக்கொண்டிருந்தனர்.

ஜெனரல் டையர் செய்த முதல் வேலை அரெஸ்ட் செய்ததேயாம். அவர் நகரத்திற் பிரவேசித்து, யாதொரு தீங்கும் எதிர்ப்புமின்றிச் சுமார் பன்னிரண்டு பேரை அரெஸ்ட் செய்தனர்.

இவ்வமயம் ஜனங்கள் என்ன செய்தார்களென்பதை ஈண்டுக் கவனிப்போம். 10-ந் தேதி இரவு நகரம் பாதுகாப்பின்றி விடப்பெற்றிருந்தது. ஆனால் கொள்ளையேனும் களவேனும் நடைபெறவில்லை. 11-ந்தேதி அதிகாலையில், ஜனங்கள் சவங்களை அடக்கஞ்செய்ய விரும்பினார்கள். இராணுவ அதிகாரிகள் முதலில் ஒவ்வொரு சவத்துடனும் நான்குபேருக்குமேல் செல்லுதல் கூடாதெனத் தெரிவித்துவிட்டார்கள். அதைக்கேட்டு ஜனங்கள் மிக்க அதிருப்தி கொண்டவர்களானார்கள். அவர்கள் மரணச் சடங்கைக் கூட்டத்துடன் விமரிசையாக நடத்த விரும்பினார்கள். தங்களுக்காக வாதிக்கும் பொருட்டு அவர்கள் தங்கள் பிரதிநிதிகளை அனுப்பினார்கள். கடைசியாக மிக்க வாதத்

தின்மேல் உத்தரவு கொடுக்கப்பெற்றது. ஆனல் சவத்துடன் செல்வோர் பிற்பகல் இரண்டு மணிக்குள்ளாகத் திரும்பி வந்து விடவேண்டுமென உத்தரவு செய்யப்பட்டது. சவங்களுடன் சென்றவர்கள் பெருங்கூட்டமா யிருந்தார்களெனினும், உத்தரவு தவருமல் நிறைவேற்றப்பட்டது. எல்லாம் குறிப்பிட்ட காலத்திற்குள் முடிந்துவிட்டது. எப்ரல்மாதம் 12-ந் தேதி, பிறகு அமிர்தசரஸ் கலகவழக்கில் அப்ரூவராக எடுத்துக்கொள்ளப்பட்ட ஹன்ஸ்ராஜ் தாப் காடிகான் என்னுமிடத்தில் ஒரு கூட்டங் கூட்டி, லாலா கான்ஹிய லாலின் அக்கிராசனத்தின்கீழ் ஜலியன் வாலா பாகில் 13-ந்தேதி இன்னெரு கூட்டம் நடைபெறுமெனத் தெரிவித்தனர். அத்தகைய கூட்டமொன்றில் அக்கிராசனம் வகிக்குமாறு தம்மைக்கேட்டுக்கொள்ளவாவது, வகிப்பதாகத் தாம் சம்மத மளிக்கவாவது இல்லையென லாலா கான்ஹியலாலே கூறுகின்ருர். அவர் மிக்க அனுபவமும் மதிப்புமுள்ள நியாயவாதி. அவர் 75 வயதுடையவர்; ஜனங்களால் நன்கு நேசிக்கப் பெற்றவர். அவர் வாக்குமூலம் உண்மை யென்பதை நாங்கள் சந்தேகிக்கவில்லை. பெருங் கூட்டத்தைக் கூட்டும் பொருட்டே அவர் பெயர் உபயோகிக்கப்பெற்றதென நாங்கள் நம்புகின்ருேம்.

இதன்பின் நிகழ்ந்த சம்பவத்தை யறிந்துகொள்ள வேண்டின் அந்நகரில் வசிப்பவரும் ஆனல் சில நாட்கள் அதைவிட்டுச் சென்றிருந்தவருமான ஒருவர் கூறியுள்ள வரலாற்றை மனத்திற்பதித்து வைத்தல் அவசியமாகும். பஞ்சாப் வியாபாரச்சங்கத்தின் உதவித் தலைவரும், அமிர்தசரஸ் ப்ளோர் அண்ட் ஜெனரல் மில்ஸ் கம்பெனியின் மானேஜிங் டைரெக்டருமான லாலா கிர்தாரிலால் பின்வருமாறு கூறுகிருர்:—

“நான் 1919-ம் வருஷம் எப்ரல் மாதம் 11-ந் தேதி கல்கத்தா மெயிலில் கான்பூரிலிருந்து அமிர்தசரஸிற்கு முற்பகல் சுமார் 11-30 மணிக்குவந்து சேர்ந்தேன். அமிர்தசரஸிற் கருகி

ஹுள்ள கால்வாய் வாராவதியிலிருந்தும் அதன் மேலும் போலீசார் கூட்டங் கூட்டமாக இருப்புப்பாதையைக் காத்துக் கொண்டிருந் ததைக் கண்டேன். வண்டி ஸ்டேஷனுக்குள் பிரவேசித்ததும், இடம் முழுவதும் சிப்பாய்களும் பீரங்கிகளும் சிதறிக்கிடக்க ஓர் இராணுவ ஸ்தலம்போற் காணப்பட்டது..........கூலியாளே னும் வண்டியேனும் கிடைக்கவில்லை. நான் பிளாட்பாரத்தை விட்டு வெளியே சென்றபொழுது ஸர்தார் விக்ரம சிங்க் என்னைக் கண்டு நான் எங்கிருந்து வந்தேனோ அவ்விடத்திற்கே திரும் பிப்போய்விட வேண்டுமென்றும், எக்காரணங் கொண்டும் நகரத் திற்குள் பிரவேசிக்க வேண்டாமென்றும் ஆலோசனை கூறினார். அவர் மிக்க கவலை கொண்டிருந்தபடியால் என்னிடம் வெகுநேரம் பேசவில்லை. 20நிமிஷநேரம் காத்திருந்த பின்னர் ரெயில்வே வே லைக்காரனொருவனது உதவியால்,பொற்கோயில் வரை என் மூட் டையை எடுத்துச்செல்ல ஓராளைக் கஷ்டப்பட்டுத் தேடிக்கொண் டேன். வாராவதியினடியில் ஐரோப்பிய சிப்பாய்க் கூட்டத்தார் கா வல் புரிந்து நின்றனர். அவர்கள் எல்லாப் பொருள்களையுஞ் சோ தனைசெய்து பார்த்தாலன்றி ஒருவரையும் நகரத்திற்குள் பிரவேசி க்குமாறுவிடுவதில்லை.ஒவ்வொருவ ரிடமிருந்தும் எல்லாவிதமான தடிகளும் எடுத்துக் கொள்ளப்பட்டன. என் சாமான்களெல்லாம் நன்கு பரிசோதிக்கப் பெற்றனபிறகு என்னை மேலே செல்ல விடுத்தனர். வண்டித்தொடர் வாராவதியின்மீது செல்லஒருவரும் விடப்படவில்லை. இங்ஙனமே எப்ரல் மாதம் 15-ந் தேதிவரை யில் நடந்துவந்தது. நகரத்திற்கு வெளியில், அடிக்கோரிடத் தில் ஒருவர் போலீசாரையேனும் சிப்பாய்களை யேனுமன்றி வேறெதையும் பார்க்க முடியாமலிருந்தது. நகரத்திற்குள் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தனும் வேலைபார்த்து வரவில்லை. நான் நகரத்திற்குள் பிரவேசித்ததும் முதலிற் கவனித்தது, தண்ணீர் வசதி முழுவதும் நிறுத்தப்பட்டதேயாகும்................பிறகு,

சாயந்திரம், நகர் முழுவதும் மின்சார சக்தி தொடர்பறச் செய்யப்பட்டது. நான் ஞாபகப் படுத்திக்கொள்ளக் கூடியவரையில், இவ்வசௌகரியமும் ஏப்ரல் மாதம் 18 அல்லது 19-ந்தேதி வரையில் இருந்து வந்ததென நினைக்கிறேன். பொற்கோயிலை நோக்கிச் சென்றுகொண் டிருந்தபொழுது, கொடுஞ்செயல்களின் அடையாளங்கள் என் கண்ணிற் பட்டன. தந்திக் கம்பிகள் அறுக்கப்பெற்றும், கட்டிடங்கள் சில கொளுத்தப்பெற்று மிருந்தன."

உத்தியோகஸ்தர் சார்பாகக் கொடுக்கப்பட்ட சாட்சியத்திலும், தண்ணீர் வசதியும் மின்சாரவசதியும் மூன்று அல்லது நான்கு நாட்கள் நிறுத்தப்பெற் றிருந்தனவென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு சிலரே செய்ததும், ஒரு சாட்சியிடம் ஹண்டர் பிரபு கூறியபடி சமாதான நெறிநின்ற நகரவாசிகள் தடுக்கக்கூடாததுமான கொடுஞ்செயலுக்காக நகர முழுவதையும் தண்டிப்பதற்காகவே மேற்கூறிய இருவசதிகளும் நிறுத்தப்பெற்றனவென்பது நன்குவிளங்கின்றது.

ஏப்ரல் மாதம் 13-ந் தேதி காலை 9 மணிக்கு ஜெனரல் டையர் ஒரு பரிவாரத்துடன் நகரத்திற் பிரவேசித்து ஓர் அறிக்கையை வெளியிட்டனர். அவர் ஹண்டர் கமிட்டியின் முன் கொடுத்த சாட்சியத்திற் கூறியுள்ளபடி, அவ்வறிக்கை மூன்று பகுதிகளைக் கொண்டது. கடைசிப்பகுதியே சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமானது. அது பின்வருவாறு: "எக்காலத்திலும் எத்தகைய ஊர்வலமும் நகரத்திலேனும், நகரத்தின் ஒரு பாகத்திலேனும், நகரத்திற்கு வெளியிலேனும் செல்லுதல் கூடாது. அத்தகையஊர்வலமேனும், நால்வர்சேர்ந்த கூட்டமேனும் நியாயவிரோதமான கூட்டமாகக் கருதி நடத்தப்பெற்று, அவசியமேற்படின், இராணுவ உதவியைக்கொண்டு கலைக்கப் பெறும்." 'அவசியமேற்படின்' என்பதன் குறிப்பும், ஊர்வலம் என்பதோடு சேர்

க்கப் பெற்றுள்ள 'கூட்டம்' என்பதன் பொருளும் யாவையென ஜெனரல் டையர் நெருக்கி வினவப்பெற்றனர். 'அவசியமேற்படின்' என்பது 'அத்தகைய கூட்டம் வேறுவழியில் கலைந்து செல்லாவிட்டால்' என்றும், 'கூட்டம்' என்பது 'ஒருபொதுத் தெருவில் கூடுங்கூட்டம்' என்றுந்தான் பொருள் படுதல்கூடும்; இல்லாவிடில் வீடுகளுக்குள் நால்வருக்கு மேல் சேர்ந்துள்ள எந்தக்கூட்டமும் அறிக்கையின்படி நியாய விரோதமான கூட்டமாகக் கொள்ளப்பெறும்.

ஜெனரல்டையர் தம் சாட்சியத்திற் கூறியுள்ளபடி "இரண்டு மூன்று மணி நேரம்" நகர்வலம்வந்து கொண்டிருந்த பொழுது, இவ்வறிக்கை பஞ்சாபியிலும் உருதுவிலும் சற்று நேரத்திற் கொருமுறை ஒரு துவிபாஷிகரால் மொழிபெயர்த்துக் கூறப் பட்டுவந்தது. ஜனங்களைக் கூட்டும் பொருட்டுப் பறையடிக்கப் பட்டது. அறிக்கை படித்துக் காட்டப்பட்ட இடங்கள் குறிக்கப் பெற்றுள்ள படமொன்று ஜெனரல் டையரிடம் கொடுக்கப்பெற்றது. அறிக்கை நகரத்தின் பல பாகங்களில் படித்துக்காட்டப் படவில்லை யென்பதை அவர் ஒத்துக் கொண்டார். பாதை குறிக்கப்பெற்றுள்ள நகரபடத்தை நாங்கள் பரிசோதித்திருக்கிறோம். நகரத்தின் பாதிக்குமேல், அதிலும் ஜன நெருக்கமுள்ள பகுதி, ஜெனரல் டையரால் பரிசிக்கப் பெறாமல் விடப்பட்டது. இவ்வறிக்கையைப்பற்றித் தெரிந்து கொண்டவர்கள் மிகச் சிலரே யென்பதை ரூபிக்கப் போதிய ஆதார மிருக்கின்றது. மேலும், முன்னமே கூறப்பட்டுள்ளபடி, எப்ரல் 13-ந்தேதி ஹிந்துக்களின் புதிய ஆண்டுவிழாவாகிய வைசாகிநாள். அறிக்கையைப் பற்றித் தெரிந்து கொள்ளாத பலர் சுற்றுப் புறத்திலுள்ள கிராமங்களினின்றும் திரள் திரளாகவந்து கொண்டிருந்தார்கள். அத்தகைய ஜனங்கள் வந்தார்க ளென்பதையும் அவர்கள் அறிக்கையைக்

கேட்டிருக்க முடியாதென்பதையும் உத்தியோக சாட்சிகளே ஒத்துக் கொண்டிருக்கிறார்கள்.

இவ்வறிக்கை வெளியான சந்தர்ப்பத்தில், ஜலியன்வாலா பாகில் மாலை 4 மணிக்கு ஒரு கூட்டங்கூடுமென்றும், அதில் லாலா கான்ஹியலால் தலைமை வகிப்பாரென்றும், ஒரு சிறுவன் தகர டப்பியை யடித்துக்கொண்டே அமிர்தசரஸ் வீதிகளில் அறிவித்துக்கொண்டிருந்தான். இச்சிறுவன் எத்தனை மணிக்கு அறிவித்தானென்பதைப்பற்றி ஒரு கேள்வி பிறக்கலாம். எங்கள் முன்னுள்ள சாட்சியம், ஜெனரல் டையரின் அறிக்கை வெளியானதற்குச் சிறிதுநேரம் முன்னதாகச் சிறுவன் கூட்டத்தைப்பற்றி அறிவித்தானெனக் காட்டுகின்றது. லாலா கான்ஹியலால் சொல்வதாவது: "(நான் அறிந்தவரையில் இதுவரை கண்டுபிடிக்கப்படாத) சிலர் ஜலியன்வாலா தோட்டத்தில் நான் ஒரு பிரசங்கஞ் செய்வேனென ஏப்ரல் மாதம் 13-ந் தேதி அறிவித்தனரெனக் கேள்வியுற்றேன். அப்பொழுதிருந்த நிலைமையைப்பற்றி நான் தங்களுக்குச் சில அரிய புத்திமதிகள் கூறுவேனென எண்ணுமாறு இவ்வறிவிப்பு ஜனங்களைத் தூண்டாநின்றது."

அன்று மாலை 4-மணிக்கு ஜலியன்வாலா பாகில் ஒரு பெருங்கூட்டம் கூட்டப் பெறுமென அன்று பகல் 12-45 மணிக்கே ஜெனரல் டையர் அறிவிக்கப்பட்டனர். இக்கூட்டத்தைத் தடுக்கத் தாம் யாதொரு முயற்சியு மெடுத்துக் கொள்ளவில்லையென்பதை ஜெனரல் டையர் ஒப்புக்கொள்ளுகிறார். லார்ட் ஹண்டர் "கூட்டம் ஜலியன்வாலா பாகில் கூடவொட்டாதபடி தடுக்க நீவிர் யாதொரு முயற்சியும் ஏன் செய்யவில்லையென்பதை விளக்கிக் கூறவேண்டும்" என்று அவரைக் கேட்டனர். அவ்வினவிற்கு ஜெனரல் டையர் கூறிய மறுமொழி வருமாறு: "என்னாற் கூடிய சீக்கிரம் நான் அங்கே சென்றேன். நான்

இவ்விஷயத்தைப்பற்றி ஆலோசிக்கவும் துருப்புகளை ஒழுங்கு படுத்தவும் வேண்டியிருந்தது. அவர்கள் கூட்டங் கூட்டக் கூடாதென எச்சரிக்கைசெய்ததே போதுமானதென்று எண்ணி யிருந்தேன்." திரும்பவும் லார்ட் ஹண்டர் அவரைப் பின்வரு மாறு கேட்டனர்: "உமது மனநிலையை ஒழுங்குபடுத்திக் கொள்ளப் பகல் 12-40 மணிமுதல் மாலை 4 மணிவரை சாவகாசம் வேண்டியிருந்ததா?" அதற்கு ஜெனரல் டையர் கூறிய மறு மொழியாவது:—"காலையிற் செய்தவைகளுக்குப் பிறகு அவர் கள் உண்மையாகக் கூடுவார்களென நான் நம்பவில்லை. இன் னொரு துருப்பை யனுப்பி அவர்கள் போகாதிருக்க எச்சரிக்கை செய்யவேண்டுமென நான் நினைக்கவில்லை." கூட்டம் நடை பெற்றுக்கொண்டிருந்த தென்ற செய்தி மாலை 4 மணிக்கு அவ ருக்கு நிச்சயமாய் எட்டியது. சற்று நேரத்திற் கொல்லாம் அவர் 25 கூர்க்கரையும் 25 சீக்கியரையுங் கொண்ட துப்பாக்கிப் போர் வீரர் கூட்டத்தை நடத்திக்கொண்டு நகரத்திற்குச் சென்றனர். அவர் கூக்ரிகள் தாங்கிய 40 கூர்க்கரையும், இரண்டு ஆயுத வண்டிகளையும்தம்முடன் கொண்டு சென்றனர். அவர் 'சாதார ணமாக நடக்கும் கதியில்' சென்றனர். மிக்க வேகத்துடன்செல்ல அவசிய மேற்பட்டதென அவர் ஏன் கருதவில்லை என லார்ட் ஹண்டர் கேட்ட கேள்விக்கு ஜெனரல் டையர் "இல்லை, ஐயா. மிகவும் உஷ்ணமாயிருந்தபடியால் நாங்கள் சாதாரணமாக நடந்து செல்லும் கதியிற் சென்றோம்" என்று மறுமொழி கூறினர். அவர் மாலை சுமார் 5 அல்லது 5-15 மணிக்கு பாகிற்கு வந்து சேர்ந்தனர்.

ஜலியன் வாலாபாக் என்பது யாது? **பாக்** என்னும்பதம் தவறாக வழங்கப்பெறும் அடைமொழியாகும். ஜல் என்பது **அதன்** பூர்வீக சொந்தக்கார**ன்** மரபுப் பெயர். **வாலா** என்பது கிழமைப் பொருள் வேற்றுமை முடிவு. தோட்டம் என்று பொ

ருள்படும் **பாக்** வீடுகளால் சூழப்பெற்ற வெளியான காலிநிலம். இச்சந்தர்ப்பத்தில் அது பலருக்குப் பொதுவில் சொந்தமாயிருந்த பிரத்தியேக நிலமாகவிருந்தது. அஃது ஒழுங்கீனமான நாற் கோணவடிவமுள்ள நிலம். அதைச்சுற்றிலும் ஒழுங்கீனமாகச் சுவர்வைக்கப்பெற்றிருக்கும். பல விடங்களில் வீடுகளின் பின் புறச்சுவர்கள் நாற்கோணத்தை வளைத்துக் கொண்டிருக்கின்றன. நாற் கோணத்திற்குள் மூன்று மரங்களும், ஓர் இடிந்த சமாதியும், ஒரு கிணறும் இருக்கின்றன. பிரதான வழி நெருக்கமானது. அதன் வழியாக ஆயுதவண்டிகள் செல்லுதல் முடியாது. கிரமமா கச்செல்ல இவ்வழியைத்தவிர வேறு வழிகளில்லை. ஆனால் நாலைந் திடங்களில் நெருக்கமான சந்துகளின் வழியாக வெளியே செல் லுதல் கூடும். நுழைவாயிலருகிலுள்ள தரை சிப்பாய்கள் நின்று முன் புறத்தில் நிற்கும் ஜனங்களை சுடச் சௌகரிய முண்டாகு மாறு உயர்ந்திருக்கும். எனவே ஜெனரல் டையர் தம்முடைய 90 சிப்பாய்களுடன் பாகிற்குள் பிரவேசித்தபொழுது, கூட்டம் எளிதில் வெளியே செல்லுதல் கூடாததா யிருந்தது.

எங்களிடமுள்ள சாட்சியத்தின்படி, ஜெனரல் டையர் வரு முன் ஹன்ஸ்ராஜ் 20,000 பேரென மதிப்பிடப்பெற்ற கூட்டத் துடனிருந்தனர். அவரும் இன்னுஞ் சிலரும் ஓர் உயர்ந்த மேடையின்மேல் நின்றுகொண்டிருந்தனர். துருப்புகள் வரு முன் கூட்டத்திற்குமேல் ஆகாயத்தில் ஒரு விமானம் பறந்து கொண்டிருந்தது. ஹன்ஸ்ராஜ் பயப்படாமலிருக்குமாறு கூட் டத்திற்குத் தெரிவித்தனர். கூட்டத்தில் பல குழந்தைகளும் சிறுவர்களும் வந்திருந்தார்கள். ஆண்மக்கள் சிலர் கையிற் சிசுக் களை யேந்திய வண்ணம் கூட்டத்திற்கு வந்திருந்தனர். ஜனங் கள் தங்களிடம் லதியை வைத்திருக்கவில்லை. கூட்டத்தில் இரகசியப் போலீசார் சிலரும் இருந்தனர். அவர்களிலிருவர் ஹன்ஸ்ராஜிடம் பேசிக்கொண்டிருந்தனர். ஜெனரல் டையர்

சமகோணமான இடத்தின் வடபுறத்திலுள்ள உயர் நிலத்தின் வலது புறத்தில் 25 சிப்பாய்களேயும் இடதுபுறத்தில் 25 சிப்பாய் களேயும் பரவியிருக்கச் செய்தனர். அதன் பிறகு நடந்ததை அவர் உரைகளில் எடுத்துக் கூறுதலே சாலச் சிறந்ததாகும் :—

வினு :—நீவிர் பாகிற்குள் சென்ற பொழுது என்ன செய்தீர்?

விடை :—சுட்டேன்.

வினு :—உடனேயா?

விடை :—உடனே. நான் இவ்விஷயத்தைப்பற்றி முன் னரே யோசனே செய்திருந்தேன். என் கடமை என்னவென் பதை முடிவுசெய்து கொள்ள 30 செகண்டு (அரை நிமிஷம்) களுக்குமேல் சென்றிராதென நினைக்கிறேன்.

வினு :—கூட்டம் என்ன செய்துகொண் டிருந்தது?

விடை :—அவர்கள் கூட்டம் நடத்திக்கொண்டிருந்தார்கள். நடுவில் உயர்த்தப் பெற்ற ஏதோ ஒன்றின்மேல் ஒருவர் இருந் தனர். அவர் கைகள் இப்படியு மப்படியும் அசைந்துகொண் டிருந்தன. அவர் பிரசங்கஞ்செய்து கொண்டிருந்தனர்போலும். நான் தீர்மானிக்கக் கூடியவரையில், அவர் சதுக்கத்தின் நடுவி லிருந்தனர். அதாவது என் துருப்புகள் நிறுத்தப்பெற்றிருந்த இடத்திற்கு 50 அல்லது 60 கெஜ தூரத்திலிருந்தனர்.

அறிக்கையைச் செவியுறுதவர் பலர் இருந்திருக்கலாமென் பதை ஜெனரல் டையர் ஒப்புக்கொண்டிருக்கிறுர். எனவே லார்ட் ஹண்டர் பின்வருமாறு கேட்டனர்.

வினு :—அறிக்கையைத் தெரிந்துகொள்ளாதவர்கள் கூட் டத்திலிருந்திருக்கலாமென வைத்துக்கொண்டால், சுடத்தொட ங்குமுன் கூட்டத்தைக் கலேந்துசெல்லுமாறு கேட்டுக்கொள்ளுதல் தக்க முறையென்று உமக்குத் தோன்றவில்லேயா?

விடை :—இல்லை. அச்சமயம் எனக்குத் தோன்றவில்லை. என் உத்தரவுகள் ஏற்றுக்கொள்ளப்படவில்லையென்றும், இராணுவச்சட்டம் அலட்சியஞ் செய்யப்பட்டதென்றும், உடனே துப்பாக்கியாற் சுடவேண்டுவதே என் கடமையென்றும் நான் எண்ணியிருந்தேன்.

வினா :—நீவிர் கூட்டத்தைக் கலைத்ததற்குமுன் கூட்டம் ஏதாவது செய்திருந்ததா ?

விடை :—இல்லை, ஐயா. அவர்களுள் ஒரு சிலர் ஓடி விட்டனர்

வினா :—அவர்கள் ஓடத் தொடங்கினார்களா ?

விடை :—ஆம். நான் சுடத்தொடங்கியபொழுது, நடுவிலுள்ள பெருங்கூட்டம் வலதுபுற நோக்கி ஓட ஆரம்பித்தது.

வினா :—இராணுவச்சட்டம் அறிவிக்கப்பெறவில்லை. அவ்விபரீத முறையைக் கைக்கொள்ளுமுன், நகரத்தின் சமாதானத்திற்குப் பொறுப்புள்ள சிவில் அதிகாரியான டெபுடி கமிஷனரைக்கலந்து ஆலோசித்தல் ஏற்றமுறையென்று நீவிர் கருதவில்லையா ?

விடை :—கலந்து ஆலோசிக்க அவ்வமயம் டெபுடி கமிஷனரில்லை. அதற்குமேல் ஒருவரைக் கேட்பது தகுதியானதென்று நான் நினைக்கவில்லை. என் செய்கை யாதாயிருக்கவேண்டுமென்பதை நான் உடனே முடிவுசெய்து கொள்ள வேண்டியவனாயிருந்தேன். நான் உடனே துப்பாக்கியால் சுடவேண்டுமென்பதை இராணுவ நிலையினின்றும் தீர்மானிக்கலானேன். அங்ஙனஞ் செய்யாவிடில் நான் என் கடமையில் தவறியவனாவேனென எண்ணினேன்..................

வினா:—கூட்டத்தைக் கலைக்கும் நோக்கத்துடன் சுட்டீரா?

விடை:—இல்லை, ஐயா. அவர்கள் கலைந்து போகும்வரை நான் சுடுவதாயிருந்தேன்.

வினு:—நீவிர் சுட்டவுடன் கூட்டம் கலையத் தொடங்கி யதா ?

விடை:—உடனே.

வினு:—அதன் பின்னும் சுட்டீரா ?

விடை:—ஆம்.

வினு:—கூட்டம் கலைவதாகக் காட்டிக் கொண்ட பிறகு நீர் ஏன் சுடுவதை நிறுத்தவில்லை ?

விடை:—கூட்டம் கலையுமளவும் சுடுவதே என் கடமை யென நான் எண்ணினேன். நான் சிறிதளவே சுட்டது தவறாகும்.

அதன் பிறகு கேட்கப்பெற்ற பலகேள்விகளுக்குப் பதிலாக ஜெனரல் டையர் தாம் 10 நிமிஷம் சுட்டதாகவும், கூட்டத்தை வேறு வழியிற் கலைக்கத்தமக்கு இராணுவ அனுபவமில்லை யென்றும், சுடாமலும் தாம் கூட்டத்தைக் கலைத்திருத்தல் கூடுமென்றும் கூறியிருக்கிறார். ஆனால் அவர்களெல்லோரும் திரும்பிவந்து தம்மைப் பரிகசித்திருப்பார்க ளென்றும் 'தாமே தம்மை மூடராக்கிக்கொண்டிருக்க நேரிடுமென்றும்' கருதியே அவர் துப்பாக்கியால் சுட்டனர். இன்னொரு கேள்விக்குப் பதிலளிக்கும் போது, அவர் தாம் சுட்டதன் காரணங்களைப் பின்வருமாறு கூறியிருக்கின்றனர்:—

"அவர்கள் என்னையும் என் துருப்புகளையும் திடீரெனத் தாக்க முயன்று கொண்டிருந்தனரென்று நான் நினைத்தேன். இவ்வியக்கம் அமிர்தசரஸ் நகரத்தோடு மாத்திரமிராமல் வெகுவாகப் பரவியிருந்ததென்பதும், அந்நிலைமை அமிர்தசரஸோடு நில்லாமல் வெளியிலும் பரவியுள்ள இராணுவ நிலைமையென்பதும் இவைகளினால் நன்கு விளங்கின." ஜெனரல் டையர் 1650 தோட்டாக்கள் பிரயோகஞ்செய்தனர். பீரங்கி வண்டிகளை பாகிற்

குள் கொண்டுபோக முடிந்திருப்பின், தாம் அவைகளை அங்கே கொண்டு சென்று அவைகளைக்கொண்டு சுட்டிருப்பாரென்றும், தோட்டாக்கள் ஆய்விட்ட படியினாலேயே தாம் சுடுவதை நிறுத் தினரென்றும், கூட்டம் மிகவும் நெருங்கியிருந்ததென்றும் அவர் ஒத்துக்கொண்டனர். காயமுற்றவர்களுக்கு உதவி புரியவோ அவர்களை அப்பாலகற்றவோ அவர் யாதொரு ஏற்பாடும் செய் திருக்கவில்லை. அப்பொழுது உதவி செய்தல் அவருடைய கடமையன்று. அது வைத்திய சம்பந்தமான விஷயம். சுடு தல் நின்றவுடன் அவர் போய்விட்டனர். அடிக்கொருமுறை அவர் தம் "துப்பாக்கிப் பிரயோகத்தைநிறுத்தி, கூட்டம் அடர்ந் திருந்த புறமாகக் குண்டுகளை விடுத்தனர்." கூட்டம்விரைவாகச் செல்லவில்லை யென்று அவர் அங்ஙனஞ்சுடவில்லை. "கூடிய தற்காக அவர்களைத் தண்டிக்க வேண்டு"மென அவர் தீர்மானித் திருந்தனர்.

இச்சம்பவத்தை நேரிற் கண்டவர்கள் கூறியுள்ள சாட்சிய த்தினின்றும் நாங்கள் மற்ற விவரங்களை எடுத்துரைத்தல் வேண் டும். லாலா கிர்தாரிலால் கொடுத்துள்ள வாக்குமூலத்தை நாங்கள் முன்னமே குறிப்பிட்டிருக்கிறோம். அவர் பாகிற்கு நேராகவுள்ள ஒரு வீட்டினின்றும் இக்காட்சியைக் காண நேர்ந்தது. "நூற் றுக் கணக்கானபேர் அங்கே கொல்லப்பட்டதை நான் கண்டேன். இச்சம்பவத்தின் கேவலமான பாகம் யாதெனில், ஜனங்கள் ஓடிக்கொண்டிருந்த நுழை வாயில்களின் பக்கமாகத் துப்பாக்கிப் பிரயோகஞ் செய்யப்பட்டதேயாகும். வெளியே செல்லக்கூடிய வழிகள் நாலைந்திருந்தன. அவைகளிலெல்லாம் துப்பாக்கிக் குண்டுகள் ஜனங்களின்மேல் மாரிபோல் பெய்துகொண் டிருந் தன.......................ஓடும் கூட்டத்தின் கால்களிற் சிக்கிப் பலர் நசுக்குண் டிறந்தனர். இரத்தம் வெள்ளமாக ஓடிக்கொண் டிருந்தது. தரையின்மீது விழுந்து கிடந்தவர்களும் சுடப்பட்

டார்கள்.....................கொல்லப்பட்டவர்களையும் காய முற்ற வர்களையும் கவனிக்க அதிகாரிகள் யாதோர் ஏற்பாடுஞ் செய் திருக்கவில்லை..................பிறகு நான் காயமுற்றவர்களுக் குத் தண்ணீர் கொடுத்து என்னாற் கூடிய உதவி செய்தேன்... .....................நான் அவ்விடம் முழுவதையும் சுற்றிவந்து அங்கேவிழுந்துகிடந்த ஒவ்வொருவரையும் பார்த்தேன். பற்பல விடங்களில் அவர்கள் குவியல் குவியலாய் விழுந்துகிடந்தார்கள். .....................சவங்கள் பெரியவர்களுடையனவும் சிறுவர் களுடையனவுமாயிருந்தன. சிலருடைய தலைகள் பிளக்கப்பெற் றும், மற்றுஞ் சிலருடைய கண்கள் சுடப்பெற்றும்,பின்னுஞ் சில ருடைய மூக்கோ, மார்போ, புஜங்களோ, கால்களோ சிதறப் பெற் றுமிருந்தன..................அப்பொழுது தோட்டத்தில் 1000 சவங்களுக்குமேல் இருந்திருக்க வேண்டுமென வெண்ணுகி றேன்..................ஜனங்கள் பர பரப்புடன் சென்றதை நான் கண்டேன். அன்றிரவு 8 மணிக்குப் பிறகு இன்னொரு முறை சுடுவார்களென்ற பயத்தினால் பலர் தங்கள் சவங்களை விட்டு விட்டு ஓடிவிட்டனர்.''

ஏப்ரல் 13-ந்தேதி பறையறையுடன் படித்துக் காட்டப் பட்ட அறிக்கையின் இரண்டாம் பாகத்தை ஈண்டுக் குறிப்பிட லாம். அது வருமாறு:—''நகரில் வசிக்கும் எவரும் இரவு எட்டு மணிக்குப் பிறகு தம் வீட்டை விட்டுச் செல்ல உத்தரவளிக் கப்படார். எட்டு மணிக்குப் பிறகு தெருவிற் காணப்படும் எவரும் சுடப்பெறுவர்.''

''தோட்டத்தினின்றுந் தப்பியோடிய காய முற்றோருள் சிலர் வழியில் ஏற்பட்ட துன்பத்தினால் வீதிகளில் விழுந்து இறந்துபோயினர். இங்ஙனந்தான் அமிர்தசரஸ்வாசிகள் தங்கள் வைசாகி விழாவைக் கொண்டாடினார்கள்'' என்று அச்சாட்சி பின் னுங் கூறியிருக்கின்றனர்.

மரணப்பட்டி விஷயத்தில், அரசாங்கத்தார் காட்டியுள்ளபடி அவர்கள் ஆகஸ்ட் 20-ந் தேதிக்கு முன், அதாவது இவ்விபரீத சம்பவம் நடந்த நான்குமாதங்களுக்குப் பிறகு, கணக் கெடுக்கத் தொடங்கினுர்களில்லை யென்பதை ஈண்டுக் குறிப்பிடு தல் விநோதமாயிருக்கும். 290 பேருக்கு மேற்படாமல் இறந்து பட்டனரென மிஸ்டர் தாம்ஸன் அப்பொழுது அறிவித்தனர். இப்பொழுது அவர்கள் ஸேவஸமிதியார் அறிவித்த எண்ணை, அதாவது 500 ஐ. ஏற்றுக் கொண்டிருக்கிறுர்கள். இத்தொகை நேராக விசாரித் தறிந்ததன்மேல் கணக்கெடுக்கப்பட்ட குறைந்த தொகையாகும். உண்மையான தொகை எப்பொழுதும் தெரியப் போகிறதில்லை. ஆனுல் நன்ருக விசாரணை செய்ததன்மேல், லாலா கிர்தாரிலாலின் மதிப்பு (1000) அதிகமான தல்லவென நாங்கள் கருதுகின்ருேம். நெருக்கமான இடத்தில் அடர்ந்த கூட் டத்தில் துப்பாக்கிப் பிரயோகஞ் செய்த பிறகு சிப்பாய்கள் 1000 பேரைக் கொன்றிராவிடில் அவர்கள் சுடுவதில் திறமையற்றவர்க ளாகவே கருதப்படல் வேண்டும். ஹன்ஸ்லி என்னும் குருகிய சந்தினின்றும் அதற்குள்ளும் குண்டுகள் சுடப்பட்டன வென் பது ஈண்டு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளப்படல் வேண்டும். சந்துக் கெதிரிலுள்ள பால்கனியிலும் நாங்கள் தோட்டாக்களின் அடையாளங்களைக் கொண்டோம். பாகிற்கு வெளியிலும் சில விடங்களில் ஜனங்கள் அணுகிவரும் போது சுடுவதற்காகச் சிப் பாய்கள் நிறுத்திவைக்கப் பெற்றிருந்தார்கள். கூடியவரை எவ் வளவு பேரைக் கொல்லலாமோ அவ்வளவு பேரைக் கொல்ல வேண்டுமென்பது ஜெனரல் டையரின் ஆலோசனை யென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. சுடப்பெற்றவர்களின் தொகை ஆயிரத் துக்கு மேலிராமலிருந்தால் குற்றம் அவருடையதாகாது. அவரு டைய தோட்டாக்கள் செலவழிந்து போயின. வழிகள் மிகவும்

நெருக்கமாயிருந்தபடியால் அவர்தம்முடைய பீரங்கி வண்டிகளைக் கொண்டுபோதல் கூடாததாயிருந்தது.

13-ந் தேதி நிகழ்ந்த சம்பவங்களின் கோரமான வரலாற்றையும், நீதிபதி ரான்கின் கூறியபடி ஏற்பட்டிருந்த பயங்கரமான தன்மையையும் விளக்கிக் கூறுதல் கூடாததாயிருக்கிறது. அதனை முழுவதும் அறிந்துகொள்ள வேண்டுமாயின், ஒருவர் உத்தியோக முறையில் வெளியிடப் பெறும் அறிக்கையையும் நாங்கள் வெளியிடும் அறிக்கையையும் முழுவதும் படித்தல்வேண்டும். ஏப்ரல் 10-ந் தேதி செய்யப்பட்ட கொடுஞ் செயல்களுக்குப்பிறகு ஆங்கிலேய அதிகாரிகள் கோபங் கொண்டிருந்தார்கள். அவர்கள் கோபமுற்றதும் நியாயமே. அவர்களால் மரியாதையாய் நடத்தப் பெற்றவர்களே அப்பொழுது அவர்களைக் கடிந்து விலக்கினுர்கள். அமிர்தசரஸ் வாசிகளுள் பேர் பெற்றவர்களில் ஒருவரான லாலா தோலன்தாஸ் அத்தகைய மனிதர்களுள் ஒருவர். அவர் அதிகாரிகளின் வேண்டு கோளின்படி அவர்களைக் காணச்சென்ற போது அவர்கள் மிக்க கோபமுற்றிருந்தார்கள். "எல்லோரும் கோபமான மன நிலைமையிலிருந்தனர். ஒவ்வோர் ஐரோப்பியரின் உயிருக்குப்பதிலாகவும் ஆயிரம் இந்தியர் பலி கொடுக்கப்பட வேண்டுமென மிஸ்டர் ஸெய்மூர் சொன்னதாகக் கூறப்படுகிறது. யாரோ ஒருவர் நகரத்தைக் குண்டுகளால் தகர்க்கலாமென ஆலோசனை கூறினர். பொற்கோயில் பஞ்சாப் முழுவதினும் மிக்க புனிதமானதாகக்கருதப்படுகிறபடியால் அதன் எந்தப்பாகமேனும்அதிகாரிகளால் தீண்டப்பெற்றாலும் நாசமாக்கப் பெற்றாலும் மிக்க சங்கடம் நேரிடுமென லாலா தோலன்தாஸ் அதிகாரிகளுக்குத் தெரிவித்தார்."

ஏப்ரல் மாதம் 11-ந் தேதி, சவங்களை அடக்கஞ் செய்யும் விஷயமாக அதிகாரிகளைக் காணச் சென்றவர்களுள் பாரிஸ்டர் மிஸ்டர் மகமத் ஸாதிக் என்பவரும் ஒருவர். அவர் பின்வருமாறு

கூறுகின்றனர்: "ஐரோப்பியர் கொல்லப்பட்ட படியால் அவர்கள் உடல்களினின்றுஞ் சிந்திய இரத்தம் பழிக்குப் பழிவாங்கப் படாமற் போகக்கூடாதென்றும், சிறிதளவு எதிர்த்தாலும் கீழ்ப் படியாதிருந்தாலும், சமாதானம் நிலை குலைந்தாலும், தேவையான இராணுவ பலம் உபயோகிக்கப் பெறுமென்றும், தேவையாயின் நகரம் குண்டுகளால் தாக்கப் பெறுமென்றும் அவர்கள் எண்ணியிருந்ததாக நான் அதிகாரிகளோடு பேசியதினின்றும் அறிந்து கொண்டேன். ஸப் அஸிஸ்டெண்ட் ஸர்ஜன் டாக்டர் பால முகுந்தர், ஏப்ரல் மாதம் 11-ந் தேதி, ஸிவில் ஸர்ஜன் கர்னல் ஸ்மித் பின்வருமாறு கூறியதாகச் சொல்லி யிருக்கிறார்:— "ஜெனரல் டையர்வந்து கொண்டிருக்கிறார். அவர் நகரத்தின் மீது குண்டுகளைப் பிரயோகஞ் செய்வார். நகரம் எங்ஙனம் குண்டுகளால்தகர்க்கப்படுமென்பதையும், அரைமணிநேரத்தில்அஃதுஎங்ஙனம்தரையோடு தரையாய்ச்சமனக்கப் படுமென்பதையும் காட்ட அவர்படமெழுதிக்காட்டினர். நான் நகரத்தில் வசிக்கிறேனென்று சொல்லி நகரம் குண்டுகளால் தகர்க்கப்படும்போது என்கதி என்னவதென்று அவரைகேட்டேன். நான் என்னுயிரைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமாயின், நகரத்தைவிட்டுப்போய் வைத்திய சாலையில் வசித்தல்நலமென அவர் தெரிவித்தனர்."

ஏப்ரல் மாதம் 13-ந் தேதி பயங்கரம் எங்ஙனம் உண்டானதென்பதையும் ஏன் உண்டானதென்பதையும் நாம் இங்ஙனம் அறிந்துகொள்ளுகிறோம். நடுக்கத்துடன் தாக்கவேண்டியிருந்தது. நகரத்தைக் குண்டுகளால் தகர்க்கும் எண்ணம் பிறகுவிட்டொழிக்கப்பெற்றது. 13-ந் தேதி கூட்டப்பெற்ற கூட்டம் ஆயத்தமான தறுவாயாகவிருந்தது. ஜெனரல் டையர் உடனே அதைக் கைக்கொள்ளலாயினர். மிஸ்டர் சி. எப். ஆண்ட்ரூஸ் அதைக்ஜென்கோகொலைக்குநிகரானகொலையென்றுகூறியுள்ளார். மிருகத்தனமான செய்கைகளை யளந்து மதிப்பிடுதல் கூடுமாயின்,

க்ளென்கோ கொலை ஜலியன்வாலா கொலையைக் காட்டிலும் கொடியதெனக் கூறலாம். ஆனால் திருத்தத்தின் அளவு இப்பொழு திருப்பதைப்போல் க்ளென்கோ கொலை நாளி லிருக்கவில்லை. அறிக்கையைச் செவியேற்றவர்களும் அதி லுள்ள தடுக்கும் பாகத்தை அறிந்துகொள்ளவில்லையென் பது எங்களுடைய அபிப்பிராயம். அறிக்கைக்கு விரோத மாக ஒருவரும் கூட்டத்திற்குச் செல்லவில்லை. இரா ணுவ அதிகாரிகளுக்குக் கோபமுண்டாகுமாறு யாதொன்றுஞ் செய்யப்படவில்லை. அம்ருதசரஸிலேனும் அதற்கு வெளியி லேனும் நடைபெற்ற எதுவும் கொலையை நியாயமானதாகத் தோற்றுவியாது. அது வேண்டுமென்று செய்யப்பட்ட குரூரச் செயலாகும். மன்னிக்கக்கூடாத இக்குற்றத்தினின்றும் இந்தி யாவில் பிரிட்டிஷ் ஆட்சி பரிசுத்தப்படுத்தப்பட வேண்டுமாயின், ஜெனரல் டையர் உடனே தம்முடைய பதவியினின்றும் வைக் கப்பட்டு நியாயப்படி நடத்தப்பெறல் வேண்டும்.

தம் செய்கையை ஸர் மைகல் ஓட்வியர் அங்கீகரித்ததாக ஜெனரல் டையர் ஹண்டர் கமிட்டியார் முன் கொடுத்த சாட்சி யத்திற் கூறியிருக்கிறார். பஞ்சாப் வாசிகளைப் பாதுகாக்கும் பொறுப்பைவகித்த ஒருவர் மனித சமூகத்திற்குச் செய்யப் பட்ட இக்கொடுஞ்செயலை ஆதரித்திருத்தல் கூடுமென எண்ண வும் மனம் இடந்தரவில்லை. நடவடிக்கையிலேனும் நியாய வழியிலேனும், இராணுவச் சட்டத்தின் கீழும், சேனைத் தலைவர்கள் தகுமுறைகள் சிலவற்றை அனுசரிக்கக் கடமைப் பட்டிருக்கிறார்கள். ஜெனரல் அவைகளை முழுவதும் கவனியா திருந்துவிட்டாரென்று நாங்கள் துணிவுடன் தெரிவிக்கிறோம். ஆங்கிலேயர் கொல்லப்பட்டதையும் கட்டிடங்கள் நெருப்புக்கிரை யாக்கப் பெற்றதையும் நாங்கள் இலகுவாகக் கூற விரும்பவில்லை யென்பதை இன்னொரு முறை குறிப்பிடுகின்றோம். அவைகள்

தகுதியற்றவைகளென்று நம்புகின்றோம். கோபங் கொண்ட ஜனங்கள் செய்த கொடுஞ்செயல்கள், எவ்வளவு அநீதியானவை களாயினும், ஜெனரல் டையர் செய்ததுபோல் குற்றமற்ற ஜனங் களைக் கொலை செய்தது எவ்விதத்திலும் நியாயமாகாது.

எப்ரல் மாதம் 14-ந் தேதி ஜனங்கள் இறந்து பட்டோரை யும் காய முற்றோரையும் அப்பாலகற்றிக்கொண்டும், சவங்களைப் புதைத்துக் கொண்டும் கொளுத்திக்கொண்டு மிருந்தார்கள். இதற் கும் உத்தரவு பெறவேண்டுவது அவசியாமாயிருந்தது. இவ்விஷ யமாகக் கீழ்க் கண்ட அறிக்கை வெளியிடப்பட்டது:—“ நகரவா சிகள் தங்களாற் கூடியவிரைவில் தங்கள் சவங்களைக் கொளுத் தவேனும் புதைக்கவேனும் செல்லலாம். எத்தகைய ஆடம்பரமும் செய்யப்படுதல்கூடாது.”

எப்ரல் மாதம் 14-ந்தேதி நகரத்தின் நிலைமை எவ்வாறிரு ந்ததென லார்ட் ஹண்டர் கேட்டதற்கு ஜெனரல் டையர் பின் வருமாறு பதிலளித்தனர்: “ என் உத்தரவுகள் நிறை வேற்றப் பட்டனவா இல்லையா வென்பதைப் பார்க்கும் பொருட்டு நான் நகரத்தின் வழியாய்ச் சென்று, சிப்பாய்களிருந்த விடங்களைப் பார்த்தேன்; எல்லாம் நிசப்தமாயிருந்தது.”

பிற்பகல் சுமார் 2 மணிக்குப் பிரதேச வாசிகளும், முனிசி பல் கமிஷனர்களும், மாஜிஸ்டிரேட்டுகளும், வியாபாரிகளும் போலீஸ் ஸ்டேஷனில் கூட்டப்பெற்றனர். அதுகாலைகமிஷனர் பின்வருமாறு பேசினர்: “ ஜனங்களே! உங்களுக்கு வேண்டு வது யுத்தமா, சமாதானமா? நாங்கள் ஒவ்வொரு வழியிலும் ஆயத் தமாயிருக்கிறோம். அரசாங்கத்தார் சர்வ வல்லமையுள்ளவர். ஸர்க் கார் ஜெர்மனியைவென்றுவிட்டது. அஃது எதை வேண்டுமா னாலும் செய்யக்கூடியதாயிருக்கிறது. ஜெனரல் இன்று உத்தர வுகள் பிறப்பிப்பார். நகரம் அவர் சுவாதீனத்தி லிருக்கின்றது.

நான் ஒன்றுஞ் செய்ய முடியாது. நீங்கள் உத்தரவுகளுக்குக் கீழ்ப் படிந்து நடத்தல் வேண்டும்."

அதன்பிறகு கமிஷனர் மிஸ்டர் கிச்சின் போய்விட்டனர். ஜெனரல் டையர், மைல்ஸ் இர்விங்க் ரெஹில் ப்ளோமர் ஆகிய மூவருடனும் இராணுவக் காவற்படையுடனும் மாலை 5-மணிக்கு வந்து சேர்ந்தனர். அவர் மற்றவர்களுடன் அறைக்குள் பர பரப்புடன் வந்தனர். எல்லோரும் கோபங்கொண்டிருந்தனர். ஜெனரல் டையர் அதுகாலை உருதுவிற்கூறிய உரைகளின் மொழிபெயர்ப்பு வருமாறு :—

"ஜனங்களே! நான் சிப்பாய் என்பதையும் ஸோல்ஜரென் பதையும் நீங்கள் நன்கறிவீர்கள்; உங்களுக்கு யுத்தம் வேண்டுமா, சமாதானம் வேண்டுமா? யுத்தத்தை விரும்புவீர்களாயின் அர சாங்கத்தார் அதற்கு ஆயத்தமாயிருக்கின்றனர். அங்ஙனமின் றிச் சமாதானத்தை நாடுவீர்களாயின், என் கட்டளைக்குக் கீழ்ப் படிந்து கடைகளைத் திறவுங்கள். இன்றேல் நான் சுட்டுவிடு வேன். எனக்கோ அமிர்தசரஸ் போர்க்களமும் பிரான்ஸிலுள்ள போர்க்களமும் ஒன்றே. நான் இராணுவ உத்தியோகஸ்தன்; நேராகச் சென்றுவிடுவேன். நான் வலதுபுறமேனும் இடது புறமேனும் திரும்பமாட்டேன். யுத்தம் வேண்டுமாயின் வெளி யிட்டுவிடுங்கள். சமாதானம் வேண்டியிருப்பின், எல்லாக்கடை களும் உடனே திறக்கப்படவேண்டுமென்பதே என்னுடைய உத்தரவு. நீங்கள் அரசாங்கத்துக்கு விரோதமாகப் பேசுகிறீர் கள்; ஜெர்மனியிலும் வங்காளத்திலும் கல்வி பயின்றுள்ளோர் அராஜகம் பேசுகின்றனர். நான் இவைகளை யெல்லாம் தெரி விக்கிறேன். உத்தரவுகளுக்குக் கீழ்ப்படியுங்கள். வேறொன் றுஞ் செய்யவேண்டுமென நான் விரும்பவில்லை. நான் 30-வரு ஷங்களுக்குமேல் இராணுவத்தில் வேலை செய்திருக்கிறேன். இந்தியச் சிப்பாயையும் சீக்கியரையும் நான் நன்கறிவேன். நீங்

கள் சமாதானத்தை நாடவேண்டியவர்களா யிருப்பீர்கள்; இன்றேல் கடைகள் துருப்புக்களின் உதவியினாலும் துப்பாக்கிக் குண்டுகளாலும் திறக்கப்படும். துஷ்டர்கள் யாவரென்பதை நீங்கள் எனக்கு அறிவித்தல்வேண்டும். நான் அவர்களைச் சுட்டு விடுவேன். என் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து கடைகளைத்திறவுங்கள். யுத்தம் வேண்டுமாயின் சொல்லிவிடுங்கள்." ஜெனரல் பேசி முடிந்ததும், டெபுடி கமிஷனர் மிஸ்டர் மைல்ஸ் இர்விங் சில அரிய உரைகளை வழங்கலானார். அவைகளினின்றும் இரண்டு வாக்கியங்களை ஈண்டு எடுத்துக் காட்டுகின்றோம். "ஆங்கிலேயரைக் கொன்றதனால் நீங்கள் ஒருகொடுஞ்செயல் புரிந்தவர்களானீர்கள். உங்களையும் உங்கள் குழந்தைகளையும் பழிக்குப் பழி வாங்கி விடுவார்கள்."

15-ந் தேதி எல்லாக் கடைகளும் திறக்கப்பட்டன. 13-ந் தேதி பிரதி பலனேற் பட்டதற்கும், 14-ந் தேதி மேற்கூறிய அரிய உரைகள் வழங்கப் பெற்றதற்கும், கடைகள் திறக்கப்பட்டதற்கும் பிறகு, சிவில் ஆட்சி மறுபடியும் தொடங்கப் பெறுமென ஒருவர் எதிர்பார்த்திருத்தல் கூடும். ஆனால் அங்ஙனம் ஒன்றும் நடைபெறவில்லை. பழிக்குப் பழி முழுவதும் நடந்தேறவில்லை. எனவே இராணுவச் சட்டம் அறிவிக்கப்பட்டது. காரியத்தில் உண்மையாயிருந்தது; சட்டத்தில் உண்மையாயது. இச்சட்டம் ஜூன் 9-ந் தேதிவரையில் அமுலில் இருந்து வந்தது. அமிர்தசரஸ் வாசிகள் அதனால் பலவழிகளில் துன்பமனுபவித்துவந்தார்கள் :—

1. மிஸ் ஷெர்வுட் தாக்கப்பெற்று இழிவு படுத்தப்பட்ட தெரு ஜனங்களைச் சாட்டையா லடிப்பதற்காகவும், அதன் வழியாகச் சென்றவர்களை வயிற்றினால் ஊர்ந்து செல்லுமாறு செய்வதற்கும் பிரத்தியோகப்படுத்தி வைக்கப்பட்டது.

2. நியமனப்படி எல்லோரும் ஆங்கிலேய உத்தியோகஸ்தர்களு க்கு ஸலாம் செய்யவேண்டும். ஆனால் உண்மையில் ஜனங் கள் எல்லா ஆங்கிலேயருக்கும் ஸலாம் செய்ய வேண்டிய வர்களாயிருந்தார்கள்; ஸலாம் செய்யத்தவறுவோர் கைது செய்யப்படுவர் அல்லது அவமானப்படுத்தப் படுவர்.
3. அற்பகாரணங்களை முன்னிட்டும் ஜனங்கள் பகிரங்கமாகவும் வேறு வழியிலும் சாட்டையாலடிக்கப்பட்டார்கள்.
4. யாதொரு காரணமுமின்றி நகரத்திலுள்ள நியாயவாதிகளெல் லோரும் ஸ்பெஷல் கான்ஸ் டபில்களாகச் செய்யப்பட்ட னர். அவர்கள் சாதாரண கூலியாட்களைப் போல் வேலை செய்யவேண்டியவர்களானார்கள்
5. நிலைமையைக் கவனியாமலும் பலர் கண்டபடி கைது செய்யப்பட்டனர். பிடித்து வைக்கப்பெற்றிருந்த பொ ழுது, அவர்களிடமிருந்து சாட்சியம் வாங்கும்பொருட்டே னும், அவர்களை ஒப்புக்கொள்ளச் செய்வதற்காக வேனும், அவர்களை இழிவு படுத்தும் நோக்கத்துடனேனும் அவர் கள் பலவிதமான அசௌகரியங்களுக்கும் சிறுமைச் செயல் களுக்கும் உட்படுத்தப்பட்டார்கள்.
6. குற்றங்களை விசாரிக்குமாறு ஸ்பெஷல் ட்ரிப்யுனல்கள் ஏற் படுத்தப்பெற்றன. இதனால் சட்டமென்னும் பெயரால் பெருத்த அநீதி குடிகொண்டிருந்தது. துன்புறுத்தப் பெற்றவர்கள் அப்பீல்செய்துகொள்ளும் உரிமை யிழந் திருந்தார்கள்.

ஊர்ந்து செல்லும் உத்தரவென வழங்கப்பெறுவதை இங்கே விளக்கிக் கூறுகிறோம். ஊர்ந்து செல்லுமாறு உத்தரவு செய்யப்பட்ட சந்து, குறுகியதும் ஜனநெருக்க முள்ளதுமான இடம். அதன் இருமருங்கிலும் இரண்டடுக்குக் கட்டிடங் கள் உள்ளன. பலவீடுகளைக்கொண்ட ஒருபுறம் வழியுள்ள சிறு

சந்துக்கள் அதினின்றும் பிரிந்துசெல்கின்றன. சந்தில் வசிப்பவர்கள் கடைக்குப்போய் ஏதாவது வாங்கிவரவோ நகரத்திற்குச் செல்லவோ வேண்டுமாயின், சந்தின் ஏதேனு மொருபாகத்தின் வழியாகவே செல்லக்கூடுமாகலின், போகும்போதும் வரும் போதும் ஊர்ந்து செல்லவேண்டியவர்களா யிருந்தார்கள். ஊர்ந்துசெல்ல ஒத்துக்கொண்டால்தான் சுகாதார உதவியோ வைத்திய உதவியோ செய்தல்கூடும். உத்தரவு பிறப்பிக்கப்பெற்ற சந்தின் மொத்த நீளம் 150-கெஜம். அதன் மத்தியில் சாட்டையாலடிப்பதற்கென்று பிரத்தியேகமாய் உயர்த்தப்பெற்ற டிக்டிகி என்னுமிடமிருக்கிறது. எட்டுநாள் வரையில் இவ்வுத்தரவு அமுலிலிருந்து வந்தது. ஜெனரல் டையர் இதனைக் "கை கால்கள் நான்கினாலும் செல்லுதல்" என்றும், பத்திரிகைகள் "கை முழந்தாள் கட்டளை" என்றும் கூறியிருந்தும், ஊர்ந்து செல்வோர் தரையின்மேல் மட்டமாய்ப் படுத்துப் பாம்புபோல் வயிற்றினாலேயே ஊர்ந்து செல்லவேண்டியவரா யிருந்தனர். ஊர்ந்துசெல்வோர் முழந்தாளை உயர்த்தினாலும் வளைத்தாலும் துப்பாக்கியின் அடிப்புறம் உடனே அவர்கள் முதுகுகளின்மேல் வந்துவிடும். எனவே வயிற்றையும் கைகளையும் அசைத்துக் கொண்டே ஊர்ந்து செல்லவேண்டியிருந்தது. இந்தியாவிலுள்ள சந்துகள் பெரும்பாலனவற்றைப்போலவே அந்தச்சந்து ஆபாசங்கள் பலவற்றை யுடையதாயிருந்தது. இவ்வுத்தரவு வாயினாலேயே பிறப்பிக்கப் பெற்றதென்பதும், மேலதிகாரிகளின் கட்டளையின்படி பிறகு அது விலக்கப் பெற்றதென்பதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கன. இவ்வுத்தரவு பிறப்பித்ததற்கு ஜெனரல் டையர் கூறுங்காரணம் வருமாறு: "ஸ்திரீகள் அடிக்கப்பட்டதாக நான் கருதினேன். நாம் ஸ்திரீகளைப் புனிதமானவர்களாகக் கொள்கிறோம். இக்கொடுஞ் செயல்களுக்கு ஏற்றதண்டனை யாதென்பதை நான் என் மூளையில் தேடிப் பார்த்தேன். தண்டனையை

எங்ஙனம் விதிப்பதென்பது எனக்குத் தெரியவில்லை. அதில் சிறிதளவு தற்செயல் நேரிட்டிருந்தது. நான் போர்வீரர்கள் நின்றிருந்த இடங்களுக்குச் சென்றிருந்த பொழுது, ஒரு முக்கோணம் கட்டும்படி கட்டளையிட்டேன். அந்தத் தெரு புனிதமானதாகக் கருதப்பட வேண்டுமென எண்ணினேன். எனவே நான் வீதியின் இரு புறங்களிலும் போர்வீரரைக் காவல் வைத்து, அதன்வழியாக இந்தியர் ஒருவரையும் விடுதல் கூடாதென அவர்களுக்குக் கட்டளையிட்டேன். பின்னும், இந்தியர்கள் செல்ல வேண்டுமாயின், அவர்கள் கைகால் நான்கினுலும் செல்லுதல் வேண்டுமென அறிவித்தேன். அறிவுடைய ஒருவன், சித்தஸ்வாதீனமுள்ள ஒருவன், இந்நிலையில்-தானுக அந்தத் தெருவின் வழியாகச் செல்வானென நான் ஒரு பொழுதும் நினைத்ததில்லை.”

தண்டனையின் தீர்மான முள்ள தன்மையையும் இழிதகைமையையும் வேறென்றும் நிகர்த்தல்முடியாது. மிஸ் ஷெர்வுட் 10-ந் தேதி தாக்கப்பெற்றனர். இவ்வுத்தரவு 19-ந் தேதி பிறப்பிக்கப்பட்டது. மிஸ் ஷெர்வுட்டைப் பார்த்திராதவர்களும் இக்கட்டளைக்குக் கீழ்ப்படிய வேண்டியவர்க ளானுர்கள். அமிர்தசரஸ் வாசிகளுள் பெரும்பாலாரைப் போலவே அவர்களும் மிஸ் ஷெர்வுட் இழிவு படுத்தப்பட்டதற்காக வருந்தியிருப்பர். அத்தகைய மனிதர்களே தண்டனையை ஏற்றுக்கொள்ள வேண்டியவர்களாயிருந்தார்கள். மனிதத் தன்மையை இழிவு படுத்தும் பொருட்டு ஒரு தண்டனையை ஆராய்ந்தறிந்து கொடுக்கும் மனத்தை இத்தன்மையதெனப் பாகுபாடுசெய்து கூறுதல் கஷ்டசாத்தியமாகும். போர்வீரர்கள் காலை 6 மணி முதல் இரவு 9 மணி வரை காவலில் நிறுத்தப் பெற்றிருந்தார்கள். சமாதானத்தைக் கைக் கொண்டுள்ள மக்கள் தங்கள்வீடுவிட்டு வெளியே செல்லும்போது கைகால் நான்கினுலும் நகர்ந்து செல்லுமாறு தண்டனை விதிக்க, என்ன நியாய முண்டென

லார்ட் ஹண்டர் கேட்டபொழுது, ஜெனரல் டையர் "அவர்கள் மற்ற நேரங்களிலெல்லாம் சென்றிருத்தல்கூடும்" (அதாவது இரவு 10 மணிக்குப் பின்னும் காலை 6 மணிக்கு முன்னும்; இரவு 8 மணி என்னும் வரையறை 15-ந் தேதி 10 மணியென மாற்றப்பெற்றது.) என்று விடைபகர்ந்தனர். இதற்கு நேர் விரோதமாக இன்னோர் உத்தரவு அமுலிலிருந்து வந்ததென்பதை ஜெனரல் மறந்துவிட்டனர். இரவு 10 மணிக்கு மேல் ஒருவரும் வெளியே செல்லுதல் கூடாது; சென்றால் சுடப்பெறுவர். ஆயினும் அவர் மேற்கூறிய மறுமொழியில் பின்வருமாறு தெரிவித்திருக்கின்றனர்: "இதனால் மிக்க அசௌகரிய மேற்பட்டதென நான் நினைக்கவில்லை. அவர்கள் சிறிது துன்பமனுபவித்திருப்பின், இராணுவச் சட்டத்தின்கீழ் அது துன்பமாகாது. அவர்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களை வேறு வழிகளில் தேடிக்கொண்டிருத்தல் கூடும். அவர்கள் சிறிதளவு அசௌகரியத்திற்கு உட்படுத்தப்பட வேண்டியிருந்ததைத் தடுத்தல் முடியாது." லார்ட் ஹண்டர் அவரைப் பின்வருமாறு கேட்டனர்: "அக்கஷ்டகாலத்தில், குழப்பத்தை யடக்கும் விஷயத்தில் சமாதானமுள்ள குடிமக்கள் உதவிபுரிதல் கூடாமலிருக்குமென்பதை நீவிர் ஒத்துக்கொள்வீர். எனவே கொடிய முறைகள் சட்டப்படி நடக்கும் குடிமக்களை நீக்கிக் கலகஞ்செய்யும் கூட்டத்தவர் விஷயத்தில் மாத்திரம் கைக்கொள்ளப்பெறுதல் நியாயமன்றோ?" ஜெனரல் டையர், "ஆம். அவர்கள் வெளிப்படையாகக் கண்டு கொள்ளக்கூடாதபடி சட்டத்திற் கடங்கி நடப்பவர்களா யிருந்தார்கள். ஆனால் அச்சந்தர்ப்பத்தில் கொடியவர்களை மாத்திரம் தண்டிக்கவேண்டுமென நான் நினைத்திருந்ததாகக் கருதுகிறேன்" என்று பதிலளித்தனர்.

வினா :—ஆனால் இந்தத் தெரு மிஸ் ஷெர்வுட்டைத் தாக்கியவர்கள் நடமாடும் தெருவாக இருக்கவில்லையே ?

விடை :—இல்லை. ஆயினும் நான் தெருவின் நடுவில் ஒரு மேடை அமைக்கச் சொன்னேன் ; கொடுஞ்செயல் புரிந்தவர்கள் கிடைத்தவுடன் அவர்களைச் சாட்டையால் அடிப்பதென்றெண்ணியிருந்தேன். அவர்களை அடிப்பதென்றே தீர்மானித்திருந்தேன்.

உண்மையில் யாது செய்யப்பட்டதென்பதை ஒரு சிறிது கவனிப்போம். லாலா ஈசுவரதாஸர் அமிர்தசரசிலுள்ள ஒரு பெரியவியாபாரஸ்தலத்தில் உதவி உத்தியோகஸ்தரா யிருப்பவர். அவர் எப்ரல் மாதம் 18-ந் தேதி லாலா லாப் சந்தர் வீட்டிற்குச் சென்றிருந்தனர். திடீரென மிஸ்டர் ப்ளோமர் இராணுவ வீரர்களுடன் தெருவில் வந்தனர். லாலா ஈசுவரதாஸரும் அவர் நண்பர்களும் ஒரு பலகணி வழியாகப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்,. மிஸ்டர் ப்ளோமர் தமது வேட்டைச் சாட்டையை அவர்களை நோக்கி வீசி, அவர்களெல்லோரையும் எழுந்து நின்று சலாம் செய்யச் சொன்னார். இராணுவ வீரர் தங்கியிருப்பதற்காக வீட்டின் ஒரு பகுதியைப் பிரத்தியேகப்படுத்திக் கொடுத்தல் வேண்டுமென மிஸ்டர் லாப் சந்தர் அறிவிக்கப் பெற்றனர். இச்சாட்சி பின்வருமாறு கூறுகின்றனர். “ மாலை சுமார் 4 மணிக்கு ஈசுவரதாஸர், பன்னுலால், வேலாராம் முதலியவர்களும் நானும் வீட்டுக்குப் போக விரும்பினோம். ஆனால் போலீசார் நாங்கள் செல்ல உத்தரவளிக்க மறுத்துவிட்டனர். மறுபடியும் நாங்கள் உத்தரவு கேட்டோம். ஊர்ந்து செல்வதாயின் செல்லலாமென அனுமதியளிக்கப்பட்டது. எனவே நாங்களெல்லோரும் வயிற்றினால் ஊர்ந்து தெருவைக் கடந்துசெல்ல வேண்டியிருந்தது. வேறெந்த மார்க்கமாகவும் நாங்கள் வீட்டுக்குப் போதல் கூடாததாயிருந்தது.”
வாய்மொழியினாலேனும் எழுத்து மூலமாகவேனும் பகிரங்கமாக

வெளியிடப் பெருதஉத்தரவு அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது, அன்றே முதல் நாளென்பது ஈண்டுக் குறிப்பிடப் பெறுதல் வேண்டும். அஃது அமுலுக்குக் கொண்டு வரப்பட்டதினின்றுமே வெளிப்படலாயிற்று.

இன்னெருு சாட்சி, லாலா மேகலால் ஜவுளி வியாபாரி அவர் கூறுவதாவது: "என்வீடு குச்சா குரிச்சானிலுள்ளது. (ஊர்ந்து செல்லும் சந்தின் ஒருகிளைச்சந்து) என் கடை குரு பஜாரிலுள் ளது. முதல் நாளே குச்சா குரிச்சானில் சிப்பாய்கள் காவல் நிறு த்தப்பட்டிருந்தார்கள். நான் மாலை 5 மணிக்கு வீட்டுக்குத் திரும் பிவந்து கொண்டிருந்த பொழுது, சிப்பாய்கள் என்னை நிறுத்தி வயிற்றினுல் ஊர்ந்து செல்லக் கட்டளையிட்டார்கள். நான் அவ் விடம்விட்டு ஓடிப்போய், சிப்பாய்கள் அவ்விடம் விட்டுப் போகும் வரை திரும்பிவராமலிருந்தேன். அன்றிரவு 9 மணிக்கு நான் வீடு வந்து சேர்ந்தபொழுது என்மனைவி ஜுரத்தோடு படுத்திருந்தாள். அவளுக்குக் கொடுக்கவீட்டில் தண்ணீரில்லை; வைத்தியருமில்லை; மருந்துமில்லை. அன்றிரவு வெகுநேரஞ் சென்றபிறகு நானே தண்ணீர் கொண்டுவர வேண்டியிருந்தது. எந்த வைத்தியரும் வயிற்றினுல் ஊர்ந்துவரச் சம்மதியாராகலின், என்மனைவி அடுத்த ஏழு தினங்கள்வரை வைத்தியவுதவி யின்றியே படுத் திருக்க நேர்ந்தது."

இந்தச் சந்தில் ஜைனஸபா மந்திரமொன்று இருக்கின்றது. அதில் சாதுக்கள் சிலர் வசித்துவருகின்றனர். கெஞ்சா கண்டி ராக்டர் லாலா ரல்லியாராம் என்பவருக்கு மந்திரத்தினருகில் ஒரு வீடுளது. அவர் கடைக்குப் போய்க்கொண்டிருந்தபொழுது ஊர்ந்து செல்லுமாறு கட்டாயப்படுத்தப்பட்டார். அவர் கூறுவ தாவது: "நான் ஊர்ந்து சென்றுகொண்டிருக்கையில் அவர்கள் என்னைத் தங்கள் பூட்ஸினுல் உதைத்து, துப்பாக்கியின் அடிப் புறத்தினுல் அடித்தார்கள். அன்றையதினம் நான் சாப்பாட்

டிற்காக வீட்டிற்குத் திரும்பிச் செல்லவில்லை. எட்டுநாள் வரையில் சுத்தஞ்செய்வோர் ஒருவரும் வரவில்லை. எனவே வீடுகளிலுள்ள ஆபாசங்கள் வெளிப்படுத்தப் பெருமலும் ஜலமலங்கழிக்குமிடங்கள் சுத்தஞ்செய்யப் பெருமலு மிருந்தன. தண்ணீர் கொண்டுவருபவனும் வரவில்லை. நாங்கள் காய் கறிகளேனும் ஏனைய உணவுப்பொருள்களேனும் வாங்கக்கூடாதவர்களா யிருந்தோம்.''

அச்சந்தில் வசிப்பவரான ஜைன மந்திர லாலா கணபதிராய் பின்வருமாறு கூறுகிறார்: ''தொழுவதற்காகக் கோயிலுக்குச் செல்லவேண்டியவர்களும் இங்ஙனமே ஊர்ந்து செல்லக் கட்டளையிடப்பெற்றனர்.''

பாங்கர் லால் தேவிதாஸர் வயிற்றினுல் நகர்ந்துசெல்லுமாறு கட்டளையிடப் பெற்றனர். அவர் தம் வீட்டுக்குத் திரும்பிச் சென்று விடுவதாகத் தெரிவித்தும், ஊர்ந்து செல்லுமாறு வற்புறுத்தப்பெற்றனர். அவர், ''நான் முதலில் என் கைகளையும் முழந்தாள்களையும் ஊன்றிச் செல்ல முயன்றேன். ஆனல் நான் ஈட்டியைக்கொண்டு பயமுறுத்தப் பட்டபடியால் வயிற்றினுல் ஊர்ந்துசெல்லவேண்டி யிருந்தது''—என்று சொல்லுகிறார்.

கஹன் சந்தர் சென்ற இருபது வருஷங்களாகக் குருடரா யிருப்பவர். அவர் ஊர்ந்து செல்லுமாறு கட்டளையிடப்பெற்றதுடன் உதைக்கவும் பெற்றார்.

உபாத்திமைத் தொழிலிலுள்ள அப்துல்லா என்பவர் ஊர்ந்து செல்லவேண்டியிருந்தது. அவர் வழியில் இளைப்பாறிக்கொண்டிருந்தபொழுது உதைக்கவும் துப்பாக்கியின் அடிப்புறத்தால் அடிக்கவும் பட்டார். அவர் திட சரீரமுடையவராகலின் அவர் தேகம் முழுவதும் கிறைப்பெற்றது.

ஊர்ந்துசெல்லுதல் அமுலிலிருந்தபொழுது, புனிதமான புறாக்களும் மற்றப்பறவைகளும் சுடப்பெற்றன. சந்தின் ஒரு

மூலையிலிருந்த ஜந்துவாச்ரயம் (பிஞ்சராபோல்) தீட்டாக்கப் பெற்றது. சந்துகளிலுள்ள கிணறுகளண்டை சிப்பாய்கள் ஜல மலங்கழித்து அவைகளை அசுத்தமாக்கினார்கள்.

அநாகரிகமானதும் மனிதத்தன்மைக்கு ஒவ்வாததுமான ஊர்ந்துசெல்லும் கட்டளைக்கு 50-பேர் உட்படுத்தப் பட்டன ரென உத்தியோக முறையிற் கொடுக்கப்பெற்ற சாட்சியம் கூறு கின்றது.

கட்டாயத்தின்மேல் ஸலாம் செய்வதில் உண்டாகும் இழிவை அனுபவித் தறியாதவர்கள், அதனை அனுப வித்த ஒருவன் அடையும் வருத்தத்தையும் தாழ்மையை யும் உள்ளபடி அறிந்துகொள்ளுதல் கஷ்ட சாத்தியமாகும். ஸலாம் செய்யுமாறு வற்புறுத்தப்பெற்றவர்களே நேராகக் கூறி யதைக் கேட்டுள்ள நாங்கள், அவர்கள் அதனை எங்ஙனம் கருதின ரென்பதைச் சிறிதளவு உணர்ந்து கொள்ளக் கூடியவர்களாயிருக் கிறோம். 160,000 ஜனங்களைக் கொண்ட நகரத்தில் ஸலாம் செய்யும் உத்தரவு அமுலுக்குக் கொண்டுவரப் படுதல் சிறு காரியமன்று. ஜனங்கள் எழுந்து நின்று வலது கையை நிலை யாக அசைத்துக் கொண்டிருத்தல் வேண்டும். ஏற்ற முறையில் ஸலாம் செய்யாததற்காகத் தாங்கள் கைது செய்யப்பட்டதாகச் சொல்லும் சிலர் இருக்கின்றனரென்பதில் யாதொரு வியப்பு மில்லை. தேவையான விதத்தில் ஸலாம் பெற்றுக் கொள்வ தோடு உத்தரவு முடிந்து விடவில்லை. சரியான முறையில் ஸலாம் செய்யத் தவறுவோர் பல வழிகளில் தண்டிக்கப் பெற் றனர்.

ஏப்ரல் மாதம் 18-ந் தேதி லாலா ஹரி கோபால் கன்னு பி. ஏ. தம் நண்பர் சிலருடன் ஒரு தெருவின் வழியாகச் சென்று கொண்டிருந்தனர். அவர் ஜெனரல் டையர் பின்னே வர, குதிரை மீதேறி வந்த போலீஸ்காரர் சிலரைக் கண்ணுற்

றனர். ஜெனரல் டையர் அவரைச் சைகை காட்டி யழைத்த னர். அங்கு வந்து சேர்ந்ததும், லாலா ஹரி கோபால் இரா ணுவப் பாங்கில் ஸலாம் செய்தனர். அதன் மேல் அவருக்கு ஸலாம் செய்யத் தெரியவில்லை யென்றும், அவர் மறு நாள் ராம் பாக் தோட்டத்திற்குச் சென்று காண வேண்டுமென்றும் அறி விக்கப் பெற்றனர். அவர் ஜெனரல் டையருக்கு ஸலாம் செய்து அவரிடம் விடை பெற்றுக்கொண்டு, சிட்டி போலீஸ் சூபரின் டெண்டெண்ட் மிஸ்டர் ப்ளோமரை யணுகி, ராம்பாக் தோட் டத்தில் எங்கே செல்லவேண்டுமெனக் கேட்டனர். உடனே அவரைக் கொத்வால் சாகிபிடம் அழைத்துச் செல்லுமாறு மிஸ் டர் ப்ளோமர் ஒரு சேவகனுக்குக் கட்டளையிட்டனர். அங்கே அழைத்துப் போகப் பெற்றதும், அவர் இன்னும் இரண்டு மூன்று பேருடன் ஈரத்தரையின் மேல் உட்காரக் கட்டளையிடப் பெற் றார். இரவு 7-மணிக்குள்ளாக இன்னும் பலர் அவர்களோடு வந்து சேர்ந்தனர். பிறகு அவர்கள் இருவர் இருவராகக் கொத் வாலிக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். கொத்வாலியில் அவர்கள் இரவு முழுவதும் உட்கார்ந்துகொண்டேனும் வெளி யிடத்திற் படுத்துக்கொண்டேனும் காலங்கழிக்க வேண்டியவர் களானார்கள். கூர்க்கக் காவலாளர் சிலர் அவர்களிடம் விட்டு வைக்கப்பட்டிருந்தனர். மறுநாட்காலை 8-30 மணிக்கு அவர் களெல்லோரும் ராம்பாக் தோட்டத்திற்குக் கொண்டுபோகப் பெற்றனர். இராணுவ ஹவல்தார் அவர்களுக்கு ஸலாம் செய் யக் கற்பிக்குமளவும் அவர்கள் அங்கே வெய்யிலில் நிற்கவைக்கப் பெற்றிருந்தார்கள். பிறகு அவர்கள் விடப்பெற்றார்கள். கௌரவ மாஜிஸ்டிரேட் மியான் பிரோஜ்தீன் கூறுவதாவது: "ஜென ரலையும் மிஸ்டர் ப்ளோமரையும் ஸலாம் செய்யும்பொழுது எழுந்து நில்லாததற்காக ஜனங்கள் சவுக்காலடிக்கப் படுவது வழக்கம். ஸலாம் செய்யாதவர்கள் சில சமயங்களில் கைது செய்

யப்பட்டார்கள். இங்ஙனம் சிலர் சவுக்காலடிக்கப் பட்டதையும் கைது செய்யப்பட்டதையும் நான் நேரிற் கண்டேன். ஜனங்கள் மிக்க பயங் கொண்டிருந்தபடியால், ஸலாம் செய்யும் விஷயத்தில் தவறிழையாதிருக்கும் பொருட்டும் தண்டனையினின்றும் தப்பித்துக்கொள்ளும் பொருட்டும் பலர் ஏறக்குறைய நாள் முழுதும் நின்றுகொண்டிருக்க வேண்டியவராயினர். ஏறக்குறைய என்று நான் சொல்வதன் காரணம் யாதெனில், மோட்டார்கார் சப்தம் கேட்கும்போதெல்லாம் அவர்கள் எழுந்து நிற்க வேண்டியவர்களானார்கள். நானே அங்ஙனஞ் செய்திருக்கிறேன்.

பகிரங்கமாக அடிக்கப்பட்ட வளவில், சவுக்காலடிக்கப் பட்டது இழிவு படுத்துவதாக மாத்திரமன்றிச் சித்திர வதை செய்யுந் தன்மையதாகவு மிருந்தது. உத்தியோக முறையிற் கொடுக்கப்பட்டுள்ள சாட்சியத்தை நீக்கிப் பார்ப்பின், சவுக்காலடித்தல் ஏன் கைக்கொள்ளப் பட்டதென்பதை அறிந்து கொள்ளுதல் கஷ்டமாயிருக்கிறது. கோட்டை ஒழுங்கு என்று சொல்லப்படுவதற்கு மாறாகச் சென்றதனாலேயே சவுக்கடி கொடுக்கப் பெற்றதென உத்தியோகஸ்தர் சார்பான சாட்சியம் கூறுகின்றது. மிஸ் ஷெர்வுட்டைத் தாக்கியதாகச் சந்தேகிக்கப்பட்டவர்களை ஊர்ந்து செல்லும் சந்தில் சவுக்காலடிக்க எண்ணியிருந்ததாக ஜெனரல் டையரே ஒத்துக்கொண்டிருக்கிறார். இங்ஙனமே ஆறு சிறுவர்கள் அடிக்கப்பெற்றார்கள். ஒவ்வொருவரும் டிக்டியில் (முக்கோணம்) கட்டி முப்பது அடி கொடுக்கப்பெற்றனர். அவர்களுள் ஒருவனான சுந்தர சிங்க், நான்காவது அடிக்குப் பிறகு மூர்ச்சித்துப் போய்விட்டான். ஆனால் சிப்பா யொருவன் அவன் வாயிற் சிறிது தண்ணீர் ஊற்றியதும் அவன் மீண்டும் தெளிவுற்றான். சவுக்கடி திரும்பவும் தொடங்கப் பெற்றது. அவன் இரண்டா முறை மூர்ச்சித்துப் போனான். ஆனால் முப்பது அடி முடிவு பெறும் வரையில் அடித்தல் நிறுத்தப் பெறவில்லை.

இரத்தம் பெருகிக்கொண்டும் மயக்கத்தோடும் அவன் அடிக்கு மிடத்தினின்றும் எடுத்துச் செல்லப்பட்டான். மற்றச் சிறுவர்களும் இங்ஙனமே நடத்தப் பெற்றார்கள். அவர்களுள் பெரும்பாலோர் சவுக்கடி படும்போது மூர்ச்சித்துப் போயினர். எல்லோரும் கை விலங்கிடப் பெற்றனர். சிறிது தூரமும் நடக்கக் கூடாதவர்களா யிருந்தபடியால் அவர்கள் போலீசாரால் இழுத்துக்கொண்டு போகப்பட்டார்கள். பிறகு அவர்கள் கோட்டைக்குக் கொண்டுபோகப்பட்டார்கள்.

ஜெனரல் டையர் நியாயவாதி கான்ஸ்டபுல்கள் பயனுள்ள வேலை செய்தார்களெனத் தம் சாட்சியத்தில் கூறியிருக்கிறார். நியாயவாதிகள் தாங்கள் கான்ஸ்டபுல்களாக விருந்து வேலை செய்ததை விரும்பினார்களென மிஸ்டர் கிச்சின் தெரிவித்திருக்கிறார். தங்கள் உத்தியோ கத்தைப்பற்றியும் தாங்கள் செய்ய வேண்டியிருந்த வேலையின் தன்மையைப் பற்றியும் நியாயவாதிகளே என்ன சொல்லி யிருக்கிறார்களென்பதைச் சிறிது கவனிப்போம். லாலா கான்ஹிய லாலைப் பற்றி முன்னரே கூறியுள்ளோம். அமிர்த சரஸிலுள்ள நியாயவாதிகளுள் அவரே மிகவும் வயது சென்றவர். அவரும் இக்கௌரவத்தினின்றும் தப்பித்துக் கொண்டாரில்லை. அவர் கூறுவதாவது : “இந்நகரிலுள்ள மற்ற நியாயவாதிகளுடன் நானும் ஸ்பெஷல் கான்ஸ்டபுலாக வேலை செய்யுமாறு கட்டாயப் படுத்தப்பட்டேன். நகரத்தில் சமாதானத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டும் பொருட்டு இத்தகைய உத்தியோகம் கொடுக்கப்பெற யாதொரு காரணமுமின்றியே இவ்வுத்தியோகம் ஏப்ரல் மாதம் 22-ந் தேதி கொடுக்கப்பெற்றது. இவ்வேலையைச் செய்யப் போலீஸ் உத்தியோகஸ்தர்களே போதுமானவளவு இருந்தார்கள். உண்மையை உரைக்குமிடத்து, அத்தினங்களில் நகரம் அமைதியுடனிருந்தது. என் கிழவயதில் ஓரிடத்திலிருந்து மற்றோ

ரிடத்திற்கு நாற்காலி மேஜை முதலியவைகளைத் தூக்கிக் கொண்டுபோகவும், உஷ்ணம் மிகுந்த வெய்யிலில் நகர்காவல் செய்யவும் நான் ஒரு கூலிக்காரனைப்போல் வேலை வாங்கப்பெற்றேன். எங்கள் பாற் சொரியப்பெற்ற வசைமொழிகளும் நாங்கள் அனுபவிக்க வேண்டியிருந்த சிறுமைகளும் எங்கள் வருத்தத்தைப் பன்மடங்கு பெருக்கின. சமாதானத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டும் பொருட்டு எங்களுக்கு இவ்வுத்தியோகம் கொடுக்கப்பட அவசியமேற்பட்டதென நான் நம்பவில்லை. இவ்வுத்தரவு எங்களைத் தண்டிக்கும்பொருட்டே பிறப்பிக்கப்பட்டது. இந்நகரிலுள்ள நியாயவாதிகள் பொது விஷயங்களில் தலையிட்டு வருகிறார்கள். ரௌலட் சட்டக் கிளர்ச்சியில் முதன்மையாக நின்றார்கள். இக்காரணத்தினாலேயே நியாயவாதிகளெல்லோரும் இங்ஙனம் தண்டிக்கப்பெற்றனர்."

ஹைகோர்ட் வக்கீலும் முனிசிபல் கமிஷனருமான லாலா பால முகுந்த பாடியா ஸ்பெஷல் கான்ஸ்டபுல் உத்தியோகம் வழங்கப்பெற்ற வைபத்தைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்: "நாங்கள் தரையின்மேல் உட்கார வைக்கப்பெற்றோம். அப்பொழுது நகரவாசிகளிருவர் கம்பத்திற் கட்டி யடிக்கப்பெற்றதைக் காணுமாறு நாங்கள் கூப்பிடப் பெற்றோம். இக்காட்சியைக் காணுமாறு எங்களுக்குப் பிரத்தியேகமாகக் கட்டளையிடப்பெற்றது. மாலையில் நியாயவாதிகளெல்லோரும் வரிசையாய் நிற்குமாறு கட்டளையிடப்பெற்றனர்." அவர்கள் லெப்டினண்ட் நியூமன் பொறுப்பில் விடப்பட்டார்கள். அவர்களுள் ஒருவரை உதைப்பதாக லெப்டினண்ட் பயமுறுத்தினார். அவர்கள் பிரதி தினமும் மும்முறை அதிகாரியைக் கண்டு திரும்பி, பகற்பொழுதின் மற்ற நேரங்களில் நகர் காவல் செய்யவேண்டியவர்களாயிருந்தார்கள். "அதாவது நாங்கள் நாள் முழுவதும் தோட்டத்திலேனும் நகரத்திலேனும் ஆஜராயிருத்தல்வேண்டும். நாங்கள்

சாதாரண சேவர்களேயென்றும், எங்கள் கடமையைச் செய்யத் தவறின், அதற்காகச் சவுக்கா லடிக்கப்படுவதும் சிறைச்சாலையி லடைக்கப்படுவதும் மாத்திரம் தண்டனையா யிராமல் மரண தண்டனையும் விதிக்கப்பெறுவோ மென்றும் அடிக்கடி ஞாபக மூட்டப்பெற்றோம். சிப்பந்திகளும் சேவகர்களும் வேலைசெய்யப் போதியவளவு இருந்தும், நாங்கள் எங்களை மதிக்கும் பலர் முன்னிலையில் நாற்காலிகளையும் மேஜைகளையும் கூலிக்காரர்போல் எடுத்துச் செல்லுமாறு கட்டளையிடப் பெற்றோம்." என்று மிஸ்டர் பாடியா கூறுகிறார். அவர்கள் முக்கியமாக ஸலாம் செய்யக் கற்பிக்கப்பட்டார்கள். அவர்கள் மே மாதம் 12-ந் தேதி விடுவிக்கப்பெற்றார்கள். நியாய வாதிகளைத் தண்டிக்கும் நோக்கத்துடனேயே இக்கட்டளை பிறப்பிக்கப் பட்டதென்பதில் இவரும் லாலா கான்ஹிய லாலோடு ஒத்த அபிப்பிராய முள்ளவரா யிருக்கிறார்.

பண்டித ராஜேந்திர மிஸ்ராவும் பிற நியாய வாதிகளும் மேற்கூறிய உரைகளை ஆதரித்துக்கூறி, தாங்கள் அதிகாரிகளுக்கு உதவிபுரிந்திருந்தும் இழிவு படுத்தப்பட்டதாகவும் துன்புறுத்தப்பட்டதாகவும் தெரிவிக்கிறார்கள்.

மொத்தத்தில் 93 நியாய வாதிகள் இங்ஙனம் இழிவு படுத்தப்பட்டார்கள். அவர்கள் அதுகாலை தங்கள் ஜீவனோபாய முறையைக் கைக்கொள்ள முடியாமலிருந்தமை பற்றி அவர்களுக்குண்டான பண நஷ்டத்தை ஈண்டுக் குறிப்பிடவேண்டுவதில்லை.

இராணுவச் சட்ட காலத்தில் செய்யப்பெற்ற மொத்தமான அரெஸ்ட்களும், அடைக்கப்பெற்றுள்ளபொழுது நடத்தப்பெற்ற விதமும் எல்லாத் தண்டனைகளிலும் மிகக் கொடியதாக விளங்கியது. அரெஸ்ட் செய்யப்பட்டு வந்த காலையில் நகரவாசி ஒருவரும் தாம் பத்திரமா யிருப்பதாக எண்ணி யிருக்கவில்லை.

லாலா கிர்தாரிலால் சொல்வதாவது: "எனக்கு ஞாபக முள்ள வரையில், போலீசார் ஏப்ரல் மாதம் 12-ந் தேதியிலிருந்து ஜனங்களைக் கைதுசெய்யத் தொடங்கினர். அதன்பிறகு இந்த வேலை நிறுத்தப்பெறவில்லை. பலவிதமான வேலைகளிலுள் ளோரும் சமாதானமுறையில் தங்கள் வேலையைச் செய்துகொண் டிருந்தபொழுது நாளடைவில் கைதுசெய்யப்பெற்று வந்தார்கள். குற்றம் இன்னதென்பது அறிவிக்கப்படவில்லை." பிறகு அவர்கள் கை விலங்குடன் தங்கள் குற்றம் இன்னதென்று அறிவிக்கப்படாமல் நாட் கணக்காகவும் மாதக் கணக்காகவும் லாக் அப் அறையில் அடைக்கப்பட்டிருந்தார்கள். நண்பர்களையும் உறவினரையும் பார்க்கவோ, அவர்கள் ஆலோசனையைக் கேட் கவோ, அடைக்கப் பெற்றவர்கள் அநுமதி யளிக்கப்பட்டார்க ளில்லை. மிஸ்டர் பத்ருல் இஸ்லாம் அலிகான் கைது செய்யப் பட்டபொழுது, அந்நகரில் காங்கரஸ் இயக்கத்திற் சம்பந்தப்பட் டுள்ளவர்களெல்லோரும் அங்ஙனமே கைது செய்யப் பெறுவ ரெனப் பொது ஜனங்கள் எண்ணலானார்கள். லாலா கிர்தாரி லால் ஏப்ரல் மாதம் 7-ந் தேதி அமிர்தசரஸை விட்டுச் சென்று, கான்பூரில் மிக்கவியாதி யுற்றிருந்த தம் உறவின ரொருவரை விட்டு 11-ந்தேதி திரும்பி வந்தனர். எனவே அவர் கான் பூருக் குத் திரும்பிச் செல்ல விரும்பினார். மிக்க கஷ்டப்பட்டு அவர் அமிர்த சரஸை விட்டுச் செல்ல ஓர் அநுமதிச் சீட்டைப்பெற்றார். அவர் ஏப்ரல் மாதம் 21-ந் தேதி கல்கத்தா மெயிலில் சென்றார். பீயாஸ் ஆற்றின் வாராவதியில் வண்டித் தொடர் நிறுத்தப் பெற்று, இந்தியப் பிரயாணிகளின் சாமான்களெல்லாம் நன்கு பரிசோதிக்கப்பட்டன. தாம் அமிர்த சரஸ் அதிகாரிகளால் வேண்டப்படுவதாக அவர் சிறிது நேரத்திற்கெல்லாம் கேள்வி யுற்றனர். அவர் கான்பூர் போலீஸ் சூபரின்டெண்டெண்டைப் போய்ப் பார்த்தார். அவ்வதிகாரி அவரை மரியாதையுடன்

நடத்தி, காவலாளருடன் அமிர்த சரஸிற்கு அனுப்புவித்தார். தம்மோடிருந்த போலீஸ் சப் இன்ஸ்பெக்டரின் அநுமதி பெற்று அவர் கையில் ஒரு சமாசாரப் பத்திரிகையை வைத்திருந்தார். இஃது அமிர்த சரஸ் சூபரின்டெண்டெண்டுக்குப் பிரமாத மாகத் தோன்றிவிட்டது. தம் பொறுப்பிலிருந்தவரின் சுதந் தரத்தை அங்ஙனம் கட்டுப்படுத்துமாறு தம் மேலதிகாரி கட் டளை யிடாதபடியால் சமாசாரப் பத்திரிகை வாங்கிக் கொள்ளு மாறு தாம் அவருக்கு அநுமதி யளித்ததாக சப் இன்ஸ்பெக்டர் சூபரின்டெண்டெண்டினிடம் அமைதியுடன் தெரிவித்தனர். உடனே லாலா கிர்தாரி லாலின் கைகளில் விலங்கு பூட்டப்பெற் றது. தாம் ஏன் கைது செய்யப்பட்டாரென அவர் கேட்ட தற்கு யாதொரு மறுமொழியும் கூறப்படவில்லை. 22-4-19 பகல் 11 மணியிலிருந்து மறு நாட்காலை 8 மணி வரையிலும் தின்பதற்கு அவருக்கொன்றும் கிடைக்கவில்லை. பத்துப் பதி னொரு பேர் அடைக்கப் பெற்றிருந்த ஒரு சிறு அறையில் அவர் அடைக்கப் பெற்றனர். அறையின் ஒரு மூலையில் துர் நாற்றம் வீசும் பாண்டமொன்று வைக்கப்பட்டிருந்தது. காலைக் கடன் களை முடித்துக் கொள்ளுமாறு அவர்கள் மறு நாட் காலை சிறிது நேரம் வெளியே விடப்பெற்று, மறுபடியும் அடைக்கப் பெற்ற னர். குளிக்கவேனும் உடை மாற்றிக் கொள்ளவேனும் அவர் கள் விடப்பெற்றார்களில்லை. தயாள குணமுள்ள சேவகனொரு வன் அருகிலிருப்பின், அவர்கள் கஷ்டப்பட்டுத் தண்ணீர் பெறக் கூடியவர்களாயிருந்தார்கள். மே மாதம், வருஷத்தின் உஷ்ண மான மாதங்களில் மிகத் தீவிரமான மாதமாகும். அப்பொழுது நெருக்கமானதும் கூட்டம் மிகுதியாக வுள்ளதுமான அறையில் அடைக்கப் பெறுவதால் எவ்வளவு அசௌகரிய மேற்படுமென் பது சொல்லாமலே விளங்கும். தக்க காலத்தில் அவர் சில உத் தியோகஸ்தர்கள் முன்னிலையில் கொண்டுபோகப்பட்டார். உத்தி

யோகஸ்தர்களுள் ஒருவர் அவரைப் பற்றி இழி மொழிகள் சில வழங்கினர். மே மாதம் 24-ந் தேதி அவர் லாக் அப் அறையி லிருந்து கொண்டுபோய் ஸப்ஸிடியரி ஜெயிலில் அடைக்கப் பெற்றார். அவருக்குக் கொடுக்கப்பெற்ற உணவு "மனிதர் களால் உண்ணப்படும் தன்மையதன்று." மே மாதம் 27-ந் தேதி அவரும் அவர் சகாக்களும் இருவர் இருவராகக் கை விலங்கிடப் பெற்று லாகூருக்குக் கொண்டுபோகப்பட்டார்கள். ஒருவரும் அவர்களருகில் வரவிடப்படவில்லை. அவர்களோடு பேசத் துணிவு கொண்டவர்கள் உடனே கைது செய்யப்பட்டார்கள். அவர்கள் லாகூர் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து நியாயஸ்தலத் திற்கு இரண்டு மைல் தூரம் நடந்து செல்ல வேண்டியவர்களா யிருந்தார்கள். வழியில் தண்ணீர் குடிக்கக் கூடாதெனப் போலீஸ் இன்ஸ்பெக்டர் அவர்களைத் தடுத்தனர். நியாயஸ் தலத்தை யடைந்ததும், அவர்கள் அதற்கு வெளிப்புறத்தில் நாள் முழுதும் காத்திருக்கவேண்டியிருந்தது. பிறகு அவர்கள் செண்டி ரல் ஜெயிலுக்குக் கொண்டுபோகப்பட்டு, ஒவ்வொருவரும் 7 அடி நீளமும் 2 அடி அகலமும் 4 அடி உயரமுமுள்ள இருப்புக்கூண்டு களில் அடைக்கப் பெற்றனர். குளிக்கும்வசதி மிகவும் ஆபாசமா னதாக விருந்தது. எல்லாவிதமான வேலைகளுக்கும் உபயோகிக் கப் பெறும் ஒரு சிறு கழிவு நீர்க் கால்வாய் அவர்களுக்குக் காட் டப்பட்டது. 27-ந் தேதி, தங்கள் உறவினரால் பணங் கட்டப் பெற்ற ஒரு சிலரே சிறிது சௌகரியமான அறைகளுக்கு மாற் றப்பட்டுச் சிறிது மேலான ஆகார-மளிக்கப்பெற்றனர். அங்கே தான் உடைகளை மாற்றிக்கொள்ள அநுமதி யளிக்கப்பட்டது. மே மாதம் 28-ந்தேதி அவர்கள் பார்ஸ்டல் சிறைச்சாலைக்கு மாற் றப்பட்டார்கள். ஜூன் மாதம் 3-ந் தேதி அமிர்தசரஸ் கைதி களிற் சிலர் விசாரணைக்கு அனுப்பப்பெற்றனர். மற்றுஞ்சிலர், தங்கள் குற்றம் இன்னதென அறிவிக்கப்படாமலே, தங்கள்

சாட்சிகளைத் தெரிவிக்குமாறு அறிவிக்கப்பெற்றனர். லாலா கிர்தாரி லால் விசாரணை செய்யப்படாமலும், தாம் ஏன் கைது செய்யப்பட்டன ரென்பதை அறிந்து கொள்ளாமலும் ஜூன் மாதம் 6 ந் தேதி விடுவிக்கப்பெற்றனர். அமிர்தசரஸ் தலைவர்களுள் ஒருவரும் அதிகாரிகளுக்கு நன்கு தெரிந்திருந்தவருமான ஒருவர் இங்ஙனம் இரண்டு வாரங்களுக்குமேல் கைது செய்து சிறையி லடைக்கப்பெற்று, கொடிய குற்றவாளியினும் கேவலமாக நடத்தப்பெற்றனர். விசாரணையிலுள்ள ஒவ்வொரு கைதியும் தன் உறவினரைப் பார்க்கவும், நிச்சயமாய்த் தன் நியாயவாதிகளின் ஆலோசனை பெறவும், தனக் கிஷ்டமான உணவைப் பெறவும் உரிமை பெற்றிருக்கின்றான். 21 வருட அனுபவமுள்ள கௌரவ மாஜிஸ்டிரேட்டும் அமிர்தசரஸிலுள்ள ஒரு ராய் ஸாஹிபான மியான் பிரோஜ்தீன், அமிர்தசரஸிலுள்ள மதிப்புள்ள கனவான்கள் துன்புறுத்தப்பெற்றும் இழிவு படுத்தப்பட்டும் வந்தபொழுது, கொடியவர்களெனப் பேர் பெற்றவர்கள் தொடப்பெறவுமில்லை யெனச் சொல்லுகிறார்.

ஏப்ரல் மாதம் 10-ந் தேதி தம்முயிரையும் மதியாமல் வாராவதியினருகிலிருந்த கூட்டத்தைக் கலைக்க முயன்ற ஹைகோர்ட் வக்கீல் மிஸ்டர் மக்புல் மாமூத் பிறகு ஒரு போலீஸ் சப் இன்ஸ்பெக்டரால் கைது செய்யப்பெற்றனர். போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோகப்பட்டதும், "ராபின்ஸனையும் ரௌலண்டையும் கொலை செய்தவர்களை நான் அடையாளங் கண்டு பிடித்துக் காட்டுதல் கூடும். அங்ஙனமே காட்டுகிறேன்" என்று சொல்லுமாறு வற்புறுத்தப்பெற்றனர். பின்னும் அவர் சொல்வதாவது: "நான் முன்னரே அவர்களுக்கு எழுத்து மூலமாக ஒரு வாக்குமூல மனுப்பியிருந்தேனென்றும், ஒருவரையும் அடையாளங் கண்டுபிடிக்க என்னால் முடியாதென்றும் போலீசாருக்குத் தெரிவித்தேன். பிறகு இவ்வாக்குமூலத்தை என்

னிடங் கொண்டுவந்து, அதனைக் கிழித்தெறிந்துவிட்டுத் தாங்கள் குற்றவாளிகளென்று கண்டுபிடித் துள்ளவர்கள் பெயர்களை எழுதி வேறொரு வாக்குமூலம் கொடுக்குமாறு போலீசார் என்னைக் கேட்டுக்கொண்டனர். நான் அவர்கள் வேண்டுகோளுக் கிணங்க மறுக்கவும், அவர்கள் சில வழிகளில் என்னைப் பயமுறுத்தினார்கள். ஆயினும் பிறகு என்னை விட்டுவிட்டார்கள்.” பிறகு அவர் டிபன்ஸ் தரப்புச் சாட்சியாகத் தெரிவிக்கப்பட்டனர். டிபன்ஸ் தரப்பில் சாட்சி சொல்லப் பலர் மறுத்துவிட்டனரென்றும் அவரும் அங்ஙனமே செய்ய வேண்டுமென்றும் எஸ். ஸூக சிங்க் அவரிடந் தெரிவித்தனர். அவர் தமக்கொரு மனச்சாட்சி யுண்டென்று சொல்லவும், எஸ். ஸூக சிங்க், அக்காலத்தில் ஒருவருக்கும் மனச்சாட்சி யென்பதில்லை யென்றும், அன்றி அதனை உடையவர்கள் துன்புற்று வந்தார்க ளென்றும் பதிலளித்தனர். அவருடைய வக்கீல் ஸன்னத் பிடுங்கப்பெற்று அவர் துன்பத்திற் குள்ளாக்கப்படுமாறு தாம் நடவடிக்கை எடுத்துக்கொள்வதாக எஸ். ஸூக சிங்க் அவருக்குத் தெரிவித்தனர்.

ஸீனியர் அஸிஸ்டெண்ட் ஸர்ஜனும், 62 வயதுடையவருமான டாக்டர் கிதார் நாத பந்தரி, ஏப்ரல் மாதம் 10-ந் தேதி மிஸஸ் ஈஸ்டனைத் தாக்கச் சென்ற கூட்டத்தவருள் ஒருவர் பெயரைத் தெரிவிக்குமாறு ஏப்ரல் மாதம் 20-ந் தேதி ஸர்தார் ஸூக சிங்கால் கேட்டுக் கொள்ளப்பட்டனர். தாம் அங்ஙனந் தெரிவித்தல் முடியாதென டாக்டர் கிதார்நாதர் சொல்லவும், ஸர்தார் ஸூக சிங்க், மிஸ்டர் ப்ளோமர், மிஸ்டர் மார்ஷல் ஆகிய மூவரும் பின்வருமாறு கூச்சலிட்டுப் பேசினர்: “ஓ, நீவிர் அரசாங்கத்தாருக்கு உதவவில்லை. நீவிரும் கைதுசெய்யப் படுவீர்!” இதற்கு டாக்டர், “நான் பார்த்திராத ஒருவர் பெயரையும் தெரிவித்தல் முடியாது. நீங்கள் விரும்புவதைச் செய்யலாம்” என்று பதிலளித்தனர். அதன்மேல் தாம் அவரைக் கைதுசெய்ய உத்தரவு

பெற்றிருப்பதாகவும், அவர் கைதுசெய்யப் பெற்றதாகவே கருத வேண்டுமென்றும் ஸர்தார் ஸுகசிங் டாக்டரிடந்தெரிவித்தனர். உத்தரவு டாக்டருக்குக் காட்டப்படாமலே அவர் தம் உதவி உத்தியோகஸ்தருடன் லாக் அப் அறைக்கு அனுப்பப் பெற்றனர். அவ்விருவரும் ஏப்ரல் மாதம் 27-ந் தேதி வரையில் லாக் அப் அறையில் வைக்கப்பெற்று, அன்று ஸப்ஸிடியரி ஜெயிலுக்குக் கொண்டுபோகப் பெற்றனர். அவர்கள் சுமார் ஒரு மைல் தூரம் நடந்து செல்ல வேண்டியிருந்தது. டாக்டர் இருதய பாதையால் வருந்திக்கொண்டிருந்தபடியால் ஒரு வண்டி கொண்டு வருமாறு கேட்டுக் கொண்டனர். தாம் மற்றவர்களுடன் கை விலங்கிடப் பெற்றுக் கடைத்தெருவின் வழியாக அழைத்துச் செல்லப்படின் தம் மன நிலை கெட்டுவிடுமென்றும் அவர் தெரிவித்தனர். ஆயினும் அவர் மற்ற 62 கைதிகளுடன் சிறைச்சாலைக்கு நடத்தி யழைத்துச் செல்லப்பட்டனர். அவர் பின் வருமாறு கூறுகிறார் :—"மிகவும் உஷ்ணமா யிருந்தபடியால். நான் சிறைச்சாலையையடைந்ததும் களைத்து விழுந்துவிட்டேன். போலீஸ் சேவகனொருவன் அன்புடன் சிறிது தண்ணீர் கொடுத்ததன் பயனாக விரைவில் களை தீர்ந்தேன்." அவர் ஓர் அறையிலடைக்கப்பெற்றுச் சாப்பிட முடியாத ரொட்டி கொடுக்கப்பெற்றார். அவருக்கு உணவு கொடுக்க அநுமதியளிக்க வேண்டுமென அவர் நண்பரொருவர் வெளியிலிருந்து கேட்டுக் கொண்டதற்கு அதிகாரிகள் இணங்கினார்களில்லை. உடைகளை மாற்றிக் கொள்ளும் பொருட்டுத் தெரிவிக்கப் பெற்ற வேண்டுகோளும் இங்ஙனமே மறுக்கப்பெற்றது. அவர் உடைகள் "துர் நாற்றம் வீசிக்கொண்டும் பேன்கள் நிறையப் பெற்றும்" இருந்தன. மே மாதம் 2-ந் தேதி டெபுடி கமிஷனர் சிறைச்சாலைக்குச் சென்றனர். தாம் எதற்காக அடைக்கப் பெற்றிருந்தனரென டாக்டர் அவரைக் கேட்டனர். "மிஸஸ் ஈஸ்டன் கூட்டத்

தால் தாக்கப் பெற்றபொழுது டாக்டர் அம்மாதின் உயிரைக் காப்பாற்ற முயலாமையைத் தவிர அவர் மேல் பிறிதொரு குற்றமுமில்லை." என்று மறுமொழி கிடைத்தது. கூட்டம் அம்மாதினிடம் எப்பொழுது சென்றதென்பது தமக்குத் தெரியாதாகலின், தாம் அவரைக் காப்பாற்றுதல் கூடாமலிருந்ததென டாக்டர் சமாதானங் கூறியும் பயன் பெறவில்லை. தங்கள் மேல் சாட்டப் பெற்ற நிலையான குற்றம் யாதென்பதை உணர்ந்து கொள்ளாமலே டாக்டரும் அவருடைய உதவி உத்தியோகஸ்தரும் மே மாதம் 12-ந் தேதி விடுவிக்கப் பெற்றனர். டாக்டர் எப்ரல் 20-ந் தேதி முதல் 27-ந்தி தேதி வரை போலீஸ் லாக் அப் அறையிலிருந்து வந்தபொழுது யாரோ ஒருவர் அவரிடஞ் சென்று, "யாதொரு குற்றமுமின்றி நீவிர் இப்பொழுது கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறீர். கூட்டத்திலிருந்த சிலரின் பெயர்களைத் தெரிவித்து விடின், இப்பொழுதே விடுவிக்கப் பெறுவீர்" என்று சொன்னார்.

மிஸ்டர் மகமத் அமீன் என்பவர் ஒரு வக்கீல். அவர், மிஸஸ் ஈஸ்டனைத் தாக்கிய வழக்கில் சம்பந்தப் படுத்தப்பெற்று மரண தண்டனை யடைந்து பிறகு அத்தண்டனை ஐந்து வருடக் கடுங் காவலாக மாற்றப்பெற்ற மகமத் அக்ரம் என்பவரின் தகப்பனார். அவர் தாம் மிஸஸ் ஈஸ்டனிடம் நெருங்கிய நட்புக்கொண்டிருந்தவரென்றும், அம்மாதை அன்னையென மதித்துவந்த தம் புதல்வர் குற்றமற்றவரென்றும் தம் வாக்குமூலத்திற் கூறியிருக்கிறார். எப்ரல் மாதம் 20-ந் தேதி அவர் தம் மகனோடும் சகோதரனோடும் கைதுசெய்யப்பட்டு, போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோகப் பெற்றனர். அவர் சொல்வதாவது: "ஹவலத் இருக்குமிடத்திற்கு என்னை ஒரு சேவகன் அழைத்துச் சென்றான். அறை மிகச் சிறியதெனினும், அதில் துரதிர்ஷ்டமுள்ள முப்பதுபேர் இருந்தனர். அவர்கள் தண்ணீர் வேண்டுமெனக்

கேட்குமாறு இருப்புக் கம்பிகளுக்கு வெளியில் கைகளை நீட்டிக் கொண்டு நின்ற காட்சி மிக்க பயங்கரமானதாக விருந்தது. அக் கொடிய காட்சியைக் கண்டவுடன் நான் மூர்ச்சிக்க விருந்தேன். நான் போலீஸ் உத்தியோகஸ்த னொருவனைப்பார்த்து, 'நான் உள்ளே செல்லத் தடை சொல்லவில்லை. ஆனால் நான் அங்கே கால் மணி நேரமும் உயிர் பிழைத்திருத்தல் முடியாதென்பதை உன்னிடந் தெரிவித்தல்வேண்டும்' என்று தெரிவித்தேன். அவன் இன்ஸ்பெக்டரிடஞ் சென்று சற்று நேரத்திற் கெல்லாந் திரும்பிவந்து என்னை இன்னோரறைக்கு அழைத்துச் சென்றான். அவ்வறையில் டாக்டர் பஷிர், பாரிஸ்டர் மிஸ்டர் பத்ருல் இஸ்லாம் அலி ஆகிய இருவரையுங் கண்டேன். இவ்வறையினின்றும் சிலரை அப்பாலகற்றி, புதிதாக வந்த எங்கள் அறுவரை அதிலடைத்தனர். அத்தகைய அழுக்குப் படிந்த இடத்தை என் வாழ்க்கைக் காலத்தில் நான் எப்பொழுதுங் கண்டதில்லை. எங்களுள் பலர் இரவெல்லாம் உட்கார்ந்திருந்தனர். அன்று மாலை மாத்திரம் எங்களுக்கு எங்கள் வீடுகளினின்றும் உணவு கொண்டுவர அநுமதி யளிக்கப் பெறவேண்டுமென நாங்கள் வேண்டிக்கொண்டும் பயன் பெறவில்லை. நாங்கள் போர்வைகள் கேட்டோம். இவ்வேண்டுகோளும் மறுக்கப்பெற்றது. சிறிது நேரத்திற்குப் பிறகு போலீஸ் காரனொருவன் காமாவிடம் வந்து, எங்களெதிரில், "ஏன் உங்களுயிரை ஆபத்திற்குள்ளாக்கிக் கொள்ளுகிறீர்கள்? உங்கள் விரோதிகளில் நாலைந்து பேரைத் தெரிவித்து விடுங்கள். நாங்கள் உங்களைச் சாட்சியாக எடுத்துக் கொள்ளுகிறோம்." என்று சொன்னான். காமா "தெரிவிக்குமாறு எனக்கு ஒரு விரோதியுமில்லை" என்று சொல்லிவிட்டார். போலீஸ் காரன் அவ்விடம் விட்டுச் சென்று மறுபடியும் வந்து காமாவிடம் பின்வருமாறு தெரிவித்தான்: "இங்கே பாருங்கள். வாயம் என்னும் பெயரைச் சொல்லி விடுங்கள். மற்றவர்களை

உங்களுக்கிஷ்டமானபடி தெரிவித்து விடுங்கள்.'' போலீசார் பொய்ச் சாட்சியந் தயாரித்துக் கொண்டிருந்த மாதிரியைக் கண்டு நடுநடுங்கி, நாங்களும் தப்பித்துக்கொள்ள முடியாதென்று எண்ணியிருந்தோம்.'' இச்சாட்சி தாங்கள் சிறைச்சாலையில் பட்ட பரிபவத்தைத் தெரிவித்திருக்கிறார். அவர்கள் சிறைச் சாலை அறைகளில் இருவர் இருவராகக் கை விலங்கிட்டு வைக்கப் பெற்றிருந்தார்கள். ஜலமலங் கழிக்குமிடங்களுக்கும் அவர்கள் அங்ஙனமே கொண்டுபோகப் பெற்றார்கள். அங்குள்ளபோதே னும் விலங்குகள் நீக்கப் பெறவேண்டுமென வேண்டிக்கொண்டும் பயன்படவில்லை. அவர்கள், (தேகாப்பியாசத்தின்பொருட்டோ?) கொடிய வெய்யிலில் சுற்றிச் சுற்றி நடக்குமாறு வற்புறுத்தப் பெற்றார்கள். அவர்கள் 36 மணி நேரம் யாதொரு உணவும் கொடுக்கப் பெறாமல் தரையின் மீது படுத்துக் கொள்ளுமாறு அறிவிக்கப்பட்டார்கள். அதன் பிறகு கை விலங்குகள் நீக்கப் பெற்றன. "நாங்கள் உண்ணுமாறு வழங்கப்பெற்ற உணவு ஒரு மூலையிலிருந்த சிறு கொள்ளுக் குவியலும் இன்னொரு மூலையி லிருந்த தொட்டித் தண்ணீருமேயாம். ஜலங்கழிப்பதற்காக அருகாமையில் ஒரு தகரத் தொட்டி வைக்கப்பெற்றிருந்தது. நாங்கள் அவ்வுணவை ஏற்றுக்கொள்ள முடியாமல் இன்னொரு நாள் பட்டினிகிடந்தோம்.'' என்று இச்சாட்சி கூறுகின்றனர். மறுநாள் அவர்களுடைய நிலைமை சிறிது சீர் பெற்றது. அவர் கள் தங்கள் சொந்த உணவைப் பெற்றுக் கொள்ளுமாறும் உடை களை மாற்றிக் கொள்ளுமாறும் அநுமதியளிக்கப் பெற்றார்கள். இங்ஙனம் அவர்கள் கோட்டையில் 22 நாட்களிருந்தார்கள். மே மாதம் 12-ந் தேதி அவர்கள் விசாரணை செய்யப் படுவதற் காக லாகூருக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். 52 பேர் ஒன்றாகப் பிணைக்கப் பெற்றிருந்தனர். லாகூரில் அவர்கள் உணவுந் தண்ணீருமின்றிப் பகல் முழுவதும் வெளியே உட்

காரவைக்கப் பெற்றிருந்தார்கள். அவர்கள் எரிக்கும் வெய்யிலில் லாகூர் ஸ்டேஷனிலிருந்து நியாயஸ்தலத்திற்கும், நியாயஸ்தலத்திலிருந்து சென்ட்ரல் ஜெயிலுக்கும் நடந்து செல்லவேண்டியிருந்தது. இச்சாட்சியங் கூறியுள்ளவரும் அவர் சகோதரரும் மே மாதம் 27-ந் தேதி விடுவிக்கப் பெற்றனர்.

ஸப் அஸிஸ்டெண்ட் ஸர்ஜன் மிஸஸ் நெல்லி பெஞ்சமின் என்னும் மாது மிஸஸ் ஈஸ்டனின் தோழி. அம்மாதே மிஸஸ் ஈஸ்டன் தாக்கப்பட்டபொழுது அவரை மறைத்தவர். அவர் கூறுவதாவது: "விசாரணை நடந்துகொண்டிருந்த பொழுது, நான் இரு முறை போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோகப் பெற்றேன். கூட்டத்தில் மகமத் அமீனைப் பார்த்ததாகச் சொல்லுமாறு என்னைக் கேட்டுக்கொண்டனர். அஃது உண்மையல்லவென நான் சொல்லியபடியால், என்னைச் சிறைச்சாலைக்கு அனுப்புவதாக மிஸ்டர் ப்ளோமர் பயமுறுத்தினர். எனக்குத் தெரிந்தவற்றை யெல்லாம் நான் அவர்களுக்குச் சொன்னேன்; ஆனால் பொய்ச்சாட்சியங் கொடுக்க மறுத்துவிட்டேன். மிஸஸ் ஈஸ்டன் கதையை ஆதரித்து, மகமத் அமீன் அங்கிருந்ததாகச் சொல்லின், அரசாங்கத்தாரிடமிருந்து நன்கொடை வாங்கிக் கொடுப்பதாகவும் அவர்கள் எனக்கு ஆசை காட்டினார்கள். மறுபடியும் நான் மறுத்துவிட்டேன்."

ஸேத் குல் மகமத் என்னும் கண்ணாடி வியாபாரி யொருவர் கடவுளைத் தொழுது கொண்டிருக்கையில் ஏப்ரல் மாதம் 20-ந் தேதி கைது செய்யப்பட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு செல்லப் பெற்றனர். பொய்ச்சாட்சியங் கூறுமாறு அவரைக் கேட்டுக்கொண்டனர். இன்ஸ்பெக்டர் ஜவஹர்லால் அவருடைய தாடியைப் பிடித்துக்கொண்டு வலுக்க அறைந்ததன் பயனாக அவர் சிறிதுநேரம் சித்தங் கலங்கியிருக்க நேர்ந்தது. பிறகு அவர் ஸேத் குல் மகமதைப் பின்வருமாறு கேட்டனர்: "டாக்டர்கள்

சத்ய பாலும் கிச்லுவும் 6-ந் தேதி கடையை மூடுமாறு என்னைத் தூண்டி ஆங்கிலேயரை நாட்டினின்றும் துரத்த வெடி குண்டுகளை எறிவதாகச் சொல்லித் தைரியமுண்டாக்கினர் என்று சொல்ல வேண்டும்." சாட்சி இங்ஙனஞ்சொல்ல மறுத்துவிட்டனர். அவ் வுத்தியோகஸ்தர் பிறகு தம் சேவகர்களை யழைத்து அவரை அப்பாலழைத்துச் சென்று 'சரிப்படுத்து'மாறு பணித்தனர். பிறகு சேவகர்கள் பலர் அவரை அதிகாரியின் மேஜைக்குச் சிறிது தூரத்திற் கப்பாலழைத்துச் சென்று, ஜவஹர்லால் சொல்வதைச் செய்து அவருக்குத் திருப்தி யளிக்குமாறு கேட்டுக்கொண்டனர். அப்பொழுதும் சாட்சி மறுத்துவிட்டனர். எனவே சேவகர்கள் அவர் கையைப்பிடித்துக் கட்டிற் காலின்கீழ் வைத்தார்கள். எட்டுச் சேவகர்கள் கட்டிலின்மேல் உட்கார்ந்து கொண்டார்கள். இவ்விஷயமாகச் சாட்சி கூறுவதாவது: "வலிபொறுக்க முடியாம லிருந்தபொழுது, நான் 'என் கையை விட்டு விடுங்கள். நீங்கள் செய்யச் சொல்வதையெல்லாஞ் செய் கிறேன்' என்று கூக்குரலிட்டேன்." மறுபடியும் அவர் ஜவஹர் லாவிடங் கொண்டு செல்லப்பெற்றனர். டாக்டர்களைக் குற்ற வாளிகளெனக்கூற குல் மகமத் மறுபடியும் மறுத்துவிட்டனர். ஆதலின் அவர் அன்று ஓரறையில் அடைத்து வைக்கப்பட் டிருந் தார். அதற்கடுத்த இரண்டு நாட்களிலும், அவரைக் கையி ஞலும் பிரம்பினுலும் அடித்து அறைந்தனர். அவர் குற்றவாளி யாக்கித் தூக்குப் போடப் பெறுவரென அதிகாரிகள் சொன்னூர் கள். எட்டு நாள் வரையில் அவர் அடிபட்டு வந்தனர். எட்டாம் நாள் அவர் அதிகாரிகள் விரும்புமாறு வாக்குமூலங் கொடுப்ப தாக மறுபடியுந் தெரிவித்தனர். பிறகு அவர் மாஜிஸ்டிரேட் ஆகா இப்ரஹீமிடம் கொண்டுபோகப் பெற்றூர். அவர் முன் சாட்சி அதிகாரிகள் தம்மைச் சொல்லுமாறு கேட்டுக்கொண்ட "பொய் வாக்குமூல"த்தைக் கொடுத்தனர். போலீஸ் ஸ்டேஷ

னில் அவருடனிருந்த அப்ரூவர் ஹன்ஸ்ராஜ் போலீசார் கேட்பதுபோல் செய்யுமாறு அவருக்குப் புத்திமதி கூறலாயினர். பத்து நாள் பாதுகாப்பில் வைக்கப்பெற்ற பிறகு, நாள்தோறும் போலீஸ் ஸ்டேஷனில் ஆஜராவதாக ஒப்புக்கொண்டதன்மேல், விடுதலை செய்யப்பெற்றனர். அவர் ஜூன் மாதம் 9-ந் தேதி வரையில் அங்ஙனமே சென்றுகொண் டிருந்தனர். அன்றைய தினம் அவர் லாகூருக்குக் கொண்டுபோகப் பெற்றனர். ஜூன் மாதம் 16-ந் தேதி அவர் இராணுவச் சட்ட விசாரணை ஸ்தலத்தில் கொண்டுபோய் நிறுத்தப் பெற்றனர். அவர் அங்கே எல்லாவற்றையும் உள்ளபடி தெரிவித்து, தாம் சித்திரவதை செய்யப்பட்டதாகவும் கூறிவிட்டார்.

14 வயதுள்ள ப்ரிஜ்லால் என்னும் சிறுவனொருவன் 9 நாள் காப்பில் வைக்கப் பெற்றான். இரண்டு நாட்களுக்குப் பிறகு அவன் ஹன்ஸ்ராஜின் பொறுப்பில் விடப்பெற்று இராணுவச் சட்ட நியாயஸ்தலத்தில் பொய்ச் சாட்சியங் கொடுக்குமாறு தூண்டப் பெற்றான். அவன் அச்சாட்சியத்தை இப்பொழுது மறுக்கின்றான்.

சாராய வியாபாரி ஸர்தார் ஆத்மசிங்க் ஏப்ரல் மாதம் 13-ந் தேதி ஜெனரல் டையர் முன்னிலையில் கைது செய்யப்பட்டனர். அவர் ஊர்வலமாகச் சென்றவருடன் நடந்து செல்லுமாறு வற்புறுத்தப் பெற்றார். அவர் கூறுவதாவது: "அவர்கள் என் கையில் ஒரு துணியைச் சுற்றிக் கட்டி அவர்களுடன் நகரத்தின் பல தெருக்களின் வழியாக இழுத்துச் சென்றார்கள்-" குடிக்கச் சிறிது தண்ணீர் எடுக்கச் சென்றபொழுது, பிரிட்டிஷ் போர்வீரரொருவர் அவரைத் தடுத்துவிட்டனர். அன்றைய தினம் இன்னுஞ் சிலரும் கைது செய்யப்பெற்றனர். அவர்களுள் ஒன்பது பேர் கை விலங்கிடப்பெற்று, உணவின்றி ஓர் அறையில் அடைக்கப்பட்டார்கள். 15-ந் தேதி அவர்கள் ஜெனரலுக்கு முன்

பாகக் கொண்டுபோகப் பெற்றனர். அவர்களை மரத்திற் கட்டி, திட்டிப் பரிகசித்தார்கள். ஜெனரல் தம் சிற்றுண்டியை முடித்துக் கொண்டபிறகு, அவர்கள் அவர் முன்னிலையில் கொண்டுவரப் பெற்றார்கள். பிறகு ஸர்தார் ஆத்ம சிங் எட்டுநாள் காற்காவல் தண்டனை (quarter guard) விதிக்கப்பெற்றனர். அவர்மேல் யாது குற்றமென்பது ஒருபொழுதும் சொல்லப்படவில்லை அவர் காப்பில் வைக்கப்பெற் றிருந்தபொழுது, சார்ஜண்ட் ஒரு வர் அவரிடமிருந்த பொன் மோதிரத்தையும் அவர் பெயர் பொறித்திருந்த வெஸ்ட்-எண்ட் ஹண்டிங் கைக்கெடியாரத்தை யும் கைப்பற்றிக் கொண்டனர்.

இறைச்சி வியாபாரி மகமத் இஸ்மேல் ஏப்ரல் மாதம் 18-ந் தேதி கைது செய்யப் பெற்றனர். அவர் தகப்பனாரும் கைது செய்யப்பட்டார். இருவரும் புடைக்கப் பெற்றனர். அவருடைய ஸகோதரர் தீனு கொண்டுவரப்பெற்ற பின்னரே இவ்விருவரும் விடுதலை செய்யப்பட்டனர். தீனு மூன்று நாள் காப்பில் வைக் கப்பெற்று இரக்கமின்றி அடிக்கப்பட்டதாகச் சொல்கின்றனர்.

காய்கறி விற்பவர் அப்துல் அஜிஜ் ஒரு கன்ஸமாவில் சத் தியஞ் செய்ததற்காகக் கைது செய்யப்பெற்றனர். அவர் தாம் அங்ஙனம் பிரமாணஞ் செய்ததாகக் கூறப்பட்டதை மறுத்தனர். அவர் ஜெனரலிடம் கொண்டுபோகப் பெற்று, இரண்டு நாள் லாக்-அப் அறையில் அடைக்கப்பெற்று, 10 அடி அடிக்கப் பெற்று, தம் கடையை 14 நாள் மூடிவைக்குமாறு கட்டளையிடப் பெற்றனர்.

லாலா ராலியராம் என்பவர் 58 வயதுள்ளவர்; உபகாரச் சம்பளம் (பென்ஷன்) பெறுபவர். போலீஸ் சப்-இன்ஸ்பெக் டர் ஒருவர் மிஸ் ஷெர்வுட் என்னும் மாதை அடித்தவர்களின் பெயர்களைத் தெரிவிக்குமாறு அவரைக் கேட்டனர். தாம் அச் சமயம் அங்கில்லாதபடியால் தமக்கொன்றுந் தெரியாதென அவர்

சொல்லிவிட்டனர். அதன் மேல் அவர் பிரம்பாலடிக்கப் பெற்ருர்; அவர் தாடியை அதிகாரி பிடித்திழுத்தனர். அன்று சந்தில் இப்படியும் அப்படியும் நடக்கச் செய்த பிறகு அவரை மாலையில் விட்டனர்.

லாலா தாதுமால் அடிக்கப் பெற்ருர்; ஊர்ந்து செல்லக் கட்டளையிடப் பெற்ருர். அவரும் அவர் மகனும் கைது செய்யப் பட்டனர். அவர் விடுதலை செய்யப்பெற்றுத் திரும்பவும் கைது செய்யப்பட்டார். அவர் போலீசாருக்காகக் கடைத்தெருவிலுள்ள காரியஸ்தனிடம் நூறு ரூபா கொடுத்த பிறகே மறுபடியும் விடுதலை செய்யப்பட்டனர். அவர் மறுபடியும் கைது செய்யப்பட்டு, தம் விடுதலைக்காக இன்னும் 50 ரூபா கொடுக்குமாறு கட்டாயப் படுத்தப்பட்டார். போலீசார் அவர் கடைக்குச் சென்று, தங்கள் உபயோகத்திற்காகப் பாலேடு முதலியவைகளைத் தாமாக எடுத்துச் செல்வது வழக்கம். அவர் மகன் 8 நாள் காப்பில் வைக்கப் பெற்று, அடிபடும்போது மயக்க முற்றிருந்தும், 30 அடி அடிக்கப்பெற்ருன். மற்றவர்கள் சவுக்காலடிக்கப்பட்டதையும் அவர் கண்டனர். "அவர்கள் நோயாற் கூச்சலிட்டு இரத்தம் ஓடப் பெற்றிருந்தார்கள்" என்று அவர் சொல்லுகிருர்.

தனிராம் கீழே உட்காரவைக்கப் பெற்றுக் கால்களுக்குள்ளாகக் கைகளை நுழைத்துச் செவிகளைப் பிடித்துக்கொண்டிருந்த கோலத்தை லாலா ராகாராம் கண்டனர். சப்-இன்ஸ்பெக்டர் அமீர்கான் ஏப்ரல் மாதத்தின் மூன்ருவது வாரத்தில் குலாம் க்வாதிர் டுப்கார் என்பவரைக் கைது செய்தார். கொள்ளையடிக்கப்பெற்ற பொருள்களைக் காட்டுமாறு அவர் கேட்டுக்கொள்ளப் பட்டார். தமக்கு ஒன்றுந் தெரியாதெனக் கூறியதன்மேல் அவர் நன்ருகப் புடைக்கப்பட்டார். சில பெயர்களைச் சொல்லி அவர்கள் பக்தன்வாலா ரெயில்வே ஸ்டேஷனைக் கொள்ளையடித்துக் கொளுத்திய கூட்டத்தவருள் சேர்ந்திருந்தவர்களெனத்

தெரிவிக்குமாறு அதிகாரிகள் அவரை வற்புறுத்தினார்கள். அவர்கள் அவருடைய தலைப்பாகையை யெடுத்து, கைகளைக் கட்டி, சுமார் 10 நிமிஷ நேரம் அவரை மரத்திற் கட்டித் தொங்கவிட்டார்கள். தம்மோடு இன்னும் 8 அல்லது 9 பேர் சித்திரவதை செய்யப்பெற்றதையும் அவர் கண்டார். அவர் கூறுவதாவது: "பீரா குஜர் தரைமீது சமமாகப் படுத்திருந்ததையும், நான் முகத்தைப்பார்த்து அடையாளங் கண்டுகொள்ளக் கூடிய ஹவல்தாரொருவர் சப்-இன்ஸ்பெக்டர் அமீர்கான் முன்னிலையில் ஒரு கழியை யெடுத்து பீராகுஜரின் ஆசனத் துவாரத்தில் நுழைத்ததையும் கண்டேன். அவர் அப்பொழுது பரிதபிக்கத் தக்கவாறு முறையிட்டா ரெனினும், போலீசார் இரக்கங்கொள்ளவில்லை. மூன்று இரவும் பகலும் எங்களுக்கு எத்தகைய உணவும் வழங்கப்படவில்லை. அப்பொழுது போலீசார் எங்களைச் சித்திரவதை செய்துகொண் டிருந்தனர். நான் 5 நாட்களுக்குப் பிறகு விடுதலை செய்யப் பெற்றேன்."

பரிகாரி மிராஜ்தீன் தானும் இங்ஙனம் வருந்தியதாக்கூறி, மேற்கண்ட வாக்குமூலத்தை ஆதரிக்கிறான். மஸ்ஜிதில் இமாமாயிருப்பவரும் பத்திர மெழுதுபவருமான குலாம் ஜிலானி துன்புறுத்தப்பெற்ற சம்பவமே நாங்களறிந்தவரையில் மிகக் கொடியதாகக் காணப்படுகின்றது. ராம நவமி விழாவை ஒழுங்குபடுத்தும் விஷயத்தில் அவர் முதன்மையாய் விளங்கினார். அவர் ஏப்ரல் மாதம் 16-ந் தேதி கைதுசெய்யப் பெற்றனர். அவர் வாக்குமூலம் விளக்கமான பல அரிய உரைகளைக் கொண்டதாயிருத்தலின், இமாம் அனுபவித்த சித்திரவதையின் அளவை உள்ளபடி உணர்ந்து கொள்ளுமாறு அது முழுவதையும் படித்தல் அவசியமாகும். தாம் நடத்தப்பட்ட மாதிரியைப்பற்றி இவர் கூறியிருப்பதை கௌரவ மாஜிஸ்டிரேட் மியான் பிரோஸ்தீனும், பாரிஸ்டர் மிஸ்டர் குலாம் யாஸீனும் ஆத

ரிக்கின்றனர். மகமத் ஷாபி குலாம் ஜிலானி அனுபவித்த சித்திரவதைகளிற் சிலவற்றை நேரிற் கண்டும், அவர் கூக்குரல் களைக் கேட்டு மிருக்கிறார். அன்றைய தினமே காதர்தீன் என் பவர் அங்ஙனமே நடத்தப் பெற்றனரென்றும், அப்பொழுது ஏற்பட்ட காயத்தினின்றும் அவர் பிறகு தப்பி யெழவில்லை யென்றும் மகமத் ஷாபி கூறுகின்றனர். நிலச்சுவான்தார் மீயான் க்வாமார் உத்தின்கான் மௌல்வி குலாம் ஜிலானி விடு தலை செய்யப்பெற்று வந்ததும் தாம் அவரைக் கண்டதாகக் கூறு கிறார். ஜிலானிக்கு ஏற்பட்டிருந்த காயங்களைத் தாம் பார்த்த தாகவும், இப்பொழுது அவர் எங்களிடம் சொல்லியுள்ள வரலாற் றையே அன்று அவர் தம்மிடங் கூறியதாகவும், உத்தின்கான் சொல்லுகிறார். அவரும் காயிர்தீனும் சித்திரவதை செய்யப் பட்டதைத் தாம் கண்டதாகவும், காயிர்தீன் தமக்கு ஏற்பட்ட காயங்களினாலேயே சில தினங்களுக்கு முன் இறந்துவிட்டதாக வும் குலாம் மகமத் தெரிவிக்கின்றனர். நிலச்சுவான் தாரும் ஜமீன்தாருமான ஹாஜி ஷமாஸுத்தீன் மௌல்வி குலாம் ஜிலா னியும் காலஞ் சென்ற காயிதீனும் சித்திரவதைக்குட்படுத்தப் பட்டதைத் தாம் கண்டதாக அறிவிக்கிறார். போலீசார் ஹாஜி யைக் கூப்பிட்டனர். அவர் சொல்வதாவது: "அவர்கள் அவ ருடைய ஆசனத் துவாரத்தில் ஒரு தடியை நுழைத்துவிட்டார் கள். மேலும் அவர் பரிதபிக்கத்தக்க நிலைமையிலிருந்தார். அவ ருடைய ஜலமலங்கள் வெளிப்பட்டுக் கொண்டிருந்ததைக் கண் ணுற்றேன். சாட்சியங் கொடாதவர்களெல்லோரும் அங்ஙனமே நடத்தப் பெறுவரெனப் போலீசார் வெளியிலிருந்த எங்களுக் குத் தெரிவித்தனர்." ஜிலானியும் காயிர்தீனும் அனுபவித்த சித்திரவதையைப் பற்றிய வாக்கு மூலத்தை 136,137-வது சாட்சிகள் ஆதரிக்கிறார்கள்.

பாஷ்மினு வியாபாரி மலிக் அப்துல் ஹறய் போலீஸ் சூப ரின்டெண்டெண்டிடமிருந்து ஒரு தந்தி கிடைக்கப் பெற்றதன் மேல் மே மாதம் 15-ந் தேதி லாகூரிலிருந்து அமிர்த சரஸிற் குச் சென்றனர். அங்கே அவர் இன்ஸ்பெக்டர் ஜவஹர்லாலிடம் விடப் பெற்றனர். அவர் டாக்டர் கிச்லுவுக்கு விரோதமாகப் பொய்ச் சாட்சியங் கூறினுல்; அப்துப் ஹறய்க்குச் சம்பளத்தை உயர்த்தி வெகுமதி யளிப்பதாக ஆசை காட்டினுர். அவர் அங்ஙனஞ் சொல்ல மறுத்ததும்,இன்ஸ்பெக்டர் அவரையும் குற்றவாளி களோடு சேர்த்து விடுவதாகப் பயமுறுத்தினுர். பயமுறுத்தலும் நயமும் பயன்படாமற் போன பிறகு அவர் ஓரறைக்கு அழைத் துச் செல்லப்பெற்று நன்கு புடைக்கப்பட்டார். பயத்தின் மிகுதி யால் அவர் வேண்டுவதைச் செய்ய ஒப்புக்கொண்டார். அவர் இராணுவ விசாரணை ஸ்தலத்திற்குக் கொண்டுபோகப்பட்ட பொழுது அவர் வாக்கு மூலம் எழுதிக் கொள்ளப்பெற்றது. அவர் கூறுவதாவது: “நான் உண்மையைச் சொல்லத் தீர் மானித்து விட்டேன். பொய்ச் சாட்சியங் கூறுமாறு போலீசார் என்னை எங்ஙனம் வருத்தினரென்பதை நீதிபதிகளிடங் கூறி னேன். என் சாட்சியம் முடிந்ததும் நான் வெளியில் வந்தேன். நாயிப் நியாயஸ்தலத்தார் என்னைக் கைது செய்து போலீஸ் அறைக்குக் கொண்டு செல்ல விருந்த தறுவாயில் நான் கூச்சலிட் டேன். அதன் மேல் இவ்வழக்குச் சம்பந்தமாக நியாய்ஸ்தலத் திற்கு வந்திருந்த பாரிஸ்டர்கள், முகுந்தலால் பூரி, மிஸ்டர் ஹாஸன் முதலானவர்கள், அங்கே வந்துவிட்டார்கள். நான் நாயிப் நியாயஸ்தலத்தார் பிடியினின்றும் விடுவித்துக்கொண்டு சென்று வரலாறு முழுவதையும் நீதிபதிகளிடஞ் சொல்லிவிட்டேன். வேறு வழியாக வீடு செல்லுமாறு பிரதான நீதிபதி எனக்குக் கட்டளை யிட்டனர்.”

பாரிஸ்டர் மிஸ்டர் பத்ருல் இஸ்லாம் அலிகான் ஏப்ரல் மாதம் 19-ந் தேதி கைது செய்யப்பட்டனர். போலீசார் அவர் மனைவியின் படுக்கை யறைக்குள் சென்றனர். அம்மாது அவர்களை வெளியே செல்லுமாறு தெரிவித்தும் அவர்கள் செல்ல மறுத்துவிட்டார்கள். அவர் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப்பட்டார். மிஸ்டர் ப்ளோமர் அவரைக் கண்டதும் உரத்த குரலுடன், "பஞ்சாப் லெப்டினண்ட் கவர்னராக வர விரும்புபவர் இவர்தான்" என்று சொன்னார். சாட்சியங் கொடுக்குமாறு தாம் எங்ஙனம் நிர்ப்பந்திக்கப் பெற்றனரென்பதை அவர் கூறியிருக்கிறார். தாமும் தம்முடன் அடைக்கப்பெற்ற கைதிகளுமிருந்த அறையின் நிலைமையையும், தாம் எங்ஙனம் இழிவுபடுத்தப் பட்டனரென்பதையும் அவர் விளக்கிக் கூறிவிட்டு, தாம் கடைசியாக விடுதலை செய்யப்படுமுன் தம்மீது சுமத்தப் பெற்றிருந்த குற்றங்களை ஆராய்ந்திருக்கிறார். அவர் தம் சாட்சியத்தைப் பின்வருமாறு முடிக்கின்றனர்: "போலீசார் குலாம் ஜிலானி என்னுமொருவரைச் சித்திர வதை செய்து எனக்கு விரோதமாகச் சாட்சியம்பெற முயன்றனர். ஜிலானி நான் விசாரணை செய்யப்பட்டு வந்தபொழுது இராணுவச் சட்ட நியாயஸ்தலத்தில் கொடுத்த சாட்சியத்தில் இவ்வுண்மையை ஒப்புக்கொண்டிருக்கிறார். என் உயிருக்கு உலை வைக்கும் நோக்கத்துடன் என்னை இங்ஙனங் கைது செய்து இரண்டரை மாத காலம் காப்பில் வைத்திருந்தனர்."

பாரிஸ்டர் மிஸ்டர் குர்தியால் சிங் ஸலேரியாவும் கைது செய்யப்பட்டார். அவர் மற்றவர்களுடன் தம் உயிரையும் பொருட்படுத்தாமல் ஏப்ரல் மாதம் 10-ந் தேதி வாராவதியினின்றும் கூட்டத்தைத் திருப்பியனுப்ப முயன்றவர்களுள் ஒருவர். தாம் அநுபவிக்கவேண்டியிருந்த அவமானம் விளைக்குங் கஷ்டங்

களை அவர் விளக்கிக் கூறுகிறார். அவர் மே மாதம் 23-ந் தேதி முதல் ஜூலை மாதம் 5-ந் தேதி வரை காப்பிலிருந்தனர்.

நிர்ப்பந்தித்துச் சாட்சியம் பெறும் பொருட்டுக் கைது செய்து சித்திரவதைகளுக்கு உட்படுத்திய வரலாற்றை விளக்குவான் வேண்டி நாங்கள் மேலே வரைந்துள்ள பத்திகள், இராணுவச் சட்டத்தின் பெயரால் செய்யப்பட்ட கொடுமைகளுள்ளும் மிகக் கொடிய செய்கைகளை விளக்குவனவாகும். ஜலியன் வாலா பாக் விபரீத சம்பவம் திடீரெனத் தோன்றிய காரணத்தால் உடல் நடுங்கச் செய்யுந் தன்மையதா யிருக்கிறது. ஆனால் மெதுவாகக் கைது செய்யப்பட்டு வந்த உபத்திரவம் அனுபவித்தவர்களுக்கு மாத்திரமன்றி, கைது செய்யப்படுவோமோ என்று பயந்திருந்தவர்களுக்கும் வருத்தத்தை உண்டு பண்ணுவதாயிருந்தது. எங்களுக்குக் கிடைத்துள்ள சாட்சியம், கைதுசெய்யப்பட்ட முறை வழிதுறை யற்றதாயிருந்ததென்பதைக் காட்டுகின்றது. எவ்வகுப்பினரும் என்றிலையிலிருந்தோரும் கைது செய்யப்பெற்றனர். ஒருவரும் தாம் பத்திரமாயிருந்ததாக எண்ணியிருக்கவில்லை. இவ்விஷயத்தில் சாட்சியம் பெறும்போது நாங்கள் மிகவும் ஜாக்கிரதையுட னிருந்தோமென்பதையும் ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறோம். நாங்கள் விசாரணை செய்யப் புகுந்த பொழுது, நம்பாத மன நிலையிலிருந்தோம். ஆனால் வாக்கு மூலத்திற்குப் பின் வாக்குமூலமாக எங்கள் பார்வைக்கு வந்தபடியால் பொதுவாகக் கூறப்பெற்ற குற்றத்தை நாங்கள் அங்கீகரிக்க வேண்டியவர்களானோம். மிகவும் கொடியவைகளான வாக்குமூலங்களும், முழுவதும் ஆதரிக்கப்பெற்றிருக்கின்றமையின், எந்த நியாயஸ்தலத்திலும் அவை விசாரணைக்கு நிற்குமென நாங்கள் கருதுகின்றோம்.

போலீசார் தாராளமாக இலஞ்சம் வாங்கியதைப் பற்றிய சாட்சியம் எங்களுக்கு விசேஷமாகக் கிடைத்திருக்கிற தென்

பதை இங்கே குறிப்பிடுகிறோம். ஆயினும் இவ்விஷயமாக அமிர்தசரஸில் சாட்சியமேற்றுக் கொள்ளாது விடுத்திருக்கின்றோம். ஏனெனில் சாட்சியங் கொடுத்தவர்கள் சாட்சியத்தை நம்பிக்கையாகக் கொடுத்தார்களெனினும், தங்கள் பெயர்களை வெளியிடச் சம்மதமற் றிருந்தார்கள். இவ்வகுப்பைச் சார்ந்த குற்றத்தின் உண்மையை அரசாங்கத்தார் அறிய விரும்புவராயின், சாட்சியங்கொடுக்க வருவோரைக் காப்பதாக வாக்களித்து ஒரு விசாரணை நடத்துதல் நலமென அறிவிக்கிறோம். இவ்வகுப்புக் குற்றவாளிகளை மறைத்துவைக்க அரசாங்கத்தார் விரும்பவில்லையென்பதையும், நாங்கள் கூறியுள்ள முறையைக் கைப்பற்றுவதனால் அவர்கள் போலீஸ் இலாகாவிலுள்ள கேவலமான ஊழல்களை அகற்றுதல் கூடுமென்பதையும் நாங்கள் நிச்சயமாய் நம்புகிறோம். சித்திரவதை செய்யப்பட்ட விஷயமாகக் கொடுக்கப்பெற்றுள்ள சாட்சியமும் விசாரிக்கத்தக்க தொன்றாம். அஃது அரசாங்கத்தார் முன் இருக்கிறது. விளக்கமாகக் கூறப்பெற்றுள்ள சாட்சியத்தை அவர்கள் கவனியாதிருத்தல் முடியாது.

பொய்ச் சாட்சியம் வாங்க முயற்சிசெய்யப்பெற்ற விடத்து இராணுவச் சட்ட விசாரணை ஸ்தலத்திலேனும், அவசர நியாய ஸ்தலத்திலேனும் ஏரியா உத்தியோகஸ்தர்கள் முன்பாகவேனும் நடைபெற்ற விசாரணைகளில் நீதி தவறாகச் செலுத்தப்பட்டிருத்தல் வேண்டுமென்பதைப்பற்றி இங்கே அதிகமாக ஒன்றும் குறிப்பிட வேண்டுவதில்லை. இராணுவச் சட்ட விசாரணை ஸ்தலத்தில், அவசரமாக விசாரணை புரியும் அதிகாரமும் மரண தண்டனை விதிக்கும் அதிகாரமும் வழங்கப்பெற்ற மூவர் நீதி செலுத்தினர். அவர்கள் யாதொரு சாட்சியத்தையும் பதிவு செய்துகொள்ளக் கடமைப்பட்டிருக்கவில்லை. அவர்களுடைய தீர்ப்புகளுக்கு அப்பீல் இல்லை. அவசர நியாய ஸ்தலத்தில்

ஒரே அங்கத்தினர், வழக்கமாக மாஜிஸ்டிரேட் ஒருவர், வீற்றிருப்பர். இந்நியாயஸ்தலம் குறைந்த அதிகாரமுள்ளது. அஃது இரண்டுவருடச் சிறைச்சாலை தண்டனையும் 1000 ரூபா அபராதமும் விதிக்க அதிகாரம் பெற்றிருக்கும். இந்நியாயஸ்தலத்தின் தீர்ப்புகளும் முடிவானவை; உயர்தர நியாயஸ்தலத்தில் அப்பீல் செய்யப்படக்கூடாதவை. இந்நியாயஸ்தலங்களில் நடைபெற்றுப் பிரசுரிக்கப்பெற்றுள்ள விசாரணைகளின் தஸ்தாவேஜுகளையும் அரசாங்கத்தார் வெளியிட்டுள்ள கணக்குகளையும் பரிசோதித்துப் பார்த்ததில், தண்டனைகளிற் பெரும்பாலன முழுவதும் கேவலமானவைகளென அபிப்பிராயப்படுகிறோம். கணக்கின்படி அமிர்த சரஸ் ஜில்லாவில் இராணுவச் சட்ட விசாரணைஸ்தலங்களில் 188 பேர் விசாரணை செய்யப்பெற்றனர். அவர்களுள் மூவர் விடுதலை செய்யப்பெற்றனர். அவசர நியாயஸ்தலங்களிலும் ஏரியா உத்தியோகஸ்தர்கள் முன்னிலையிலும் 173 பேர் விசாரணை செய்யப்பெற்றனர். 32 பேர் விடுதலை செய்யப்பட்டனர்.

அரசாங்க சாஸனத்தை முன்னிட்டும், நாங்கள் குறிப்பிட்டுள்ள நியாயஸ்தலங்களில் தண்டனை விதிக்கப் பெற்றவர்களுள் பெரும்பாலோர் விடுதலை செய்யப்பட்டதை முன்னிட்டும் இவ்விசாரணைகளைப் பற்றி ஈண்டு விரிவாகக் கூறுதல் அநாவசியமாகும். ஆனால் ஆயுள் வரை தீவாந்தர சிட்சையையும் சொத்துக்களின் பறி முதலையும் குறைந்த தண்டனையாகக் கொண்ட வழக்குகள் விரதத்தை ஒழுங்கு படுத்தியதையும் ரௌலட் சட்டத்தைப் பற்றிப் பேசியதையும் குற்றமாகக் கொண்டு கற்பிக்கப் பெற்றவைகளே என்பது ஈண்டுக் குறிப்பிடத் தக்கதொன்றும். அப்ரூவரின் சாட்சியமொன்றையே ஆதாரமாகக் கொண்டு, அதிகாரிகள் பிரதான மனிதர்களின் மேல் கொடிய குற்றங்கள் சாட்டிவிட்டார்கள். நாங்கள் லாகூர் சம்பவங்களை ஆராய்ச்சி

செய்யும்போது இராணுவச் சட்டக் கமிஷன் விசாரணைகளை இன்னுஞ் சிறிது விளக்கமாக ஆராய்ச்சி செய்கிறோம். அமிர்த சரஸ் சம்பவங்களின் பரிசீலனையைக் கீழ்க்கண்ட குறிப்புடன் முடிக்கின்றோம்: டாக்டர்கள் கிச்லுவையும் ஸத்யபாலையும் இர கசியமாக வெளியேற்றியதனால் அதிகாரிகள் பெருங் குற்றஞ் செய்தவர்களாகிறார்கள்; சுடப்பட்ட விஷயத்தில் அநாவசியமாக அவசரப் பட்டு விட்டார்கள்; அவர்கள் சாதுர்யத்துடனும் ஆலோசனையுடனும் நடந்து கொண்டிருப்பின், தலைவர்கள் வெளியேற்றப் பட்டிருப்பினும், கூட்டத்தார் வரம்பு கடந்து செய்த கொடுஞ் செயல்கள் தடுக்கப் பெற்றிருக்கலாம்; வரம்பு கடந்த செய்கைகள் எவ்விதத்திலும் வருந்தத் தக்கனவாயும் கண் டிக்கத் தக்கனவாயு மிருக்கின்றன. ஜலியன்வாலா பாகில் நடை பெற்ற படுகொலை, அப்பொழுதேனும் அதற்குப் பிறகேனும் நிகழ்ந்த எச்சம்பவத்தினாலும் நியாயமானதெனக் கொள்ளப் பெறலாகாததும் மனிதத் தன்மைக்கு மாறானதும் பழிக்குப் பழி வாங்குவதுமான செயலாகும்; ஜெனரல் டையரே ரூபித் துள்ளபடி, அமிர்த சரஸில் இராணுவச் சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப் பட்டதற்கு அங்குண்டான எச்சம்பவமும் நியாய மான காரணமாக விருக்கவில்லை; அது நீண்ட காலம் அமுலில் வைக்கப்பெற் றிருந்தது அதிகாரத்தை வேண்டுமெனக் கெட்ட வழியிற் செலவிட்டதாகும். அஃது அமுலுக்குக் கொண்டுவரப் பெற்றது நாகரிகமுள்ள எந்த அரசாங்கத்தாருக்கும் ஏற்ற தாகாது.

## 2. டார்ன் டாரன்.

டார்ன் டாரன் அமிர்தசரஸின் ஒரு பாகம்; ஒரு ரெயில்வே ஸ்டேஷன். அஃது அமிர்தசரஸிற்குப் பதினாறு மைல் தூரத்தி லுள்ளதும் சிறப்பில் அதற் கடுத்ததுமான சீக்கிய ஸ்தலம்.

கஜாஞ்சியைக் கொள்ளை யடிக்க முயற்சி செய்யப்பட்ட தெனப் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் தெரிவித்திருந்தனர். எங்களிட முள்ள சாட்சியம் இக்குற்றம் வெறுங் கட்டுக்கதை யென்பதைக் காட்டுகின்றது; ஆயினும் பலர் அவசர நியாயஸ்தலத்தார் பல ரைத் தண்டித்துவிட்டனர்.

## 3. லாகூர் நகரம்.

அரசாங்க சம்பந்தமான சிறப்பில் லாகூர் நகரமே பஞ்சாபில் முதன்மையானது. அஃது அம்மாகாணத்தின் தலைநகராயும் இராஜதானியாயு மிருக்கிறது. ஆயினும் நாங்கள் அமிர்தசரஸை முதலில் எடுத்துக்கொண்டதற்குக் காரணம் யாதெனில், அந்நக ரம் சீக்கியரின் பிரதான வாசஸ்தலமா யிருப்பதோடு, அங்கேயே குழப்பம் தோன்றியதும் அரசாங்கத்தாரின் போக்குத் தீர்மானிக் கப்பெற்றதுமாம். பிஷாவர், கல்கத்தா, கராச்சி, பம்பாய், ஆகிய நான் கிடங்களுக்குஞ் செல்லும் இருப்புப் பாதைகள் லாகூரிற் சந்திக்கின்றன வாகலின், அஃது ஒரு பெரிய ரெயில் வே ஸ்டேஷனு யிருக்கிறது. லாகூருக்கும் டில்லிக்கு முள்ள தூரம் 298 மைல். கண்டோன்மெண்ட் ஜனத்தொகை நீங்க லாக, லாகூர் சுமார் 2,50,000 ஜனத்தொகையைக் கொண்டுள் ளது. அதில் மகமதியரின் தொகையே பெரும்பான்மையது. ஹிந்துக்கள் மகமதியரின் தொகையில் மூன்றிலொரு பாகத் தினரா யிருக்கிறார்கள்.

லாகூரில் சிறுவர்களுக்காகப் பத்துக் கல்லூரிகளும், சிறுமிகளுக்காக இரண்டு கல்லூரிகளும், சிறுவர், சிறுமியர்க் காக உயர்தரப் பாடசாலைகள் பலவு மிருக்கின்றன. இந்நக ரமே பஞ்சாப் சர்வகலாசாலையின் காரியஸ்தலம். அதில் இரண்டு ஆங்கில தினசரிப் பத்திரிகைகள் நடைபெறுகின்றன. அவைகளுள் ஒன்று அதிகார வருக்கத்தினரின் நன்மையையும்

ஐரோப்பிய வியாபாரிகளின் நன்மையையும் நாடி நடை பெறு கின்றது; மற்றொன்று இந்திய தேசீய நலன்களை நாடி நடை பெறுகிறது. தேச பாஷைகளிற் பல தினசரிப் பத்திரிகை களும் வாரப்பத்திரிகைகளும் நடத்தப் பெறுகின்றன. பஞ்சாபி லுள்ள மற்றெல்லா விடங்களிலும் லாகூரிலேயே படித்த வகுப் பினர் மிகுதியா யிருக்கின்றனர்; அம்மாகாணத்திற்குள் அந் நகரமே அன்றாடம் நடைபெறும் சம்பவங்களை நன்கறிந்து கொண்டு வருகின்றது. இந்திய அரசியல் விஷயங்களில் பஞ் சாப் மற்ற மாகாணங்களை விடக் கவலைக் குறைவாயிருந்து வந் திருக்கின்றது. ஸர் மைகல் ஓ'ட்வியரும் அதைப் பாராட்டிப் பேசியிருக்கிறார். ஆனால் சில காலமாக அம்மாகாணம் அரசியல் வாழ்க்கையை ஒழுங்குபடுத்தத் தொடங்கிவிட்டது. லாகூர் வழி காட்டிச் செல்லாநின்றது. இவ்வெழுச்சி, ஸர் மைகல் தம் உத்தியோகத்தை வகித்த சில காலத்திற்குள் சட்டசபையிற் பேசியதும் எங்களால் முன்னர் எடுத்துக் காட்டப்பெற்றதுமான பேச்சினால் பலப்படுத்தப்பட்டது. மேலும் ரௌலட் சட்டம் சட்டசபையிற் கொண்டுவரப் பெற்றதன் காரணமாக இந்தியா முழுவதும் அதிகரித்திருந்த அரசியல் கிளர்ச்சியில் பஞ்சாப் மாகாணமும் பங்கு பெறலாயிற்று. பஞ்சாபில் லாகூர் வழிகாட் டிச் சென்றது. மிஸ்டர் காந்தி தம் சத்தியாக்கிரஹ அறிக் கையை வெளியிட்டபொழுது, பஞ்சாப் தலைவர்கள் அதனை ஏற் றுக்கொள்ளும் விஷயத்தில் கடைசி வரையில் யாதொரு முடி வுஞ் செய்யாதவர்களா யிருந்தார்கள். ஒருவரும் சத்தியாக்கிரஹ வாக்குறுதி செய்ததாகத் தெரியவில்லை; லாகூரில் ஒருவரும் செய்யவில்லை யென்பது நிச்சயமான விஷயம். ஆனால் உண்ணு விரதமும் வேலை செய்யாமையும் வேறு வழியிற்செல்வனவாயின. அவைகளை அனுஷ்டிக்க ஒருவர் வாக்குறுதி செய்யவேண்டுவது மில்லை, தொடர்பான வேலை செய்யவேண்டுவதுமில்லை. ஆனால்

இவ்விஷயத்திலும் ஜனத்தலைவர்கள் தாங்கள் என்ன செய்வ தென்பதை யறியாமலும் மிஸ்டர் காந்தியின் வேண்டுகோ ளுக்கு ஜனங்கள் எத்தகைய பதிலளிப்பார்க ளென்பதை யுணர் ந்து கொள்ளாமலு மிருந்தார்கள். எனவே அவர்கள் மகாத்மா காந்தி அனுப்பி யிருந்த கடிதத்தைப் பிரசுரித்து ஜனங்களுக்கு வழங்கத் தீர்மானித்தார்கள். வேலைக்குச் செல்லா விரதம் கைக்கொள்ளப்படுமெனத் தெரிந்து கொண்டதும், அரசாங்கத் தார் கலவர முறலாயினர். ஊர்வலங்களும் கூட்டங்களும் முன் அநுமதியின்றி நடைபெறுதல் கூடாதெனப் போலீசார் ஏப்ரல் மாதம் 4-ந்தேதி ஒரு விளம்பரத்தை வெளியிட்டனர். 5-ந்தேதி தலைவர்கள் டெபுடி கமிஷனரைச்சென்று காணுமாறு அழைக் கப்பட்டார்கள். டெபுடி கமிஷனரைக் கண்டபோதும் அதன் பிறகும் நிகழ்ந்த சம்பவங்களைப் பண்டித ராம்பஜ்தத் சௌதுரி யும் பிற தலைவர்களும் தாங்கள் கூறியுள்ள சாட்சியங்களில் விள க்கியிருக்கிறார்கள். அச்சந்திப்பில், தாங்கள் ஆலோசித்திருந்த கூட்டம் நடைபெறுதல் கூடாதென அரசாங்கத்தார் எண்ணி யிருப்பின் தாங்கள் அதனைக் கூட்டாமல் விட்டுவிடுவதாகவும் தலைவர்கள் சொன்னார்கள். ஆனால் டெபுடி கமிஷனர் கீழ்க் கண்ட நிபந்தனைகளில் திருப்தி கொண்டிருந்தார் :—

(1) வேலை செய்யாதிருத்தல் நியாயமென்றோ நியாய மல்ல வென்றோ ஏப்ரல் மாதம் 5-ந் தேதி மாலைவரையில் எல் லோரும் ஜனங்களுக்கு எடுத்துக் கூற முயலலாம்.

(2) 6 ந் தேதி, எவ்வழியாகவேனும் ஜனங்களைத் திருப்ப முய லுதல் கூடாது.

(3) கூட்டம் நடைபெறலாம், ஆனால் எழுச்சியை உண்டு பண்ணுமாறு பேசப்படுதல் கூடாது.

6-ந் தேதி பொழுது புலர்ந்ததும், அதற்கு முன் காணப் பெற்றிராத விதமாக லாகூரில் வேலை செய்யா விரதம் முழு அள

விற் கைக்கொள்ளப்பெற் றிருந்தது. ஸ்திரீகளும் குழந்தைகளும் உட்பட ஆயிரக் கணக்கான ஜனங்கள் வேலை செய்யாவிரதம் பூண்டிருந்தார்கள். அவர்கள் ஸ்நானஞ் செய்து திரும்பி வரும்போது ஊர்வலமாக வந்தார்கள். கிரமமாகப் பேசுங்கால் இது நாங்கள் மேலே குறிப்பிட்டுள்ள போலீஸ் உத்தரவை மீறிச் சென்றதாகும். ஆயினும் ஊர்வலம் ஒழுங்காக நடைபெற்றது. போலீசார் இவ்விஷயத்தில் அறிவுடைமையுடன் தலையிடாதிருந்தனர். ஆனால் ஊர்வலம் மாலை நோக்கிச் சென்றபொழுது, அவர்கள் அதனைத் தபாலாபீசைத் தாண்டிச் செல்ல விடவில்லை. ஊர்வலஞ் சென்றவர்களைத் திருப்பி யனுப்பும்பொருட்டு அவர்கள் தலைவர்களின் உழைப்பைப் பெற்றார்கள். லாலா துனிசந்தரும் டாக்டர் கோகுல சந்த் நாரங்கும் போலீசாருக்கு உதவ முன் வந்து, ஊர்வலஞ் சென்றவர்களை மாலைத் தாண்டிச் செல்லாதவாறு தடுத்துவிட்டனர்.

ஸர் மைகல் ஓட்வியரைத் துன்புறுத்தியது யாதென்பதையுணர்த்த ஒரு சிறு அறிகுறி யிருக்கின்றது. அவர் பஞ்சாபில் வேலை செய்யா விரதம் கைக் கொள்ளப்படாதெனத் தம் சம்பாஷணைகளிற் கூறியிருந்ததாகவும், தலை நகரிலும் அவ்விதம் அநுஷ்டிக்கப் பெற்றதைக் கண்டு அவர் மனவருத்தத்தோடு வியப்புற்றனரென்றும், அத்தகைய விரதத்தை ஏற்பாடு செய்ததற்காகத் தலைவர்களைத் தண்டிப்பதாக அவர் கூறியதாகவும் சொல்லப்படுகின்றன.

பிற்பகலில் ப்ராட்லா மண்டபத்தில் ஒரு கூட்டம் நடைபெற்றது. அதற்கு ஆயிரக் கணக்கான ஜனங்கள் வந்திருந்தார்கள். இத்தகைய கூட்டத்தை லாகூர் எப்பொழுதுங் கண்டதில்லை. இக்கூட்டத்திற்குச் செல்லுமாறு ஸர் மைகல் ஓட்வியர் குற்ற பரிசீலனை இலாகா சூபரின்டெண்டெண்டுக்குப் பிரத்தியேகமாகக் கட்டளை யிட்டிருந்தனர். அக்கூட்டத்திற்

பேசப்பெற்ற பேச்சுகள் முழுவதும் அங்ஙனமே அறிவிக்கப்பட்டன. நாங்கள் அவைகளைப் பார்த்திருக்கிறோம். அவைகள் போக்கில் கம்பீர முள்ளனவாயும், ரௌலட் சட்டம் விலக்கப்படும் விஷயத்தில் ஜனங்களின் உரிமையை வற்புறுத்துவனவாயுமிருந்தும், அவைகளில் இராஜத் துரோகம் ஒன்றுமில்லை. கொடுஞ்செயல் செய்யத் தூண்டுந் தன்மையதான உரையொன்றும் நிச்சயமாக அதிற் காணப்படவில்லை. 7-ந்தேதியும் 8-ந்தேதியும் வேறொன்றும் சம்பவிக்கவில்லை.

ஏப்ரல் மாதம் 9-ந் தேதி ராமநவமிவிழா அமிர்த சரஸிற் கொண்டாடப் பெற்றது போல் இங்குங்கொண்டாடப்பெற்றது. ஜனங்கள் அன்று கொண்டாட்டங்களுடனிருந்து ஹிந்து மகமதிய சகோதரத்வத்தைப் பலப்படுத்தினார்கள். இதற்கு முன் மதசம்பந்தமாகக் கொண்டாடப் பெற்றுவந்த விழா சென்ற சில வருஷங்களாகத் தேசீயக் கொண்டாட்ட நாளாகக் கருதப்பெற்று வந்திருக்கிறது. ஊர்வலத்தில் உத்தியோகஸ்தர்களும் கலந்து சென்றார்கள். அவர்களைக் கண்ட விடங்களிலெல்லாம் ஜனங்கள் சந்தோஷத்துடன் ஆரவாரஞ் செய்தார்கள்.

இங்ஙனமே ஏப்ரல் மாதம் 10-ந் தேதி வரையில் எல்லாம் அமைதியாக விருந்தது. ஆனால் ஸர் மைகல் ஓட்வியர் மாத்திரம் அங்ஙன மிருக்கவில்லை. அமிர்தசரஸிற்கு வந்து தம் சத்தியாக்கிரஹக் கொள்கையை விளக்கிக் கூறவேண்டுமென டாக்டர் சத்யபால் மிஸ்டர் காந்தியை அழைத்திருந்தனரென்பதை ஸர் மைகல் அறிவர். அவ்வேண்டுகோளுக்கும் சந்நியாசி ஸ்வாமி சிரத்தாநந்தர் வேண்டுகோளுக்கு மிணங்க, மிஸ்டர் காந்தி டில்லிக்குச் செல்லவேண்டியவரா யிருந்தனரென்பதையும், அவர் ஏப்ரல் மாதம் 8-ந் தேதி பம்பாயினின்றும் டில்லிக்குப் புறப்பட்டு விட்டனரென்பதையும் ஸர் மைகல் அறிந்திருந்தார். அவர் இதனைப் பொறுக்க முடியாமலிருந்தார். அவர் இராஜப் பிரதி

நிதியாரிடம் அநுமதி பெற்ற பிறகு, மிஸ்டர் காந்தி பஞ்சாபிற்குள் பிரவேசிப்பதைத் தடுத்து பஞ்சாப் எல்லைக்குள்ளிருக்கும் முதல் ஸ்டேஷனில் அவரைக் கைது செய்து, பம்பாய் மாகாணத்திற்குத் திருப்பி யனுப்பி அங்கேயே அவரைக் காப்பில் வைத்துவிட்டனர். காந்தி கைது செய்யப்பட்டதும் காப்பில் வைக்கப் பெற்றதுமான செய்தி 10-ந் தேதி லாகூருக்கு எட்டியது. இச்செய்தி சிவில் அண்ட் மிலிடரி கெஜட்டில் பிரசுரிக்கப்பெற்றது. யாதொரு ஏற்பாடும் முயற்சியுமின்றி, உடனே கடைகள் மூடப் பெற்றன. மாலை 4-மணிக்குள்ளாக எல்லா வேலைகளும் நிறுத்தப்பெற்றன. நகரவாசிகளுள் சிலர் ஊர்வலமாகச் சேர்ந்து மாலை நோக்கிச்செல்லலாயினர். அவர்கள் அனர்க்காலியை யடைந்தபொழுது, ஊர்வலம் மிகப் பெரியதாய்விட்டது. ஆனால் போலீசார் ஏப்ரல் மாதம் 6-ந் தேதி சென்ற ஊர்வலத்தை மால் என்னுமிடத்திற்குச் செல்லாதவாறு தடுத்துவிட்டபடியால், ஊர்வலஞ் சென்றவர்களுள் பெரும்பாலார் பார்மன் கிறிஸ்துவக் கல்லூரியினருகிலேயே நின்றுவிட்டனர். ஆயினும் மாணவர்கள் உட்பட முந்நூறு அல்லது நானூறு பேர் மாத்திரம், மிஸ்டர் காந்தியை விட்டு விடுமாறு கேட்கும் பொருட்டு அரசாங்க மாளிகைக்குச் செல்லும் நோக்கத்துடன் மாலைத் தாண்டிச் செல்லத் தீர்மானித்தனர். இது தெரிந்தவுடன் போலீசார் சிலர் வந்து, கூட்டத்தின் பின் புறத்திலிருந்து முன்னேசென்று, அதற்கு எதிர் முகமாக நின்று ஓட்வியர் சோல்ஜர்ஸ் கிளப்பினருகில் அதனை நிறுத்திவிட்டனர். ஆனால் கூட்டத்தார் போலீசார் சொல்லியதைச் செவி யேற்கவில்லை. துப்பாக்கியாற் சுட உத்தரவளிக்கப்பட்டது. இரண்டு மூன்று பேர் கொல்லப்பெற்றனர்; இன்னும் பலர் காய முற்றனர். கூட்டம் பின்னடைந்தது. இறந்து பட்டவர்களையும் காய முற்றவர்களையும் போலீசார் அப்பாலெடுத்துச் சென்றனர்.

அருகாமையிற் சென்றுகொண்டிருந்த டாக்டர்களின் வைத்திய வுதவி மறுக்கப்பெற்றது. இங்ஙனம் கலைக்கப் பெற்ற கூட்டம் அனர்க்காலியிலிருந்து லோஹரி நுழைவாயில் வரை போலீ சாரால் மெதுவாகப் பின்னே தள்ளிக்கொண்டு வரப்பட்டது. அவ்விடத்திலும் போலீசார் கூட்டத்தைக் கலைக்க முயன்றனர். போலீஸ் சூபரின்டெண்டெண்ட் மிஸ்டர் ப்ராட்வே ஹண்டர் கமிட்டியார் முன் சொல்லியபடி, அவர்கள் அரை மணி நேரத் திற்குமேல் விவாதஞ் செய்துகொண்டிருந்தார்கள். நகரத்திற்கு வெளியிலுள்ள தம் வீட்டிலிருந்த பண்டித ராம்பஜ்தத் சௌ தூரிக்கு இதற்கிடையில் இச்சம்பவம் அறிவிக்கப் பெற்றது. அவர் அவ்விடம் விரைந்து வந்து உதவி செய்வதாகக் கூறினர். கூட்டத்தைத் திருப்பிக் கலைக்குமாறு அதிகாரிகள் அவரைக் கேட்டுக் கொண்டார்கள். பண்டிதர் அங்ஙனஞ் செய்ய முயன் றார். ஆனால் அவர் குரல் அருகிலிருந்தவர்கள் தவிர மற்றவர் களுக்குக் கேட்கவில்லை. ஆதலின் அவர் உயர்த்தப் பெற்ற ஓர் ஆசனத்திலிருந்து பேசினர். இதற்குள்ளாகப் போலீஸ் சூபரின் டெண்டெண்ட் அவசரப்படலானார். டெபுடி கமிஷனர் அங்கே வரவழைக்கப் பெற்றனர். பண்டித ராம்பஜ்தத் சௌதூரி டெபுடி கமிஷனரிடஞ் சென்று, கூட்டத்திற்கு நியாயமெடுத் துக் கூறி அதைக் கலைக்குமாறு சிறிது அவகாசமளிக்க வேண்டுமென அவரைக் கேட்டுக் கொண்டனர். மிஸ்டர் பைஸன் இரண்டு நிமிஷங்களே அவகாச மளித்து, அதற் குள்ளாகக் கூட்டங் கலையாவிடில் சுட உத்தரவளித்து விடுவ தாகக் கூறினர். இரண்டு நிமிஷத்திற்குள் தாம் கூட்டத்திற்கு நியாயங்கூறுதல் கஷ்ட சாத்தியமானதெனப் பண்டிதர் தெரி வித்தும், மிஸ்டர் பைஸன் பிடித்த பிடியில் நின்றிருந்தார். எனினும் பண்டிதர் முயற்சிசெய்து கூட்டத்திற் சிலரைத் திருப்பி யனுப்பினர். ஆனால் மிஸ்டர் பைஸன் தாம் கூறி

யிருந்த உரையை உண்மையாகக் கடைப்பிடித் தொழுகினர். குறிப்பிடப்பெற்ற காலம் சென்றதும், அவர் சுட உத்தரவளித்து விட்டனர். ஓட்வியர் ஸோல்ஜர்ஸ் க்ளப்பினருகில் ஏற்பட்ட அளவு சேதம் இங்கும் ஏற்பட்டது. துப்பாக்கிப் பிரயோகம் கூட்டத்தைக் கலைத்தது. ஆனால் அது ஜனங்களின் மனதைப் புண்படுத்திவிட்டது.

இரண்டிடங்களிற் சுடப்பெற்றதும் விலக்கப்பெற் றிருக் கலாமென நாங்கள் கருதுகின்றோம். கூட்டத்திலிருந்தவர்கள் நிராயுதபாணிகள்; அவர்கள் கிறிஸ்துவக் கல்லூரி, வாலிபக் கிறிஸ்துவ சங்கம், ஸிம்லா அலையன்ஸ் பாங்க், வங்காள பாங்க், தபாலாபீஸ், தந்தியாபீஸ், ஹைகோர்ட், கதீட்ரல் ஆகிய பல பொதுக் கட்டிடங்களைத் தாண்டிச் சென்றிருந்தார்கள். அமிர்த சரஸில் இருந்ததுபோலவே அதிகாரிகள் இடைப்பட்ட முறை களைக் கைக்கொள்ளா திருந்துவிட்டார்கள். கூட்டத்தைக் கலைக்க மனப்பூர்வமாய் முயன்றுகொண்டிருந்த பண்டிதருக்கு அவர்கள் போதிய அவகாச மளியாதிருந்தது தவறாகும். கூட் டத்தார் சிறிதளவும் எதிர்த்தாரில்லை. இந்தியாவின் மற்ற விடங்களிலும் ஜனக்கூட்டங்கள் இத்தகைய சந்தர்ப்பங்களில் பஞ்சாப் ஜனக்கூட்டத்தின் மன நிலையையும் தீர்மானத்தையுமே கொண்டிருக்குமென நாங்கள் கருதுகின்றோம். நாங்கள் இத னைச் சொல்வது எதற்காகவெனின், பஞ்சாப் கூட்டம் மற்ற விடங்களிலுள்ள கூட்டங்களினின்றும் வேறான போக்குடைய தென்றும், மற்றக் கூட்டங்களைக் காட்டிலும் அதிக முரட்டுத் தனத்துடன் எதிர்க்குந் தன்மையதென்றும் கூறப்படுகின்றன. நாங்கள் இவ்விஷயத்தில் மாறுபட்ட அபிப்பிராயங் கொண்டவர் களா யிருக்கிறோம். பஞ்சாப்கூட்டம் பலத்த தடியைச்சுழற்றுவத னாலேயே கலைக்கப்பெறுவதை நாங்கள் சிலர் கண்டிருக்கிறோம். லாகூர், காஸுர், அமிர்தசரஸ் முதலிய விடங்களிலுள்ள கூட்டங்

கள் மிக்க மனவுறுதியுடனிருந்தன. ஆயினும் அவைகளுள் ஒன்றும் சிறிதளவு துப்பாக்கிப் பிரயோகத்தையும் தாங்கிக்கொண்டிருத்தல்முடியாது. உத்தியோகஸ்தர் சார்பாகக் கொடுக்கப்பெற்ற சாட்சியத்தில் ஒத்துக்கொள்ளப் பெற்ற அளவுள்ள கூட்டங்கள் உலகத்தின் மற்றப் பாகங்களிலிருந்திருப்பின், தங்களுக்கு விரோதமாக நிறுத்தப்பெற்றிருந்த சிறு கூட்டத்தவரை நிச்சயமாய் அடக்கி விட்டிருக்கும். ஏப்ரல்மாதம் 10-ந் தேதி பம்பாயில் ஒரு பெருங் கூட்டம், இருபத்து நான்கு குதிரை வீரர் அதற்குள்ளாகப் பாய்ந்து சென்றதனால் கலைக்கப் பெற்றதென உத்தியோகஸ்தர் சார்பாகக் கொடுக்கப் பெற்றுள்ள சாட்சியம் அறிவிக்கின்றது. தீங்கிழைக்க வேண்டுமென்னும் மனப் போக்குள்ளதாயிருப்பின், பம்பாய் வைதெளனீ கூட்டம் மிக்க தீங்கிழைத்து விடுமென்பது யாவருமறிந்த விஷயம். பொதுவாக இந்தியாவிலும், சிறப்பாகப் பஞ்சாபிலும், போலீசார் யாதொரு கஷ்டத்திற்கும் உட்படாமல் சிறு காரணத்தை முன்னிட்டும் துப்பாக்கியாற் சுடலாமென எழுதா நியதி யொன்றிருப்பதாக நாங்கள் கருதுகின்றோம். மிகத் தாழ்ந்த நிலைமையிலுள்ள குடிமகனது உயிரையும் பொருட்படுத்தாதிருத்தல் கூடாதென்பது நாகரிக முள்ள அரசாங்கத்தின் அடையாள மெனின், பஞ்சாப் அரசாங்கம் இப்பரிசோதனையின் முன் நில்லாதென அஞ்சுகின்றோம். ஆளப்படுவோரின் தொகையைக் காட்டிலும் ஆள்வோரின் தொகை மிகக் குறைந்ததென்னும் காரணம் தம் பொறுப்பில் விடப்பெற்றுள்ள குடிமக்களின் உயிர்களைப் பொருட்படுத்தாதிருக்கச் சரியான காரணமாகாது. அவர்களுடைய உத்தரவுகள் சம்பந்தமாக விடுக்கப் பெற்ற வினாக்களுக்கு உத்தியோகஸ்தர்கள் சிலர் கவலை யீனமாய்க் கூறியுள்ள மறு மொழிகள், நாங்கள் குறிப்பிட்டுள்ள துப்பாக்கிப் பிரயோகங்கள் சிறிது பொறுமையுடனும் சாமர்த்தியத்துடனும் குடி மக்கள் உயிர்களிடம்

கொள்ளவேண்டிய மதிப்புடனும் தடுக்கப் பட்டிருக்கலாமென்னும் நம்பிக்கையைப் பலப்படுத்துகின்றன. எங்கள் பார்வைக்கு வந்த ஒவ்வொரு சம்பவத்திலும், கூட்டங் கலைந்த பிறகு காயமுற்றவர்களைப் பாதுகாக்க வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்படாதிருந்தது எங்களுடைய இந்நம்பிக்கையை உறுதியாக்குகின்றது.

வரலாற்றை மீண்டுந் தொடங்குவோம். விபரீதமாக நமக்குத் தோற்றுகிறதெனினும், காயமுற்றவர்களையும் கொல்லப்பட்டவர்களையும் எடுத்துச் செல்ல அதிகாரிகள் உறவினர்களுக்கு அநுமதியளிக்கவில்லை. இதனால் ஜனங்கள் வெறுப்புங் கோபமுங் கொண்டார்கள். எனவே 11-ந் தேதியும் விரதமும் வேலை செய்யாமையும் கைக்கொள்ளப்பெற்றன. அதிகாரிகளுக்கும் தலைவர்களுக்கும் அடிக்கடி வாக்குவாதங்க ளேற்பட்டு வந்தன. காய முற்றோரும் கொல்லப்பட்டவர்களும் திருப்பி யளிக்கப்பட வேண்டுமெனத் தலைவர்கள் தங்களாற் கூடிய அளவு விநயமாக வேண்டிக்கொண்டும் பயன்படவில்லை. ஜனங்களை எவ்வழியிலும் சமாதானப் படுத்தாமல் அதிகாரிகள் வேலை நிறுத்தத்தைக் கலைக்க முயன்றார்கள். லாகூர் தலைவர்கள் விடுதலை செய்யப்பட்டபிறகு நாங்கள் அவர்களைப் பலமுறை கண்டு பேசியிருக்கிறோம். அவர்கள் அன்புகூர்ந்து வாக்குமூலங் கொடுத்திருக்கிறார்கள். அதிகாரிகள் இறந்துபட்டவர்களையும் காயமுற்றவர்களையும் திருப்பி யளியாவிடினும், வேலை நிறுத்தத்தை ஒழிக்கத் தலைவர்களுள் பலர் தங்களாலியன்றவரை முயன்றனரென்று நாங்கள் நம்புகின்றோம். ஆயினும் அவர்கள் தங்கள் உழைப்பில் வெற்றிபெறவில்லை. 11-ந் தேதி பாட்ஷாஹி மசூதியில் ஒரு பெருங் கூட்டங் கூடியது. அதில் வேலை நிறுத்தத்தை ஒழிக்கும் விஷயம் ஆலோசிக்கப்பட்டது. ஆனால் ஒன்றும் முடிவு செய்யப்படவில்லை. தலைவர்கள் மறுபடியும் டெபுடி கமிஷனரைக் கண்டு பேசி, கூடுமிடத்தில் இராணுவவீரர்கள் நிறுத்தப்

பெறலாகாதென்னும் நிபந்தனையின்மேல், வேலை நிறுத்தத்தை முடிவுசெய்யும் பொருட்டு இன்னொரு கூட்டம் கூட்டப்பெற வேண்டுமெனத் தெரிவித்தனர். மிஸ்டர் பைஸன் இந்நிபந்தனைக்கு உடன் பட்டனரெனப் பண்டித ராம்பஜ்தத் சௌதூரி உறுதி கூறுகின்றார். மிஸ்டர் பைஸன் அதனை மறுக்கின்றார். எங்களிடமுள்ள சாட்சியம் சௌதூரியின் வாக்கு மூலத்தை உறுதிப்படுத்துகின்றது. பாட்ஷாஹி மசூதியில் மிகப் பெரிய கூட்டமொன்று கூடியது. அப்பொழுது எழுச்சி அதிகமாகத் தோன்றியது. பண்டித ராம்பஜ்தத் சௌதூரி மாத்திரம் தம் சக்தி வாய்ந்த குரலால் ஜனங்களின் கவனத்தைக் கவர்ந்தனர். யாதொரு முடிவுஞ் செய்யப்படாமல் கூட்டம் கலைவுற்றது. ஜனங்கள் தங்கள் வீடுகளுக்குத் திரும்பிச் சென்றுகொண்டிருந்தபொழுது, இராணுவ வீரர் துப்பாக்கியாற் சுட்டனர். கூட்டம் எதிர்த்து நின்றதால் இராணுவ வீரர் சுடவேண்டிய அவசியமேற்பட்டதென அவர்கள் சார்பாக வாதிக்கப் படுகின்றது. இராணுவ வீரர்களை அப்புறப் படுத்துவதாக மிஸ்டர் பைஸன் வாக்குறுதி செய்தது உண்மையாயின், அவர்கள் கூட்டத்திற்குச் சென்றதே நியாய விரோதமானதாகும். உயிர்ச் சேதமும் ஏற்பட்டிருக்கிறது. இது ஜனங்களின் வெறுப்பை அதிகரித்து ஜனத் தலைவர்களின் வேலையைப் பாழ்படுத்திவிட்டது. தலைவர்கள் திரும்பவும் கலந்து ஆலோசனை செய்தார்கள். அதிகாரிகள் முன்னிலும் அதிகச் சமாதானமில்லாத போக்கை யுடையவர்களாயிருந்தார்கள். அவர்கள் தலைவர்களுள் சிலரைப் பார்ப்பார்கள்; மற்றுஞ் சிலரைப் பார்க்க மறுப்பார்கள். வேலை நிறுத்தம் இன்னும் முடிவு பெறுமலிருந்தது. ஜனங்கள் பட்டினி கிடக்குமாறும் கொள்ளை ஏற்படுமாறும் அபாய முண்டாகும் போலக் காணப்பட்டது. எனவே ஜனங்கள் லங்கர் கானுக்களை (இலவசச் சிற்றுண்டி விடுதிகளை) ஏற்படுத்தினார்கள். இவைகள்

பொது ஜனங்களின் பண வுதவியைக் கொண்டு நடத்தப் பெற்றன. இந்நிலை ஏப்ரல் மாதம் 15-ந் தேதி வரையில் இருந்தது. 16-ந் தேதி, பஞ்சாப் செல்வ வந்தர்களுள் ஒருவரான லாலா ஹரி கிஷன்லால், லாகூர் முனிசிபல் கமிஷனர்களுள் ஒருவரும், ஜனங்களால் நன்கு நேசிக்கப் பெற்றவர்களில் ஒருவரும் பொது ஜன சேவையிற் பேர்பெற்ற வருமான லாலா துர்னி சந்தர், பண்டித ராம்பஜ்தத் சௌதுரி ஆகிய மூவரும் தம்மை வந்து காணுமாறு டெபுடி கமிஷனரால் அழைக்கப்பெற்றனர். கைது செய்து வெளியேற்றப் படுவதற்காகவே அவர்கள் வரவழைக்கப் பட்டார்கள். அவர்கள் வெளியேற்றப் பட்டவுடன் லாகூரில் இராணுவச் சட்டம் அறிவிக்கப்பட்டது. வேலை நிறுத்தத்தை ஒழிக்கும் பொருட்டே இராணுவச் சட்டம் அறிவிக்கப் பெற்றதென டெபுடி கமிஷனர் தலைவர்களிடங் காரணங் கூறினர். கடைக்காரர்கள் கடைகளைத் திறவா விடில் தாம் இராணுவ வீரர்களைக் கடைகளில் விட்டுக் கட்டாயமாய்ச் சாமான்களை விற்று விட்டிருப்பரெனக் கர்னல் ஜான்ஸன் தம் சாட்சியத்தில் திருத்தமாகக் கூறியிருக்கிறார். இவ்வெச்சரிக்கை உண்மையிலேயே செய்யப் பெற்றது. லாகூரின் பெருமை படைத்த வியாபாரிகள் இராணுவ நிர்ப்பந்தத்தின் மேல் தங்கள் கடைகளைத் திறக்கும் தாழ்மைக்கு உள்ளாக வேண்டியவர்களா யிருந்தார்கள். தங்கள் வெறுப்பைக் குறிப்பிடும் நோக்கத்துடன் ஜனங்கள் வேலை நிறுத்தஞ் செய்திருந்தது தகுதியுடையதா அல்லவா வென்பதை நாங்கள் இங்கே ஆராய்ச்சிசெய்யப் போகிறதில்லை, அது தகுதியானதா யிருப்பினும் இல்லாவிடினும், ஜனங்கள் தங்கள் கடைகளைத் திறக்க மறுத்தது குற்றமாகாது. பலத்தை உபயோகிப்பதாகப் பயமுறுத்திக் கடைகளைத் திறக்குமாறு அவர்களைக் கட்டாயப் படுத்தியதே குற்றமாம். அரசாங்கத்தாரின் மனப்பான்மையிலிருந்தும், தங்கள் கஷ்டத்தை நீக்கிக் கொள்ளுமாறு ஜனங்கள்

கைக்கொள்ளும் கொடுஞ்செயலினும் சமாதானமுள்ள வேலே நிறுத்தம் சிறந்த ஆயுதமாகாதென்பதை நாங்கள் நிச்சயமாய்ச் சொல்லுதல் முடியாது.

பஞ்சாபின் மற்றப் பாகங்களில் 'கலகம்' பரவாதவாறு தடுக்கும் பொருட்டு லாகூரில் இராணுவச் சட்டம் அவசியமாயிருந்ததெனக் கர்னல் ஜான்ஸன் ஹண்டர் பிரபுவின் முன் கொடுத்த சாட்சியத்திற் கூறியிருக்கிறார். லாகூரில் இராணுவச் சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது முற்றிலும் நியாய விரோதமான செய்கையென நாங்கள் நம்புகின்றோம். லாகூரில் ஜனங்கள் உயிருக்கேனும் பொருளுக்கேனும் யாதொரு தீங்குஞ் செய்தார்களில்லை. பாட்ஷாஹி மசூதியில் நடைபெற்ற கூட்டங்களொன்றில் குற்ற பரிசீலனை இலாகா உத்தியோகஸ்தரொருவர் கொடுமையாய் நடத்தப்பெற்றதை நாங்கள் பொதுவான கொடுமையிற் சேர்க்கவில்லை. அவ்வுத்தியோகஸ்தரைத் தாக்கியவர்கள் தவருன நெறியிற் சென்றனரென்பதிற் சந்தேகமில்லை. ஆனல் இத்தகைய சம்பவம் இராணுவச் சட்டத்தை நியாயமானதாகச் செய்யின், நாம் இராணுவச் சட்டத்தை விசேஷ சம்பவமாகப் பெருமல் வாழ்க்கையின் சாதாரண விதியாகவே கொண்டிருக்க நேரிடும். லாகூரிலுள்ள எந்தத் தலைவரும் வெளியில் யாதோரியக்கத்திலுஞ் சம்பந்தப்பட் டிருந்ததாகக் கூறச் சாட்சியமொன்றும் கொண்டு வரப்படவில்லை. அமிர்தசரஸிற்கும் லாகூருக்குங்கூட யாதொரு தொடர்பும் ஏற்படுத்தப்படவில்லை. லாகூர்வாசிகள் சட்டத்தையும் ஒழுங்கையும் நிலை நாட்டுவதிலேயே ஊக்கங்கொண் டிருந்தார்கள். லாகூரில் இராணுவ வகுப்பார் ஒருவருமில்லை. எனவே லாகூரின் பத்திரத்தை நாடியேனும், கலகம் லாகூரிலிருந்து பிறவிடங்களுக்குப் பரவாதிருக்கும் பொருட்டேனும் இராணுவச் சட்டம் லாகூரில் அமுலுக்குக் கொண்டுவரப் பெற்றது நியாயமான

தாகாது. அது லாகூர் நகரவாசிகளின் திடமான இராஜபக்தியைச் சந்தேகிக்கும் தகாச் செயலாகும். பிரிட்டிஷ் இராஜாங்க அமைப்பினிடமும் அரசரிடமும் விசுவாசங் கொண்டிருப்பதற்கும் உத்தியோக பதவியை இழிவு படுத்துமாறு நடந்து கொள்ளும் கொடுங்கோன்மையுள்ள பிரதிநிதியைக் காரணமின்றி ஆதரிப்பதற்கும் மிக்க வித்தியாச முளதென்பதை ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறோம். குழப்பங்கள், நேரிட்ட விடங்களிலெல்லம், ஸர் மைகல் ஒட்வியரின் ஆட்சிக்கு விரோதமாகத் தோன்றிய ஒழுங்கு படுத்தப்படாத தோற்றமாகும். தம் ஆட்சியின் தொடக்கத்திலிருந்து அவர் படித்த வகுப்பினரைத் தம்மாற் கூடிய வரையில் பகைத்துக் கொண்டிருக்கிறார். யுத்தத்திற்கு ஆளும் பணமும் சேர்ப்பதில் அவர் மிக்க ஊக்கங்கொண்டு உழைத்ததன் பயனாக ஜனங்களுக்குக் கோப மூட்டிவிட்டார். இராஜ்யத்தின் உயிரே ஆபத்திலிருக்குஞ் சமயத்தில் ஏற்ற முறைகளில் வற்புறுத்தி ஜனங்களிடமிருந்து உதவி பெறுதல் நியாயமானதென்றே நாங்கள் கொள்ளுகிறோம். ஆனால் ஸர் மைகல் ஓட்வியர் நியாய வரம்பு கடந்து சென்று, தம் போன்ற உத்தியோகஸ்தர்களை விடத் தாம் மேலாகச் செய்து முடிக்க வேண்டுமென்னும் நோக்கத்துடன் தம்மையேமறந்தவராகித் தாம் கைக்கொண்ட முறைகள் எத்தன்மையன வென்பதை ஆலோசித்தறிந்து கொண்டாரில்லை. இதனால் விளைந்த பயன் யாதெனில், அவர் கீழிருந்த சில்லரை உத்தியோகஸ்தர்கள் தங்கள் எஜமானரினும் மேலாக வெற்றிபெறும் நோக்கத்துடன் முன் அதிகாரத்திற் கூறப்பெற்றுள்ள கொடிய முறைகள் பலவற்றைக் கைக் கொள்ளலானார்கள். சேனைக்கு ஆட்களும் பணமும் பெறும் பொருட்டு உத்தியோகஸ்தர்கள் பிரிட்டிஷ் ஆட்சியையே இழிவு படுத்தி விட்டார்களென்பதைக் காட்டப் போதியசான்று எங்க

ளிடமிருக்கின்றது. இந்தப் பயன் மிக்க உபத்திரவத்தைக் கொண்டு பெறப்படலாயிற்று.

ஜனங்கள் சினந்தெழுந்ததற்கு ஆள் சேர்க்கு முறை காரண மாகக்கொள்ளப் பெறுதல் கூடாதெனச் சொல்லப்பட் டிருக் கிறது. ஏனெனில் ஜனங்கள் இவ்வழியில் மிகுதியாக வருத் தப்பட்டதாகச் சொல்லப்படும் ஜில்லாக்களே கொடுஞ் செயல்க ளின்றி யிருந்தனவெனக் காரணங் கூறப்படுகின்றது. இக்கூற் றுச் சிறிதளவு உண்மையுடையதே. ஆயினும் இதற்குக் கார ணம், உண்மையாயிருக்கும்வரை, வெள்ளிடை விலங்கலாகும். தங்களைக் கூடியவரை பாதுகாத்துக்கொள்ளக் கூடியவர்கள் துன் புறுத்துதலை விலக்கிக் கொண்டார்கள். நிர்ப்பந்தத்தை விலக்கிக் கொள்ள முடியாதவர்கள் தங்கள் பலத்தில் நம்பிக்கை யிருந்தா லன்றிப் பிறகு எதிர்த்து நிற்கமாட்டார்கள். பதிலாகக் கஷ்டத் தைப் பொறுத்துக்கொள்ளுதல் என்பதைப்போலவே பதிலாக எதிர்த்து நிற்றல் என்பதொன்றும் உளது. தேசீய உணர்ச்சி நாளடைவில் பெருகி வரவும், பதிலாகக் கஷ்டப்படுதலும் பதி லாக எதிர்த்து நிற்றலும் வெளித் தோன்றுநிற்கும். எனவே அரசாங்கத்தாரும் குடிமக்களும் இவ்விரண்டனு ளொன்றை ஆலோசனையுடன் தெரிந்துகொள்ளுதல் வேண்டும். பதிலாகத் தீங்கிழைப்பதைக் காட்டிலும் பதிலாகக் கஷ்டத்தை ஏற்றுக் கொள்ளுதலே பன்மடங்கு உயரிய தென்பதை நாங்கள் எடுத் துக்கூற வேண்டுவதில்லை.

ஆனால் லாகூர் தான் தெரிந்து கொண்ட நெறியினின்றும் ஒரு பொழுதும் விலகியதில்லை. லாகூர் நகரம் அனுபவித்த துன்பங்கள் ஜலியன்வாலா படுகொலைக்கு உட்படுத்தப்பட்ட ஜனங்கள் அனுபவித்த துன்பங்களைக் காட்டிலும் அரிய பொக் கிஷமாகுமென்பது எங்களுடைய அபிப்பிராயம்.

இத்துன்பங்களை ஈண்டு ஒரு சிறிது ஆராய்வோம்.

ஆப்பிரிக்காவிற் புகழ்பெற்றவரான கர்னல் ஜான்ஸன் 1919-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 5-ந் தேதியிலிருந்து மே மாதம் 29-ந் தேதி வரையில் லாகூர் இராணுவச் சட்ட எல்லையின் பொறுப்பை ஏற்றுக்கொண் டிருந்தார். அவர் ஆட்சி எல்லா வகுப்பினரும் வருந்த வேண்டிய தன்மையதாக விருந்தது. உயர்ந்தோரும் தாழ்ந்தோரும் கல்லூரிகள் பலவற்றிற் படிக்கும் ஆயிரக்கணக்கான மாணவர்களும் அவரது ஆட்சியின் கொடுமையை அனுபவிக்க வேண்டியவராயினர். அவர் கொடுங்கோன்மையின் முன்னர் மிக உயர்ந்தோரும் வணங்க வேண்டியவராயினர்.

அவருடைய ஊரடங்கு முத்தரவை (Curfew Order) எடுத்துக்கொள்ளுங்கள். சிறு ஊர்களில் வசித்து இரவில் சீக்கிரமாகப் படுக்கச்செல்லும் வழக்கமுள்ள ஆண் பெண் பாலரும் சிறுவர் குழந்தைகளும் இவ்வுத்தரவினால் ஏற்படக்கூடிய அசௌகரியத்தை லாகூர் வாசிகள் உணர்வதுபோல் உணராதிருத்தல் கூடும். லாகூரில் இவ்வுத்தரவு பொறுக்கக்கூடாத உபத்திரவம் விளைப்பதாயிற்று. வைத்திய உதவியை நாடியவர்களும் அவ்வுதவியைப் பெறாதிருக்க வேண்டியவர்களானார்கள். இச்சங்கடத்தைப் பண்டித ஜகத் நாராயணர் இவ்வதிகாரிக்கு எடுத்துக்காட்டியபொழுது, அவர் "இத்தகைய கஷ்டங்களை அனுபவியாமல் நீங்கள் போர்புரிதல் முடியாது" என்று உடனே பதிலளிக்கலாயினர். கர்னல் ஜான்ஸன் வகித்த பொறுப்புள்ள பதவியிலுள்ள உத்தியோகஸ்தர் ஒருவர், எத்தகைய தீவிர கற்பனாசக்தியினாலும் 'போரியற்றுதல்' என்று வழங்கப் பெறக்கூடாத நிலைமைக்குச் சட்ட சம்பந்தமான இம்மொழியை வழங்கியிருத்தல் கூடாது. சிறப்பாக லாகூரில், பொதுவாகப் பஞ்சாபில், இருந்த நிலைமைக்கு இம்மொழியை அடைமொழியாகக் கொடுத்தது "போரியற்றுதல்" என்னும் மொழியையே தீய வழியில் உபயோகிப்பதாகும். லார்ட் ஹண்டர்

முன்னிலையிற் கொடுக்கப் பெற்ற சாட்சிய மெல்லாவற்றை யும் நாங்கள் படித்திருக்கிறோம். பஞ்சாப் "அரசரோடு போ ரியற்றியது" என்னும் கூற்றை ஆதரிக்க நாங்கள் அச்சாட்சி யத்தில் யாதொரு ஆதாரத்தையுங் கண்டிலோம். ஜனங் கள் எங்கும் ஆயுதங்களை உபயோகிக்க வில்லை யென்பதைக் கர் னல் ஜான்ஸனே ஒத்துக்கொள்ள வேண்டியவரானார். தாங்கள் தாராளமாக உபயோகித்துக் கொள்ளக் கூடிய ஆயுதங்களைப் பெற்றிருந்தோர் தாங்களும் அவைகளை உபயோகிக்க வில்லை. பிறர் உபயோகிக்குமாறும் விடவில்லை. இராணுவச் சட்ட நியாயஸ்தலத்தார் 'போரியற்றுதல்' என்னும் உரைக்கு யாது பொருள் கொண்டிருந்தனரென்பதை நாம் விரைவிற் காண் போம். ஆனால் மிக்க அனுபவமும் நெடுநாட் பழக்கமு முள்ள பிரிட்டிஷ் உத்தியோகஸ்த ரொருவர் நியாய நெறியிலிருப்போர் ஏற்றுக் கொள்ளத்தக்க எதனாலும் ஆதரிக்கப் பெறாத மிக்க பொறுப்பற்ற உரைகளை வழங்கி வந்ததையும், தாம் கூறியுள்ளது போலவே அவர் கேள்வியுற்ற விஷயங்களை ஆதாரமாகக் கொண்டு நடந்து வந்ததையும், கொடுங்கோன்மையை நியாய வழி நின்று மறுத்ததல்லாது வேறொரு குற்றமுஞ் செய்திராத ஜனங்கள் விஷயத்தில் கொடிய முறைகளைக் கைக்கொண்டதை யும் இங்கே காண்கிறோம். தெரிந்தோ தெரியாமலோ, நியாய மாகவோ நியாய விரோதமாகவோ ஊரடங்கு முத்தரவை மீறிச் சென்றவர்கள் சாதாரணமான திருந்தாத குற்றவாளிகளைப் போல் பகிரங்கமாகச் சவுக்காலடிக்கப்பட்டார்கள்.

தம் துருப்புக்களின்மேல் வெடி குண்டு எறியப்படின், 100 கஜ சுற்றளவிற்குள் இருப்போர் அதனை எறிந்ததாகக் கொள்ளப் படுவரென்றும், அவ்வெல்லைக்குள் இருப்பவர்க்கெல்லாம் வெளி யே செல்ல ஒருமணி நேர சாவகாசமளிக்கப் பெற்ற பிறகு அங்கு ள்ள கட்டிடங்களுள் மசூதிகளும் கோயில்களும் நீங்கிய மற்றவை

களெல்லாம் இடித்து நாசப்படுத்தப் படுமென்றும் தாம் விடுத்த அறிக்கையைக் கர்னல் ஜான்ஸன் வற்புறுத்திக் கூறலானார்.

அவர் 800 டாங்கா வண்டிகளைத் தம் வசப்படுத்திக் கொண்டிருந்தனர். இத்தொகை கடைசியில் 200 ஆகக் குறைக்கப் பெற்றது. இராணுவச் சட்டம் அமுலி லிருந்தவரை இவைகள் நிறுத்தி வைக்கப்பெற்றிருந்தன. இந்தியருக்குச் சொந்தமான மோட்டார் வண்டிகளை யெல்லாம் அவர் தம் வசத்திற் கொண்டு வந்து வைத்திருந்தனர். "தீங்கிழைக்கும் நோக்கத்துடன் நகரத்தைவிட்டு வெளி ஜில்லாவுக்குச் செல்லும் கனவான்களின் வேலைகளைக் குறைக்கும் பொருட்டு" அவர் இருப்புப்பாதைப் பிரயாணத்தைக் கட்டுப் படுத்தினார். லங்கர் கானாக்கள் (இலவசச் சிற்றுண்டி விடுதிகள்) மூடப்பெற வேண்டுமென அவர் ஓர் உத்தரவு பிறப்பித்தார்; உணவுப் பொருள்களின் விலைகளை வரையறை செய்தார். உத்தரவுச் சீட்டுப்பெற்று, துப்பாக்கிகளை வைத்திருந்தவர்களிட மிருந்து அவர் அவைகளைப் பிடுங்கிவிட்டார். சந்தேகமற்ற இராஜ பக்தி யுள்ளவர்கள் விஷயத்தில் அவர் காட்டிய அதியான ஊக்கம் அரசாங்கத்தாரால் கட்டுப் படுத்தப்பட வேண்டியிருந்தது. பாட்ஷாஹி மசூதி மூடப்பெற வேண்டுமென டெபுடி கமிஷனர் பிறப்பித்த உத்தரவை அவர் உறுதி செய்தனர். "பாட்ஷாஹி மசூதியில் எந்த ஹிந்துவும் பிரவேசிக்க விடப்படமாட்டார்" என்று அம்மசூதியின் பரிபாலகர்கள் இணங்கியதன் மேலேயே மசூதி திறக்கப்படுமாறு உத்தரவளிக்கப்பட்டது.

அவர் அவசர நியாயஸ்தலங்களை ஏற்படுத்தினர். அவரே வழக்குகளை விசாரணைசெய்தனர். இங்ஙனம் 277 பேர் விசாரிக்கத் பெற்றனர். அவர்களுள் 201 பேர் தண்டிக்கப்பட்டனர். மொத்த தண்டனை இரண்டு வருஷ சிறைச்சாலை வாசமும், முப்பது அடிகளும், 1000 ரூபா அபராதமுமாம்.

அவசர விசாரணை நியாயஸ்தல மாஜிஸ்டிரேட்டுகள் 800 அடிகள் அடிக்கப்பட வேண்டுமென உத்தரவு செய்தார்கள். அவை 66 பேருக்குப் பகிர்ந்து கொடுக்கப் பெற்றன. அடிகளின் உயர்ந்த தொகை 30; குறைந்த தொகை 5. இவர்கள் அங்ஙனம் அடிக்கப்படலாகாதென உத்தரவு பிறப்பிக்கப் படும் வரை பகிரங்கமாக அடிக்கப்பட்டார்கள். வைத்திய பரிசோதனை யொன்றும் அவ்வளவாகச் செய்யப்படவில்லை. இந்தத் தண்டனை கொடிய பயனை விளைக்க வல்லதென அவர் நினைக்க வில்லையா வென்று ஹண்டர் பிரபு அவரைக் கேட்டார். அதற்கு அவ்வதிகாரி "நான் அதனை நினைத்தல் முடியாது" என்று பதிலளித்து விட்டார். அவர் அபிப்பிராயத்தின்படி அது "மிக்க அன்புள்ளதான தண்டனை முறை" யாகும். நீதிபதி ராங்கினிடம் தாம் ஜனங்களைப் பயமுறுத்தியதாகவும், டஜன் கணக்கான தண்டனைகள் தவிர்க்கப் பட்டனவென்றும் அவர் சொன்னார். சிறு குற்றங்களுக்காகப் பெரும் பகுதியினரான ஜனங்கள் தண்டிக்கப் பெறும் விஷயத்தில் சவுக்கடியே மிக்க சௌகரியமானதும் பயன் விளைக்கக் கூடியதுமா யிருப்பதெனச் சொல்லுதல் சிறிது கொடுமையானதென நினைத்து, அது வழக்கத்திற்கு மாறான முறையல்லவாவென நீதிபதி ராங்கின் கர்னல் ஜான்ஸனைக் கேட்டபொழுது, பின்னவர் "நான் உங்கள் அபிப்பிராயத்தைக் கொண்டிருக்கவில்லை. மிகப் பெரிய ஜனத்தொகை யிருக்கின்றது. இவ்வுத்தரவுகள் பிறப்பிப்பதனால் நீங்கள் புதிய குற்றங்களை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். சிறைச்சாலை யொன்றே தண்டனையாக விருப்பின், இங்குள்ள ஜனங்கள் அதனால் அதிகமாகப் பாதிக்கப்பட மாட்டார்கள். இந்நகரத்திலுள்ள குடும்ப வாழ்க்கையின் சாதாரண நிலையை உற்று நோக்குங்கால் சிறைச்சாலை எவ்வளவோ சௌகரியமான இடமாகும். செண்ட்ரல் ஜெயிலில் அவர்களுக்கு நல்ல உணவு அளிக்கப்படுகின்றது.

அதன் நிலைமை ஒருவருக்கு விரைவில் பழக்கமாகிவிடும். அவர்க ளெல்லோரையும் நாங்கள் அங்கே கொண்டுபோக விருந்தோம். சிறைச்சாலை நிரம்பிவிடுமென நான் பயந்தேன்" என்று பதி லளித்தனர். இன்னேரிடத்தில் அவர் சவுக்காலடித்தலின் மதிப்பு 1000 போர் வீரர்களுக்குச் சமமானதென்று சொல்லுகி ருர். மேற்கண்ட நியாயத்தைக் கையாண்டதில் கர்னல் ஜான்ஸன் அநாகரிகமுள்ள தண்டனையொன்றை ஆதரிக்கும் பொருட்டு அநாகரிகமுள்ள நியாயங்களை எடுத்தாண்டதாக நாங்கள் கருது கிறேம். பஞ்சாப் அரசாங்கத்தார் அவருக்குக் கொடுத்திருந்த பதவியைப் போன்ற பொறுப்புள்ள பதவியொன்றை வகிக்க அவர் யோக்கியரல்லரென்பதை இவ்வொரு விஷயமே விளக்கிக் காட்டுகின்றது. இவைகள் தான் சவுக்கடி தண்டனைகளென்று நாம் கருதுதல் கூடாது. அவசர நியாயஸ்தலங்களினுல் குறிப் பிடப்பெற்ற தண்டனைகளை அவர் வழங்கியிருக்கிருர். ஆனல் குறிப்பிடப்பெருத தண்டனைகள் குறிப்பிடப்பெற்ற தண்டனை களைக் காட்டிலும் அதிகமாயிருந்தன. நாங்கள் லாகூரில் சேக ரித்துள்ள 170-க்கு மேலான வாக்குமூலங்களை உற்று நோக் குங்கால், உயர் பதவிகளிலுள்ள அரசாங்க உத்தியோகஸ்தர்களின் மன நிலை மிகத் தாழ்ந்த பதவிகளிலுள்ள உத்தியோகஸ்தர்களிட மும் பாய்ந்து வந்திருக்கிறதென்பதையும், அம்மனே நிலை வடி கட்டப் பெற்று வந்ததனுல் மிகவும் நுண்ணியதாகிச் சிறு கார ணத்திற்காகவும் நிலை குலையுந் தன்மையதாக விருந்து யாதொரு தடையுமின்றி ஜனங்கள் விஷயத்தில் உபயோகிக்கப் பெற்ற தென்பதையும் காட்டுகின்றன.

அவருடைய இருப்புப்பாதைப் பிரயாண உத்தரவு பொது வாயிருந்ததுடன், சிறப்பாக நியாயவாதிகளின் குமாஸ்தாக்களை யும் சேவர்களையும் பாதிப்பதாயிருந்தது. ஸர் ஸி. ஸேதல்வாத் பின்வருமாறு கேட்டனர்: "6-ம் நம்பர் உத்தரவில் நியாயவாதி

களின் முன்ஷிகளும் ஏஜெண்டுகளும் சப்ராஸிகளும் இராஜத் துரோகப் பிரசார வேலே செய்து வந்தார்களென நம்ப எனக்குக் காரண முண்டு' என்று சொல்லுகிறீர்கள். எனவே அவர்கள் அனுமதியின்றி லாகூர் ஸிவில் கமாண்டை விட்டுப் போகக் கூடாதென ஓர் உத்தரவு பிறப்பித்து, தம்மால் நேராகவோ பிறர் மூலமாகவோ வேலேயில் வைத்துக்கொள்ளப் பட்டுள்ள முன்ஷி, ஏஜெண்ட், சப்ராஸி முதலியவர்களின் முழுப் பட்டியை ஒவ்வொரு நியாயவாதியும் கொடுத்தல் வேண்டுமென உத்தரவு செய்தீர்களா?" கர்னல் ஜான்ஸன் தாம் அங்ஙனஞ் செய்ததாக மறுமொழி கூறினர். தமக்கு யாது சாட்சிய முளதென்று கேட்கப் பெற்றபொழுது அவர் அஃதெல்லாம் வாய்மொழியாகக் கிடைத்ததென்பதை ஒத்துக்கொண்டார்.

நியாயவாதி வகுப்பினரின் மேலுள்ள இப்பகை எவ்வளவு தூரம் கொண்டு செல்லப் பட்டதென்பதும், பஞ்சாபிற்கு வெளியிலுள்ள நியாயவாதிகள், அவர்களும் இராஜத் துரோகத்தைப் பரப்புவார்களென்னுங் காரணத்தால், எங்ஙனம் பஞ்சாபிற் பிரவேசிக்க அனுமதி யளிக்கப் பெறவில்லேயென்பதும் நாம் நன்குணர்ந்த விஷயங்களே. மிக்க அனுபவமும் கல்வித் தேர்ச்சியும், மதிப்பும், இராஜபக்தியும், பயங்காளித்தனமெனக் கொள்ளத்தகும் எச்சரிக்கையுமுள்ள நியாயவாதியான மிஸ்டர் மனோஹரலாலும் இராணுவச்சட்ட அதிகாரிகளின் கவனத்திலிருந்து தப்பியிருக்கலாமென எண்ண முடியாம லிருந்தார். அவர் பஞ்சாப் சர்வகலாசாலேயில் எம். ஏ. பட்டம் பெற்றவர்; கேம்ப்ரிட்ஜ் சர்வ கலாசாலேயில் பி. ஏ. பட்டம் பெற்றவர்; பஞ்சாப் சர்வகலாசாலேயின் கௌரவ அங்கத்தினர்; ஸிண்டிகேட்டில் அங்கத்தினர். அவர் கேம்ப்ரிட்ஜ் செயிண்ட் ஜான்ஸ் கல்லூரியில் பௌண்டேஷன் ஸ்காலராயிருந்ததுடன் இன்னும் பல யோக்கியதைகளு முடையவர். அவர் ஹைகோர்ட் நியாயவாதி

சங்கத்தின் உதவித்தலைவர்; பார்மன் காலேஜ் பட்டதாரிகள் சங்கத் தலைவர். அவர் "ட்ரிபியூன்" பத்திரிகையின் போஷகர்களுள் ஒருவரென்னும் முறையில், ஏப்ரல்மாதம் 18-ந் தேதி காலை 7-30 மணிக்குக் கைது செய்யப்பட்டார். அவர் மேல் வாரண்ட் பிறப்பிக்கப்படவில்லை. குற்றம் யாதென்பதும் அவருக்கு அறிவிக்கப்படவில்லை. அவர் இவ்விஷயமாகப் பின்வருமாறு கூறுகின்றனர்: "நான் என் வீட்டில் கைது செய்யப்பெற்றபொழுது, என் மனைவியிடமும் குழந்தைகளிடமும் விடைபெற்றுக் கொள்ள இரண்டு நிமிஷ நேரமும் எனக்குக் கிடைக்கவில்லை. நான் எங்கே கொண்டுபோகப்படுவே னென்பதும் எனக்கு அறிவிக்கப்படவில்லை. பிற்பகல் சுமார் 2 மணிக்குப் போலீசார் என்னைத் தந்தியாபீசிலிருந்து லாகூர் செண்ட்ரல் ஜெயிலுக்குக் கொண்டுபோயினர். அங்கே நுழைவாயிலில் கைக்கெடியாரம், சங்கிலி, எழுதுகோல், சில்லரையாயிருந்த பணம் முதலியவைகளை எடுத்து வைத்தலும், என் பெருவிரலால் மாத்திரம் ரெஜிஸ்டரில் பதிவு செய்தலுமான வழக்கமான சடங்குகள் நிறைவேறியதும், சிறைச்சாலையின் 14-வது வார்டிலுள்ள ஓரறைக்குள் என்னை அழைத்துச் சென்றனர். இந்த வார்ட் கடுந்தண்டனை விதிக்கப்பெற்ற குற்றவாளிகளுக்காகவும், மரண தண்டனை முதலிய கடுந்தண்டனை யடைய வேண்டியவர்களுக்காகவும் பிரத்தியேகப்படுத்தி வைக்கப் பெற்றுள்ள இடம். இவ்வறையில் சிறிது நேரத்திற் கப்பால் ஆபாசமான கம்பளங்களிரண்டும், சாப்பிடவும் தண்ணீர் குடிக்கவும் இருப்புக்குவளைக ளிரண்டும் எனக்குக் கொடுக்கப்பெற்றன. சுமார் மூன்று மணி நேரத்திற்குப் பிறகு என்னைச் **சக்கிஸ்** என்று வழங்கப்பெறும் சிறைச்சாலையின் மற்றொரு பாகத்திற்கு மாற்றினர். அங்கே தானிய மறைக்கும் வசதிகளுடன் பல அறைகள் வரிசையாக அமைக்கப் பெற்றிருக்கின்றன. நான் இவ்வறைகளை வருணிக்க விரும்ப

வில்லை. ஏனெனில் அவைகளை எளிதிற் கண்டு கொள்ளலாம். எங்களுடைய சுகாதார ஏற்பாடுகளெல்லாம் அச்சிற்றறைகளுக்குள்ளேயே செய்யப்பட்டிருந்தன. அங்கே துர்நாற்றம் வீசும் மட் பாண்டங்கள் வைக்கப் பெற்றிருக்கும். அவை ஒரு நாளைக்கு இரு முறை சுத்தஞ் செய்யப்படும். இச்சிற்றறையில் இருந்து வந்தபொழுது, குறிப்பிடப் பெற்ற 50 கஜ தூரம் காலையில் நடந்து சென்று வரவும், வேண்டுமாயின் உடலைச் சுத்தஞ் செய்து கொள்ளத் தண்ணீர்க் குழாய்க்குச் செல்லவும் அனுமதியளிக்கப்பெற்றேன். நான் வீட்டிலிருந்து தரித்துச் சென்ற உடையைத் தவிர என்னிடம் வேறு உடைகளில்லை. 21-ந் தேதி திங்கட்கிழமை பிற்பகலே, என் குமாரன் என்னைப் பார்க்க வந்தபொழுது கொண்டு வந்திருந்த உடைகள் சில எனக்குக் கொடுக்கப்பெற்றன.

"நான் கைது செய்யப்பெற்ற அன்றையதினம் பிற்பகல் வெகு நேரம் வரையில் என்னை எங்கே சிறைப்படுத்தி யிருந்தார்களென்பது என் மனைவி மக்களுக்குத் தெரியாது. சனிக்கிழமை பிற்பகல் சிறைச்சாலை மேற் பார்வை அதிகாரியின் மூலமாக அனுப்பக் கூடிய கார்டைத் தவிர நான் என் மனைவி மக்களுக்கு வேறு கடிதப் போக்கு வரவு செய்ய அனுமதியளிக்கப்பட்டேனில்லை.

"ஏப்ரல் மாதம் 21-ந் தேதி திங்கட்கிழமை என் நண்பர் பாரிஸ்டர் கண்வர் தலிப் என்பவரும் என் குமாரனும் சிறைச்சாலையில் என்னைப் பார்க்க வந்திருந்தனர். ஆனால் அவர்களில் ஒருவருடன் பேசவே நான் அநுமதியளிக்கப் பெற்றிருந்தமையின், சிறைச்சாலை டாரோகாவின் முன்னிலையில் நான் என் பாரிஸ்டர் நண்பரோடு சில நிமிஷ நேரம் பேசியிருந்தேன். என் குமாரனுடன் ஒரு நிமிஷ நேரம் பேசவேண்டுமென்ற என்

வேண்டுகோள் மேற் பார்வை அதிகாரி மிஸ்டர் கவன் என்பவ ரால் மறுக்கப்பெற்றது.

"23-ந் தேதி புதன்கிழமை நான் ஐரோப்பியர் வார்டுக்கு மாற்றப்பட்டேன். அங்கே சுயேச்சையாய்ப் போய்வரச் சுதந் தரமும், தாராளமான இடமும், ஸ்நான முதலியவைகள் செய்ய வசதிகளும் புத்தக சாலையும் இருந்ததன் காரணமாக எனக்கு மிக்க சௌகரிய மேற்பட்டிருந்தது.

"நான் மே மாதம் 16-ந் தேதி காலை விடுவிக்கப் பெறும் வரை இந்த வார்டிலேயே வசித்துவந்தேன். இக்காலத்தில் நான் என் நண்பர்களையும் உறவினர்களையும் மும்முறை கண்டு பேசி யிருக்கிறேன். ஒரு முறை நான் சிறிது நேரமே பேச விடப் பெற்றேன். இரண்டா முறை, நியாயவாதிகளின்றிச் சிறைச் சாலையிலிருக்கும் கைதிகளுக்காக அரசாங்கத்தாரால் நிறுத்தி வைக்கப் பெற்றிருந்த கண்வர் தலிப்புடன் பேசலானேன். மூன்று முறை லாகூர் வழியாகச் சென்றுகொண்டிருந்த என் சகோதரனிடம் பேசினேன்.

"இவ்வளவு காலம் முழுவதும் என் மேற் சாட்டப் பெற்ற குற்றம் யாதென்பது எனக்கு அறிவிக்கப்படவில்லை. நான் முழுவதும் சந்தேகப் படத்தக்க மன நிலையில் விடப்பெற்றிருந் தேன்." மிஸ்டர் மனோஹரலால் தம் மனைவி மக்களுக்கு யாது நேர்ந்ததென்பதையும் பின் வருமாறு அறிவிக்கிறார்: "நான் கைது செய்யப்பட்ட பிறகு என் வீடு சோதனை செய்யப்பட்ட தென்பதைச் சிறைச் சாலையில் நண்பர்களுடன் பேசியபொழுது அறிந்து கொள்ளலானேன். நான் கைது செய்யப்பட்ட முக் கால் மணி நேரத்திற்குள் வீடு பூட்டப்பட்டது. சுகவீனமாயிருந்த என் மனைவியும், குழந்தைகளும் காம்பவுண்டிலிருந்த வேலைக் காரர் விடுதிகளிலும் சமையலறையிலும் தங்கியிருந்து, நண்பர் களாற் கொடுக்கப்பெற்ற படுக்கைகளைப் பெறவேண்டியவர்களா

ஞர்கள். எப்ரல்மீ 19-ந் தேதி வீடு சோதனை செய்யப்பட்டது. அன்று மாலை 6 மணிக்கு என் குடும்பத்தார் வீட்டுக்குத் திரும்பிச் சென்றனர்."

இரண்டு மூன்று அரிய புத்தகங்கள் போலீசாரால் கொண்டு போகப்பட்டன. அவர் இவ்வாச்கு மூலங் கொடுக்கு நாளளவும் அவை திருப்பியளிக்கப் படவில்லை. அவர் தாம் கைது செய்யப்பெற்ற வரலாற்றைப் பின்வருமாறு முடிக்கின்றனர்: "நான் கைது செய்து காப்பில் வைக்கப்படுமாறு என்ன குற்றஞ் செய்தேனென்பதை இன்றளவும் அறிந்துகொண்டேனில்லை."

தாம் கைது செய்யப்பட்டதற்கு யாது காரண மிருக்கலாமென்பதை அனுமானித்து அவர் சொல்வதாவது. "என், உத்தியோக முறையிலுள்ள கடமைகள் அனுமதியளிக்கும்வரை, நான் மாணவனுகவே இருந்துவந்ததன்பயனுக நகரத்தின் ஊக்கமுள்ள வாழ்க்கையில் தலையிடாமலிருக்கிறேன். டெபுடி கமிஷனர் ஜனப் பிரதிநிதிகளைக் கூட்டிய பல கூட்டங்களுக்கு நான் ஒருபொழுதும் அழைக்கப்படவில்லை. நான் வேறு வழியிலும் அங்கே சென்றிருக்கவில்லை. வேலை நிறுத்தத்தை யொழிக்க வழிதேடும் பொருட்டுச் சில கனவான்கள் கூட்டிய கூட்டங்களுக்கும் நான் சென்றேனல்லேன்." நன்ருக ஆராய்ந்துணராது மனோஹரலால் போன்ற ஒருவரைக் கைதுசெய்ய உத்தரவளிக்கும் உத்தியோகஸ்தரொருவர் கர்னல் ஜான்ஸன் வகித்த பெரிய பதவியைக் கைக்கொண்டிருக்க யோக்கியதையுடையவராகார். அரசர் பெருமானுரின் இராணுவ உடை தரிக்குமொருவர் கொள்ளக் கூடாதவிதமாக இந்தியரின் மதிப்பில் கொண்டிருந்த வெறுப்பை இது நன்கு புலப்படுத்துகின்றது.

இவ்வாலோசனையுள்ள அதிகாரி எற்படுத்திய இன்னெரு உபத்திரவம் யாதெனில், 'தீய போக்குள்ளவர்க' ளெனக் கருதப்படுவோர் வீடுகளில் தம் அறிக்கைகளை ஒட்டி வைத்ததேயாம்.

இவ்வறிக்கைகள் அழுக்காக்கப்பட்டாலும் வீடுகளின் சொந்தக்காரர்கள் உத்தரவாதிகளாக்கப் பட்டார்கள். 'தீய போக்குள்ளவர்கள்' யாவரென்பதை விளக்கிக் கூறுமாறு ஸர் சிமன்லால் அவரைக் கேட்டு, அவரால் சந்தேகிக்கப் பட்டவர்களே கொடிய போக்குள்ளவர்களாவென வினவினர். கர்னல் ஜான்ஸன், ஆச்சரியப்படும் வண்ணம் பின்வருமாறு பதிலளித்தனர். "நீங்கள் அங்ஙனம் கூறின் நான் அதை மறுக்கவில்லை." "உம்முடைய மனதில் என்ன இருந்ததென்பதை நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்" என்று ஸர் சிமன்லால் மறுபடியுங் கேட்கலாயினர். கர்னல் ஜான்ஸன் பின்வருமாறு பதிலளித்தனர்: "வெளிப்படையான இராஜ பக்தியுடையவர்களெனக் கருதப் படாதவர்கள் அவ்வேலையில் பழக்கப்படவேண்டுமென நான் எண்ணினேன். இக்குணத்திற் குறைபாடுள்ளவர்களைக் ...ற்ற பரிசீலனை இலாகா உத்தியோகஸ்தர்கள் தெரிந்தெடுக்கலானார்கள்." இவ்வேலையினால் ஒவ்வொருநாளும் 24 மணிநேரம் அறிக்கைகளைப் பாதுகாத்துக் கொண்டிருத்தல் அவசியமல்லவாவென ஸர் சிமன்லால் கேட்டனர். அங்ஙனம் காக்கவேண்டிய தன் அவசியத்தைக் கர்னல் ஜான்ஸன் ஒத்துக் கொண்டார். ஆனால் அது முற்றிலும் நியாயமானதெனத் தெரிவித்தார். எவ்வழியிலும் இத்தகைய உத்தரவு பொறுக்கக் கூடாததாயிருந்ததெனினும், ஒரு கலாசாலை முழுவதும் பொறுப்புள்ளதாகச் செய்யப்பட்டபொழுது அஃது ஆயிரம் மடங்கு பொறுக்கக் கூடாததாய்விட்டது.

இவ்வரலாறு, கலாசாலை போதகாசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் செய்யப்பட்ட கொடுஞ் செயல்களைக் கவனிக்கச் செய்கின்றது. கர்னல் ஜான்ஸனுடைய மனநிலையை உணர்த்தும் பொருட்டு, ஸர் சிமன்லாலுக்கும் கர்னல் ஜான்ஸனுக்கும் நடந்த சம்பாஷணையைக் கீழே குறிப்பிடுகின்றோம்:

வினு:—அவ்வறிக்கையை ஒட்டி வைப்பதற்காகத் தெரிந்தெடுக்கப்பட்ட கட்டிடங்களுள் ஸனுதன தர்ம கலாசாலையும் ஒன்றல்லவா ?

விடை:—அங்ஙனந் தெரிந்தெடுக்கப் பெற்றதாகவே நம்புகிறேன்.

வினு:—பிறகு சேர்க்கப் பெற்றதெனினும், அந்தக் கலாசாலை முதலில் தயாரிக்கப்பட்ட பட்டியில் குறிப்பிடப் படவில்லையே ?

விடை:—ஆம்; பட்டி பிறகு திருத்தி யெழுதப்பட்டது.

வினு:—இக்கலாசாலையின் வெளிச்சுவர்களின் மேல் ஒட்டி வைக்கப் பெற்றிருந்த அறிக்கையை யாரோ கிழித்துவிட்டார்களென்ருே ?

விடை:—இச்செய்தி தான் எனக்கு அறிவிக்கப்பட்டது. அதைப் போலீசார் அறிவிக்கவில்லை. யாரோ ஒருவர் அறிவித்தனர்.

வினு:—கலாசாலை ஹாஸ்டல்களிலுள்ள மாணவர்களெல்லோரும் கைது செய்யப்பட்டனரென்பது உண்மையா ?

விடை:—அவ்வெல்லைக்குள் காணப்படும் ஒவ்வொரு புருஷனும் கைது செய்யப்பட வேண்டுமென உத்தரவு செய்தேன்.

வினு:—எத்தனை பேர் கைது செய்யப்பட்டனர் ?

விடை:—500.

வினு:—இவ்வறிக்கை நாசப்படுத்தப் பட்டதற்காக 500 மாணவர்கள் கைது செய்யப்பட்டார்களோ ?

விடை:—போதகாசிரியர்களும் கைது செய்யப்பட்டார்கள்.

வினு:—அங்ஙனம் கைது செய்யப்பட்டவர்களெல்லோரும் கலாசாலையிலிருந்து மூன்று மைல் தூரத்துக்கப்பாலுள்ள கோட்டைக்கு நடத்திச் செல்லப்பட்டனரா ?

விடை:—ஆம்.

வினு :—அங்ஙனம் நடத்திச் செல்லப்பட்டபொழுது அவர்கள் தங்கள் படுக்கைகளைத் தலைமேலாவது தோளின்மேலாவது எடுத்துப் போகுமாறு உத்தரவு செய்யப்பட்டார்களா ?

விடை :—அவர்கள் தங்கள் படுக்கைகளை எடுத்துச்செல்ல விரும்பி யிருந்தால் எடுத்துச் சென்றிருத்தல் கூடும்.

வினு :—அவர்கள் அவைகளை எடுத்துச் செல்லுமாறு கட்டாயப் படுத்தப்படவில்லையா ?

விடை :—நான் அதைப்பற்றி யாதொரு உத்தரவும் செய்யவில்லை. அவர்கள் அவைகளை எடுத்துச்செல்ல விரும்பி யிருப்பின், எடுத்துச் சென்றிருக்கலாம்.

வினு :—லாகூர் கோடை நாளிலா ?

விடை :—மே மாதத்திலொருநாள்.

வினு :—லாகூரில் மிகவும் உஷ்ணமா யிருக்கவில்லையா ?

விடை :—ஆம்.

வினு :—இந்த 500 மாணவர்களும் போதகாசிரியர்களும் மூன்று மைல் தூரம் நடத்திச் செல்லப்பட்டார்களா ?

விடை :—ஆம்.

வினு :—அவர்கள் உத்தரவின்படி கோட்டையில் வைக்கப்பெற்றிருந்தார்களா ?

விடை :—ஆம், அங்ஙனம் வைக்கப்பட்டிருந்தார்கள்.

வினு :—அவர்கள் அங்கே எவ்வளவு காலம் வைக்கப்பட்டிருந்தார்கள் ?

விடை :—ஒருநாளென நினைக்கிறேன். மன்னிக்க வேண்டும், இரண்டுநாள்.

வினு :—அறிக்கைகள் பாதுகாக்கப் படும் விஷயமாகக் கலாசாலைத் தலைவரிடமிருந்து சில நிபந்தனைகளை ஏற்றுக் கொண்ட பிறகு அவர்கள் விடுவிக்கப் பட்டார்களா ?

விடை:—ஆம். இத்தகைய சம்பவம் இனி நிகழாதென உறுதிமொழி பெற்றுக்கொண்ட பின் விடுதலை செய்தேன்.

வினா:—கர்னல், நீவிர் கைக்கொண்ட முறை நியாயமானதென நினைக்கின்றீரா?

விடை:—ஆம். நான் அதை எதிர் பார்த்துக்கொண்டிருந்தேன். இத்தகைய சந்தர்ப்பத்தையே எதிர் நோக்கிக்கொண்டிருந்தேன்.

வினா:—இவ்வுத்தரவு நியாயமானதென நீவிர் அப்பொழுதும் நினைத்து இப்பொழுதும் நினைக்கின்றீரா?

விடை:—சந்தேகமில்லாமல்.

வினா:—கர்னல், நீவிர் உம்முடைய அறிக்கையிற் குறிப்பிட்டிருப்பது போல் அவர்களுக்கு இராணுவச் சட்டத்தின் வல்லமையை உணர்த்த வேண்டுமென்னும் மன நிலையைக் கொண்டிருந்தீரா?

விடை:—அங்ஙனந்தான் கொண்டிருந்தேன்.

வினா:—நீவிர் அத்தகைய சந்தர்ப்பத்தை ஆவலோடு எதிர் பார்த்துக்கொண்டிருந்தீரோ?

விடை:—ஜனங்களின் நன்மையை நாடியே எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

வினா:—அஃது அவர்களுடைய நன்மைக்காக அல்லவென நான் சொல்லவில்லை; அங்ஙனமிருப்பினு மிருக்கலாம். ஆனால் இராணுவச் சட்டத்தின் பராக்கிரமத்தைக் காட்டுவதற்காக நீவிர் சமயம் பார்த்துக் கொண்டிருந்ததுண்டா?

விடை:—ஆம்.

வினா:—அந்தச் சமயம் உமக்குக் கிடைத்ததா?

விடை:—ஆம், அதைக் கைப் பற்றிக்கொண்டேன்.

வினா:—இச்சந்தர்ப்பத்தைக் கைப் பற்றி நீவிர் 500 மாணவர்களையும் கொடிய வெயிலில் கோட்டைக்கு நடத்திச்சென்றீரா?

விடை :—ஆம்.

வினு :—நீவிர் உமது அதிகாரத்தைக் கிரமமாக உபயோ கித்ததாக இன்னும் கூறுகிறீரா?

விடை :—ஆம். சந்தர்ப்பங்களுக் கேற்பத் தேவையாயின், நாளைய தினமும் மறுபடியும் அங்ஙனஞ் செய்வேன்.

கர்னல் ஜான்ஸன் கூறியுள்ள மிகக் கொடிதான கடைசி மறுமொழி, அவர் போர்க்களத்திடையே யிருந்தபொழுது கூறப் படாமல் தாம் லாகூரில் வகித்த அதிகாரத்தை விடுத்த ஆறுமாத காலத்திற்குப் பிறகு, 1919-ம் வருஷம் நவம்பர் மாதம் 24-ந் தேதி கூறப்பட்டது. இவ்வறிக்கை யாராலேனும் வேண்டு மெனச் சின்னு பின்னப் படுத்தப்பட்டது உண்மையாயின், அவர் விசாரணை செய்யக் கடமைப்பட்டிருந்தாரேயன்றி, போத காசிரியர்களையும் மாணவர்களையும் திடீரெனத் தண்டித்தல் நியாயமன்று. ஆனல் கர்னல் ஜான்ஸன் வெட்டொன்றுந் துண்டிரண்டுமாக இராவிடில் அவருடைய யோக்கியதைக்கு அழ காகாது. எனவே அவர் டி. ஏ. வி. கலாசாலை, தயாள் கலா சாலை, வைத்திய கலாசாலை முதலியவைகள் விஷயத்தில் நட வடிக்கை எடுத்துக்கொண்டார். அவர் நடவடிக்கை எடுத்துக் கொண்டது தண்டனை செய்வதற்காக வன்றி, மாணவர்கள் குறும்பு செய்யாமலிருக்கும் பொருட்டேயாகும். காலையில் 7 மணிக்கும் 11-மணிக்கும், மாலையில் 3-மணிக்கும் 7-30-மணிக் கும் ஒரு நாளைக்கு நான்கு முறை மாணவர்களின் பெயர்கள் கூப்பிடப்பட்டு அவர்கள் ஆஜரா யிருக்கிறார்களாவென்று பார்க்கப் படவேண்டுமென உத்தரவு செய்யப்பட்டது. "வைத்திய மாணவர்கள் ஒரு நாளைக்கு நான்கு முறை ஆஜராகும் பொருட்டு மொத்தத்தில் பிரதிதினமும் 17 மைல் நடக்கவேண்டி யிருந்தது உண்மை தானு?" என்று ஸர் சிமன்லால் கேட்டனர். கர்னல் ஜான்ஸன் அதற்குப் பின்வரும் போக்கிரித்தனமான பதிலைத்

தெரிவித்தார் :—"16 மைல் தான் இருக்குமென நினைக்கிறேன்; நான் அதை அளந்தேன்." பின்னும் ஸர் சிமன்லால் இங்ஙனங் கேட்டனர் : " அவர்கள் இங்ஙனம் மூன்று வார காலம் லாகூரின் கொடிய வெயிலில் பிரதிதினமும் நடந்து செல்லவேண்டியிருந்ததா ?"

விடை :—வைத்தியச் சீட்டுப் பெற்றிருந்தாலன்றி அவர்கள் அங்ஙனமே நடந்து வரவேண்டியவர்களா யிருந்தார்கள்.

வினா :—கர்னல், மாணவர்கள் குறும்பு செய்யாதிருக்கும் பொருட்டு இத்தகைய உத்தரவு செய்தல் நியாயமானதென அப்பொழுதும் எண்ணி இப்பொழுதும் அதனைக் கூறுகின்றீரா ?

விடை :—அப்பொழுது நான் அங்ஙனமே கருதினேன்.

வினா :—இப்பொழுதும் உமது அபிப்பிராயம் அது தானா ?

விடை :—முற்றிலும் அதுதான்.

வினா :—லாகூரின் கொடிய வெயிலில் மாணவர்களை மூன்று வாரம் பிரதிதினமும் நடக்கச் செய்ததனால் அவர்களுக்குக் கஷ்டமேற்பட்டிருக்குமென நீவிர் எப்பொழுதேனும் எண்ணியதுண்டா, இப்பொழுதேனும் எண்ணுகிறீரா ?

விடை :—கஷ்டமொன்றுமில்லை.

தம்முடைய விபரீதமான செய்கைக்குக் கர்னல் ஜான்ஸன் கூறியுள்ள விபரீதமான காரணத்தை நாங்கள் அவர் மொழிகளிலேயே தெரிவித்தல் வேண்டும் :

வினா :—கர்னல், நான் மறுபடியும் உம்மைக் கேட்கின்றேன். ஆயிரக்கணக்கான மாணவர்களை, ஆஜராகும் விஷயத்தில் இங்ஙனம் நடத்தியதனால் தங்கள் ஆயுட்காலம்வரை பிரிட்டிஷ் அரசாங்கத்தார்மீது கடும்பகை கொண்டிருக்குமாறு அவர்களை நீவிர் தூண்டிவிட்டதாக எப்பொழுதேனும் உமக்குத் தோன்றியதுண்டா ?

விடை :—தோன்றியது. ஆயினும் இக்கலாசாலைகளில் அராஜகம் மிகுதியாக விருந்தபடியால் நான் செய்வதொன்றாலும் அவைகள் கெட்டுப்போக மாட்டாவெனக் கருதலானேன்.

வினா :—நீவிர் அவர்களை இங்ஙனம் நடத்தியதனால் அவர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு விரோதமாக நிற்பார்களென்பது உமக்குத் தோன்றியிருந்தும், நீவிர் அவர்களை அதிகக் கொடியவர்களாக்க முடியாதபடி அவர்கள் நிலையான அராஜகர்களெனக் கருதியிருந்தீரென நான் நீவிர் சொல்வதற்குப் பொருள் கொள்ளலாமா ?

விடை :—உங்களுடைய விளக்கத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆயினும் கலாசாலைகளின் நிலைமை நீங்கள் பாழ்படுத்த முடியாத வாறிருந்தது.

வினா :—நீவிர் கைக்கொண்ட முறைகளினால் அதனை ஒழுங்குபடுத்தியதாக எண்ணுகிறீரா ?

விடை :—நிச்சயமாய் நான் அதனைப் பாழ்படுத்தவில்லை.

வினா :—நீவிர் அதனை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தீரோ ?

விடை :—நான் அவர்களை இராஜபக்தர்களாக்கும்பொருட்டுச் சென்றிருக்கவில்லை. அவர்கள் தீமை செய்யாதவாறும் வெளி ஜில்லாக்களுக்குச் செல்லாதவாறும் பார்த்துக்கொள்ளவே சென்றிருந்தேன்.

வினா :—உம்முடைய வேலை பயன் பெற்றதா ?

விடை :—ஆம்.

வினா :—அது தான் மேலான வழியென நீவிர் நினைக்கிறீரா ?

விடை :—நான் நினைக்கக் கூடிய மேலான வழி அதுதான்; இரண்டு வழிகள் தான் உள்ளன. ஒன்று கலாசாலைகளை மூடிவிடுவது ; இன்னொன்று அவர்களைச் சட்டப்படி நடத்துவது.

வினு :—மிக்க கொடுமையான முறைகளை அனுசரிப்பதனு லேயே இந்நாட்டு ஜனங்கள் அரசாங்கத்தாரிடம் விசுவாசமும் நல்லெண்ணமும் கொண்டிருக்குமாறு செய்யப்படலாமென்பது உமது அபிப்பிராயமென நான் கொள்ளவேண்டுமோ?

விடை :—நான் வேறு வழியாகக் கூறுகிறேன். அங்ஙனம் சந்தேகிக்கப் பெற்ற அராஜகத்திற்கு ஒரு தண்டனை யுண்டு.

வினு :—ஆயிரக் கணக்கான இம்மாணவர்களுள் முற்றிலும் குற்ற மற்றவர்களான பலர் இருப்பரென உமக்கு எப்பொழு தேனும் தோன்றியதுண்டா?

விடை:—ஆம். நான் சிலரைத் தண்டனையினின்றும் விலக்கி யிருக்கிறேன்.

மாணவர் சிலர் ஆங்கிலேய மாதர்களை இழிவுபடுத்தியதாகக் கர்னல் கருதியிருந்தார். இக்குற்றம் நியாயமானதெனக் கருதப் படுமாறு எமக்கு ஓர் ஆதாரமுங் கிடைத்திலது. தம் அபிப்பிரா யத்தை ஆதரிக்குமாறு அவரே யாதொன்றையும் காட்டினுரில்லை. ஆனுல் அவர் இவ்விஷயமாகக் கலாசாலைத் தலைவர்களை ஒருங்கு கூட்டினுர். அவர் அவர்களுடன் 'அமைதியாக'ப் பேசி, தக்க தண்டனை விதிக்கப் பெறுமாறு ஆலோசனை கூறுமாறு அவர் களைக் கேட்டுக் கொண்டனர். தாங்கள் தக்க தண்டனையெனக் கருதியதைக் கலாசாலைத் தலைவர்கள் தெரிவிக்கலானுர்கள். தண்டனைகளிற் சில போதாவெனக் கொண்டு, தண்டனைகள் அதிகப்படுத்தப் பட்டாலன்றி, கலாசாலைகள் மூடப்பெற்று மாண வர்கள் பரீட்சைகளுக்குச் செல்லவொட்டாமல் தடுக்கப்படுவார் கள் என்று அவர் கலாசாலைத் தலைவர்களுக்குத் தெரிவித்தார். இங்ஙனமே 1011 மாணவர்கள் தண்டிக்கப் பெற்ருர்கள். தயாள் சிங் கலாசாலையில் ஆங்கில போதகாசிரியராயுள்ள மிஸ்டர் சாந்த ராம் க்ரோவர் எம். ஏ. பி. எஸ். ஸி., பின்வருமாறு கூறுகிருர் :—

"வேலை நிறுத்த நாட்களில் என் கலாசாலை மாணவர்களின் போக்கில் நான் யாதொரு மாறுதலையுங் காணவில்லை. அவர்களுள் எவரும் விரும்பத்தகாத விதம் நடந்து கொண்டதாகவும் எனக்கு ஞாபகமில்லை.

"இன்னும் பல கட்டிடங்களைப் போலவே எங்கள் கலாசாலையும் இராணுவச் சட்ட அறிக்கைகள் ஒட்டப் பெறுவதற்காகத் தெரிந்தெடுக்கப்பட்டது. இராணுவச் சட்டம் அறிவிக்கப்பட்ட பத்து நாட்களுக்குப் பின்னர், அறிக்கையோடு ஒட்டப்பட்டிருந்த அராஜகத் துண்டுக் கடிதத்தை எழுதியவர் கண்டு பிடிக்கப்பட்டு மறுநாள் பகல் 12 மணிக்குள்ளாகக் கமாண்டிங் ஆபிசரிடம் அறிவிக்கப்பட வேண்டுமென ஒருநாள் மாலை 7 மணிக்கு எங்கள் கலாசாலைத்தலைவருக்கு ஓர் அறிக்கை அனுப்பப்பட்டது. அராஜகத் துண்டுக் கடிதத்தை எழுதியவரைக் கண்டு பிடிக்கும்பொருட்டுக் கலாசாலையின் போஷகர்களும், போதகாசிரியர்களும் மாணவர்களும் மறு நாட் காலையில் ஒன்று கூடினார்கள். ஆனால் கலாசாலையிற் சம்பந்தப்பட்ட எவரும் அத்துண்டுக் கடிதத்தை எழுதியதாக ஏற்படவில்லை யாகலின், யாதொன்றும் செய்ய முடியவில்லை. நாங்கள் பதிலெழுதிக் கொண்டிருந்த பொழுது கர்னல் ஜான்ஸன் குற்றபரிசீலனை இலாகா உத்தியோகஸ்தர்கள் சிலருடன் எங்கள் கலாசாலைக்கு வந்தனர். குற்ற பரிசீலனை இலாகா உத்தியோகஸ்த ரொருவர் கலாசாலையில் ஓரிடத்தைக்காட்டி அங்கே சுவரில் அறிக்கை ஒட்டப்பெற்றிருந்ததைத் தாம்முன்னே பார்த்ததாகத் தெரிவித்தார். அஃதெல்லாம் கதையாயிருக்கலாமென நான் கர்னலிடங் கூறினேன். ஏனெனில் அவ்வறிக்கை ஆணியைக் கொண்டு சுவரின் மேல் அடிக்கப்பட்டதாகக் காணப்பட்டதெனினும், சுவரின் மேல் அதற்கேற்ற அடையாளம் யாதொன்றுங் காணப்படவில்லை. பிறகு நாங்கள் எழுதிய பதிலைக் கர்னலிடங் காட்டினோம். அதன் மேல் கர்

னல் அந்தப் பதிலைத் தம் உத்தியோக சாலைக்கு அனுப்பச் சொன்னார்; அஃது அங்ஙனமே அனுப்பப் பெற்றது. மறு நாட் காலை 9-மணிக்குத் தம்மை வந்து காணுமாறு கர்னல் அன்று மாலையே கலாசாலைத் தலைவருக்கு இன்னோர் அறிக்கை யனுப்பினார். குறிப்பிட்ட காலத்தில் கலாசாலைத் தலைவர் கர்னலைச் சென்று கண்டு, ஈட்டிகளேந்திய போர்வீரர் சிலருடன் திரும்பி வந்தனர். அவர் 250 ரூபா அபராதஞ் செலுத்துமாறேனும், தவறின் மூன்று மாதம் சிறைச்சாலைக்குச் செல்லுமாறேனும் கேட்டுக் கொள்ளப் பெற்றனர். அபராதம் அங்கேயே செலுத்தப்பட்டது.

" சில நாட்களுக்குப் பிறகு, கலகத்தை எழுப்பியவர்களைக் கண்டு பிடிக்க வேண்டுமென டெபுடி கமிஷனர் மற்றக் கலாசாலைத் தலைவர்களுக்கு அனுப்பியது போலவே எங்கள் கலாசாலைத் தலைவருக்கும் ஓர் உத்தரவனுப்பினர். ஆனால் எத்தகைய கலகத்தை எழுப்பியவர்கள் பிடிக்கப்பட வேண்டுமென்பது விளக்கிக் கூறப்படவில்லை. மாணவர்கள் சிலர் தண்டிக்கப்படவேண்டுமென நாங்கள் பொருள் கொண்டோம். இவ்வேண்டுகோளுக்கிணங்கும் பொருட்டு, கலாசாலைக் கவுன்சில் ஒன்று கூடி, மாணவர் சிலரைப் பொறுக்கி யெடுத்து, தண்டனைப்பட்டி யொன்றைச் சித்தஞ் செய்தது. இந்தப் பட்டி கலாசாலையின் போஷகர்களுக்குக் காட்டப் பெற்று அவர்களால் அங்கீகரிக்கப் பட்டது. இந்தப் பட்டியையும் ராஜா நரேந்திர நாதர் எழுதிய கடிதத்தையும் நானே டெபுடி கமிஷனரிடம் எடுத்துச் சென்றேன். நரேந்திர நாதர் தம் கடிதத்தில் தண்டனைகளைக் குறிப்பிட்டு, ஜன சமூகத்திற்கு அபாய முண்டாகும்படி கிளர்ச்சி யேற்படுமென்ற காரணத்தால் பெருந் தொகையான மாணவர்கள் தண்டனைக்குட் படுத்தப்படாமல் விடப்பட்டிருந்தார்களெனத் தெரிவித்திருந்தார்.

" தண்டனைகள் போதிய அளவாக விருக்கவில்லை யென்றும், போதிய தொகையினரான மாணவர்கள் தண்டிக்கப் பெறவில்லை யென்றும் இதற்கு இரண்டொரு நாளைக்குப் பிறகு எங்களுக்குப் பதில் கிடைத்தது. கலாசாலைக் கவுன்சில் மறுபடியும் ஒன்று கூடி இன்னுஞ் சில மாணவர்களைப் பட்டியிற் சேர்த்துச் சிலருக்கு விதிக்கப் பெற்றிருந்த தண்டனைகளை அதிகப் படுத்தியது. மறுநாள் டெபுடி கமிஷனர் தண்டனைகளை அங்கீகரித்து, முன்னே பெற்றுக் கொண்ட அபராதத் தொகையைத் திருப்பி யளிக்கும் பொருட்டு 250 ரூபாய்க்கு ஒரு செக் அனுப்பினர்."

மாணவர்களை நாட்டுக் ககற்றுதலும், பரீட்சைகளுக்குச் செல்ல வொட்டாதபடி அவர்களைத் தடுத்தலும் தண்டனைகளாம். மாணவர்கள் யாதொரு விசாரணையுமின்றியே தண்டனை விதிக்கப்பட்டார்கள். மே மாதம் 10-ந் தேதி கர்னல் ஜான்ஸனின் பொருட்டு டி. ஏ. வி. கலாசாலைத் தலைவருக்கு எழுதப்பட்ட கடிதம் இவ்வதிகாரி எத்தகைய மனப் போக்குடையவரென்பதை நன்குணர்த்துகின்றது. எனவே நாங்கள் அதனை யாதொரு வியாக்கியானமு மின்றிக் கீழே பெயர்த்து வரைகின்றோம்:—

லாகூர் (சிவில்) கமாண்ட் ஸ்டாப் ஆபிசர் லாகூர் பஞ்சாப் க்ளப்பினின்றும் 1919-ம் வருஷம் மே மாதம் 10-ந் தேதி லாகூர் டி. ஏ. வி. கலாசாலைத் தலைவருக்கு எழுதிய 111-4 இலக்கமுள்ள கடிதத்தின் பிரதி வருமாறு:

லாகூர் (சிவில்) எல்லையைத் தம் பொறுப்பிற்கொண்ட அதிகாரி உங்களுடைய 7-ந் தேதி கடிதத்தை ஜாக்கிரதையுடன் கவனித்திருக்கிறார். லாகூரிலுள்ள மற்றக் கலாசாலைகளின் மாணவர்களைக் காட்டிலும் உங்கள் கலாசாலை மாணவர்கள் அராஜகச் செயல்களில் மிக்க ஊக்கங் கொண்டிருப்பதாகத் தாம்

கருதுகிறபடியால் அவர்களுக்கு விதிக்கப் பெற்றுள்ள தண்டனைகள் மிகக் குறைந்தனவா யிருக்கின்றனவெனக் கர்னல் ஜான்ஸன் கருதுவதாக என்னைத் தெரிவிக்கச் சொல்லுகிறார். தம் அபிப்பிராயத்திற் கேற்ப, கலாசாலையின் மதிப்பிற்கு ஏற்ற அளவாகத் தண்டனைகள் உயர்த்தப்பெற்று அவைகளின் பட்டி இன்று அனுப்பப்படாவிடில், கமாண்டிங் ஆபிசர் டி. ஏ. வி. கலாசாலையை மூடி மாணவர்கள் பரீட்சைகளுக்குச் செல்லாதவாறு உடனே தடுத்துவிடுவதைத் தவிர வேறொன்றுஞ்செய்ய இயலாதெனத் தெரிவிக்கச் சொல்லுகிறார்.

தண்டனைப் பட்டியொன்று தயாரிப்பதில் உங்களுக்கு உதவுமாறு கீழ்க்கண்ட விஷயங்களை உங்களுக்கு அறிவிக்குமாறு கட்டளையிடப் பெற்றிருக்கிறேன். அரசாங்கக் கல்லூரியில், இந்தச் சர்வகலாசாலையின் எந்தக் கலாசாலையிலும் எப்பொழுதும் சேர்தல் கூடாதென ஆறு மாணவர்கள் தடுக்கப் பெற்றும் துரத்தப் பெற்று மிருக்கிறார்கள்; அறுவர் வேறெந்தப் பரீட்சைக்குஞ் செல்லாதவாறு தடுக்கப் பெற்றிருக்கின்றனர். அறுவர் ஒரு வருஷகாலம் நாட்டுப்புறத்திற்கு அனுப்பப்படுமாறு உத்தரவு செய்யப் பெற்றிருக்கின்றனர். 15 பேர் தங்கள் உபகாரச் சம்பளங்களை இழக்கின்றனர்; 112 பேர் வேறு வழிகளில் தண்டிக்கப் படுகின்றனர்.

தயாள் சிங் கல்லூரியில் 7 மாணவர்கள் துரத்தப் படுவார்கள்; 5 பேர் ஒரு வருஷகாலம் நாட்டுப்புறத்திற்கு அனுப்பப் பெறுவர்; 14 பேர் ஒருவருடம் குறைந்த வகுப்பில் போடப் பெறுவர்; 14 பேர் மூன்று மாதம் விலக்கி வைக்கப்பட்டிருப்பர்; இருவர் தற்காலம் தங்கள் உதவிச் சம்பளங்களை இழந்திருப்பர்; 224 பேர் சில்லரைத் தண்டனைகள் விதிக்கப் பெறுவர்; 245 பேர் தங்கள் எதிர் கால நன்னடவடிக்கையின் பொருட்டுப் போதிய ஜாமீன் அளிக்குமாறு கட்டளையிடப் பெறுவர்.

இங்கே உங்களுக்குக் காட்டப்பெற்றுள்ள தண்டனைகளுக்குக் குறையாத தண்டனைகளின் பட்டியொன்றை தயாரித்து அனுப்ப மேற் கூறிய விஷயங்கள் உங்களுக்கு உதவியாயிருக்குமெனக் கமாண்டிங்க் ஆபிசர் கருதுகின்றனர்.

கடைசியாக, செலுத்தப்பெறும் அபராதத் தொகையின் எந்தப் பாகமும் பிரிட்டிஷ் போர்வீரர் சௌகரிய நிதிக்காகக் கொடுக்கப்பெறலாமென்னும் ஆலோசனையை லாகூர் சிவில் எல்லையின் கமாண்டிங்க் ஆபிசர் ஏற்றுக் கொள்ளக் கூடாதவராயிருக்கிறாரென்பதை நான் தங்களுக்குத் தெரிவிக்க வேண்டியவனாயிருக்கிறேன்.

(ஒப்பம்) டபுல்யூ. பார்ன்ஸ், மேஜர்.

ஸ்டாப் ஆபிசர்

லாகூர் சிவில் கமாண்ட்.

இந்தியர் இருவருக்குமேல் ஒருவர் பக்கத்திலொருவர் செல்லுதல் குற்றமெனப் பிறகு இன்னோர் உத்தரவு பிறப்பிக்கப் பெற்றது. உத்தரவின் முற்பகுதி "கொடுஞ் செயலையேனும் பயமுறுத்தலையேனும் தடுத்தல் அவசியமாயிருந்த தாகலின், நாட்டினர் ('Natives') இருவருக்குமேல் வந்து ஐரோப்பியர் ஒருவருக்கு வழிவிடாதிருப்பின் அதனால் சமாதானம் நிலைகுலையும்" என்று கூறியதாகக் கர்னல் ஜான்ஸன் ஸர் சிமன்லாவிடந் தெரிவித்தார். சமாதானத்தை நிலைகுலையச் செய்பவர் இந்தியராயிருக்க மாட்டாரென்பதையும், ஐரோப்பியரே அங்ஙனஞ் செய்பவரென்பதையும், இரண்டு இந்தியருக்குமேல் ஒருபுறமாகச் செல்வதைப் பொறுக்கக்கூடாத ஐரோப்பியரொருவர் சமாதானத்தைப் பாழ்படுத்தாதிருக்கும்பொருட்டு இந்தியர் துன்ப மனுபவிக்க வேண்டியிருந்த தென்பதையும் ஸர் சிமன்லால் அவர் வாயினின்றும் வரவழைத்தனர். இந்தியரின் மோட்டார் வண்டி

னைக் கைப்பற்றி யிருந்ததற்குக் கர்னல் ஜான்ஸன் கூறியுள்ள காரணங்களுள் ஒன்று யாதெனில், "ஜனங்கள் இவ்வாட்ட மாட முடியாதென்பதையும் லாகூரில் கலகங்கள் ஏற்படுதல் முடியா தென்பதையும் ஜனங்களுக்கு அறிவிக்கும் பொருட்டு" அது நியாயமான முறையாகக் கையாளப் பெற்றதென்பதேயாம்.

கீழ் வரும் வினு விடைகள் கர்னல் ஜான்ஸன் ஆட்சியினு லுண்டான துன்பங்களை நன்கு விளக்குகின்றன :—

வினு :—லாகூரின் ஒரு பாகத்திற் சென்று கொண்டிருந்த விவாகக் கூட்டத்தார் 10 பேருக்குமேலிருந்தனரென்றும் சுற்றிக் கொண்டிருந்தனரென்றும் கைது செய்யப் பெற்றதும், அக்கூட் டத்தாரும் மணமகனும் கைது செய்யப்பெற்றதும், புரோகிதரும் மற்றவர்களும் சவுக்காலடிக்கப் பெற்றதும் உண்மையா ?

விடை:—அது முற்றிலும் உண்மையே. எனக்குத் தெரிந்த வரை இவ்வொரு சம்பவமே வருந்தத் தக்க சம்பவமாம். நான் அதனைச் செவியேற்றதும் அபராதத் தொகைகள் திருப்பியளிக் கப் பெற்றன ; சிவில் மாஜிஸ்டிரேட் நீக்கப் பெற்றனர்.

அவருக்குச் சிறிது மன வருத்தத்தை யுண்டு பண்ணுமாறு ஒரு சம்பவமேனு மிருந்ததென்பது கர்னல் ஜான்ஸனை மேம் படுத்துவதாகும். இச்சம்பவமே சவுக்காலடிக்குந் தண்டனை எவ்வளவு அபாயகரமான தென்பதையும் அவருடைய முற்றி லும் அநாவசியமான உத்தரவுகள் தீங்கற்ற ஜனங்களுக்கு மிக்க அசௌகரியத்தையும் மனக் கொதிப்பையும் உண்டுபண்ணின வென்பதையும் நன்கு விளக்குகின்றது.

கர்னல் ஜான்ஸனது செயல்கள் அவருடைய சொந்தச் செயல்களா யிருந்தனபோலவே இதுகாறும் விளக்கிக் கூறி வந் திருக்கிறோம். இச்செயல்களிற் பலவற்றை அவரே செய்யக் கூடுமெனினும், அவருடையனவல்லாத ஒரு மனமும் நோக்க மும் இச்செயல்களுக்குக் காரணமா யிருந்தனவென்பதிற் சந்தேக

மொன்றுமில்லை. இவ்வதிகாரி ஸர் மைகல் ஓட்வியரின் முறைக்கும் விருப்பங்களுக்கு மிணங்கவே நடந்துவர லாயினர். மிஸ்டர் மனோஹரலால் 'ட்ரிப்யூன்' பத்திரிகையின் போஷகரா யிருந்த காரணத்திற் காகக் கைதுசெய்யப் பெற்றனர். அந்தச் சுயேச்சையான பத்திரிகை அழிக்கப்படவேண்டி யிருந்தது. 'ட்ரிப்யூன்' பத்திரிகையின் திறமை வாய்ந்த ஆசிரியர் மிஸ்டர் காளிநாத்ராய் தமது சுயேச்சையை முன்னிட்டு அவருக்குப் பன்முறை கோபம் விளைத்திருக்கிறார். ஏப்ரல் மாதம் 7-ந் தேதி ஸர் மைகல் பேசிய கொதிப்புள்ள பேச்சை அவர் 'பிரசித்தமான அறிவீனம்' என்னும் மகுடமிட் டெழுதிய வியாசம் அவர் கடைசியாகச் செய்த அபராதமாகும். அறிவீனமுள்ள அந்தப் பேச்சு எவ்வளவு பிரசித்தமான தென்பதைப் பின்னர் நிகழ்ந்த சம்பவங்கள் விளக்கிக் காட்டிவிட்டன. ஸர் மைகல் படித்த வகுப்பினரிடம் நடந்துகொண்ட விதத்தை ஆதரிக்கச் சுய மதிப்புள்ள எவரும் முன்வந்தாரில்லை. அஃதெங்ஙனமாயினும், மிஸ்டர் காளிநாதர் முறையாகக் கைது செய்யப்பெற்று, இராஜத்துரோக முள்ள வியாசங்கள் வரைந்ததற்காக விசாரணை செய்து தண்டிக்கப் பெற்றனர். மிஸ்டர் ராயின் வியாசங்களில் இராஜத் துரோகமுள்ள உரை ஒன்றேனு மில்லையென நாங்கள் தாமத மின்றிக் கூறுவோம். அவருடைய விசாரணை அரசியல் வாழ்க்கையின் மதிப்பையே சீர்குலைத்த தொன்றாம். "ப்ரதாப்" பத்திரிகையின் ஆசிரியர் தண்டனைக்குள்ளாக்கப் பெற்றதும் கொடுமையில் இதற்குக் குறைந்ததன்று. அந்தப் பத்திரிகை அப்பொழுது தான் தொடங்கப் பெற்றிருந்தது; அதன் ஆசிரியர் அமைதியான தன்மையும் அவர் வியாசங்களின் மதப்போக்கும் வெளிப்படை யானவை. இராணுவச் சட்ட ஆட்சி நடைபெற்று வந்த காலத்தில் சுயேச்சையுள்ள பத்திரிகைகள் உயிர் வாழ்ந்திருத்தல் முடியாததா யிருந்

தது. "ட்ரிப்யூன்," "பஞ்சாபி," "ப்ரதாப்" முதலிய பத்திரிகைகள் வெளிவரா தொழிந்தன.

இது காறும் நாம் கவனித்து வந்த உத்தரவுகளினுல் விளைந்த கொடுமையை யன்றி, சட்டம், நியாயம் என்னும் பெயர்களால் மறைக்கப் பெற்றுக் கையாளப்பட்டு வந்த தொகையை இப்பொழுது கவனிப்போம். நாங்கள் இராணுவச் சட்டக் கமிஷன்களையே ஈண்டுக் குறிப்பிடுகின்ரேம். போரியற்றுதல் முதலாய கொடிய குற்றங்கள் செய்தவர்களை விரைவில் விசாரணை செய்யும் பொருட்டு இந்தக் கமிஷன்கள் நியாயஸ்தலங்களாக ஏற்படுத்தப்பட்டதாகக் கருதப்பெற்றன. லாகூர் தலைவர்கள் விசாரணை செய்யப்பட்ட விஷயமாய்க் கிடைத்த தஸ்தா வேஜுகளை நாங்கள் பரிசோதித்துப் பார்த்திருக்கிரேம். அவர்கள் பதினெருவர்; அவர்களுள் பலர் பெரும்பதவிகளிலுள்ளவர்; சிலர் ஸர் மைகலுக்குச் சமமான அந்தஸ்துடையவர். அவர்களுள் எழுவர் பாரிஸ்டர்களாகவேனும் ப்ளீடர்களாகவேனு மிருந்தனர். லாலா ஹரிகிஷன்லால் எங்களிடங் கொடுத்துள்ள வாக்கு மூலத்தில், தாம் கொடுக்கல் வாங்கலில் பேர் பெற்றிருந்ததைக்கண்டு ஸர் மைகல் பொருமைகொண் டிருந்ததாலும், லெப்டினண்ட் கவர்னருக்கு விரும்பமில்லாத வேலைகள் பல வற்றில் தாம் தலையிட்டு வந்ததாலும் தாம் குற்றஞ் சாட்டப்பெற்றதாகக் கூறுகிரூர். தாம் செய்துவந்த வியாபார வேலைகளைப் பாழ்படுத்த எத்தகைய இழிந்த முயற்சிகள் செய்யப்பட்டு வந்தனவென்பதை அவர் எடுத்துக் காட்டுகிரூர். தாம் வெளியேற்றப் பெற்றதற்கு யாதொரு நியாயமு மில்லையென்றும், தம்முடைய விசாரணையும் தண்டனையும் கட்டுக் கதையையே ஆதாரமாகக் கொண்டிருந்தன வென்றும் லாலா ஹரிகிஷன்லால் கூறுகிரூர். இச்சாட்சியங் கொடுப்பவரிடம் ஸர் மைகல் கொண்டிருந்த அருவருப்பு, 1919-ம் வருஷம் ஏப்ரல் மாதத்தி னிறுதியில் இங்கி

லாந்து செல்லுமாறு இச்சாட்சி காங்கரஸ் பிரதிநிதிகளுள் ஒருவராகத் தெரிந்தெடுக்கப் பெற்றதாலும் 1919-ம் வருஷம் எப்ரல் மாதம் 18, 19-ந் தேதிகளில் ஜலந்தரில் நடக்கவிருந்த பஞ்சாப் மாகாண மகாநாட்டில் தலைமை வகிக்குமாறு அவர் தெரிந்தெடுக்கப் பட்டிருந்ததாலும் பன் மடங்கு அதிகரியா நின்றது.

அவரும் ஏனைய தலைவர்களும் போரியற்றியதற்காக விசாரணை செய்யப்பட்டார்கள். குற்றவாளிகளின் மேற் சாட்டப் பெற்றிருந்த குற்றத்தின் சுருக்கத்தை நாங்கள் படித்திருக்கிறோம். குற்றவாளிகள் ரௌலட் சட்டக் கிளர்ச்சியிலும் வேலை நிறுத்தத்திலும் சப்பந்தப்பட்டு, உபந்நியாசங்கள் செய்து, லங்கர் கானுக்களை (இலவசச் சிற்றுண்டிச் சாலைகளை) ஆதரித்து, நாங்கள் முன்னரே விளக்கிக் கூறியுள்ள கூட்டங்களுக்குச் சென்றதே அவர்கள் செய்த குற்றமாம். ஜனங்களின் மதிப்பைப் பெற்ற இந்தத் தலைவர்களுக்கு விரோதமாகக் கொண்டுவரப் பட்ட சாட்சியத்தையும் தீர்ப்பையும் நாங்கள் படித்ததிலிருந்து விசாரணை முழுவதும் நியாயத்தைப் பாழ்படுத்து முறையென்றும், அவர்களுடைய செய்கைகளைப் 'போரியற்றுதல்' என்று குறிப்பிடுதல் பாஷையைத் தவருகப் பிரயோகிப்ப தாகுமென்றும் கருதுகின்றோம். நீதிபதிகள் தனித்தனியான வழக்குகளை விசாரணை செய்யுங் காலை, பஞ்சாபில் கலகமோ போரோ இருப்பதாகக் கூறப்படும் கூற்றை எதிர் தாக்கும் சாட்சியத்தைப் பெறக் கடமைப் பட்டிருக்க, இராணுவச் சட்டம் அமுலுக்குக் கொண்டு வரப்பட்டதாக அறிவிக்கப் பெற்றதன் காரணமாகப் பஞ்சாபில் போர்நிலை தோன்றியிருப்பதாகச் சட்டப்படி கவனிக்கலானுர்கள். விசாரணையாலும் சிறை வாசத்தினுலும் தமக்கு எவ்வளவு கஷ்டமேற் பட்டதென்பதை லாலா ஹரி கிஷன்லால் கூறியிருக்கிருர். அவர் பின் வருமாறு சொல்லுகிருர் : "தந்திக் கட்டணம் 1200 ரூபாயும், விசாரணையினுல் 12,000 ரூபாயும், அப்பீலினுல்

பெருந் தொகையும் செலவழிக்க நேர்ந்தது. ஆனால் கணக்கு இதனோடு முடிவு பெறவில்லை. வியாபார நஷ்டம் மூன்று லக்ஷத்திற்கு மேலிருக்கும்." இந்தப் பணம் முழுவதையும் இழந்தாலும் அவருக்கு அதனால் கஷ்டமேற்படாது. ஆனால் இவ்விசாரணைகளினால் சிலர் வறுமையுற்றன ரென்பதை நாங்கள் அறிந்திருக்கிறோம்.

பத்து வருட அனுபவ முடையவரும் லாகூரில் அலுவல் பார்த்து வருபவரும் டிபன்ஸ் தரப்பில் நியாயவாதியாக வைக்கப் பெற்ற வருமான பாரிஸ்டர் மிஸ்டர் ஸந்தானம் இராணுவச் சட்ட விசாரணை ஸ்தலங்களைப் பற்றி விளக்கமாகக் கூறியிருக்கின்றனர். அவருடைய வாக்குமூலத்தின் பெரும் பகுதியைக் கீழே பெயர்த்து வரைகின்றோம். ஏப்ரல் மாதம் 10-ந் தேதி சுடப் பெற்றபோது தாம் கண்டவைகளையும் இராணுவச் சட்டத்தினால் விளைந்த சம்பவங்களையும் விளக்கிக் கூறிய பின்னர் அவர் பின் வருமாறு கூறுகிறார்:—"இந்தியர் ஒவ்வொருவரும், எந்நிலையி லிருப்பவராயினும், அந்நாட்களில் இழிவுபடுத்தப் பட்டனரென்ற உணர்ச்சி, நூற்றுக் கணக்காகக் கைது செய்யப்பெற்று இராணுவச்சட்ட விசாரணை ஸ்தலங்களின் முன் கொண்டுபோய் நிறுத்தப்பெற்ற கைதிகளின் வருந்தத்தக்க நிலையைப் பார்க்கும் ஒருவனுக்கு உண்டாகும் மன வருத்தத்திற்கு எவ்வழியிலும் இணையாகாது. எத்தகைய நியாய உதவியும் அவர்களுக்குக் கிடைக்கவில்லையெனக் கூறுதல் மிகையாகாது. அரசாங்கத்தார் மிக்க இரக்கங் கொண்டிருந்ததன் காரணமாக (ஒருவர் இங்ஙனமேனும் நினைக்க விரும்புகின்றனர்) தங்களைக் காக்க நியாயவாதியை ஏற்படுத்திக் கொள்ளச் சக்தியற்றவர்களுக்காக வாதிக்கும்பொருட்டு ஒவ்வோர் இராணுவவிசாரணை ஸ்தலத்திலும் ஒரு நியாயவாதியை நியமித்திருந்தனர். ஆனால் இது பெரும் போலியேயாம். ஏனெனில் அங்ஙனம் நியமிக்கப்பெற்ற

நியாயவாதி குற்றவாளிகளோடு கலந்து ஆலோசனை செய்யவும் அவர்களுடைய வழக்குகளைத் தயாரிக்கவும் போதிய நேரமின்றி ஏககாலத்தில் 10 அல்லது 15 பேருக்காக வாதிக்கவேண்டியவரா யிருந்தனர். போரியற்றுதல், கலகம், கட்டிடத்தைச் சுடல், கொலை முதலிய குற்றஞ் சாட்டப்பெற்றவர்களுக்காக வாதிக்கக் கேட்டுக்கொள்ளப் பெறுமுன், பல வழக்குகளில் ஒவ்வொரு குற்றவாளியோடுங் கலந்து ஆலோசனைசெய்யத் தமக்கு 5 நிமிஷ நேரமுங் கிடைக்கவில்லையென இக்கனவான்களிற் சிலர் என்னிடந் தெரிவித்திருக்கின்றனர். வழக்குகளின் வழக்கமான நடைமுறை யாதெனில், தாங்கள் எந்தக் குற்றத்திற்காகக் கைது செய்யப்பெற்றன ரென்பதை யுணராத 30 அல்லது 40 பேர் ஒரு கூட்டமாகக் கொண்டுவந்து இராணுவ விசாரணை ஸ்தலத்தில் நிறுத்தப்பெறுவர்; பிறகு குற்றம் அவர்களுக்குப் படித்துக் காட்டப்படும்; அதன் பிறகு டிபன்ஸ் தரப்பில் எந்தச்சாட்சிகளைக் கொண்டுவர விரும்புகிறார்களோ அவர்களின் பெயர்களைத் தெரிவிக்குமாறு குற்றவாளிகள் அறிவிக்கப்படுவார்கள். அந்தச் சாட்சிகளை வரவழைக்க அரசாங்கத்தார் தம்மாலியன்றவரை முயற்சி யெடுத்துக்கொள்வார்க ளென்றும், ஆனால் ஒவ்வொரு சாட்சியும் கொண்டுவரப்பெறுவரென்று உறுதி கூறப்படாதென்றும் அவர்கள் தெரிவிக்கப்படுவார்கள். பிராசிகியூஷன் தரப்புச் சாட்சியத்தின் சுருக்கம் அநேகமாகக் குற்றவாளிகளுக்குப் படித்துக் காட்டப்படுவதில்லை. அவைகளின் பிரதிகளை எடுத்துக் கொள்ளவும் குற்றவாளிகள் அனுமதியளிக்கப் பெறுவதில்லை. தனக்கு வக்கீலுண்டாவென ஒவ்வொரு குற்றவாளியும் கேட்கப் படுவான்; இல்லாவிடில் அரசாங்கத்தாரால் நியமிக்கப் பெற்ற நியாயவாதி அவன் சார்பாக வாதிப்பரெனச் சொல்லப் படுவான். இதன் பிறகு அவர்கள் சிறைச்சாலைக்குத் திரும்பக்கொண்டு போகப்படுவார்கள். அவர்கள் அரசாங்க

நியாயவாதியையும் தங்கள் விசாரணை தினத்தன்று காலை 9-மணிக்கு முன் பார்க்க உத்தரவளிக்கப் படமாட்டார்கள். குற்றப் பத்திரிகை படித்துக் கூட்டப்பெற்ற மூன்று நான்கு நாட்களுக்கப்புறம் விசாரணை செய்யப்படுதல் வழக்கமாயிரா நின்றது. சில சமயங்களில் அரசாங்க நியாயவாதி கைதிகளைக் காலை 7-மணி முதல் 8-30-மணிவரை பார்க்க அனுமதி யளிக்கப் பட்டனரென நான் கேள்வியுற்றிருக்கிறேன். அப்பொழுதே கைதிகள் நியாயஸ்தலத்திற்கு அழைத்துச் செல்லப்படுவார்கள். இந்த நியாயவாதிகள் பிரதிதினமும் காலை 10-மணிக்கு நியாய ஸ்தலத்திற்குச் செல்லவேண்டியவர்களென்பதையும், ஒவ்வொரு நாளும் புதிய குற்றவாளிகள் கூட்டத்தாருக்காக வாதிக்க வேண்டியவர்களா யிருந்தார்களென்பதையும், அன்றையதினம் விசாரிக்கப் பெறும் குற்றவாளிகளுடனேயே அவர்கள் ஆலோசனை செய்தல் கூடுமென்பதையும் ஞாபகப்படுத்திக் கொள்வோமாயின், இவ்வசதி எத்தகைய தென்பது நன்கு விளங்கும். பிரதிதினமும் கொடிய குற்றஞ் சாட்டப்பெற்ற 20 அல்லது 30 பேரின் விசாரணை முடிவு பெற்று விடுமென்பதும் ஈண்டு ஞாபகத்தில் வைக்கப் பெறல்வேண்டும். இவ்வெளிய மனிதர்களுக்கு எத்தகைய விசாரணை கிடைத்திருக்குமென்பது சொல்லாமலே விளங்கும்.

"நியாயவாதிகளை வைத்துக்கொள்ளச் சக்தியில்லாதபடி ஏழையா யிருந்தவர்களின் கதி இதுவாயின், நியாயவாதிகளை வைத்துக்கொள்ளக் கூடியவர்களின் கதி இதனினும் மேலானதாக விருக்கவில்லை; ஏனெனில் அவர்கள் பணங்கொடுக்கச் சித்தமாயிருந்தும் அனுபவமுள்ள நியாயவாதிகளெவரும் அவர்களுக்காக வாதிக்க முன் வருதல் கூடாததாயிருந்தது. குற்றவாளிகள் என்றையதினம் விசாரணை ஸ்தலத்திற்குக் கொண்டு வரப்பட்டுக் குற்றஞ் சாட்டப் பெறுவார்களென்பதை ஒருவரும்

அறிந்து கொள்ளக்கூடாதிருந்தது முதற் கஷ்டமாகும். இந்நிச்சய மற்ற நிலைமையில் திறமை வாய்ந்த நியாயவாதிகள் தங்களுக்கு அன்று ஓய்வு ஏற்படுமா வென்பதை யறிந்து கொள்ளக்கூடாத காரணத்தால் முன்னதாக வழக்கை ஏற்றுக்கொள்ள ஒருப் படார்கள்.

“இரண்டாவது கஷ்டம் யாதெனில், நியாயவாதிகளுள் பலர் அரசியல் துறையில் தலையிட்டுழைத்து வந்தது அப்பொழு திருந்த அரசாங்கத்தாருக்குப் பிடியா திருந்தபடியால் தாங்களும் முறையே கைதுசெய்யப் பெறலாமெனப் பயந்திருந்தனர்; குற்ற வாளிகளுக்காக வாதித்துத் தங்கள் பொல்லாக் காலத்தை விரை வில் வரவழைத்துக்கொள்ள அவர்கள் விரும்பினார்களில்லை. மூன்றாவதும் எல்லாவற்றினும் முக்கியமானதுமான கஷ்டம், இத்தகைய வழக்குகளில் வாதிக்க வந்தவர்களையே அரசாங்கத் தார் அராஜகர்களென்றும் புரட்சிக்காரர்களென்றும் கருதியதே யாம். இவ்வழக்குகளில் வாதிப்பதனாலேயே ஒருவர் ஆபத்திற் குள்ளாதல் கூடியதாயிருந்தது. ஸேத்ராம் பிரசாதின் உறவின ரொருவர் தாம் விசாரணைக்குக் கொண்டுவரப் படும்பொழுது தமக்கு வாதிப்பதற்காகத் தெரிந்தெடுத்துக் கொண்டவரும் இப் பொழுது இராஜப்பிரதிநிதியாரின் நிர்வாக சபை அங்கத்தின ராயுமுள்ள கனம் மியான் மகமத் ஷாபியின் செய்கையினால் இவ் வெண்ணம் உறுதிப்படுத்தப்பட்டது. இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு மிஸ்டர் ஷாபி தாம் வழக்கை வாதிக்க இயலாதெனக் கூறி விட்டனர். தாம் அங்ஙனம் ஏற்றுக்கொள்ளுதல் தகுதியன்றெனஅ அரசாங்கத்தார் கருதவில்லையென்று பெரிய அதிகாரி ஒருவர் கூறியதனாலேயே தாம் வழக்கை மறுக்க நேர்ந்ததெனஅவர் கார ணங்கூறியதாக நான் கேள்வியுற்றேன். முன்னரே சீர் குலைந்து கிடந்த நியாயவாதிகளை இஃது எங்ஙனம் பாதித்ததென்பதை வாய்மொழியாலன்றி மனதினால்நினைத்தே அறிந்துகொள்ளலாம்.

"எனக்கு அனுபவமுள்ளவரை, அரசாங்கத்தார் ஏற்றுக் கொள்ள மறுத்திருப்பினும் மறுத்திராவிடினும், அக்காலத்தில் மிக்க செல்வாக்குப் பெற்றிருந்த போலீசார் இவ்வெண்ணத்தை விரும்பினரில்லை. 1919-ம் வருஷம் மே மாதம் வரையில் நான் என் நல்லதிர்ஷ்ட வசத்தினல் குற்ற பரிசீலனை இலாகா உத்தியோகஸ்தர்களை என்னிடம் வசீகரித்துக் கொள்ளாமலிருந்தேன். ஆனல் மே மாதம் 14-ந் தேதி, லாலா ஹரிகிஷன்லால் முதலியவர்கள் சம்பந்தப்பட்ட லாகூர் தலைவர்கள் வழக்கு என்று வழங்கப்பெற்ற வழக்கில் நான் குற்றவாளிகளின் சார்பாக நியாயவாதியாக வைக்கப்பெற்றேன். வழக்கை மாற்றுமாறும் வெளியிலிருந்து நியாயவாதிகளை வரவழைக்குமாறும் அனுமதிபெறவேண்டி நான் ஸிம்லாவுக்குச் சென்றேன். இவ்வேண்டுகோள் மறுக்கப்பெற்றது. ஆயினும்என்னுடைய இந்தச் செய்கை குற்ற பரிசீலனை இலாகா உத்தியோகஸ்தர்களுக்குப் போதியதாகக் காணப்பட்டது. அவர்கள் நான் வெளியே சென்றிருந்தபொழுது என் வீட்டைக் கிரமமாகச் சுற்றிக் கொண்டிருந்தார்களென்றும், என் குடும்பத்தாரை அதனற் பயமுறுத்திக் கொண்டிருந்தார்களென்றும் ஸிம்லாவிலிருந்து திரும்பி வந்தபொழுது கேள்வியுற்றேன். அது முதல் அவர்கள் என்னை விடாது பின் பற்றி வந்திருக்கிறர்கள். சமீபத்தில் தான் அவர்களுடைய அருவருக்கத் தக்க ஊக்கம் சிறிதளவு குறைவுற்றிருக்கிறது.

"நான் மேற் கூறியவற்றல் குற்றவாளிகள் அநேகமாய் நியாயவாதிகளின் உதவி பெருதிருந்தார்களென்பதும் அரசாங்கத்தார் யாதொரு மறுப்புமின்றி விரைவில் தண்டனை விதிக்க எண்ணியிருந்தது கைகூடிவிட்டதென்பதும் நன்கு விளங்குவனவாகும். வெளியிலுள்ள நியாயவாதிகள் இராணுவச் சட்ட எல்லைக்குட் பிரவேசித்தல் கூடாதெனத் தடுத்த உத்தரவு, இங்கே நடைபெற்ற கொடுஞ் செயல்கள் வெளியிடங்களுக்குத் தெரி

வதைத் தடுக்கவும், நியாய முறை என்னும் போலீப் பெயரால் நடைபெற்ற கொடிய அநியாய முறையை முன்னிட்டுக் கிளர்ச்சி செய்யப்படுவதை அகற்றவும் செய்யப் பெற்ற ஓர் உத்தரவாகும்.

"சிறந்த நியாய உதவி பெருதவாறு இத்தகைய கஷ்டங்களை ஏற்படுத்தியதுடன் திருப்தி கொண்டிராமல், ஆரம்ப நிலையில் நியாயஞ் செலுத்தும் எந்த ஸிவில் நியாயஸ்தலமேனும் இராணுவ நியாயஸ்தல மேனும் துணிந்து செய்யாத செய்கைகளை இந்த இராணுவ விசாரணை ஸ்தலங்கள் செய்யலாயின. "பொது ஜன பத்திரத்தின் பொருட்டு அவசியமான இடங்களிலெல்லாம்" விரைவில் கோர்ட் மார்ஷல் செய்யும் அதிகாரத்துடன் ஒரு நியாயஸ்தலத்தை ஏற்படுத்தலாமென இராஜப் பிரதிநிதியாரின் ஆர்டினன்ஸ் கன்வீனிங்க் அதிகாரிக்கு அதிகாரம் வழங்கா நின்றது. ஆயினும் நான்கு இராணுவச் சட்ட விசாரணை ஸ்தலங்களினாலும் செய்யப் பெற்ற விசாரணைகளெல்லாம் ஸம்மரி ஜெனரல் கோர்ட் மார்ஷல் அதிகாரங்களின்படியே செய்யப் பெற்று வந்தன. அது ட்ரம்ஹெட் கோர்ட் மார்ஷல் எனவும் வழங்கப் பெறும். இராணுவ நிலையை முன்னிட்டுச் சாதாரண நியாய முறை அனுசரிக்கப்படக் கூடாத தன் காரணமாகப் போர்க்களத்திலுள்ள சேனைகளின் விஷயத்தில் கைக் கொள்ளப் பெறும் கோர்ட் மார்ஷல் முறையே ஈதென்பதை ஈண்டுக் குறிப்பிடுகின்றேன்.

"இவ்வழக்குகளில் வாதிக்க வந்த நியாயவாதிகள் மரியாதைத் தாழ்வாக நடத்தப் பெற்றதுடன், தாங்கள் அதிகாரிகளின் தயவை முன்னிட்டே அங்கு வந்திருந்ததாக உணருமாறும் செய்யப்பட்டார்கள். மிகவும் நியாயமுள்ள வேண்டுகோட்கள் மிக்க அவமதிப்புடன் மறுக்கப் பெற்றன. சில சமயங்களில் நியாயவாதிகள் நேராகவே மரியாதைக் குறைவாய் நடத்தப்பட்டார்கள்.

"நியாயவாதியே எடுத்துக் கொள்ளக்கூடிய சுருக்கமான குறிப்புகளைத் தவிர, குற்றவாளிக்காக நடை முறையின் குறிப் பொன்றும் எடுத்துக்கொள்ள அனுமதியளிக்கப் படவில்லை. இவ் விஷயமாகக் கன்வீனிங் அதிகாரி ஓர் உத்தரவும் பிறப்பித்தனர். அதனை ஏ. அநுபந்தத்துடன் சேர்த்திருக்கிறேன்.

"நியாயஸ்தலத்தார் எடுத்துக்கொண்ட குறிப்பு மிக்க நியாய மற்றதாக விருந்தது. பிராசிகியூஷன் தரப்பில் வரும் பிரதான சாட்சியின் வாக்குமூலம் அங்ஙனமே வரைந்து கொள்ளப்படும். ஆனால் குறுக்கு விசாரணையின் பதில்கள், அவைகளிலும் குற்ற வாளிக்கு ஏதேனுமொரு வழியில் அனுகூலமா யிருப்பவை, குற்றவாளியின் நியாயவாதி பன்முறை வேண்டிக்கொள்ளினும், எழுதிக் கொள்ளப் பெறுவதில்லை. தங்கள் சொந்த உபயோகத் திற்காகத் தாங்கள் எடுத்துக்கொள்ளும் குறிப்புகளைத் தவிர ஸம் மரி ஜெனரல் கோர்ட் மார்ஷல் முறையில் விசாரணை செய்யும் போது வேறு குறிப்புகள் எடுத்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்க வில்லையெனக் கமிஷனர்கள் பதிலளித்துவிடுவார்கள். எனவே இப்பொழுது கிடைக்கக்கூடிய குறிப்புகளில் பிராசிகியூஷன் தரப்புச் சாட்சிகளின் வாக்கு மூலங்களும், பெரும்பாலும் பிர யோஜன மற்ற குறுக்கு விசாரணை மறுமொழிகளுமே காணப் படும். உதாரணமாக லாகூர் தலைவர்கள் வழக்கில் பிராசிகியூஷன் தரப்பில் 29-வது சாட்சியான போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் மரதப் அலி ஷா கூறியுள்ள சாட்சியத்தை இங்கே எடுத்துக் காட்டு கிறேன். அவர் அரைமணி நேரம் நெருக்கிக் குறுக்கு விசா ரணை செய்யப்பெற்றனர். அவருடைய சாட்சியம் முற்றிலும் உடைந்துபோய் விட்டது. ஆனால் நியாய ஸ்தலத்தார் எடுத் துக்கொண்ட குறிப்பில் இரண்டு வரிகளே காணப்படுகின்றன. கமிஷனர்கள் தங்கள் தீர்ப்பில் இச்சாட்சியின் வாக்குமூலத்தை நம்பியிருக்கிறார்கள்.

"குறுக்கு விசாரணைக்கு யாதொரு நியாயமான வசதியும் அளிக்கப்பெறவில்லை. நியாயவாதிகள் இத்தனை கேள்விகள் தான் கேட்கலாமென்றாவது, கேள்விகள் பொருத்த முடையன வாயினும் அல்லவாயினும், இவ்வளவு நேரந்தான் குறுக்கு விசாரணை செய்யலாமென்றாவது கட்டுப் படுத்தப்பட்டார்கள். பிராசிகியூஷன் தரப்புச் சாட்சிகளுக்கு மிக்க பாதுகாப்பு அளிக்கப்பெற்றது. அவர்கள், வழக்குக்குப் பொருத்த முள்ளவைகளாயினும் விரும்பத்தகாத கேள்விகளுக்குப் பதிலளித்தல் வேண்டாமெனக் கமிஷனர்களால் பலமுறை தெரிவிக்கப்பட்டார்கள். நியாயவாதிகளை அவமதிக்குமாறும் அவர்கள் ஊக்கங்கொளுத்தப் பெற்றார்கள்.

"சாட்சி யொருவர் பதிலுரைக்க முடியாமல் விழித்துக் கொண்டிருக்கும்போது, கமிஷனர்கள் "உமக்கு ஞாபக மில்லாவிடில் அப்படிச் சொல்லிவிடும்" என்று சொல்லிவிடுவார்கள். இக் குறிப்பைச் சாட்சியங் கூறுபவர் தவறாமல் ஏற்றுக்கொண்டு "எனக்கு ஞாபகமில்லை" என்று சொல்லச் சித்தமாயிருக்கிறார். ஐரோப்பிய சாட்சிகளுக்கு வழங்கப்பெற்ற பாதுகாப்பு நகைப்புக்கிடமானதாகும். அவர்கள் முன்னே சொன்னதற்கு விரோதமாகச் சொல்லுமாறு ஏதேனும் கேள்விகள் கேட்டல் கொடிய இராஜத்துரோகக் குற்றமாகக் கருதப்படும். ஒரு சம்பவத்தைப் பற்றிச் சாட்சியங் கூறியுள்ள ஒருவரை அச்சம்பவ சம்பந்தமான வேறு விஷயங்களைப் பற்றிக் குறுக்கு விசாரணை செய்யுங் கால் அவர் "எனக்கு ஞாபகமில்லை" என்ற மறுமொழியால் தம்மைக் காத்துக்கொள்வார். இதன் பிறகு உண்மையான மறுமொழியை வர வழைக்குமாறு நியாயவாதி அவரை வேறொரு கேள்வியுங் கேட்க அனுமதி யளிக்கப்பெறார். நியாயவாதி அங்ஙனம் கேட்பாராயின், கமிஷனர்கள் வெகுண்டெழுந்து "தமக்கு ஞாபக மில்லையென அவர் கூறுவது உமக்குக் கேட்கவில்லையா?"

என்று கேட்பார்கள். மேற் கூறிய விஷயங்களை லாகூர் தலைவர்கள் வழக்கை விசாரணை செய்ததும் கனம் மிஸ்டர் ஜஸ்டிஸ் வெஸ்லி ஜோன்ஸைத் தலைவராகக் கொண்டதுமான இராணுவ விசாரணை ஸ்தலத்தில் நான் பெற்ற அனுபவத்திலிருந்தே கூறுகின்றேன்.

"வழக்கு முற்றுப் பெறும்போது சிறிதளவு வாதஞ் செய்யவே அனுமதியளிக்கப்பட்டது. பல முறைகளில் கால வரையறை ஏற்படுத்தப்பட்டது. நியாய ஆக்ஷேபணைகள் மிக்க வெறுப்புடன் ஏற்றுக் கொள்ளப்படா தொழிக்கப்பெற்றன. நான் குஜரன்வாலா தலைவர்கள் வழக்கில் கனம் ஜஸ்டிஸ் ப்ராட்வேயைத் தலைவராகக் கொண்டிருந்த விசாரணை ஸ்தலத்திற்குச் சென்று இப்பொழுது ப்ரீவி கௌன்சிலில் கொண்டுவரப் பெற்ற சட்டவரம்பு சம்பந்தமான விஷயங்கள் பலவற்றைக் கொண்டுள்ள விண்ணப்பத்தைக் கொடுத்தேன். அறிவின் மிக்க கமிஷனர் முதலில் நான் சொல்லியதைக் கேட்க மறுத்து, என் விண்ணப்பத்தைக் கன்வீனிங்க் அதிகாரிக்கு அனுப்புவதாகத் தெரிவித்து விட்டனர். நான் இம்முறையைக் கண்டித்து, நியாய ஸ்தலம் ஏற்படுத்தப்பட்டான பிறகு கன்வீனிங்க் அதிகாரிக்கு அதிகாரமில்லையென்றும், விசாரணை ஸ்தலமே இவ்விஷயங்களை முடிவு செய்யவேண்டுமென்றும் கூறும் சேனைச் சட்டத்தின் பிரிவை மேற்கோள் காட்டியதன் மேல் அவர் மிக்க மன வருத்தத்துடன் என்னை வாதஞ் செய்ய விடுத்தனர். ஆனால் நான் தெரிவித்திருந்த எழெட்டு விஷயங்களையும் அரைமணி நேரத்திற்குள் வாதஞ் செய்தல் வேண்டுமென அவர் கூறிவிட்டார். நான் மறுத்தது கவனிக்கப் பெறவில்லை; வாதிக்கத் தொடங்கினேன். வாதத்தினிடையில் கவர்ன்மெண்ட் அட்வகேட் எழுந்து நான் குறிப்பிட்ட ஒரு விஷயத்தை ஆக்ஷேபித்தனர். உடனே கமிஷனர் பின்வருமாறு கூறலானார்: "மிஸ்டர் ஹெர்ப்பர்ட்!

நீவிர் இதனை ஆக்ஷேபித்தல் எதற்காக? இதனால் அவருக்கு இன்னுஞ் சிறிது நேரம் அதிகமாகச் செல்லப்போகிறது. அவர் சொல்வதைச் சொல்லட்டும். நாம் அதனை ஒழித்து விடுவோம்."

அரை மணி நோத்திற்குச் சிறிது அதிகமாகச் சென்றதும் இன்னும் 5 நிமிஷம் எனக்கு அளிக்கப்பட்டிருந்ததென்றும் அதற்குள் என் வாதம் முடிவு பெறல் வேண்டுமென்றும் நான் அறிவிக்கப் பெற்றேன். நான் அதற்கிணங்க வேண்டியவனா யிருந்தேன். நியாய ஸ்தலத்தார் எதிர்த் தரப்பாரின் மறு மொழியைக் கேளாமலே தங்கள் உத்தரவை நிறைவேற்றி விட்டனர். அதில் நான் செய்த ஆக்ஷேபனைகளுள் சிலவே சிறிதளவு எடுத்துக்கொள்ளப் பட்டிருக்கின்றன. மற்றவை முழுவதும் கவனியாது விடுக்கப்பெற்றன.

"இத்தகைய சந்தர்ப்பங்களில் நடத்தப்பெற்ற விசாரணைகள் வெறும் போலியேயாம். உண்மையான நியாயம் செலுத்தப்படுமாறு யாதொன்றும் செய்யப்படவில்லை. நான் சென்றிருந்த இரண்டு விசாரணை ஸ்தலங்களிலும் எனக்கு ஏற்பட்ட அனுபவம் மிகவும் வருந்தத் தக்கதும் இழிவு படுத்துவதுமாக விருந்தது. இவைகளில் தலைமை வகித்த நீதிபதிகள் ஹைகோர்ட்டிலிருந்து நீதி செலுத்தியபோது மிக்க மரியாதையுடன் நடந்து வந்ததைக் கண்டிருந்த எனக்கு இவ்வநுபவம் பன்மடங்கு அதிகமான வருத்தத்தை உண்டுபண்ணுவதா யிருந்தது. ஹைகோர்ட்டில் நியாய முறைகளைக் கைக்கொண்டு, குற்றவாளிகளும் அவர்கள் நியாயவாதிகளும் தெரிவிக்கும் விஷயங்களை நன்கு செவியேற்று முடிவுசெய்யும் வழக்கமுள்ள நீதிபதிகள், இராணுவச்சட்ட விசாரணை ஸ்தலங்களில் வீற்றிருந்தபொழுது, தருமுறைகளையெல்லாம் கவனியாது, உயிரைப் பாதிக்கவல்ல விஷயங்களை முடிவுசெய்யும் அதிகாரம் வகித்திருந்தும், நீதிபதிகளென வழங்கப்பெறவும் யோக்கியதையற்றவர்களெனக்

கருதப்படுமாறு நடந்துகொண்ட காரணமாக நான் இராணுவச் சட்ட விஷயத்தில் புதிய அனுபவம் பெற்றவனானேன்."

கைது செய்யப்பெற்று விசாரணை செய்யப்பட்டவர்கள் தலைவர்கள் மாத்திரமன்று. மற்றும் பலர் இராணுவச் சட்டக் கமிஷன்கள் முன்னும், இன்னும் பலர் அவசர விசாரணை ஸ்தலங்கள் முன்னும் விசாரிக்கப்பெற்றனர். கமிஷன்கள் முன்னே 64 பேர் விசாரிக்கப்பெற்றனரென்றும், அவர்களுள் 8 பேர் விடுவிக்கப்பெற்றார்களென்றும், அவசர விசாரணை ஸ்தலங்களின் முன் 350 பேர் விசாரிக்கப்பெற்றன ரென்றும் அவர்களுள் 102 பேர் விடுவிக்கப்பெற்றனரென்றும், 40 பேர் கைது செய்யப் பெற்று மிஸ்டர் மனோகரலால் வைக்கப்பெற் றிருந்ததுபோல் ஒருமாத காலத்திற்கு அதிகமாகவும் காப்பில் வைக்கப்பெற்று விசாரணையின்றியே விடுவிக்கப்பெற்றன ரென்றும் எங்களிடமுள்ள ஒரு வாக்குமூலத்தினால் தெரிய வருகிறது.

இங்ஙனமே யாதொரு தீங்கு மிழையாததும், அதிகாரிகளைச் சமாதானப் படுத்த முயன்றதும், அதிகாரிகளுக்கு உதவி செய்யத் தங்களாலியன்றதைச் செய்த தலைவர்களைக் கொண்டிருந்ததுமான லாகூர் நகரம் இராணுவச் சட்டத்திற்கு உட்படுத்தப்பட்டது. இராணுவச் சட்டத்தின் பொறுப்பு இரக்கமற்றவரும் கொடியவரும் தம் பொறுப்பில் விடப்பெற்றிருந்த ஜனங்களின் மன நிலையைப் பொருட்படுத்தாதவருமான அதிகாரியொருவரிடம் வழங்கப்பெற்றிருந்தது. லாகூர் ஜனங்களின் ஒவ்வொரு பகுதியினரும் இழிவு படுத்தப்பட்டனர். பிரதேச நிலைமையை நாங்கள் உணர்ந்தவரையில், இராணுவச் சட்டம் அநாவசியமானதென்றும், தேவையில்லாதவாறு நீடித்து வைக்கப்பட்டிருந்ததென்றும் இரக்கமின்றியும் மனிதத் தன்மைக்கு மாறுபடுமாறும் கையாளப்பெற்று வந்ததெனவும், இராணுவச் சட்டக் கமிஷன்கள் அல்லது அவசர விசாரணை ஸ்தலங்கள் அல்

லத்து ஏரியா உத்தியோகஸ்தர் நியாய ஸ்தலங்கள் முதலியவைக ளின் மூலமாக அநியாயம் நடைபெற்று வந்ததெனவும் கருது கின்றோம்.

## 4. காசூர்.

காசூர் லாகூர் ஜில்லாவிலுள்ள ஒரு முக்கிய பட்டண மாகும். அது லாகூர் நகரத்திற்கு 40 மைல் தூரத்திலுள்ளது. அது பிரதான இருப்புப்பாதையில் ஒரு முக்கிய ஸ்டேஷனு யிருப்பதுடன், 24,000 ஜனத் தொகையுள்ள பெரிய வியாபார ஸ்தலமாகவு மிருக்கிறது. ஏப்ரல்மீ 6-ந்தேதி காசூரில் வேலை நிறுத்தம் ஏற்படவில்லை. 10-ந் தேதியும் யாதொன்றும் நேரிட வில்லை. 11-ந் தேதி அதிகாலையில் மிஸ்டர் காந்தி பிடிக்கப் பெற்றதும், டாக்டர்கள் சத்யபாலும் கிச்லுவும் வெளியேற்றப் பெற்றதுமான செய்தி காசூருக்கு எட்டியது. எனவே அன்று பகல் சிறிது நேரம் வேலை நிறுத்தம் ஏற்பட்டது. அன்று மாலை ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. காசூரிலுள்ள பிர தான நியாயவாதிகளான ஜனத் தலைவர்களின் மேல் சட்ட நட வடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டுமென்ற விருப்பம் மிகுதியா யிருந்தும், அதிகாரிகள் அவர்களுடைய பேச்சுக்களில் குற்றங் காண முடியாதவாறு அக்கூட்டத்தில் பேசியவர்கள் தங்கள் உரைகளை வெளியிடலானார்கள். சப்-டிவிஷனல் ஆபிசர் மிஸ்டர் மார்ஸ்டன் பிரசங்கங்களுக்கு வருந்திப் பொருள் கூற முயன்றன ரென்பதை நாங்களறிவோம். அவர் தாம் ஹண்டர் கமிட்டியார் முன் கொடுத்துள்ள சாட்சியத்தில் நியாயவாதிகள் தங்கள் பொறுப்பற்ற பேச்சினாலும் ரௌலட் சட்டத்தைக் கிரம மாக விளக்கிக் கூறத் தவறியதனாலும் குழப்பத்தை உண்டு பண்ணினார்களெனக் குறிப்பிட்டிருக்கிறார். பேசும் போது ரௌலட் சட்டத்தை எவரேனும் தவறாக விளக்கிக் கூறி

ஞர்களாவென்பது எங்களுக்குத் தெரியாது. ஜனங்களால் விரும்பப்படாதவாறு சட்ட சபையினரோ நிர்வாக அதிகாரிகளோ செய்யும் செய்கைகளை மிகைபடக் கூறுதலும் தவருகக் கூறுதலும் எத்தகைய ஒழுங்கும் அறிவுமுள்ள ஜன சமூகத்திலும் அவசியம் ஏற்படக் கூடியனவா யிருக்கின்றன. ஆனுல் தாவா நியாயவாதிகள் சட்டத்தின் கொடுமைகளைப் பெருக்கிக் கூற வில்லையென நாங்கள் நம்புகிறோம். நாங்கள் சட்டத்தை ஆராய்ச்சி செய்கையிற் காட்டியுள்ளபடியே, அதன் தீமைகளைப் பெருக்கிக் கூறுதல் கஷ்டசாத்திய மாகும். ஏனெனில் இச்சட்டம் அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரப்படும் இடங்களிலெல்லாம் நியாயமற்ற ஆட்சியை நிலைநிறுத்துந் தன்மையதாயிருக்கிறது.

ஏப்ரல் மாதம் 12-ந் தேதி முழு வேலை நிறுத்தம் ஏற்பட்டு விட்டது. ஜனங்களின் மனநிலை 11-ந் தேதி இருந்ததினின்றும் 12-ந் தேதி மாறுபட்டிருந்தது. அமிர்தசரஸிலிருந்து சிலர் வந்து, அங்கே நடைபெற்ற சம்பவங்களை ஒன்றுக்குப் பத்தாய் எடுத்துக்கூறி, காசூரிலுள்ள கீழ்மக்களையும் அறிவீனரையும் எழுச்சிகொள்ளச் செய்தனரென்று ஹண்டர் கமிட்டியார் முன் கொடுக்கப்பெற்றுள்ள சாட்சியத்தை நாங்கள் நம்புகிறோம். சோம்பேறிகளும் நடுத்தர வகுப்பினரும் ஒருங்குகூடி, ஸ்டேஷனுக்குச்சென்று, அதனை நெருப்புக் கிரையாக்க முயன்றார்கள். கூட்டத்தின் நோக்கங்களைச் செவியேற்றதும் அங்கே ஓடிவந்திருந்த ஜனத்தலைவர்கள் விளக்கறையில் பற்றவைக்கப்பட்டிருந்த தீயை எளிதில் அணைத்து விட்டார்கள். தன் முயற்சி ஒருவாறு வீணுனதும், கூட்டம் ஸிக்னல் ஸ்டேஷனுக்குச் சென்றது. அங்கே அப்பொழுது தான் ஒரு வண்டித் தொடர் வந்து நின்று கொண்டிருந்தது. கூட்டம் சோடா முதலிய புட்டிகள் வைக்கப்பெற்றிருந்த அறைக்குட் சென்று புட்டிகளைக் காலி செய்துவிட்டு, ஐரோப்பியர் சிலர் அங்கிருந்ததைக்

கண்டு அவர்களை வெட்ககரமான வழியால் தாக்க முயன்றது. இத்தறுவாயில் காசூர் பிரதான நியாயவாதிகளுள் ஒருவரான மிஸ்டர் குலாம் மோஹியுத்தீன் அங்குத் தோன்றி, தம் நண்பர்களான மிஸ்டர் ஷெர்போர்னையும் அவர் மனைவியையும் அவர்கள் குழந்தைகளையும் பத்திரமான இடத்திற்குக் கொண்டு சென்றனர். வண்டித் தொடரோ இன்னும் இரண்டு அரிய உயிர்களுடன் மேலே செல்லா நின்றது. அதில் இரண்டு ஆங்கிலப் போர்வீரர் இருந்தனர். வண்டித் தொடர் ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்ததும், போர்வீரர்கள் தாங்கள் தப்பியோடுவதனாலேயே பத்திரமா யிருத்தல் கூடுமென எண்ணலானார்கள். அவர்கள் வண்டித் தொடரை விட்டு வெளியே சென்று, சத்தமிட்டுக் கொண்டிருந்த கூட்டத்தின் மேல் தற்காப்பி னிமித்தம் துப்பாக்கியாற் சுடலானார்கள். ஆனால் அவர்களுடைய துப்பாக்கிப் பிரயோகம் கூட்டத்தைச் சிறிதும் பாதிக்கவில்லை. ஆயினும் கூட்டம் முன்னிலும் பன்மடங்கு அதிக கோபங் கொண்டெழுந்து குற்றமற்ற இவ்விரு ஆங்கிலேயரையும் தடியாலடித்துக் கொன்றுவிட்டது. எல்லா அதிக்கிரமச் செய்கைகளுள்ளும் குற்றமற்ற இப் போர்வீரர்கள் காரணமின்றிக் கொல்லப்பட்டதே மிக்க மிருகத்தனமாதாகவும், மனிதத் தன்மைக்கு மாறுபட்டதாகவும், ஆண்மைத்தனமற்றதாக்வு மிருக்கும் கொடுஞ் செயலாகும். அமிர்தசரஸ் கூட்டத்தின் செய்கை நியாயமற்றதெனக் கருதப்பட வேண்டுமெனினும், டாக்டர்கள் சத்யபாலும் கிச்லுவும் வெளியேற்றப் பெற்றதும், வண்டித் தொடர் வாராவதியண்டை துப்பாக்கிப் பிரயோகஞ் செய்யப் பெற்றதும் கூட்டத்திற்கு இருமடங்கு கோப மூட்டுவனவாயின. இவ்வதிக்கிரமச் செய்கைகளை நாங்கள் மிகக் கடுமையாகக் கண்டிக்கின்றோம். குற்றமற்றவர்களின் இரத்தத்தைக் குடித்தான பின்பு, இக் கலகக்காரர்கள் ரெவினியூ உத்தியோக சாலைகளுக்குச்

சென்று அவைகளை எரித்து விட்டார்கள். போலீசார் அவர்கள் மேல் துப்பாக்கிப் பிரயோகஞ் செய்ய உத்தரவு செய்யப்பட்டு அவர்கள் சுட்ட பின்னரே கூட்டம் கலைந்து சென்றது.

ஒவ்வோரிடத்திலும் சில மணி நேரத்திற்குள்ளாகக் கூட்டத்தார் கொதிப்படங்கி யிருந்தது ஈண்டுக் குறிப்பிடத் தக்க தொன்றும். காசூரிலும் சில மணி நேரத்திற்குப் பிறகு, முழு அமைதி குடி கொள்ளலாயிற்று. இச்சம்பவங்களை நாங்கள் ஆராய்ச்சி செய்து பார்த்தவரையில், கூட்டத்தின் மனக் கொதிப்பு திடீரெனப் பொங்கி யெழுந்ததென்றும், யாதொரு சூழ்ச்சியினாலோ கலகத்தினாலோ உறுதியுடன் தோன்றிய தல்ல வென்றும் கண்டு கொள்ளலானோம். அதிகாரிகள் யாதொரு கஷ்டமு மின்றிக் கைது செய்யக் கூடியவர்களா யிருந்தார்கள். மிஸ்டர் மார்ஸ்டன் இந்திய சப்-டிவிஷனல் ஆபிசர் ஸ்தானத்தை வகிக்குமாறு அனுப்பப் பெற்றனர். ஏப்ரல்மீ 16-ந் தேதி இராணுவச் சட்டம் அறிவிக்கப்பட்டது.

இராணுவச் சட்ட நிர்வாகம் கர்னல் மக்ரேயின் பொறுப்பில் வழங்கப் பெற்றது. அவருக்குப் பின் காப்டன் டவ்டன் அப் பதவியை வகிக்கலானார். சில விஷயங்களில் இவ்விரு உத்தியோகஸ்தர்களும் தங்கள் கவன சக்தியிலும் பொறுப்பற்ற தன்மையிலும் தங்கள் உத்தரவுகளினாற் பாதிக்கப் பெற்றவர்களின் மனப்பான்மையை முற்றும் பொருட்படுத்தாதிருந்ததிலும் தங்கள் சகோதர அதிகாரிகளினுஞ் சிறந்து விளங்கலானார்கள். அவர்கள் நடை முறைகள் சம்பந்தமாக லார்ட் ஹண்டர் கமிட்டியார் முன் கொடுக்கப் பெற்ற சாட்சியத்தின் சுருக்கத்தைக் கீழே வரைகின்றோம். ஏப்ரல் மாதம் 16-ந் தேதி கைது செய்தல் முதல் முதல் கைக்கொள்ளப் பெற்றது. டவுன் ஹாலில் அறிக்கை ஆடம்பரமொன்று நடைபெற்றது. இராணுவச் சட்டத்தைக் கைக்கொள்ளும் விஷயத்தைக் குறிப்பிடுமாறுபோலும் அவர்கள் வயது

சென்ற வரும் மதிப்புள்ளவருமான பாபா தனபதிராயைக் கைது செய்தார்கள். அவர் 65 வயதுடையவர். அவர் லாகூர் சென்ட்ரல் ஜெயிலில் 46 நாள் அடைத்து வைக்கப் பெற்றிருந்து, கைது செய்யப்பட்ட காரணம் அறிவிக்கப்படாமலே, ஜூன் மாதம் முதல் தேதி விடுதலை செய்யப்பெற்றனர். அன்றைய தினமே இன்னும் 21 பேர் கைது செய்யப்பட்டனர். மறுநாள் மூவர் அதிகமாகவும், 18-ந்தேதி 4 பேரும், 19-ந்தேதி 40 பேரும் கைது செய்யப்பட்டனர். மொத்தத்தில் 172 பேர் கைது செய்யப்பட்டனர். இவர்களுள் 97 பேர் விசாரணைக்கு அனுப்பப் பெறாமலே விடுதலை செய்யப்பெற்றனர். விசாரணைக்கு அனுப்பப் பட்ட 75 பேருள் 51 பேர் தண்டனை விதிக்கப்பெற்றனர். கைது செய்யப்பெற்றவர்களுள் மௌல்வி குலாம் மோகியுத்தீனும் மௌல்வி அப்துல் காதரும் சேர்ந்திருந்தனர். இவ்விருவரே மிஸ்டர் ஷெர்போர்னையும் அவர் மனைவியாரையும் காப்பாற்றி, கூட்டத்தவரின் அதிக் கிரமச் செயல்களைத் தடுக்கத் தங்கள் செல்வாக்கை உபயோகிக்கலாயினர். சிறிதளவு மன்னிப்புங் கேட்டுக்கொள்ளப் பெறாமல் இத்தலைவர்கள் பலரின் வீடுகள் சோதனை செய்யப்பட்டன. மேமாதம் முதல் தேதி, காசூரில் ஸ்திரீகளும் குழந்தைகளும் நீங்கலாகவுள்ள மற்றவர்களெல்லோரும் அடையாளங் கண்டுபிடிக்கப் படும்பொருட்டு ரெயில்வே ஸ்டேஷனுக்குச் செல்லவேண்டியவர்களா யிருந்தார்கள். அவர்கள் உணவேனும் தண்ணீரேனுமின்றிப் பிற்பகல் இரண்டு மணிவரையில் உஷ்ணமான வெய்யிலில் வெறுந்தலையுடன் உட்கார்ந்திருக்க வேண்டியவர்களானார்கள். லார்ட் ஹண்டர் முன்னிலையில் சாட்சியங் கூறியுள்ள ஒருவர் சொல்லியபடி, இது, சாட்சியஞ் சேகரிக்கும் விஷயத்தைப் பொறுத்தவரை, தக்க பயனொன்று மின்றிக் கைக்கொள்ளப்பெற்ற பிரயோஜன மில்லாத முறையாகும். சட்டத்திலும் சாட்சியம் சேகரித்துப் பரி

சிலவை செய்வதிலும் சிறிது அனுபவமுள்ள நாங்கள், இங்ஙனம் மனிதர்களை வரிசையாகச் செல்லச் சொல்வதனுல் உண்மையாக அடையாளங் கண்டு பிடித்தல் அசாத்தியமென்றும், இங்ஙனம் கிடைக்கப்பெற்ற அடையாளத்திற்கு யாதொரு மதிப்புங்கொடுத் தல் கூடாதென்றும் தாமதமின்றிக் கூறுவோம். நகரம் முழு வதையும் இழிவு படுத்தவும் பய முறுத்தவுமே இங்ஙனம் ஜனங் கள் வரிசையாகக்கொண்டு செல்லப்பெற்றிருக்கலாமென நாங் கள் ஐயுறுகின்றோம். ஏனெனில், ஜனங்கள் வந்து கூடிய பிறகு, எவரேனும் வராமலிருந்தனரா வென்பதைக் கண்டுவரு மாறு சிலகூட்டத்தினர் அனுப்பப்பெற்றனர். இங்ஙனந் தேடச் சென்றவர்களி னெதிரில் பாதுகாப்பின்றி யிருந்த ஸ்திரீகள் எந் நிலையி லிருப்பார்களென்பதை ஊகித்தறிந்து கொள்ளுதல் கஷ்ட சாத்தியமுடின்று.

காசூரில் விசாரணைகள் நடைபெற்று வந்தபொழுது 40 பேர் சவுக்கா லடிக்கப்பெறுமாறு தண்டனை விதிக்கப்பட்டனர். மொத்தத்தில அடிக்கப்பெற்ற சவுக்கடிகளின் தொகை 710. சவுக்காலடிக்குமிடம் ஸ்டேஷன் ப்ளாட் பாரத்தில் அமைக்கப் பெற்றிருந்தது. பள்ளிச்சிறுர்களும் சாட்டையாலடிக்கப்பட் டார்கள். ஒரு பள்ளிக்கூடத்தின் தலைமை உபாத்தியாயர் தமது மாணவர்கள் கீழ்ப்படியாமலிருந்தன ரெனத் தெரிவித்து இராணுவ உதவி கேட்டதாகக் கருதப்படுகிறது. அதன்மேல் கமாண்டிங் ஆபிசர் மாணவர்களுள் சிலர் சவுக்காலடிக்கப் பட வேண்டுமென ஆலோசனை கூறலாயினர். எனவே இப்பள்ளிக் கூடத்திலும் இன்னெரு பள்ளிக் கூடத்திலுமுள்ள பிள்ளை கள் ஒருங்கு சேர்க்கப் பெறவேண்டுமென உத்தரவு பிறப்பிக் கப்பட்டது. ஆறு பிள்ளைகளைத் தெரிந்தெடுக்குமாறு தலைமை உபாத்தியாயர் கேட்டுக்கொள்ளப் பெற்றனர். அவர் உயர்ந்த வகுப்பைச் சேராதவர்களும் தேக சௌக்கியங் குன்றியவர்களு

மான அறுவரைத் தெரிந்தெடுத்தனர். கமாண்டிங் ஆபிசர் இந்தப் பிள்ளைகளை ஏற்றுக் கொள்ள மறுத்து வேறு பிள்ளைகளைத் தெரிந்தெடுக்குமாறு மிஸ்டர் மார்ஸ்டனைக் கேட்டுக் கொண்டனர். அங்ஙனமே குறை கூறிக்கொண்ட பள்ளிக்கூடத்திலும் இன்னொரு பள்ளிக்கூடத்திலுமுள்ள பிள்ளைகளுள் சிலர், தண்டனையை ஏற்றுக் கொள்ளப் போதிய திடகாத்திர முள்ளவரா யிருந்தனரென்னுங் காரணமொன்றைக் கொண்டே, தெரிந்தெடுக்கப்படலாயினர். அவர்கள் மற்றப் பள்ளிச்சிறுர்களெதிரில் ஸ்டேஷன் நுழைவாயிலுக்கு வெளிப்புறத்தில் சவுக்காலடிக்கப் பட்டார்கள். இங்ஙனம் தண்டித்ததன் நோக்கம் யாதென லார்ட்ஹண்டர் கேட்டதற்கு, யாதொரு முக்கியமான நோக்கமுமில்லை யென மிஸ்டர் மார்ஸ்டன் பதில் கூறியிருக்கிறுர். இதில் இராணுவச் சட்டக் குற்றமொன்று மில்லையென்பது ஈண்டு ஞாபகத்தில் வைத்துக்கொள்ளப் படல்வேண்டும். யாதொரு பரிசீலனை யேனும் விசாரணை யேனும் நடை பெறவில்லை. அஃது அதிகாரம் நியாய விரோதமாகவும் பிடிவாதமாகவும் துர்வினியோகப் படுத்தப்பட்ட தாம். காசூரில் தான் சவுக்காலடித்தலை வந்து காணுமாறு வேசிகள் அழைக்கப் பெற்றிருந்தார்கள்.

இருவர் காவல் புரியும் போர்வீரர்களால் சுடவும்பெற்றனர். அவர்களுள் ஒருவர் ஊமையா யிருந்தனரென்பது பிறகு தெரிய வந்தது. இருவரும் வேண்டுமென்றே சுடப்பெற்றனர்போலும்! இந்தியர் உயிரின் தூயதன்மை உணர்ந்து கொள்ளப்பெற்று, மேலதிகாரிகளிடம் நியாய உணர்ச்சி இருந்திருக்குமாயின், போர் வீரர்கள் தங்கள் துப்பாக்கிகளை அவ்வளவு இலகுவில் உபயோகித்திருக்கமாட்டார்களெனக் கருதுகிறோம்.

காசூரிலேயே விநோதமான தண்டனைகள் விதிக்கப் பெற்றன. "என்ன நடந்தெனின், காப்டன் டவ்டன் விசாரணை செய்து தண்டனை விதிக்கும் முறையை விரும்பினுரில்லை"

என்று மிஸ்டர் மாஸ்டன் கூறியிருக்கிறார். அவர் வேலைகளை விரைவிற் செய்து முடிக்க விரும்பினார். இவ்வேடாகூடமுள்ள அதிகாரி விதித்த தண்டனைகளின் குறிப்பு எங்கே இருக்கப் போகிறது? அவர் "ஜனங்களைத் தாளம் போடவும் ஏணிகளின் மீதேறவும் செய்வது வழக்கம்." மாறுதலை நாடி, சாதுக்கள் சிலர் சுண்ணாம்படிக்கப் பெற்றனர். இது வேண்டுமென்றே செய்யப்பெற்றதென்பதைக் காப்டன் டவ்டன் மறுக்கின்றனர். அவர்கள் சுண்ணாம்பு மூட்டைகளை இறக்குமாறு கேட்டுக்கொள்ளப் பெற்றார்களென்றும், அப்பொழுது அவர்கள் சுண்ணாம்பு பூசிக்கொண் டிருந்தார்களென்றும் அவர் சொல்லுகிறார். இவ்வுரையை நாங்கள் முற்றிலும் நம்பவில்லை. இம்முறையை விளக்கிக் கூறியுள்ளவர்களின் வாக்குமூலத்தையே நாங்கள் நம்புகிறோம். தவறிழைத்தவர்களெனச் சொல்லப்பட்டவர்களைத் தண்டிக்கும் முறைகளில் ஒன்று யாதெனின், ஸ்டேஷன் பண்டகசாலையிலுள்ள பாரமான மூட்டைகளைத் தூக்கச் சொல்வதேயாம். ஐரோப்பியர் ஒவ்வொருவரையும் சலாஞ்செய்யத் தவறுவோர், சாட்டையா லடிக்கப்பெறாவிடின், தங்கள் நாசிகளைத் தரையின்மேல் தேய்த்துக்கொள்ளுமாறு செய்யப்பட்டனர். ஜனங்கள் இராணுவச்சட்டத்தை விரும்பினார்களென்றும், இந்தத் தண்டனைகளைக்கண்டு தாழ்வுறாமல் சந்தோஷங்கொண்டார்களென்றும் காப்டன் டவ்டன், மிஸ்டர் மார்ஸ்டன் ஆகிய இருவரும் கூறியிருக்கின்றனர். காப்டன் டவ்டன் ஜனங்களிடமிருந்து தமக்கு ஓர் உபசாரப்பத்திரத்தைப் பெற்றுக்கொண்டனர். தண்டிக்கும் பொருட்டு அவர் தம்மைப் புகழ்ந்துபாட வேண்டுமென ஒரு மகமதியருக்குக் கட்டளையிட்டனர். அவர் கயிற்றைச் சுற்றிக்கொண்டே கால்களினால் குதிக்குமாறு ஜனங்களுக்குக் கட்டளை யிட்டனர். இத்தண்டனை விதிக்கப்பெறுவோர் நில்லாமல் 20 முறை கயிற்றைச் சுற்றிக்கொண்டே குதித்

துக்கொண் டிருத்தல் வேண்டும். இங்ஙனம் குறைந்தது 20 பேர் தண்டிக்கப்பெற்றனரென அவர் சொல்லுகிறார்.

நியாயவாதிகள் மிகைபடக் கூறிய விஷயங்களுள் "ஜனங்கள் அரசாங்கத்தார் கண்முன் ஆயுதமற்ற ஆடுமாடுகளைப்போலிருக்கிறார்கள்" என்று ஹிந்து நியாயவாதி யொருவர் கூறியதும் ஒன்றாகுமென மிஸ்டர் மார்ஸ்டன் குறைகூறி யிருக்கிறார். நாங்கள் விளக்கிக் கூறியுள்ள தண்டனைகளும், ஜனங்களின் மனநிலை அலட்சியஞ்செய்யப் பெற்றதும் நியாயவாதி சாட்டும் குற்றத்தை ருஜூப்படுத்துகின்றன. தம்முடைய அறிக்கையில் ஜனங்கள் "விருப்பத்துடன் அடிமைகளானார்கள்" என்று காப்டன் டவ்டன் கூறியிருக்கிறார். "விருப்பத்துடன் அடிமைகளானார்கள்" என்பதன் பொருளை விளக்கிக் கூறுமாறு ஸர் சிமன்லால் ஸேதல்வாத் கேட்டதற்கு அவர் "உங்களுக்குத் தேவையானபடி வேலைசெய்ய விரும்புகிறார்கள் என்பதே இதன் பொருள்" என்று விடை பகர்ந்தனர். இவ்வதிகாரி சிவில் வழக்குகளையும் விசாரணை செய்து தண்டனை விதித்தனர். இங்ஙனமே இவர் ஒருகோயிலுக்குச் சேரவேண்டிய வாடகை விஷயமான வழக்கையும் பைசல் செய்துவிட்டார். அவருடைய அபிப்பிராயத்தின்படி தொந்தரவு விளைப்பவராக வேனும் எதிர்ப்பவராக வேனு முள்ளவர்களையும் அவர் தண்டித்து வந்தனர். பகிரங்கமாக எதிர்ப்போருக்கு இராணுவச் சட்ட தண்டனை போதாதெனத் தாம் கருதியதாகவும் அதனாலேயே இராணுவச் சட்ட தண்டனையினும் கொடிய தண்டனை விதித்ததாகவும் அவர் தெரிவித்தனர். அங்ஙனஞ் செய்ததனால் அவர் ஜெனரல் பன்யனுடைய உத்தரவுகளை மீறிச் சொல்லவில்லையா வென சாகிப்ஜாடா சுல்தான் அகமத் அவரைக் கேட்டனர். தம்முடைய சொந்த ஆலோசனையின்மேல் அங்ஙனஞ் செய்ய உரிமை யுண்டெனத் தாம் கருதியதாகக் காப்டன் டவ்டன் பதிலளித்தனர்.

தாம் அழைத்துத் தம்மிடம் வராதவர்களைத் தண்டிக்குமாறு அவர் சில கூட்டத்தவரை அவர்கள் வீடுகளுக்கனுப்பினர். வரத் தவறியவர்களுடைய பொருள்கள் கொளுத்தப் பெற்றன. எந்த இராணுவச் சட்ட உத்தரவின்படி யேனும் அவர் இங்ஙனஞ் செய்தது நியாயமாவெனக் கேட்கப் பெற்றனர். அவர் "ஆம், நியாயமென்றே நினைக்கிறேன்" என்று பதிலுரைத்தார். இங்ஙனமே எளியவர் பலருடைய பொருள்கள் எச்சரிக்கையின்றி நாசமாக்கப் பெற்றன.

கைதிகளின் விசாரணைகள் தொடங்கு முன், நீதிபதிகள் தூக்குத் தண்டனை விதிப்பார்களென எதிர் பார்த்துப் பகிரங்கமான ஓரிடத்தில் தூக்கு மரம் அமைக்கப்பெற்றிருந்தது. தூக்கு மரம் ஜனங்கள் அதிக்கிரமச் செய்கைகள் புரிந்த இடத்திற்குச் சமீபமாக நிறுத்தப்பட்டிருந்து. ஸர் மைகல் ஓட்வியரின் உத்தரவின்படியே இங்ஙனஞ் செய்யப்பட்டதென விசாரணையில் வெளியாயிற்று. தூக்குத் தண்டனை நிறைவேற்றப் படு முன், பகிரங்கமாகத் தூக்கிடுதல் ரத்து செய்யப்பட்டது. பொது ஜன மரியாதையைப் பாழ்படுத்தவல்ல இம்முறையை இந்தியப் பத்திரிகைகள் கண்டித்ததனலேயே அதுவிட்டொழிக்கப் பெற்றதென எண்ணுகிறோம். இந்தத் தூக்கு முறை முக்கியமான ஒரு கருத்தை மனத்திலேயே எழுப்புகின்றது. இம்மாகாணம் முழுவதிலும் இராணுவச்சட்ட தண்டனையின்படி 18 பேர் தூக்கிடப்பெற்றனர். இந்தியா முழுவதும் ஏற்பட்ட தீவிரமான கிளர்ச்சியும், இந்தியா மந்திரியாரோடு தந்திப் போக்குவரவு செய்து அப்பீல் முடிவாகும்வரை மரணதண்டனைகள் நிறுத்தி வைக்கப்பட வேண்டுமெனக் கேட்டுக்கொண்ட கனம் பண்டித மோடிலால் நேருவின் சமயோசிதமானதும் உறுதியானதும் ஜனோபகார மானதுமான முயற்சியும் அதுகாலை தோன்றியிரா விடில் இன்னும் பலர் தூக்குமாத்திற் கிரையாயிருப்பர். நற்

காலத்திற்கேற்ப இந்தியா மந்திரியார் தலையிட்டு, இம் மரண தண்டனைகளைத் தள்ளி வைக்குமாறு இராஜப் பிரதிநிதியாருக்குக் கட்டளை யிட்டனர். இம்மரண தண்டனைகளை இராஜப் பிரதிநிதியார் தாமே தள்ளிவைக்காதிருந்ததற்காக நாங்கள் வருந்தாம லிருக்க முடியவில்லை. இராணுவச் சட்ட விசாரணைகள் கவலையீனமாகச் செய்யப்பட்டு வந்தனவென்பதை உணருங்கால் எங்களுடைய வருத்தம் அளவிற் பெருகா நிற்கின்றது. தூக்கிடப்பெற்றவர்களுள் பலரும், மரணதண்டனை விதிக்கப் பெற்று, தண்டனை நிறைவேற்றப் படாதிருப்போருள் பலரும் நிரபராதிகளா யிருத்தல் வேண்டுமென நாங்கள் கருதுகிறோம்.

உண்மையை வேண்டுமென்றே பொருட்படுத்தா திருந்ததிலும் அம்மனப்போக்கில் பிடிவாதங் கொண்டிருப்பதிலும், இராணுவச்சட்ட நிர்வாகத்தை வகித்த அதிகாரிகளுள் எவரேனும் கர்னல் மக்ரேக்குச் சமமாக இருந்திருப்பினும், ஒருவரும் அவருக்கு மேலாக விளங்கவில்லை. ஹண்டர் கமிட்டியார் முன் கொடுத்துள்ள வாக்குமூலத்தில் அவர் "இந்நகரம் பல வருஷங்களாக அராஜகத்திற் சிறந்து விளங்கி வந்திருக்கிறது" என்று கூறியுள்ளார். அதற்குமுன் காசூர் தமக்குத் தெரியாதென்பதை அவர் ஒப்புக்கொண்டார். எனவே ஸர் சிமன்லால் பின்வருமாறு கேட்டனர்.

வினா:—உம்முடைய வாக்கு மூலத்திலுள்ள இக்கூற்றிற்கு ஆதாரம் யாது?

விடை:—அஃதெல்லாம் நான் காதினாற் கேட்டது தான்.

வினா:—உமக்குச் சொந்த அநுபவ மில்லையோ?

விடை:—இல்லை.

வினா:—இந்நகரம் சென்ற பல வருஷங்களாக அராஜகத்திற் பேர்பெற் றிருந்ததென்பதை உமக்குச் சொல்லியவர் யாவர்?

விடை :—இவ்வினுவிற்கு விடையளிக்க நான் சம்மதப் படவில்லை.

வினு :—நீவிர் இவ்வாக்கு மூலத்தை அதிகாரிகளிட முள்ள பொறுப்புள்ள தஸ்தா வேஜில் கொடுக்கின்றீர். எனவே இவ்வாக்கு மூலத்திற்கு ஆதாரம் யாதென்பதை அறிய விரும்பு கின்றேன்.

விடை :—நான் கொடுத்துள்ளபடியே அதனை விடுக் கின்றேன்.

வினு :—நீவிர் கொடுத்துள்ளபடி விடலாமென்பது உண் மையே. ஆனுல் உம்முடைய வாக்குமூலத்தின் காரணங்களை அறிய விரும்புகிறேன். எப்ரல் 10-ந்தேதிக்கு முன் காசூரில் அரசியல் சம்பந்தமான வேலையொன்றுஞ் செய்யப்படவில்லை யென்றும் அரசியல் விஷயத்தில் ஊக்கங் காட்டப்படவில்லை யென்றும் இதற்குமுன் உத்தியோகஸ்தர்கள் சொல்லியிருக்கிற படியால் நான் இந்தக் கேள்வி கேட்கிறேன். எனவே உமது வாக்கு மூலத்தில் இந்நகரம் பலவருஷங்களாக அராஜகத்தில் பேர்போன தெனக் குறிப்பிடப்பட் டிருத்தல் எனக்கு வியப்பை உண்டுபண்ணுகிறது.

விடை :—நான் இவ்வினுவிற்கு விடையிறுக்க மாட்டேன்.

* * * * *

வினு :—பிறகு நீவிர் “அரசாங்கத்திற்கு விரோதமான மனப்போக்குள்ள நியாயவாதிகள் இந்நகரில் இருக்கிறுர்கள்” என்று சொல்லுகிறீர். அதுவும் காதிுைற் கேட்டது தானே?

விடை :—ஆம்.

வினு :—முன் வாக்குமூலத்தைப் போலவே இதுவும் வேறோர் ஆதாரத்தையும் கொண்டிருக்கவில்லையே?

விடை :—இல்லை.

வினா :—இராணுவச் சட்ட நிர்வாகத்தை வகித்த முறை யில், 12-ந் தேதியும் அதற்குப் பிறகும் நியாயவாதிகள் பலர் சட் டத்தையும் ஒழுங்கையும் நிலை நாட்டுவான் வேண்டி அதிகாரி களுக்கு உதவி புரிந்து வந்தனரென்பதையும், அவர்களுள் ஒரு வர் மிஸ்டர் ஷெர்வுட் துரைமகளுரைக் காக்க முற்பட்டவர் களோடு கலந்திருந்தனரென்பதையும் நீவிர் அறிவீரா?

விடை :—அறிவேன்.

வினா :—நான் விளக்கிக் கூறியுள்ளபடி நியாயவாதிகள் பலர் அதிகாரிகளுக்கு உதவினரென்பதை யறிந்துகொண்டும், நீவிர் நியாயவாதிகள் அரசாங்கத்திற்கு விரோதமான மனப் போக் குடையவர் களென்னும் உமது கூற்றை இன்னும் நிலையாகக் கொண்டிருக்கின்றீரா?

விடை :—நான் அவ்வாக்கு மூலத்தை நிலை நாட்டி அது காதினற்.கேட்டதெனச் சொல்லுகிறேன்.

வினா :—நீவிர் இப்பொழுதும் அதை உறுதியாகக் கொள் கின்றீரா?

விடை :—நீங்கள் தெரிவித்த விஷயங்கள் சரியானவைக ளென ஒத்துக்கொள்கின்றேன்.

வினா :—அவை சரியாயின், நீவிர் உம்முடைய வாக்குமூலத் தையே கடைப்பிடிக்கின்றீரா, அதனைத் திருத்திக் கொள்ளச் சித்தமாயிருக்கிறீரா?

விடை :—நான் பதிலுக்கு உங்களை ஒரு கேள்வி கேட் கிறேன். நியாயவாதிகளெல்லோரும் முழு.........நிறுத்த முயன் றனரோ?

வினா :—நல்லது, நான் உமது வினாவிற்கு விடை பகர இங்கே இருக்கவில்லை.

விடை :—நல்லது, உங்கள் வினாவிற்கு விடையளிக்க நான் விரும்பவில்லை.

வேலை நிறுத்தத்திற் சேர்ந்திராத காசூர் வியாபாரிகளின் ஹூண்டிகள் அமிர்த சரஸ் வியாபாரிகளால் ஏற்றுக் கொள்ளப் படவில்லை யெனவும் கர்னல் மக்ரே சொல்லியிருக்கிறார். அது வும் பிறர் சொல்லக் கேட்டது தானென்றும், " அதனை ஆதரிக் கத் தமக்கு யாதொரு சாட்சியமும் கிடைக்கவில்லை " யென்றும் அவர் பதிலளித்தனர். பகிரங்கத்தில் கிளர்ச்சி செய்பவர்களின் வீடுகளில் இராணுவச் சட்ட அறிக்கைகள் ஒட்டப் பெறவேண்டு மென இவ்வதிகாரி உத்தரவு செய்திருந்தார். 'கிளர்ச்சிக்காரர்' என்னும் பதத்திற்கு அவர் யாது பொருள் கொண்டிருந்தன ரென்று ஸர்சிமன்லால் அவரைக் கேட்டனர். அவர் " அது நல்ல ஆங்கில மொழியென நினைக்கிறேன் " என்று பதிலுரைத் தார்.

வினா:—கிளர்ச்சிக்காரர் என்பதற்கு நீவிர் யாது பொருள் கொள்கின்றீர்?

விடை:—நான் என் வாக்குமூலத்திற் கூறியுள்ளதைத் தவிர வேறு வழியில் பதிலளிக்க விரும்பவில்லை.

இத் தெளிவற்ற சம்பாஷணை இன்னுஞ் சிறிது நேரம் நடந்துவந்தது. இவ்வதிகாரி தாம் செய்யவேண்டி யிருந்த மிகப் பொறுப்புள்ள கடமைகளை எங்ஙனஞ் செய்து முடித்தன ரென்பதை உணர்த்தும் பொருட்டே நாங்கள் இப்பகுதிகளை ஈண்டுப் பெயர்த்து வரைந்திருக்கிறோம். இவைகளை முன் னிட்டே அரசாங்கத்தார் அவருக்கு அபயமளித்துள்ளார்.

ஒரு வீட்டின் சுவர்களில் ஒட்டப்பெறும் அறிக்கை பாழ் படுத்தப்பெறின், வீட்டிற்குடையவரின் பொருள்கள் நாசமாக்கப் பெறுமென இவ்வதிகாரி கட்டளை பிறப்பித்திருந்தார். இந்தக் கட்டளை வாய்மொழியாகச் செய்யப்பட்டதா எழுத்து மூலமாகச் செய்யப்பட்டதா என்ற கேள்விக்கு அவர் விடையளிக்க மறுத் துப் பின்வருமாறு கேட்கலாயினர். " அது வாய்மொழியாக

இருந்தாலென்ன, எழுத்து மூலமாக இருந்தாலென்ன ?" அவர் இறுமாப்புடன் பதிலளித்தது அதிகக் குற்றமா, மிருகத்தனமான உத்தரவு பிறப்பித்தது அதிகக் குற்றமா என்பதை உணர்ந்து கூறுதல் கஷ்ட சாத்தியமாகும். நாங்கள் 'மிருகத்தனமான' என்று கூறுங் காரணம் யாதெனின், சாட்சி கூறியுள்ள மறு மொழியின்படி, "அறிக்கை வேறெவராலேனும் நாசப்படுத்தப் பட்டிருப்பினும்" வீட்டுக்குடையவரின் பொருள்கள் அழிக்கப் பெறுமென அறிவிக்கப்பட் டிருந்தது. இவ்வுத்தரவு நியாய மானதென அவர் எண்ணினாராவெனக் கேட்கப்பட்டதற்கு அவர் "அவ்வுத்தரவு நியாயமானதே. இன்னும் நான் அங் ஙனமே கருதுகிறேன்" என்று பதிலளித்தனர்.

வினு :—பள்ளிச் சிறுவர்களைச் சவுக்காலடிக்கும் விஷயத் தில், எல்லோரிலும் பெரியவர்களான ஆறு பேர் அடிப்பதற் காகத் தெரிந்தெடுக்கப்பட வேண்டுமென நீவிர் உத்தரவு செய்தீரா ?

விடை :—பொதுவாகப் பேசுமிடத்து அங்ஙனம் உத்தரவு செய்ததாகவே கூறுவேன்.

வினு :—தாங்கள் பெரியவர்களா யிருந்ததொன்றே அவர்க ளுடைய துர்ப்பாக்கியம் போலும் ?

விடை :—உண்மை தான்.

வினு :—தாங்கள் பெரியவர்களா யிருந்த காரணமாக அவர் கள் சவுக்கடிபட வேண்டியவர்களா யிருந்தார்களோ ?

விடை :—ஆம்.

வினு :—இது நியாயமான செய்கையென்று நினைக்கின் றீரா ?

விடை :—அந்தச் சந்தர்ப்பத்தில் நான் அங்ஙனம் நினைத் தேன். இப்பொழுதும் அப்படித்தான் நினைக்கிறேன்.

16

தாவா உத்தியோகஸ்தர்கள் இருவரும் கொடுத்துள்ள மறு மொழிகளில் சிலவற்றையே நாங்கள் இங்கே மாதிரி காட்டியிருக்கிறோம். அவர்களுடைய மறுமொழிகள் இறுமாப்பும் பொறுப்பற்ற தன்மையும் இங்ஙன மிருக்குமென்பதை உணர்த்துவனவாகும். இவ்வுத்தியோகஸ்தர்கள் குறை கூறப் பெறுவதைக் காட்டிலும் இவர்களை நியமித்த அதிகாரிகள் அதிகமாகக் குறை கூறப்படுதல் வேண்டாமாவென்பது எங்களுக்கு நன்கு விளங்கவில்லை. இவ்வுத்தியோகஸ்தர்கள் தாங்கள் செய்தது யாதென்பதை உணர்ந்து கொண்டிராமலிருக்கலாம். ஆனால் இவர்களைத் தெரிந்தெடுத்தவர்கள், இவர்கள் இப்பதவிக்குத் தகுதியற்றவர்களென்பதை அறிந்து கொண்டிருத்தல்வேண்டும். பிரதேச சந்தர்ப்பங்களை உற்று நோக்குங்கால் இராணுவச் சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது அநாவசியமானதென்றும், அச்சட்டம் தகா முறையில் அனுஷ்டிக்கப் பட்டதென்றும் கருதுகின்றோம்.

## 5. பட்டியும் கேம் கானும்.

இவ்விரண்டும் காசூருக்குச் சில மைல் தூரத்திற்கப்பாலுள்ள சிறு ரெயில்வே ஸ்டேஷன்கள். கேம் கானில் ஸ்டேஷன் சொத்துகள் கொள்ளையடிக்கப் பெற்றுக் கம்பிகள் அறுக்கப்பட்டன. மிஸ்டர் மார்ஸ்டன் கூறியபடி அது மிகச் சிறு செயலாகும். இச்செய்கை "தாழ்ந்த வகுப்பினராலும், கூட்டக்காரர்களாலும், கேவலமான தொழிலாளராலும்" செய்யப்பட்டது. பட்டியில், மார்ஸ்டன் கூறியபடி, நகரவாசிகளுள் பிரதானமானவர்கள் உத்தியோகஸ்தர்களுக்கும் போலீசாருக்கும் உதவி செய்தார்கள். எல்லாம் அமைதியா யிருந்தது. ஆயினும் இராணுவச் சட்டத்தின் பலன் இவ்விரண்டு கிராமங்களிலும் முழு அளவில் அனுபவிக்கப் பெற்றது.

## 6. குஜரன்வாலா.

குஜரன்வாலா ஜில்லா பல வழிகளிலும் இம்மாகாணத்தி லுள்ள பிரதான ஜில்லாக்களுள் ஒன்றாகும். குஜரன்வாலா 30,000 ஜனத் தொகையுள்ள ஒரு சிறு நகரமெனினும், மகராஜா ரஞ்சிட் சிங்க்ஜியின் பிறப்பிடமான காரணத்தால் மிகச் சிறந்து விளங்குகின்றது. அது பிரதான இருப்புப் பாதையில் லாகூரிலிருந்து 42 மைல் தூரத்திலுள்ள ஒரு முக்கியமான ரெயில்வே ஸ்டேஷன். இந்த ஜில்லாவில் குஜரன் வாலா நீங்கலாக எங்கள் பார்வைக்கு வந்த இடங்களாவன: வாஜிரபாத், நைஜாமபாத், அகல்கார், ராமநகரம், ஹாபிஜபாத், ஸாங்க்லாஹில், மோமன், தாபன்சிங்க், மணியன்வாலா, நவன் பிண்ட், சுஹர்கானு, ஷெயிகுபுரம். சென்ற நவம்பர் மாதம் முதலில் குஜரன்வாலா இரண்டு ஜில்லாக்களாகப் பிரிக்கப்பட்டது. பிரிக்கப்பெற்ற ஜில்லாவின் பெயர் ஷெயிகுபுரம் ஜில்லா. எனவே இவ்வறிக்கையில் பழைய ஜில்லா ஒரே அதிகாரியின் கீழுள்ள ஒரு பிரதேசமாக எடுத்துக் கொள்ளப்படும்.

எப்ரல் மாதம் 13-ந் தேதி வரையில், திருத்தமாகக் கூறின் 14-ந் தேதிவரையில், அமைதியின்மையின் அறிகுறி ஒன்றும் காணப்படவில்லை யென்பது யாவரும் ஒப்பமுடிந்த உண்மையாகும். நிலைமை இங்ஙன மிருந்ததன் காரணமாகவே கர்னல் ஓப்ரையன் 12-ந் தேதி அம்பாலாவுக்கு மாற்றப்பெற்றனர். அவர் குஜரன் வாலாவைவிட்டுச் செல்லுகையில் அவருடைய நண்பர்கள் அவருக்கு உபசாரப்பத்திரம் படித்துக் கொடுத்தார்கள். ஏதேனும் கலகம் நடைபெறுவதாகத் தாமேனும் அதிகாரிகளேனும் கண்டுகொண்டிருப்பின் தாம் மாற்றப்பட்டிரா ரென்றும், 14-ந் தேதி கலக மேற்பட்டபொழுது திரும்ப வரவழைக்கப்பட்டதுபோல் தாம் அப்பொழுதே அங்குத் தங்கி

யிருந் திருப்பரென்றும் கர்னல் ஒப்ரையன் ஹண்டர் கமிட்டியார் கேட்ட ஒரு கேள்விக்கு விடை கூறியுள்ளார். மார்ச்சு மாதம் 30-ந் தேதி குஜரன்வாலாவில் யாதொரு குழப்பமும் தோன்ற வில்லை; வேலை நிறுத்தமும் ஏற்படவில்லை. ஏப்ரல் மாதம் 4-ந் தேதி ஜில்லா காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்கள் மகாத்மா காந்தி அனுப்பியிருந்த செய்தி சம்பந்தமாக வேலை நிறுத்த விஷயத்தை ஆலோசிக்கலானார்கள். 5-ந் தேதி பெரிய பொதுக் கூட்டமொன்று கூட்டப்பெற்றது. அதில் ரௌலட் சட்ட சம்பந்தமான நான்கு தீங்கற்ற தீர்மானங்கள் நிறைவேற்றப்பெற்றன. இக்கூட்டத்தில் பேசப்பெற்ற பேச்சுகள் வேண்டுமென்றே மிதமானபோக்கிற் பேசப்பட்டன. ஆயினும் கர்னல் ஒப்ரையன் இக்கூட்டத்தைப் பற்றிக் கவலை செலுத்தலானார். அவர் குஜரன்வாலாவின் பிரதான வாசிகளுள் சிலரை அழைப்பித்து, ஏதேனும் குழப்பம் நேரிடின் அவர்களே பொறுப்பாளிகளாவார்களென அவர்களிடந் தெரிவித்தார். அவர்கள் டெபுடி கமிஷனரும், அப்பொழுது அங்கு வந்திருந்த போலீஸ் சூபரின்டெண்டெண்டும் அவர்களுக்கு விருப்பமானால் கூட்டத்திற்கு வரலாமெனத் தெரிவித்தார்கள், ஏப்ரல் மாதம் 6-ந் தேதி வேலை நிறுத்தம் முழு அளவில் அனுஷ்டிக்கப்பெற்றது. பெரியோரும் சிறுவரும் உண்ணாவிரதமிருந்து கடவுளை வழிபட்டனர். வேலை நிறுத்தத்தையும் உண்ணாவிரதத்தையும் தடுக்க அதிகாரிகள் தங்களா லியன்றவரையில் முயற்சி செய்தார்களென்பதையும், வேலை நிறுத்தத்தைத் தடுக்க அதிகாரிகளேயோ அவர்களுக்காகப் பிறரோ ஜனங்களை வற்புறுத்தினார்களென்பதையும் எங்கள் முன்னுள்ள பல சாட்சியங்கள் விளக்கிக் காட்டுகின்றன.

முன்னரே குறிப்பிடப்பெற்றுள்ளபடி, 12-ந் தேதி வரையில் எல்லாம் அமைதியாக விருந்தது. ஆனால் மகாத்மா காந்தி கைதுசெய்து வெளியேற்றப்பட்ட செய்தியும், டாக்டர்கள் சத்ய

பாலும் கிச்லுவும் கைது செய்து வெளியேற்றப்பட்ட செய்தி யும் திடீரெனக் குஜரான்வாலாவுக்கு எட்டியது. அங்ஙனமே 10-ந் தேதி லாகூரிலும் அமிர்தசரஸிலும் நிகழ்ந்த சம்பவங்களும் எட்டலாயின. இதன் மேல் பொது ஜனங்களும் ஜனத் தலைவர் களும் இன்னொரு முறை வேலை நிறுத்தஞ் செய்யும் விஷயத் தைப் பற்றி ஆலோசிக்கலானார்கள். இம்முறை மேற் கூறியவாறு கைது செய்ததைக் கண்டிக்கவும், லாகூரிலும் அமிர்த சரஸிலும் சுடப்பட்டதனால் காய முற்றவர்களுக்கும் இறந்தவர்களுக்கும் தங்கள் அனுதாபத்தைத் தெரிவிப்பதற்காகவும் வேலை நிறுத்தஞ் செய்ய வேண்டுமென யோசிக்கலானார்கள். தலைவர்கள் ஒரு கூட்டங் கூட்டி அதில் இவ்விஷயத்தைப் பற்றி வாதஞ் செய் தார்கள். அந்த நெருக்கடியான சந்தர்ப்பத்தில் வேலை நிறுத்தஞ் செய்தல் அபாயகரமான தென்பதை அவர்கள் உணர்ந்தார் களெனினும், ஜனங்களின் ஊக்கத்தைக் கட்டுப் படுத்தத் தங்க ளாலாகாதென்றும் எனவே வேலை நிறுத்த மேற்படின் வேலை நிறுத்தஞ் செய்வோரைப்பொழுது போக்குடனிருக்கச் செய்யு மாறு ஒரு கூட்டங் கூட்டவேண்டுமென்றும் தலைவர்கள் தீர் மானிக்கலானார்கள். மறுபடியும் அதிகாரிகள் வேலை நிறுத்தத் தைத் தடுக்க முயன்றும் பயன் பெறவில்லை. ஏப்ரல் மாதம் 14-ந் தேதி இன்னொரு முழு வேலை நிறுத்தம் தோன்றிவிட்டது.

ஏப்ரல்ீ 13-ந்தேதியும் அதற்கடுத்த நாட்களும் வைசாகி விடு முறை நாட்களாகலின், எப்பொழுதும் குடிப்பதில் வெறுப் புக் கொள்ளாதவரும் இச்சமயத்தில் குடியாமலிருக்க முடியா தவர்களுமான பலர் தங்கள் விடுமுறையை வேடிக்கையாய்க் கழிக்குமாறு குஜரான்வாலாவுக்கு வந்து சேர்ந்தனர். எனவே 14-ந் தேதி குஜரான்வாலாவிற் குழுமியிருந்த கூட்டத்தில் கட் டுக்கடங்காத் தன்மையின் அம்சங்கள் பல ஒன்று சேர்ந்திருந் தன. 'இஷ்டப்படி செய்யலாம்' என்னும் விடு முறை மனப்

போக்கும், குடியும், அரசாங்கத்தார் செயல்கள் மீது அருவருப்பும், மற்ற விடங்களில் ஜனங்கள் செய்த அதிக்கிரமச் செயல்களின் செய்தியும், சோம்பேறித்தனமும் ஒன்று சேரலாயின.

ஸ்டேஷனுக் கருகிலுள்ள இருப்புப்பாதை வாராவதிகளொன்றின்மேல் இறந்துபோன கன்றுக்குட்டி யொன்று தொங்கவிடப் பெற்றிருந்ததென அதிதாலையில் யாரோ சொல்லிக்கொண்டிருந்தனர். யார் அதைச் செய்திருப்பினும், அது ஹிந்துக்களுக்குக் கடுங்கோப மூட்டும் அறிவீனமான செயலாகுமென்பதிற் சந்தேக மொன்றுமில்லை. எங்களிடம் பல அனுமானங்கள் தெரிவிக்கப் பெற்றிருக்கின்றன. அவைகளுள் ஒன்று ஹிந்து மகமதிய ஒற்றுமையை விரும்பாத போலீசாரே இதைச் செய்தனரென்பது. இது குஜரான்வாலா வாக்கு மூலங்களில் பெருக்கப்பட்டிருக்கிறது. அதிகாரிகள் இக்குறும்பு செய்தவர்களைக் கண்டு பிடித்தார்களில்லை. இரண்டு வகுப்பினரையும் வேறுபடுத்த விரும்பியவரே இதனைச் செய்திருக்க வேண்டுமென்பதிற் சந்தேகமில்லை. ஆனால் இதனால் விளைந்த பயன் நேர் விரோதமாக விருந்தது. செத்த கன்றுக்குட்டி தொங்கவிடப் பட்டிருந்தது அதிகாரிகளின் தூண்டுதலினாலேயேயென ஜனங்கள் எண்ணலானார்கள். ஏனெனில் யாரோ பன்றி யிறைச்சியை யெடுத்து ஒரு மசூதியின் மேல் எறிந்திருந்தனர். இந்நம்பிக்கை இரு வகுப்பினரையும் நெருங்கச் சேர்த்துவிட்டது. எனவே ஒரு கூட்டம் ஸ்டேஷன் இருப்புப்பாதை வாராவதியை நோக்கிச் சென்றது. இதனிடையில் லாகூர் பக்கத்திலிருந்து வாஜிரபாத் செல்லும் வண்டித் தொடரொன்று வந்திருந்தது. அதிலுள்ள கான்ஸமான் ஒருவர் 13-ந் தேதி நடைபெற்ற படுகொலைச் செய்தியைத் தெரிவித்தனர். வண்டித் தொடரில் விடுமுறைக்கு வருபவர்களின் கூட்டம் மிகுதியாக விருந்தது. கூட்டத்திற் சிலர் வண்டியை மேலே

செல்ல வொட்டாதபடி தடுக்க எண்ணியிருந்தனர். அவர்கள் வண்டியின்மேல் கற்களை விட்டெறிந்தார்கள் போலும். பிறகு அவர்கள் குருகுல வாராவதிக்கு நெருப்பு வைத்துவிட்டார்கள். ஆயினும் அம்முயற்சி அஜாக்கிரதையாய்ச் செய்யப்பட்டது. இது செய்யப்பட்டுக்கொண் டிருந்தபொழுது, குருகுலத்தின் கவர்னர், லாலா ராலியராம், பாரிஸ்டர் மிஸ்டர் லாப்சிங்க், நியாய வாதி மிஸ்டர் தீன் மகமத் முதலியவர்களும் பிறரும் அபாயத்தை யுணர்ந்து அவ்விடத்திற்குச் சென்றார்கள். ஐரோப்பிய உத்தி யோகஸ்தரொருவரும் போலீஸ் சேவகர் சிலரும் வாராவதியை அணுகிச்சென்றனர். குருகுல உத்தியோகஸ்தர்கள், மேற் கூறிய இந்திய கனவான்களின் உதவிபெற்று, நெருப்பை அவித்துவிட்டார்கள். "போலீசார் பொது சொத்துக்களைப் பாதுகாக்கக் கடமைப்பட் டிருக்கின்றனரேயன்றி நெருப்பை அவித்தல் அவர்கள் வேலையாகாது" என்று போலீஸ் சூபரின் டெண்டெண்ட் கூறியது மிகவும் விநோதமானது.

அதன் பிறகு கூட்டம் ஸ்டேஷனுக்கு அப்பாலுள்ள காச்சி வாராவதிக்குச் சென்றது. இங்கே போலீஸ் சூபரின்டெண் டெண்ட் மிஸ்டர் ஹெறான் கூட்டத்தைக்கலைக்க முயற்சிசெய்து கொண்டிருந்தார். அவர் துப்பாக்கியாற் சுடுதல் தகுதியெனக் கருதி மிக்க சேதத்தை உண்டுபண்ணினார். இதனிடையில் ஜனத்தலைவர்கள் கூட்டத்தைக் கட்டுப் படுத்தவும் ஜனங்களை நகர எல்லைக்குள் வைத்திருக்கவும் முயற்சி செய்துகொண் டிருந் தார்கள். எனவே அவர்கள் ஒரு கூட்டங் கூட்ட முயற்சி செய் திருந்தனர். அவர்களுடைய முயற்சி அநேகமாய் முடிவுறும்போ லிருந்தது. துரதிர்ஷ்ட வசமான சம்பவமொன்று நிகழ்ந்திரா விடில் அது முற்றிலும் கை கூடி யிருக்கும். கூட்டத்திலுள்ள வர்களின் அனுதாபத்தை எழுப்பவேண்டியே போலும் காய முற்றவர்கள் கூட்டத்திற்குக் கொண்டுவரப்பட்டார்கள். முயற்சி

முற்றும் பலித்துவிட்டது. கூட்டங் கலைவுற்றது; பழிக்குப் பழி வாங்கும்பொருட்டு ஒரு கூட்டம் ஸ்டேஷனை நோக்கிச் சென்றது. விலையுயர்ந்த பொருள்கள் ஒன்றன்பின் ஒன்ருய் நாசமாக்கப்பெற்றன. சர்ச், தபாலாபீஸ், தாசீல், கோர்ட்ஹவுஸ், ரெயில்வே ஸ்டேஷன் ஆகிய வெல்லாம் அழிக்கப்பெற்றன. போலீசார் சும்மா நின்று வேடிக்கை பார்த்தனரேயன்றி, நெருப் பிடுதலைத் தடுக்க முன் வந்ததாகத் தெரியவில்லை. தீயிடுமாறு போலீசாரே ஜனங்களைத் தூண்டினரென எங்கள் முன் னுள்ள வாக்கு மூலங்களிற் கூறப்பட்டிருக்கிறது. அவைகளி லுள்ள சாட்சியம் இக்கூற்றை உறுதிப்படுத்துகின்றது.

கர்னல் ஒப்ரையன் குதிரை யோட்டமாகக் குஜரான்வாலா வுக்குத் திரும்பிவந்தனர். ஒரு வெற்றுக் கார்ட் அனுப்புமாறு அவர் லாகூருக்கு டெலிபோன் அனுப்பியதாகத் தெரிய வரு கிறது. அவருக்கு என்ன அதிகாரங்களிருந்தன வென்று ஸர் சிமன் லால் கேட்டதற்கு அவர் பின் வருமாறு கூறினர்: "நான் 15-ந் தேதி பிரதான காரியதரிசியோடு டெலிபோனிற் பேசி, நான் சில செய்கைகள் செய்ய நேரிடுமென்றும், அவை நியாய முறையிற் செய்யப்படின் பிறகு சட்ட சம்மத மளிக்கப் பெறுமென நான் நம்பியதாகவும் தெரிவித்தேன்." "ஆனல் அஃது இராணுவச் சட்டம் அறிவிக்கப்பட்டதற்கு முன்பாக வன்ருே?" என்று ஸர் சிமன்லால் கேட்டனர். கர்னல் ஒப் ரையன் "ஆம்." என்று பதிலளித்தனர். ஸர் சிமன் லால் மீண் டும் அவரைப் பின்வருமாறு கேட்கலாயினர்: "நீவிர் சில செய் கைகள் செய்யவேண்டி வருமென்றும், உமது செய்கைகள் தக்க படி செய்யப் பெறின், சட்ட சம்மதம் பெறவேண்டுமென நீவிர் விரும்புவதாகவும் அவருக்கு டெலிபோனில் தெரிவித்த தும் அவர் வெற்றுச் செக் ஒன்று கொடுத்தனரா?" அதற்கு மறுமொழியாகக் கர்னல், "ஆம்" என்ருர். "உமது அறிவைச்

செலுத்தும்; எல்லாம் சரியாய் விடும்" என்று அவர் சொன்னார். உத்தரவாதச் சட்டத்தின் (Indemnity Act) உற்பத்தியாகமம் இதுவாயின், அது நாணயக் குறைவானதென நாங்கள் கூசாது கூறுவோம். இவ்வதிகாரி "தக்க முறையில்" என்ன நடவடிக்கையெடுத்துக் கொண்டன ரென்பதை விரைவிற் காண்போம்.

ஒரு தொழுகையிடம் சேர்ந்துள்ள மதிப்புள்ள பொருள்கள் நாசப்படுத்தப்பட்டது மூர்க்கத்தனமானதும் நியாய விரோதமானதுமாகும் என்று நாங்கள் கருதுகிறோம். போலீஸ் சூபரின்டெண்டெண்ட் துப்பாக்கியாற் சுட்டதும் வராவதியின்மேல் செத்த கன்றுக்குட்டி போக்கிரித்தனமாகத் தொங்கவிடப் பெற்றதும் நெருப்புவைத்தலை நியாயமானதாகச் செய்யமாட்டா. துப்பாக்கிப் பிரயோகமும், முக்கியமாய், இறந்துபோன கன்றுக்குட்டியைத் தொங்கவிட்டதும், ஜனங்களுக்குக் கோபாவேசத்தை உண்டுபண்ணின. ஆயினும் அதிக்கிரமச் செயல்களுக்கு அவைகளை நியாயமாக எடுத்துக் கூறுதல் பொருந்தாது.

கர்னல் ஓப்ரைபன் திரும்பி வந்தபொழுது கூட்டத்தின் கோபம் தணிந்திருந்தது. அவர் உதவி கேட்டிருந்தார். அவ்வுதவி ஆகாயக் கப்பல்கள் உருவங்கொண்டு பிற்பகல் 3-மணிக்கு வரலாயிற்று. அவ்விமானங்கள் முற்றிலும் குற்றமற்ற ஜனங்களின்மேல் வெடி குண்டுகளை எறிந்தன. வெடிகுண்டுகள் யெறியப்பெற்ற எந்த இடத்திலும் யாதொரு கூட்டமும் நடைபெறவில்லை. கால்ஸா போர்டிங் ஹௌஸின்மேல் வெடிகுண்டுகள் எறியப்பெற்றன. மாணவர் ஒருவர் இக்காட்சியைப் பின்வருமாறு விளக்கிக் கூறுகிறார்: "பிற்பகல் சுமார் 3-மணிக்கு ஆகாய விமானங்களின் சப்தம் எங்களுக்குக் கேட்டது...................... அவைகள் சுமார் 10 நிமிஷநேரம் போர்டிங் ஹௌஸின் மேல் வட்டமிட்டுப் பறந்துகொண் டிருந்தன..............திடீரென

ஒரு சப்தம் கேட்டது. ஒரு குண்டு கீழே வந்து எங்கள் மிட்டாய்க்காரர் கண்டா சிங்கின்மேல் விழுந்தது..............அதன் ஒரு துண்டு என் வலது கைவிரலைக் காயப்படுத்தியது. அதிர்ச்சியினால் ஒரு பையன் கீழே விழுந்துவிட்டான்." போர்டிங்க் ஹௌஸ் மேற்பார்வை அதிகாரியும் ஒரு வாக்குமூலம் கொடுத்திருக்கிறார். அவர் சொல்வதாவது: "எங்கள் பள்ளிக்கூடத்தில் எப்பொழுதும் யாதொரு அரசியற் கூட்டமும் நடைபெறவில்லை; அங்ஙனம் நடைபெற அனுமதி யளிக்கப் படுவதுமில்லை. ஏப்ரல் மாதம் 16-ந் தேதி சாப்பிடும் விடுதியில் உள்ளவர் எவரும் நகரத்திற்குச் செல்லவில்லை. எங்கள் போஜன சாலையும் பள்ளிக்கூடமும் நகரத்திலிருந்து சுமார் அரைமைல் தூரத்திலும் ஸ்டேஷனிலிருந்து 1 மைலுக்கு அதிகமான தூரத்திலும் உள்ளன" காப்டன் கார்பெரி ஹண்டர் கமிட்டியார் முன் கொடுத்துள்ள சாட்சியத்தின்படி, அவர் "கூட்டங்கள் போய்க் கொண்டிருப்பினும் வந்துகொண் டிருப்பினும் அவைகளைக் கலைக்குமாறு" உத்தரவு செய்திருந்தனர். கால்ஸா போஜன விடுதியில் வெடிகுண்டு எறியப்பெற்ற விஷயத்தைப் பொறுத்தவளவில், யாதொரு கூட்டமும் போய்க்கொண்டேனும் வந்து கொண்டேனும் இருக்கவில்லை; யாதொரு கூட்டமும் நடைபெறவில்லை; கால்ஸா போஜனசாலையில் வெடிகுண்டுகள் எறியப்பட யாதொரு அவசியமும் ஏற்படவில்லையென நாங்கள் கருதுகிறோம்; நற்காலத்தின் பயனாகவே உயிர்ச்சேதம் ஏற்படவில்லை.

உத்தியோகஸ்தர்கள் வெடி குண்டுகளை எங்ஙனம் எறிந்தார்களென்பதையும் பீரங்கி வண்டிகளைக்கொண்டு எங்ஙனம் சுட்டார்களென்பதையும் அவர்கள் மூலமாகவே அறிந்து கொள்ளுதல் வேடிக்கையா யிருக்கும். சுடத் தொடங்கியபொழுது ஊருக்குத் திரும்பி ஓடிக்கொண்டிருந்த ஜனங்களின் மேல்

வெடி குண்டுகள் எறியப் பெற்றன. ஹண்டர் கமிட்டியாருக்கும் அவ்வுத்தியோகஸ்தருக்கும் கீழ்க்கண்ட சம்பாஷணை நடைபெற்றது :—

வினா :—நீவிர் முதலில் வெடி குண்டெறிந்தீர், அவர்கள் கிராமத்திற்குள் ஓடத் தொடங்கினார்களா ?

விடை :—ஆம்.

வினா :—அதாவது கிராமத்திலுள்ள வீடுகளின்மேலா ?

விடை :—ஆம். குண்டுகளிற் சில வீடுகளைத் தாக்கின வென்று நான் எண்ணுகிறேன்.

வினா :—ஜனங்கள் ஓடிக்கொண்டிருந்து, கலைவுற்று, சிலர் வீடுகளில் புகுந்தார்களா ?

விடை :—ஆம்.

வினா :—நீவிர் கிராமத்திற்குள் பீரங்கி வண்டியைக் கொண்டு சுடலானீர். அதனால் நீவிர் உம்மாற் கலைக்கப்பெற்ற ஜனங்களைத் தாக்காமல் மற்றுமுள்ள குற்றமற்ற ஜனங்களை அவர்களுடைய வீடுகளுக்குள்ளே தாக்கியிருத்தல் கூடுமன்றோ ?

விடை :—குற்றமற்ற ஜனங்களையும் பிறரையும் வேறு பிரிக்க என்னால் முடியவில்லை. ஓடிப்போனவர்களும், சேதமுண்டுபண்ண வந்துகொண்டிருந்தார்களென நான் கருதியவர்களுமான ஜனங்களையே சுட முயன்றேன்.

வினா :—வெடி குண்டெறிந்ததன் பயனாக அவர்கள் கலைந்து சென்றார்களா ?

விடை :—ஆம்.

வினா :—அவர்கள் கிராமத்திற்குள் ஓடினார்களா ?

விடை :—ஆம்.

வினா :—உங்கள் நோக்கம் நிறைவேறவில்லையா ? கிராமத்திற்குள் யாதொரு வித்தியாசமு மின்றி பீரங்கி வண்டியைக் கொண்டு சுட என்ன அவசியம் நேர்ந்தது ?

விடை :—பீரங்கி வண்டியைக் கொண்டு வித்தியாசம் பாராட்டாமல் சுடவில்லை. நான் ஓடிக்கொண்டிருந்தவர்களைப் பார்த்துச் சுட்டேன், கூட்டம் சிதறி கிராமத்திற்குள் திரும்பி ஓடிற்றென்றும் நான் மனிதர்களைச் சுட்டேனென்றும் சொன்னேன்.

தாம் 200 அடி உயரத்தில் இருந்ததாக இவ்வுத்தியோகஸ்தர் சொல்லுகிறார். அவர் தாம் "மிகவும் நன்றாக"ப் பார்த்ததாகச் சொல்லுகிறார், "அவர்களை பீரங்கி வண்டிகளைக் கொண்டு மீண்டும் சுட்டுக்கொல்ல அவசியம் யாது?" என்ற கேள்விக்கு "இன்னும் அதிகச் சேதத்தை உண்டாக்க" என்ற விரைவான பதில் கிடைத்தது.

வினா :—வெடி குண்டுகள் எறியப்பெற்ற பிறகு கூட்டம் கலையத்தொடங்கி ஓடிக்கொண்டிருந்தும், அதில் பலரை காயப்படுத்த வேண்டுமென்பதாவது கொல்லவேண்டு மென்பதாவது உம்முடைய நோக்கம்போலும் ?

விடை :—அவர்களுடைய நன்மைக்காகவே நான் அதைச் செய்ய முயன்றுகொண் டிருந்தேன். நான் ஜனங்களைக் கொல்ல முயன்றால் அவர்கள் திரும்பவும் கூடி நாசமாக்க மாட்டார்களென்பதையும் உணர்ந்துகொண்டேன்.

"அவர்களுடைய ஒழுக்கத்தைப் பாதிக்குமாறு செய்ய வேண்டுமென்பது உமது நோக்கம்போலும்?" என்று ஸர் சிமன்லால் கேட்ட கேள்விக்கு "முற்றிலும் உண்மை" என்ற அமைதியான பதில் கிடைத்தது. இவ்வுத்தியோகஸ்தர் பிறகு இன்னொரு கிராமத்தில் பீரங்கி வண்டியைக்கொண்டு சுடலானார். அங்கே அவர் குஜரான் வாலாவிலிருந்து தங்கள் கிராமத்திற்குத் திரும்பி வந்துகொண்டிருந்த ஒரு ஜனக்கூட்டத்தைச் சுடலானார். இவ்வுத்தியோகஸ்தர் சொல்லுகிறபடி யாதொரு கூட்டமும் அங்கே யிருக்கவில்லை யென்றும், முற்றிலும் குற்றமற்ற

வர்களான சிலர் அங்குமிங்கும் போய்க்கொண் டிருந்தார்களென்றும் எங்கள் முன்னுள்ள சாட்சியம் காட்டுகின்றது. ஜனங்களெல்லோரும் நிராயுத பாணிகளென்பது அனைவரும் ஒப்ப முடிந்த உண்மை. குஜரான் வாலாவில் இந்தியர் விடுதிகளில் சுடப்பெற்ற காரணம் யாதெனின், ஜனங்கள் தெருவில் இருக்கக் கூடாதென்பதே யாம். "சுதேசியர் நகரத்திற்குள்" 150 தோட்டாக்கள் சுடப்பெற்றன. இவ்வுத்தியோகஸ்தர் தாம் சரியாக அறிந்து கொள்ளப்படும் பொருட்டு ஸர் சிமன்லாவிடம் பின்வருமாறு கூறினர்: "வீடுகளின்மேல் திறம்படச் சுடவில்லையென்பதை நீங்கள் அறிந்துகொள்ளுதல் வேண்டும். நான் சுதேசியர் நகரத்திற்குள் சுதேசிகளைச் சுட்டுக்கொண் டிருந்தேன்"

ஆகாய விமானங்களிலிருந்து இங்ஙனம் சுடப்பெற்றதெல்லாம் முற்றிலும் நியாயமற்றதென்பது எங்களுடைய அபிப்பிராயம். ஜனக்கூட்டம் நாசஞ்செய்தான பிறகும், கூட்டங்கள் கலைந்துசென்றன பிறகும் சுடத்தொடங்கினர்கள். எனவே அதிகச் சேதத்தைத் தடுத்தல் என்பது இதில் இல்லை. சுடப்பெற்றது, பழிக்குப் பழி வாங்குவதா யிராவிடினும் யோசனையற்ற தாகுமென்று நாங்கள் நம்புகிறோம். மெஷீன் பீரங்கிகளைத் தம் பொறுப்பில் வைத்திருந்த உத்தியோகஸ்தர்கள் கூறியுள்ளபடியே அவர்கள் கிராமவாசிகளின் உயிர்களைக் கேவலமாக மதித்து, ஜனங்களைப் பயமுறுத்தும் பொருட்டுச் சுடலானார்கள். கொடுக்கப்பெற்ற பட்டியின்படியும் எங்கள் முன் கொடுக்கப்பெற்ற வாக்கு மூலங்களில் கண்டுள்ளபடியும் 12 பேர் கொல்லப்பட்டனரென்றும் 24 பேர் காய மூற்றனரென்றும் தெரிய வருகின்றன. உயிர்ச்சேதம் அதிகமாக ஏற்பட்டிராவிடில், அஃது இதிற் சம்பந்தப்பட்ட உத்தியோகஸ்தர்களின் குற்றமாகாது. வெடி குண்டுகள் வெடிக்கவில்லை.

14-ந் தேதி வெடி குண்டுகள் எறிந்ததற்கு யாதொரு நியாய முமில்லை யெனின், 15-ந் தேதி ஆகாய விமானத்தை உபயோ கத்திற்குக் கொண்டு வந்ததற்குக் கிடைக்கும் நியாயம் அதனி னுமரிதாம். ஏனெனில் அதற்குள்ளாகக் கர்னல் ஒப்ரையன் தமக்குத் தேவையானதை விட அதிகமான இராணுவ உதவி பெற்றிருந்தனர். அவர் கேட்ட உதவியெல்லாம் நிச்சயமாய்ப் பெற்றிருந்தனர்.

ஆகாய விமானங்களிலிருந்து வெடி குண்டுகளை எறியும் ஆலோசனையை ஸர்மைகல் ஓட்வியரே வெளியிட்டனர்போலும். அவர் அதை வெளியிட்டிருப்பினும் வெளியிட்டிரா விடினும், அவர் அதற்குச் சம்மத மளித்தனரென்பது நிச்சயம். பஞ்சாப் வாசிகள் ஆகாய விமானத்திலிருந்தோ வேறு வழியிலோ வெடி குண்டு எறியப்படுவதை அனுபவித்து அறிந்தவர்களல்ல ரென் பது ஈண்டு ஞாபகத்தில் வைத்துக்கொள்ளப் படல்வேண்டும். அவசியம் ஏற்பட்டதென்று ரூபிக்கப் படும்போதும், இருப்ப தாகவோ அவசியம் தோன்றுவதாகவோ உள்ள அபாயத்தின் முன்னுந் தான் ஆகாய விமானத்திலிருந்து வெடி குண்டெறிதல் நியாயமானதென்பது ஏற்றுக்கொள்ளப் படல்வேண்டும். ஆகாய விமானங்கள் வந்தபொழுது குஜரான் வாலாவில் எல்லா அபாய மும் ஒழிந்துவிட்டது. ஆகாய விமானங்கள் அங்கு வந்திருந் ததே முற்றிலும் போதிய பாதுகாப்பாகும். குஜரான்வாலாவின் ஐரோப்பிய வாசிகள் யாதோர் அபாயத்திலும் இல்லை. ஓர் ஐரோப் பியரின் உயிரும் சேதமாக இல்லை. வெடி குண்டெறியுமாறு இராணுவ அவசியம் ஏற்பட்டதென யாதோர் ஆதாரமும் காட் டப் பெறவில்லை. உயிரையேனும் பொருளையேனும் அழிக்க வல்ல அபாயம் யாதொன்றும் ஏற்படாமலிருந்த பொழுதும், ஜனங்களின் கோபம் பிடிவாதமென்பதின்றித் திடீரென அச் சந்தர்ப்பத்தில் தோன்றிய எழுச்சியென்று அமிர்தசரஸிலும்

காசூரிலும் ஏற்பட்ட அனுபவம் விளக்கிக் காட்டியிருந்தபொழுதும், எதிர்க்காத ஜனங்களின் மேல் வெடி குண்டுகள் கவலையீனமாய் எறியப் பெற்றனவென்பதை உத்தியோக முறையிற் கூறப்பெற்றுள்ள சாட்சியம் காட்டுகின்றது. 15-ந் தேதி பாரிஸ்டர்களும், நியாயவாதிகளும், ஏனைய ஜனத் தலைவர்களும் வித்தியாசமின்றிக் கைது செய்யப் பெற்றார்கள்; அந்த ஜனத் தலைவர்களுள் சிலர் தங்களுக்கு மிக்க அபாயம் நேரிடுவதாயிருந்தும், கூட்டத்தின் கோபாவேசத்தை அழிக்க உதவியிருந்தனரென்பது அதிகாரிகளுக்குத் தெரியும். இவர்கள் கைது செய்யப்பெற்றபொழுது, கர்னல் ஓப்ரையன் கூறியுள்ளபடியே, இம்முறை நியாயமானதெனக் கூறச் சிறிதளவு ஆதாரமும் இருக்கவில்லை. அவ்வதிகாரி சொல்லுகிறபடி, மேற்கூறியவர்கள் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் 12-வது ரெகுலேஷன்படி கைது செய்யப்பெற்றார்கள். இந்த ரெகுலேஷன் தக்க காரணத்தின் மேல் சந்தேகிக்கப்படுபவர்கள் கைது செய்யப்பெறலாமென அதிகாரம் வழங்குகின்றது. கீழ்க்கண்ட ரெகுலேஷனையே கர்னல் ஓப்ரையன் தம் மனதிற் கொண்டிருத்தல் கூடும்:—

"1915-ம் வருஷத்திய டிபன்ஸ் ஆப் இந்தியா கன்ஸாலிடேஷன் விதிகளின் 12 ஏ. ஏ. விதியின்படி தமக்கு வழங்கப்பெற்றுள்ள அதிகாரங்களுக்கிணங்க, லெப்டினண்ட் கவர்னர், அரசாங்கத்தாரின் அதிகாரத்திற்கு விரோதமாகக் கலகத்தைப் பெருக்குவதாகவோ கலகத்தைப் பெருக்க உதவி செய்வதாகவோ நியாயமாகச் சந்தேகிக்கப் பெறுமொருவரை எல்லாக் கமிஷனர்களும் வாரண்டில்லாமற் கைது செய்யலாமென அதிகாரம் வழங்குகின்றனர்" அவர் மனதிலிருந்த ரெகுலேஷன் இதுவாயின், அவர், டெபுடி கமிஷனரா யிருந்ததன் காரணமாக, அதன்படி கைது செய்ய அதிகாரம் பெற்றிருந்தாரில்லை. மேலும், டெபுடி கமிஷனர் அறிந்தவரையில் யாதொரு தீங்கும்

செய்யா திருந்தவர்களைக் கைதுசெய்தது வருந்திப் பொருள் கொண்டதொன்றும்.

இந்த ஜனத்தலைவர்கள் திடீரெனக் கைதுசெய்யப் பெற்றனரென்பதும், அவர்களுள் சிலர் தங்கள் உடைகளை யேனும் தலைப்பாகைகளையேனும் தரித்துக்கொள்ளவும் அனுமதி அளிக்கப் பெறவில்லையென்பதும் ஹண்டர் கமிட்டியார் முன்னும் ஒத்துக்கொள்ளப்பட் டிருக்கின்றன; எங்கள் முன்னும் போதிய அளவு ரூபிக்கப்பெற்றிருக்கின்றன. கைது செய்யப் பெற்றவர்கள் இருவர் இருவராகக் கை விலங்கிடப் பெற்றார்கள்; அவர்களுள் சுமார் 22 பேர் ஒன்றாகச் சங்கிலியாற் பிணைக்கப்பெற்று, ஹிந்துவும் மகமதியருமான முனிசிபல் கமிஷனர் இருவர் நடத்திச் செல்ல நகரத்தின் வழியே இரண்டுமைல் தூரம் நடத்திச் செல்லப்பெற்று உணவு முதலிய வசதி ஒன்றுமின்றித் திறந்த வண்டியில் லாகூருக்குக் கொண்டுபோகப் பட்டார்கள். அங்ஙனம் கைது செய்யப்பெற்றவர்களுள் குருகுலத்தின் கவர்னரும் 63 வயதுடையவருமான மிஸ்டர் ராலியராமும் ஒருவர். அவர் சொல்வதாவது: “நான் 22 கைதிகளில் ஒருவனாயிருந்தேன். எல்லோரும் ஒன்றாகச் சங்கிலியாற் பிணைக்கப்பெற்று இருவர் இருவராகக் கை விலங்கிடப்பெற்றோம். இந்நிலைமையில் எங்களைப் பகிரங்க வீதிகளில் நடத்திச் சென்றதுடன் ஓடவுஞ் செய்தார்கள். எங்களை ஒரு திறந்த வண்டியில் லாகூருக்குக் கொண்டு சென்றார்கள். எங்களுள் ஒருவர் ஜலமலங் கழிக்கவும் அனுமதியளிக்கப் பெற்றாரில்லை. அவர் உட்கார்ந்திருந்த இடத்திலேயே ஜலமலங்கழிக்க வேண்டுமெனத் தெரிவிக்கப் பெற்றார்; நாங்கள் லாகூரை யடைந்தபொழுது, என்னோடு சங்கிலியாற் பிணைக்கப்பெற்றிருந்தவர்களும் கீழே இறங்கினாலொழிய நான் கைதிகளின் வண்டியைவிட்டு அப்பாற்செல்ல முடியாதவனாயிருந்தேன். எனவே நான் மூர்க்கத்தனமாய் இழுக்கப்

பெற்றேன். நான் இடுப்புவலியால் வருந்திக்கொண் டிருந்தபடியால் எனக்கு மிக்க தொந்தரவு ஏற்பட்டது."

உடை தரித்துக் கொள்ளவும் ஏன் அவகாசம் கொடுக்கவில்லையெனக் கர்னல் ஒப்ரையன் வினவப் பெற்றனர். தாம் கைது செய்தலை முடிக்கும் அவசரத்திலிருந்ததாக அவர் விடை பகர்ந்தனர். அவர் இந்த ஜனத்தலைவர்களை ஸ்டேஷனுக்கு ஏன் ஒரு வண்டியில் அனுப்பவில்லையெனக் கேட்டல் பொருத்தமுடைத்தாம். அவர் இதனைப் பகிரங்கப்படுத்தி ஜனங்களைப் பயமுறுத்த விரும்பினரென்றே நாம் இதிலிருந்து அனுமானிக்க வேண்டியவர்களா யிருக்கிறோம். கைது செய்ததே "மிகவும் அன்புள்ள வேலை" என்று கர்னல் ஒப்ரையன் கருதினர்.

16-ந்தேதி இராணுவச் சட்டம் அறிவிக்கப்பெற்றது. அதன்படி குஜரன்வாலா வாசிகள் சிறுமைச் செயல்களுக்கு உட்படுத்தப் பெற்றும் சவுக்காலடிக்கப் பெற்றும் பலவாறு துன்புறுத்தப் பெற்றார்கள். தங்கள் கடைகளைத் திறக்குமாறு ஜனங்களை வற்புறுத்துவான் வேண்டி, கீழ்க் கண்ட விநோதமான உத்தரவு நிறைவேற்றப்பட்டது :—

## இராணுவச் சட்டத்தின் 2-வது விதியின்படி வெளியிடப் பெற்ற அறிக்கை.

"குஜரன்வாலா நகர பரிபாலன எல்லைக்குள் வசிக்கும் கடைக்காரர் சிலர் போர்வீரரும் போலீஸாரும் சாமான் வாங்கச் செல்லும்போது தங்கள் கடைகளை மூடி விடுகிறார்களென்றும், அல்லது போர்வீரருக்கும் போலீஸாருக்கும் நியாயமான விலைக்குச் சாமான்கள் விற்க மறுக்கின்றன ரென்றும் எமக்குத் தெரிய வருகிறபடியால் கீழ்க் கண்ட உத்தரவுகளை வெளியிடுகின்றோம். இவ்வறிக்கை வெளியான பிறகு மேற் கூறியவாறு நடந்து

கொள்ளும் கடைக்காரர்கள் கைது செய்யப் பெற்றுச் சவுக்கடி தண்டனை விதிக்கப் பெறுவார்கள்.

(ஒப்பம்) எப். டபுல்யூ. பேர்பேரி,

18—4—1919. லெப்டினண்ட் கர்னல்,

ஆபிசர் கமாண்டிங், ஜில்லா குஜரான்வாலா.

ஹண்டர் கமிட்டி அங்கத்தினரால் மிகுதியாக வாதஞ் செய்யப் பெற்றதும், எங்கள் முன்னுள்ள சாட்சியத்தில் மிகுதியாகக் கூறப்பெற்றிருப்பதுமான சலாஞ்செய்யும் உத்தரவு யாதென்பதைக் கீழ்க்கண்ட அறிக்கை காட்டுகின்றது :—

## 7-வது இராணுவச் சட்ட அறிக்கை.

"குஜரான்வாலா ஜில்லாவாசிகள் கெஜட்டில் பிரசுரிக்கப் பெற்றுள்ள கமிஷனர்களிடமும் அரசர் பெருமானுரின் ஐரோப்பிய சிவில் மிலிடெரி உத்தியோகஸ்தர்களிடமும் வழக்கமாக மரியாதை காட்டுவதில்லை யென நாம் உணரலானோம். இதனால் அரசாங்கத்தின் மதிப்பும் புகழும் நிலை நிறுத்தப் பெறவில்லை. ஏனவே குஜரான் வாலா ஜில்லாவாசிகள் இம்மதிப்புள்ள உத்தியோகஸ்தர்களைச் சந்திக்கும் போதெல்லாம், இந்தியருள் பெரியவர்களுக்கும் செல்வ வந்தர்களுக்கும் மரியாதை செய்வது போலவே அவர்களுக்கும் மரியாதை செய்யவேண்டுமென நாம் உத்தரவிடுகின்றோம்.

எவரேனும் குதிரை மீதேறி யிருப்பினும் வண்டியிற் சென்று கொண்டிருப்பினும் அவர் இறங்குதல் வேண்டும். தம் கையில் திறந்தோ மூடப்பெற்றோ உள்ள குடையை வைத்திருப்பவர் அதனை மூடவோ தாழ்த்தவோ வேண்டும். இவர்களெல்

லோரும் தங்கள் வலது கரத்தினல் மரியாதையுடன் சலாம் செய்தல்வேண்டும்.

(ஒப்பம்) எல். டபுல்யூ. ஒய். காம்பேல்,
பிரைகேடியர் ஜெனரல்,
ஆபிஸர் கமாண்டிங்க், ஜில்லா குஜரன்வாலா.”

இந்தியர் வழக்கத்தைக்கொண்டு கர்னல் ஒப்ரையன் இவ்வுத்தரவை ஆதரிக்க முயன்ருர். இங்ஙனம் இழிவுபடுத்துவதும் அவமதிப்பதுமான உத்தரவை வழக்கமேனும் ஆலோசனேயேனும் நியாயமானதாகச் செய்யா. போர் வீரர்களுக்கும் சலாம் செய்ய வேண்டியிருந்ததென எங்கள் முன்னுள்ள சாட்சியம் காட்டுகின்றது. சலாம் செய்யத்தவறின் சவுக்கடி தண்டனே விதிக்கப்பெறும். அவர்களே எவரேனும் சலாம்செய்யாவிடில், சலாம் செய்யாதவர் முதுகின்மேல் இரண்டு மூன்று முறை தடியால் அடிப்பார்கள். ஹால்டி விற்பவரான ஹவேலி ராம் கடைக்கெதிரில் ஹால்டி வாங்கிக்கொண்டிருந்த அந்நியனெருவன் எழுந்து போர் வீரரைச் சலாம்செய்யாததற்காக அடிக்கப்பெற்ருன். அவன் வீதிப்புறமாகத் தன் முதுகைத் திருப்பிக்கொண் டிருந்தபடியால் போர்வீரர்களேப் பார்க்கவில்லே. மாணவர்கள் யூனியன் ஜாக் கொடிக்குச் சலாஞ் செய்வதற்காகப் பிரதிதினமும் வரவேண்டியவர்களாஞர்கள்.

கடைத்தெருவிலுள்ள சாக்கடைகள் சில முனிசிபல் வேலேக்காரர்களால் முன்னரே சுத்தம்செய்யப் பெற்றிருந்தும் அந்தஸ்துள்ளவர்கள் அவைகளேச் சுத்தம் செய்யுமாறு கட்டளேயிடப்பட்டார்கள்.

ஜனங்கள் தடிகளேக்கொண்டு செல்லுதல் கூடாதெனத் தடுக்கப் பெற்ருர்கள். சிறிதுகாலம் இருப்புப்பாதைப் பிரயாணம் நிறுத்தப்பெற்றிருந்தது ; ஊரடங்கு முத்தரவு வெளியிடப்பெற்றது.

இங்ஙனமே ஜனங்கள் உதவியற்ற நிலையில் வைக்கப்பெற்ருர்கள்.

பிறகு இராணுவச் சட்ட விசாரணை ஸ்தலங்கள் மூன்னும் அவசர நியாயஸ்தலங்கள் மூன்னும் சட்ட நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. அமிர்தசரஸ் விசாரணைகளைப் பற்றிக் கூறியவைகளே இவைகளுக்கும் பொருந்தும். சாட்சியம்கற்பனை செய்யப்பட்டதென்பதைக்காட்டப்போதிய ஆதாரமிருக்கின்றது. கலகம் என்னும் கூற்று ஹண்டர் கமிட்டியார் முன் உடைந்து போய்விட்டது. கலகம் இருந்ததென "நியாய முறையாக ரூபிக்கப்பட்டது" என்ற ஒன்றையே கர்னல் ஓப்ரையன் ஆதாரமாகக் கொள்கிருர். அநேகமாய்ப் பொது ஜனத் தலைவர்களெல்லோரும் கைது செய்யப்பெற்றனர். திவான் மங்களசேனும் அவர் குடும்பத்தாரும் நடத்தப்பெற்ற விதமும், லாலா அமார் நாதரின் வீடு பழிக்குப் பழிவாங்கு நிமித்தம் காலி செய்யப் பெற்றதும், எப்பொழுதும் விசாரணை செய்யப்படாதவர்கள் கைது செய்து காப்பில் வைக்கப் பெற்றிருந்ததும், பிரிட்டிஷ் ஆட்சிக்கு அவமானம் விளைப்பதான கொடுமையின் கதையாகும்.

## 7. வாஜிரபாத்.

வாஜிரபாத் பிரதான இருப்புப்பாதையில் குஜரான் வாலாவுக்கு 20 மைல் தூரத்திலுள்ள அடுத்த முக்கியமான ரெயில்வே ஸ்டேஷன். அது ஜங்ஷன் ஸ்டேஷனுகவு மிருக்கிறது. அது 10,000 ஜனத் தொகையுள்ள ஒரு சிறிய இடம். ஒவ்வொரு வருடமும், வைசாகி சந்தைக்குப் பிறகு, சுற்றுப் புறத்திலுள்ள கிராமங்களினின்றும் ஜில்லாக்களினின்றும் ஜனங்கள் திரள் திரளாக வந்து வாஜிரபாதில் கூடுவார்கள். மார்ச் மாதம் 30-ந் தேதியேனும் ஏப்ரல் மாதம் 6-ந் தேதியேனும் வேலை நிறுத்தம் ஏற்படவில்லை; ஆனல் கிராமங்களிலிருந்து வந்த கூட்டங்கள்

லாகூரிலும் அமிர்தசரஸிலும் குஜரன்வாலாவிலும் நடைபெற்ற சம்பவங்களின் செய்தியைத் தங்களுடன் கொண்டு வந்தார்கள். கிராமங்களிலிருந்துவந்த ஜனங்கள் வாஜிரபாத் வாசிகள் வேலை நிறுத்தத்தைக் கைக் கொள்ளாதிருந்ததற்காக அவர்களை யேசி, "வாஜிரபாத் ஜனங்கள் வேலைநிறுத்தஞ் செய்யாதிருந்தபடியால் அவர்களுடைய பெண்களை ஒருவரும் மணஞ்செய்து கொள்ள மாட்டார்." என்று சொன்னார்கள். வேலை நிறுத்தஞ் செய்வதைப்பற்றி யோசிக்குமாறு 14-ந் தேதி மசூதியில் ஒரு கூட்டங்கூடியது. 15-ந் தேதி வேலை நிறுத்தந் தோன்றியது; ஆனால் வேலை நிறுத்தஞ் செய்வதோடு மாத்திரம் திருப்திகொண்டிராத குறும்பர் சிலர் வெளித்தோன்றலாயினர். சம்பவங்கள் மிகைபடக் கூறப்பெற்றதைச் செவியேற்ற அவர்கள் சினந்தெழுந்து தந்திக்கம்பிகளை அறுக்கவும் இருப்புப்பாதையை நாசப்படுத்தவும் செல்லலாயினர். இவர்களுள் சிலர் பிறகு ரெவரெண்ட் மிஸ்டர் பெய்லியின் வீட்டிற்குச் சென்றனர். வழியில் இன்னுஞ் சிலர் அவர்களோடு சேர்ந்துகொண்டனர். இக்கூட்டம் ரெவரெண்ட் மிஸ்டர் பெய்லியின் வீட்டை அவருடைய அரிய நூல்கள் உட்படக் கொளுத்திவிட்டது. இக்காட்சி நடந்தவிடத்தில் போலீசார் இருந்ததாகத் தெரியவருகிறது; ஆயினும் அவர்கள் கூட்டம் நியாயமற்ற வழியில் கொளுத்தியதைத் தடுக்க யாதொரு முயற்சியும் செய்யவில்லை. நல்ல வேளையாய் உயிர்ச்சேதமொன்றும் ஏற்படவில்லை. குறிப்பிடத் தகுந்த ஒருவரும் இவ்வழிக்கும் செய்கையில் சேர்ந்ததாகத் தெரியவில்லை. வாஜிரபாதிலுள்ள முக்கியஸ்தர்களுள் சிலர் கூட்டத்தவரின் அதிக்கிரமச் செயல்களைத் தடுக்க முயற்சிசெய்ததாகத் தெரிய வருகிறது. ரெவரெண்ட் மிஸ்டர் பெய்லியின் வீடு வாஜிரபாதிற்கு 2 மைல் தூரத்திலும் நைஜாமபாதிற்கு ஒரு மைல் தூரத்திலும் உள்ள ஒரு தனியான நிலத்தின் மேல்

கட்டப் பெற்றுள்ளது. கூட்டத்தின் நியாயமற்ற செய்கையைப் பற்றிக் கூறவேண்டுவது இவ்வளவேயாம். குற்றமற்றவரும் ஜனங்களால் நேசிக்கப் பெற்றவருமான ஒரு பாதிரியாரின் வீட்டை அழித்த செயல் மிகவும் வருந்தத்தக்கதும் கண்டிக்கத் தக்கதுமாம். கூட்டம் ஐரோப்பியரின்மேன் கோபங்கொண்டிருந்த தென்பதைத் தவிர இச்செய்கைக்கு யாதொரு முக்கியமான நோக்கத்தையும் நாங்கள் கண்டுகொண்டோமில்லை.

கர்னல் ஓப்ரையன், போலீசாரும் இராணுவ வீரரும் புடைசூழ்ந்துவர, வாஜிரபாதிற்கு 16-ந் தேதி வந்து சேர்ந்தனர். உடனே பலர் கைது செய்யப்பெற்றனர்; குஜரான் வாலாவில் நடந்த ஆடம்பரமெல்லாம் வாஜிரபாதிலும் நடந்தது.

18-ந் தேதி ஒரு தர்பார் கூடியது; அதில் கர்னல் ஓப்ரைன் பின்வருமாறு பேசினரென்று அறிவிக்கப்பட்டிருக்கிறது:—“ அறிவீனமும் பைத்தியமும் கொண்ட ஜனங்களே, கேளுங்கள். நீங்கள் பிரிட்டிஷ் அரசாங்கம் முடிவடைந்து விட்டதென எண்ணியிருந்தீர்கள். இப்பொழுது உங்கள் பைத்தியம் சொஸ்தஞ் செய்யப்படும். உங்கள் பைத்தியத்திற்கு எங்களிடம் ஒரு பரிகாரமுளது. எவருடைய பொருள்களையும் பறிமுதல் செய்யவும், வீட்டை இடித்துத் தள்ளவும், தாங்கள் விரும்பினுல், வீட்டைக் கொளுத்தவும் அரசாங்கத்தாருக்கு அதிகார முண்டென்பது உங்களெல்லோருக்கும் தெரிந்திருக்கட்டும். அதன்படியே, முதன் முதலாக, ஜமியத்சிங்க் பக்காவின் சொத்துகள் - முழுமையும் அரசாங்கத்தாருக்குப் பறிமுதல் செய்யப்படவேண்டுமென நான் இப்பொழுது உத்தரவு செய்கிறேன்.”

மறுநாள் இராணுவச் சட்டம் அறிவிக்கப் பெற்றது. முன்னர் பிரதேச ஆரிய சமாஜத்தின் காரியதரிசியா யிருந்த டாக்டர் தௌலத்சிங்க் அதன் நிர்வாகத்தைப் பின்வருமாறு விளக்கிக்

கூறுகிறார் :—"இராணுவச் சட்ட அறிக்கைகள் பல விடங்களி லும் சில கட்டிடங்களின் மேலும் ஒட்டப்பெற்றன. இவைகள் கைது செய்யப்பெற்றவர்கள் சம்பந்தப்பட்டிருந்த இடங்களி லும் வீடுகளிலும் ஒட்டப் பெற்றன. ஆரிய சமாஜம் சம்பவங் கள் ஒன்றிலும் சம்பந்தப்படாமலிருந்தும், இராணுவச் சட்ட அறிக்கைகள் பல ஆரிய சமாஜ மந்திரத்திலும் ஒட்டப்பெற்றன. வேலை நிறுத்தத்திற்கு விரோதமாக நின்று யாதொரு இயக்கத் திலும் தலையிடாதிருந்த நான், ஆரிய சமாஜத்தின் காரியதரிசியா யிருந்த காரணமாக இராணுவச் சட்ட அறிக்கைகளைப் பாது காக்கும் பொறுப்பை வகிக்க வேண்டியவனானேன். அவைகளைப் பாதுகாக்குமாறு இரண்டு மனிதர்களைப் பிரத்தியேகமாகக் காவல் வைக்கவேண்டி யிருந்ததுடன், குறும்பர் எவரேனும் அவைகளைக் கிழிக்காதவாறும் நாசப்படுத்தாதவாறும் பார்த்துக் கொள்ளுமாறு நானே பல முறை நேரிற் சென்று பார்த்து வரவேண்டியிருந் தது. அவ்வறிக்கைகள் நாசப்படுத்தப் பெறாமலும் கிழிக்கப் பெறாமலும் இருந்தனவாவென இராணுவச் சட்ட அதிகாரிகள் கவனத்துடன் பார்த்து வந்தார்கள்." இத்தகைய அறிக்கை களை அப்புறப்படுத்துதலும் சின்ன பின்னப்படுத்தலும் இரா ணுவச் சட்ட விதிகளுக்கு மாறாகச் செல்வதாகும், அறிக்கை கள் ஒட்டப் பெற்ற இடங்களில் வசிப்பவர்களே பொறுப் புடைய வர்களாகச் செய்யப்பட்டார்கள். டாக்டர் தௌலத் சிங் கைது செய்யப்பெற்றார்; ஆரிய சமாஜத்தின்பதிவுப் புத்தகங்கள் கைப் பற்றி அப்புறப்படுத்தப்பெற்றன. அவர் 10 நாள் காப்பில் வைக் கப்பெற்று சிலருக்கு விரோதமாகச் சாட்சியம் கொடுக்குமாறு கேட்டுக்கொள்ளப்பட்டார். பிறகு அவர் மே மாதம் 30-ந் தேதி விடுதலை செய்யப்பெற்றனர். அவர் ஜூன் மாதம் 7-ந் தேதி மறுபடியும் கைது செய்யப்பெற்றனர். தமக்கு விரோதமாகச் சாட்சியம் கற்பனை செய்யப்பெற்றதையும், நியாயவாதியை வைத்

துக் கொள்ளவும் தமக்கு அவகாசம் கொடாததையும், அற்ப சாட்சியத்தைக் கொண்டு தாம் குற்றம் சாட்டப் பெற்றதையும், கர்னல் ஓப்ரையன் "சுவாமி சிரத்தாநந்தர் கிளர்ச்சியில் தலையிட்டுக் கொண்டிருப்பதால் நீவிரும் தலையிட்டுக் கொண்டிருத்தல் வேண்டும்" என்று கூறியதையும் அவர் விளக்கிக் கூறுகிறார்.

யாரேனு மொருவர், தவறியோ பாராமலோ, ஐரோப்பிய ரொருவரைச் சலாம் செய்யாதிருந்திருப்பின் அவருடைய தலைப் பாகை தலையினின்றும் எடுக்கப்பெற்றுக் கழுத்தைச் சுற்றிக் கட்டப் பெறுமெனச் சொல்லப்பட்டிருக்கிறது. அவர் இராணுவ வீரர்களால் தங்களுடைய விடுதிக்கு இழுத்துச் செல்லப் பெறுவர். அங்கே அவர் அபராதம் விதிக்கவேனும் சாட்டையாலடிக்கவேனும் பெறுவர். தாம் சலாம்செய்திருந்தும், அது பார்க்கப் படாததன் காரணமாக, தாம் தாவா உத்தியோகஸ்தரின் ஜோடுகளை முத்தமிடுமாறு செய்யப்பட்டனரென ஒரு சாட்சி கூறுகிறார். இச்சாட்சியம் பல சாட்சிகளால் ஆதரிக்கப் பெற்றிருக்கின்றது.

பணமொன்றும் கொடாமல் துருப்புகளுக்காக வெண்ணெய் கிரமமாகச் சேகரித்து வரப்பட்டது. வெண்ணெய் சேகரஞ் செய்தல் நிறுத்தப்பெற்றபொழுது, "இராணுவத்தின் செலவுகளுக்காக" வீட்டிற்கு ஒருரூபாவீதம் வசூலிக்கப்பெற்றது. விதவைகள் மாத்திரம் இதிலிருந்து விலக்கப் பெற்றார்கள். இங்ஙனம் வசூலிக்கப்பெற்ற பணம் செலவானதும் இன்னும் அதிகமாக வசூலிக்கப் பெற்றதென இதனோடு வாஜிரபாதிலிருந்து நஷ்டஈடாக 67,000 ரூபா வசூலிக்கப்பெற்றதென்றும் அதே சாட்சி கூறுகிறார். அவர் முனிசிபல் கமிஷனராயிருந்தவர்; தம் வார்டில் பணம் வசூல்செய்யும் பொறுப்பை அவரும் ஏற்றுக்கொள்ள வேண்டியவரா யிருந்தனர்.

ஜூன் மாதம் 7-ந் தேதி அவரே கைது செய்யப் பெற்ற னர். தம் சார்பாகச் சாட்சிகளைக்கொண்டு வருமாறு அவர் ஒரு மணி நேரமே அடிக்கப்பெற்ருர். கூட்டம் சட்ட வரம்பு கடந்து செல்லின் ஆயுதம் வைத்திருப்பவ ரெல்லோரும் அதனைச் சுட அதிகாரம் வழங்கப் பெற்றனர்.

கைது செய்யப்படுவதினின்றேனும் பொய்ச்சாட்சியம்கூறு வதிலிருந்தேனும் தப்பித்துக்கொள்ள விரும்பியவர்கள் போலீசா ருக்குத் தாராளமாக இலஞ்சங் கொடுத்ததாகவும், போலீசார் அதனை ஏற்றுக்கொண்டதாகவும் எங்கள் முன்னுள்ள சாட்சியம் குறிப்பிடுகின்றது.

இராணுவ வீரர்களின் உபயோகத்திற்காகக் கட்டில்கள் பல ஜனங்களிடமிருந்து எடுத்துக் கொண்டு போகப்பெற்றன. அவைகளுக்கு விலை கொடுக்கப் பெறவுமில்லை, அவை திருப்பி யளிக்கப் பெறவுமில்லை.

குஜரன் வாலாவில் அமுலுக்குக் கொண்டுவரப் பெற்றது போலவே வாஜிரபாதிலும் ஊரடங்கு முத்தரவு அமுலுக்குக் கொண்டுவரப்பெற்றது. பள்ளிச்சிறுர்கள் பெயர் கூப்பிடும் பொழுது சென்று ஒரு நாளைக்கு மூன்று முறை யூனியன் ஜாக் கிற்குச் சலாம் செய்யுமாறு வற்புறுத்தப் பெற்ருர்கள். "நடுப் பகல் வெய்யிலில் நெடுந் தூரம் நடக்கவேண்டி யிருந்ததனுல் அவர் கள் மிக்க துன்பமடைந்தார்கள்."

ஸர்தார் ஜமியத் சிங்கின் சொத்துகள் பறி முதல் செய்யப் பட்டவிஷயம் முன்னரே சொல்லப்பட்டிருக்கிறது. இஃதென்ன வென்பதை உள்ளபடி அறிந்து கொள்ளுதல் விரும்பத் தக்க தொன்ரும். அவருடைய குமாரர் தம் வாக்கு மூலத்தில் கூறுவ தாவது: "டெபுடி கமிஷனரும் பிற உத்தியோகஸ்தர்களும் எங்கள் கடையினருகில் வந்தபொழுது, என் தகப்பனுர் மேலும் வாரண்டுகள் பிறப்பிக்கப் பெற்றிருந்தனவென்பதை

அறிந்து கொள்ளலானேன். போலீசார் எங்கள் குடியிருப்பு வீட்டையும் உட்காரு மறையையும் சோதனை செய்து விட்டு, வீட்டிலுள்ள ஸ்திரீகளை என்னெதிரில் வைதனர். பிறகு அவர்கள் ஜமியத்சிங் எங்கிருந்தனர் அல்லது அவர்கள் அவரை எங்கே ஒளித்து வைத்திருந்தாகள் என்று கேட்டார்கள்.'' குமாரன் தன் தகப்பனுர் ஜாமுவிற்குச் சென்றிருந்ததாகப் போலீசாருக்கு நிலையாகத் தெரிவித்திருந்தும், அவன் அடிக்கடி துன்புறுத்தப் பெற்ருன். ஏப்ரல் மாதம் 21-ந் தேதி பறி முதல் உத்தரவு வெளியிடப்பெற்றது. நான்கு ஸ்திரீகளும் சிறுவர் அறுவரும் உடனே வீட்டை விட்டுத் துரத்தப்பட்டார்கள். "ஸ்திரீகள் சாதாரணமாக மதிப்புள்ள கோஷா ஸ்திரீகள் வீட்டிற்குள் தரித்துக்கொள்ளும் உடைகள் சிலவற்றையே தரித்திருந்தார்கள். சிறுவர்கள் சிறிதளவு உடையையே தரித்திருந்தார்கள். சிறுவர்களிற் சிலர் உடையொன்று மின்றியே வாசலில் விளையாடிக் கொண்டிருந்தனர். ஸ்திரீகள் தங்கள் பாதரட்சைகளை அணிந்து கொள்ளுமாறும் அவர்கள் அனுமதியளித்தார்களில்லை; நிர்வாணமாயிருந்த சிறுவர்கள் அங்ஙனமே துரத்தப்பட்டார்கள். அநேக லக்ஷங்களுக்கு அதிகாரியும், பள்ளிக் கூடங்களுக்கும் கலாசாலைகளுக்கும் தர்ம சாலைகளுக்கும் ஏனைய தர்மங்களுக்கும் ஆயிரமாயிரமாகப் பொருளுதவி செய்தவரும், அந்நகரத்திலுள்ள நூற்றுக் கணக்கான ஜனங்களுக்குத் தேவையானபோது உதவிய வருமான ஒருவருடைய குடும்பத்தார் அன்று வீடின்றியும் தினப்படி வழ்க்கைக் குரிய அவசியமான பொருள்களின்றியும் இருக்கலாயினர்.'' கோஷா ஸ்திரீகள் தங்கள் வீட்டிலிருக்கும் போது என்ன உடை உடுக்கின்றனரென்பதையும், அவர்கள் வெளியே செல்லும்போது எங்ஙனம் உடை தரித்துக் கொள்ளுகிறார்களென்பதையும் அறிந்துள்ளவர்களே இந்த ஸ்திரீகள் இங்ஙனம் வெளியே அனுப்பப் பெற்றதனுல் எவ்வளவு இழிவு

படுத்தப்பட்டார்களென்பதை உணர்ந்து கொள்ளுதல் கூடும். ஸர்தார் ஜமியத் சிங் வாஜிரபாத் நகர வாசிகளுள் முதன்மை யானவர்; சீக்கியர்களுள் ஒரு ஜனத் தலைவர். அவர் யுத்த காலத்தில் சிறந்த வேலை செய்திருக்கிறார். கமாண்டர் இன் சீப் அவருக்கு ஒரு சன்னத் அளித்திருக்கிறார். ஸர் தார் ஜமியத்சிங் எப்ரல் மாதம் 26-ந் தேதி திரும்பி வந்ததும் அதிகாரிகளின் உத்தரவின்படி நடந்துகொண்டனர். ஆனால் பறிமுதல் உத்தரவுகள் மே மாதம் 4-ந் தேதி வரையில் ரத்து செய்யப்படவில்லை. நாங்கள் அவர் வழக்குச் சம்பந்தமான தஸ்தாவேஜையும் எங்களுக்குக் கொடுக்கப்பெற்ற கடிதங்களை யும் படித்துப் பார்த்தோம். அவர் குற்றஞ் சாட்டப்பட்டது முழுதும் தவறானதென்பதில் எங்களுக்குச் சந்தேக மொன்று மில்லை. முதலில் குற்றப் பத்திரிகை அவருக்குக் காட்டப்பெற வில்லை. அதன் ஆதாரம் பெற்ற பிரதி அவர் நியாயவாதிக்குக் கிடைக்கவில்லை; டிபன்ஸ் தரப்புச் சாட்சிகளெல்லோரும் கூப் பிடப் பெறவுமில்லை. ஸர்தார் ஜமியத் சிங் 62 வயதுடைய வர். அவர் கண்களில் ஒன்று காசத்தாற் பீடிக்கப்பெற் றிருக் கிறது. அவர் சாதாரண குற்றவாளியைப்போல் நடத்தப் பெற்று, ஒருதனி யறையில் சிறிதுகாலம் அடைக்கப்பெற் றிருந் தனர்.

இங்கே கைது செய்யப் பெற்றவர்களின் விசாரணைகள் மற்ற விடங்களில் இருந்ததைக் காட்டிலும் அதிக போலித்தன முள்ளவைகளா யிருந்ததாகக் காணப்படுகின்றன. சாட்சியம் எங்ஙனம் கற்பனை செய்யப்பெற்றதென்பது இங்கே விநோத மாக விளக்கப்பெற்றிருக்கின்றது:—

"நகரவாசிக ளெல்லோரும் பறையறையின் மூலமாகப் போலீஸ்டேஷனுக்கு வரவழைக்கப் பெற்றனர். வயதடையாத வர்களும் கெட்ட நடவடிக்கை யுள்ளவர்களும் செய்தி அறிவிப்

பவர்களாகக் கருதப்பட்டார்கள். போலீசார் எவர்மேலேனும் வழக்கு ஜோடிக்கக் கருதினால், அவர் சாட்சியங் கொடுக்குமாறு கற்பிக்கப்பெற்றுள்ள சிறுவர்களுக்கு முன் கொண்டுவரப் பெறுவர். இங்ஙனமே எளிய மனிதர்கள் வலைக்குள் சிக்கவைக்கப் பெற்றார்கள். அதேசிறுவர்கள் விசாரணை ஸ்தலங்களில் சாட்சிகளாக வந்து நின்றார்கள். அவர்களுடைய சாட்சியத்தைக் கொண்டே ஜனங்கள் தண்டிக்கப் பெற்றார்கள்."

## 8. நைஜாமபாத்.

நைஜாமபாத் வாஜிரபாதிலிருந்து ஒரு மைலுக்கும் குறைவான தூரத்திலுள்ள ஒரு சிறு கிராமம். அது வீடுகளும் தொழிற்சாலைகளும் சேர்த்துக் கட்டப்பெற்றுள்ள குறுகிய சந்தொன்றையே உடையது. பரம்பரையாக வேலை செய்யும் தொழிலாளர்கள் மிகவும் வேலைப்பாடற்ற ஆயுதங்களைக் கொண்டு கையினாற் செய்யும் கத்தி, கத்தரி முதலியவைகள் அங்கே ஏராளமாகக் கிடைக்கும். முன்னரே சொல்லப்பட்டபடி அவ்வூர் வாசிகள் சிலர் மிஸ்டர் பெய்லியின் வீட்டைக் கொளுத்திய கூட்டத்திற் சேர்ந்திருந்தன ரென்பதில் சந்தேக மொன்றுமில்லை; ஆயினும் அவ்வெளிய கிராமவாசிகளுக்கு விதிக்கப்பெற்ற தண்டனை அவர்களுள் சிலர் செய்த குற்றத்தின் அளவிற்குப் பன்மடங்கு அதிகமானதாக விருந்தது. ஏப்ரல் மாதம் 18-ந் தேதி பிரத்தியேக பிரிட்டிஷ் துருப்புகளைக் கொண்டுள்ள வண்டித் தொடரொன்று லாகூர் பக்கத்திலிருந்து வந்து, இருப்புப்பாதைக்குச் சமீபத்திலுள்ள இந்தக் கிராமத்திற்கு முன்பாக நின்றது. போர்வீரர்கள் இருப்புப் பாதையைச் சூழ்ந்துகொண்டார்கள். அவர்கள் கடைகளைக் கொள்ளையடித்து, மா, நெய், சீனிப்பாகு முதலியவைகளை எடுத்து, அவைகளை வண்டிக்கு எடுத்துச் செல்லுமாறு கிராமத்தார்களுக்குப் பணித்தார்கள்.

கிட்டத் தட்ட இரண்டுவாரமளவும் ஜனங்கள் போலீஸ் ஸ்டேஷ னுக்கு வருமாறு செய்யப்பெற்றார்கள். அவர்கள் காலை 7-மணியி லிருந்து மாலை 8-மணி வரையில் வெய்யிலில் உட்கார்ந்திருக்க வேண்டியிருந்தது. ஜனங்கள் தங்கள் தொழிற்சாலைகளை மூட வேண்டியவர்களானார்கள்.

மகமத் ரம்ஜான் என்னும் வாலிபனொருவன் தெரியாத் தன மாய்ப் போர் வீரர்களின் இராணுவ வெல்லையைத் தாண்டிச் சென்றான். அவன் தன் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்தான். அவன் சுடப்பெற்று அவ்விடத்திலேயே உயிர் துறந்தான். "இரண்டு மூன்று பிரிட்டிஷ் போர்வீரர்கள் அச்சிறுவனுடைய சவத்தை அவன் தலைப்பாகையாற் கட்டி யிழுத்துக்கொண்டு சென்று அதனைக் கிராமத்தின் அருகிலுள்ள குளத்தண்டை போட்டு விட்டனர்."

மீர்வாஜித் அலி என்னும் மொகலாய ரொருவர், சாட்சியம் பறிக்க முயற்சிகள் செய்யப்பெற்றதையும் ஜனங்கள் ஒவ்வொரு நாளும் போலீஸ் ஸ்டேஷனுக்குச்சென்று கொடிய வெய்யிலில் அங்கே காத்திருக்க வேண்டியதையும் விளக்கிக்கூறி, தம் வாக்கு மூலத்தைப் பின் வருமாறு முடிக்கின்றனர்: "என் மகனும் நானும் சோதனை செய்யப்பெற்று, லாக் அப் அறையில் அடைக் கப்பெற்றோம். ஜூன் மாதம் 9-ந் தேதி என்மகன் இஸ்லாம் பேகும் நானும் வஜீரபாதிலுள்ள 5, 6 பேருடன் டெபுடி கமி ஷனர் கர்னல் ஓப்ரையன் முன்பாக மாலை சுமார் 6-மணிக்குக் கொண்டுவரப்பெற்றோம். எங்கள் மூக்குகளைத் தரையின்மேல் தேய்த்துக்கொள்ளும் தண்டனையை அனுபவித்தான பிறகு நாங்களெல்லோரும் டெபுடி கமிஷனரால் விடுதலை செய்யப் பெற்றோம்."

இங்ஙனமே குற்றஞ் சாட்ட யாதொரு சாட்சியமுமில்லாம லிருந்தபொழுது, குற்றமற்றவர்களை இழிவுபடுத்தும்பொருட்டுத்

தாழ்வான ஒரு தண்டனை முறை கற்பனை செய்யப்பட வேண்டியிருந்தது. இக் கிராமவாசிகளிடமிருந்து 6,500 ரூபா நஷ்ட ஈடாக வசூலிக்கப்பெற்றது.

சாட்சியம் பெறுவதற்காகப் போலீசார் பய முறுத்தியும் சரீரத்தைப் பாதிக்கும் தண்டனை விதித்தும் எவ்வாறு முயற்சி செய்தனரென்பதை 324, 325, 326, 334-வது சாட்சிகள் தங்கள் சாட்சியத்தில் தெரிவித்திருக்கிறார்கள்.

## 9. அகல்கார்.

அகல்கார் வாஜிரபாதிற்கப்பால் வாஜிரபாத் லயல்பூர் கிளையிலுள்ள ஒரு ரெயில்வே ஸ்டேஷன்; அது 4000 ஜனத்தொகையுள்ளது. சீக்கியரது ஆட்சிக்காலத்தின் இறுதியில் மூல்டான் கவர்னர்களாயிருந்த திவான் ஸவன்மாலும் அவர் குமாரர் மல்ராஜும் வசித்துவந்ததன் காரணமாக இவ்வூர் சிறப்புப்பெற்றிருக்கின்றது.

சென்ற ஏப்ரல் மாதத்தில் அகல்காரில் எத்தகைய கலகமேனும் குழப்பமேனும் ஏற்படவில்லை. 6-ந் தேதி வேலை நிறுத்தம் ஏற்பட்டது. அன்று கூடிய பொதுக் கூட்டத்தில் திவான் சவன்மாலின் சந்ததியாருள் ஒருவரான திவான் கோபால் சிங் அக்கிராசனம் வகித்தனர். அமிர்த சரஸிலும் லாகூரிலும் நடந்த சம்பவங்களை முன்னிட்டும், பலர் கைது செய்யப் பெற்றதற்காகவும் ஏப்ரல் மாதம் 14-ந் தேதி இன்னொரு வேலை நிறுத்தம் ஏற்பட்டது. அகல்காரில் வேலை நிறுத்தந்தோன்றாத 15-ந் தேதியே தந்திக் கம்பிகள் அறுக்கப் பெற்றன. இக்கம்பிகள் அகல்காரிலிருந்தேனும் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்தேனும் ஒரு மைல் தூரத்திலுள்ள இடத்தில் அறுக்கப் பெற்றன. இவ்வேலை ஒரு கூட்டத்தாரால் செய்யப் பெற்றதன்று; எங்களுக்குத் தெரிந்தவரையில் அகல்காரிலுள்ள எவரும் செய்ததாக ஏற்பட

வில்லை. வாஜிரபாத் வைசாகி சந்தையினின்றும் திரும்பி வந்தவர்களே தந்திக் கம்பிகளை அறுத்திருப்பரென எங்களிடம் சிலர் சொல்லியிருக்கின்றனர். அகல்கார் வாஜிரபாதிலிருந்து 23 மைல் தூரத்திலுள்ளது.

எப்ரல் மாதம் 22-ந் தேதி டெபுடி கமினஷர் வந்து, கால்வாய் வாராவதியண்டை நின்று, நகரத்தின் பிரமுகர்களைக் கூப்பிட்டனுப்பினர். டாக் பங்களாவிற்குச் செல்லும் சாலை பழுது பார்க்கப்பெறவேண்டுமென்றும், தம் மோட்டார்வண்டி சுலபமாய்ச் செல்லுமாறு நகரவாசிகளே அவ்வேலையைச் செய்து முடிக்க வேண்டுமென்றும் அவர் அவர்களிடம் தெரிவித்தார். எனவே 2,000 ரூபா வரையில் ஜனங்களிடமிருந்து வசூலிக்கப் பெற்று ஒரு மைல் தூரத்திற்கு அதிகமாகவுள்ள அந்த ரஸ்தா டெபுடி கமிஷனரின் மோட்டார் செல்வதற்காகக் கட்டாயத்தின் மேல் சீர்படுத்தப் பெற்றது. இத்தொகை முழுவதும் ஒரே நாளில் அச்சிறு நகரத்தில் வசூலிக்கப்பெற்றது. இங்ஙனம் வசூல் செய்தது கொள்கையில் சட்ட விரோதமானதும், ஆக்ஷேபிக்கக் கூடியதுமா யிருந்ததுடன், அகல்காரைப் போன்ற ஓர் எளிய இடத்திற்கு அது மிகப் பெருத்த சுமையாகவும் இருந்தது.

பிறகு, குஜரன் வாலாவிலும் வாஜிரபாதிலும் செய்யப் பெற்றதைப் போலவே முக்கியஸ்தர்கள் கைது செய்யப்பெற்றார்கள். 30 குற்றவாளிகளைக் கொண்ட ஒரு கூட்டம் விசாரணைக்குக் கொண்டு செல்லப் பெற்றதில் 20 பேர் குற்றமற்றவர்களென விடுவிக்கப் பெற்றனர்; 15 வயதுள்ள வாலிபர் இருவர் ஒரு நாள் சாதாரண சிறைச்சாலை தண்டனை விதிக்கப் பெற்றனர்; 6 பேர் தண்டிக்கப் பெற்றனர். இருவர் மேலுள்ள வழக்குத் திரும்பி வாங்கிக் கொள்ளப்பெற்றது.

சாட்சிகளைப் பயமுறுத்தியதும் சுமார் 2 மாதகாலம் இலஞ்சம் முதலியவைகள் கையாளப் பெற்று வந்ததும் அகல்காரில்

பயமுறுத்தல் முதலியவைகள் நடைபெற்று வந்ததாகக் கூறப்பட்டுள்ளது. லஞ்சம் வாங்குதல் கூடிகொண்டிருந்ததும் எல்லோரும் நம்பும்படி எங்களிடம் கொடுக்கப் பெற்றுள்ள வாக்கு மூலங்களில் விளக்கமாகக் கூறப் பெற்றிருக்கின்றன. அவமானம் விளைக்கவல்ல இச்சம்பவங்களுள் சிலவற்றை மாதிரியாக எடுத்துக் காட்ட விரும்புகிறோம். நாகசந்த் என்பவர் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கூப்பிடப்பெற்று, பொய்ச் சாட்சியங் கூறுமாறு கேட்டுக் கொள்ளப் பெற்றார். அவரங்ஙனம் கொடுக்க மறுக்கவும், "அவர் வெய்யிலில் அரை மணி நேரம் நிறுத்தப் பெற்றார்; வையப்பெற்றார். சாட்சியங் கொடாவிடில் அவர் சுடப்படுவரெனத் தெரிவிக்கப் பெற்றார். அதன்மேல் அவர் தமக்குச் சொல்லியபடி ஒரு வாக்குமூலம் கொடுத்தார்; ஆனால் நியாயஸ்தலத்தில் தாம் உண்மையான சாட்சியங் கொடுத்ததாக அவர் கூறுகிறார். இங்ஙனமே பிறரும் நடத்தப்பெற்றதைத் தாம் பார்த்ததாக அவர் சொல்லுகிறார். "ஜனங்கள் டாக் பங்களாவில் வந்து கூடுமாறு வற்புறுத்தப்பெற்றார்கள். அவர் உத்தியோகஸ்தர்களுக்குப் பணமில்லாமல் பால் கொடுக்குமாறு கட்டாயப்படுத்தப் பெற்றனர்."

மேற் கூறியுள்ள திவான் கோபால் லால் ஏப்ரல் மாதம் 22-ந் தேதி கைது செய்யப்பெற்றனர். அவர் 2 மாதம் சிறைச்சாலையில் வைக்கப் பெற்றிருந்து சாட்சியமில்லாததன் காரணமாகக் கடைசியில் விடுவிக்கப்பெற்றார். அவர் சொல்வதாவது: ரெவினியூ அஸிஸ்டெண்ட் உத்தியோகஸ்தரும், எம். சாகிப் கானும், ஜெயில்தார் சௌத்ரீ குலாம்காதர் ஸர்தார்கான் ஆகிய மூவர் மூலமாகக் கேட்டிருந்த இலஞ்சத் தொகையை நான் கொடுக்க மறுத்ததற்காகவே கைது செய்யப்பெற்றேன். நான் சிறைச்சாலையி லிருந்தபொழுது, அவர்கள் என் உறவினரிடமிருந்து எனக்காக 5,000 ரூபாயும் என் மைத்துனனுக்காக 1,000 ரூபாயும் லஞ்சம் பெற்றுக்கொண்டார்கள்."

15 வயதுள்ள ராம் லால் என்னும் மாணவனொருவன் ஏப்ரல் மாதம் 23-ந் தேதி கைதுசெய்யப்பெற்று மே மாதம் 13-ந் தேதி விடுதலை செய்யப்பெற்றான்.

லாலா கணேசதாஸ் பாஸியும் அவருடைய இரண்டு சகோதரர்களும் கைது செய்யப்பெற்றார்கள். 2,000 ரூபா லஞ்சங் கொடுக்கப்பட்டதையும், அப்பொழுதும் தான் காப்பில் வைக்கப் பெற்றதையும் இறுதியில் தாங்கள் விடுதலை செய்யப்பெற்றதை யும், அவர் ஓடி ஒளித்துக் கொண்டாரென்னும் காரணமாக அவர் சொத்துக்கள் மே மாதம் 23-ந் தேதி பறிமுதல் செய்யப்பெற் றதையும் அவர் விளக்கிக் கூறுகிறார். தாம் விடுதலை செய்யப் பெற்றிருந்தும் 1919-ம் வருஷம் ஜூலை மாதம் 19-ந் தேதிவரை யில் தம் பொருள்கள் திருப்பி யளிக்கப்பெற வில்லையென அவர் சொல்லுகிறார்.

சௌத்ரீ பஸல்தாத் ஒரு லம்பர்தார்; அகல்கார் நகர பரி பாலன சபையின் உதவித்தலைவர். அவர் செய்த குற்றம் யாதெனின், அவர் ஒரு டிபன்ஸ் சாட்சியாகச் சென்றதேயாம். இதனாலேயே தாம் கைது செய்து விசாரணை செய்யப்பெற்று 500 ரூபா அபராதம் விதிக்கப்பெற்றதாக அவர் சொல்லுகிறார். மே மாதம் 26-ந் தேதி அவர் சொல்லுகிறபடி யாதொரு கார ணமுமின்றிக் கர்னல் ஓப்ரையன் அவரை லம்பர்தார் பதவியி னின்றும் நீக்கிவிட்டனர். மேற்கூறியவாறு ரஸ்தா பழுதுபார்க் கப்பெற்றது தாம் லம்பர்தாரா யிருந்த காலத்திலேயே யென அவர் சொல்லுகிறார். "தொழிலாளர் வகுப்பைச் சேர்ந்திரா்த வர்களை யாதொரு கூலியுமின்றி வேலை செய்யுமாறு ரெவினியூ உத்தியோகஸ்தரும் ஜெயில்தாரும் வற்புறுத்தினர்" என்று அவர் கூறுகிறார். கட்டாயத்தின்மேல் வசூலிக்கப்பெற்ற 1,800 ரூபாயில் "700 அல்லது 800 ரூபாதான் கண்டிராக்டருக் குக் கொடுக்கப்பெற்றது." பின்னும் அவர் சொல்வதாவது:

"நகரவாசிக ளெல்லோரும் டாக் பங்களாவில் ஒன்று கூட்டப் பெற்றனர்; இருப்புப் பாதையிலிருந்து பீரங்கி வண்டிகளைக் கொண்டும் பெரிய பீரங்கிகள் சிலவற்றைக் கொண்டும் சுட்டார் கள். ஜனங்கள் டிபன்ஸ் சாட்சிகளாகச் செல்லக் கூடாதென் றும் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் விரும்பிய வண்ணம் பிராசி கியூஷன் தரப்பிலேயே செல்ல வேண்டுமென்றும் அவர்களுக்கு விளக்கமாகச் சொல்லப்பட்டது."

மேற் கூறியவாறு பீரங்கி வண்டிகளைக் கொண்டு சுட்டத னால்ஏற்பட்ட செலவுகளுக்காக 1,000ரூபாயும் தந்திக்கம்பியைப் பழுதுபார்க்க ஒரு சிறு தொகையும் ஜனங்களிடமிருந்து வசூலிக் கப் பெற்றன.

## 10. ராமநகரம்.

ராமநகரம் அகல்காரைக் காட்டிலும் பெரியதன்று. அது சீனுப் நதிக்கரையில் அகல்காருக்கு 5 மைல் தூரத்தில் உள்ளது. அஃது இருப்புப்பாதையி லிருக்கவில்லை. காலஞ் சென்ற மகா ராஜா ரஞ்சிட் சிங்கிற்கு அங்கே 'பாராதாரி' என்ற அரண்மனை யொன்றிருந்தது.

ஏப்ரல் மாதம் 6-ந் தேதி அங்கே வேலை நிறுத்தம் ஏற் பட்டது; ஏப்ரல் மாதம் 15-ந் தேதி சிறிதளவு வேலை நிறுத்தம் ஏற்பட்டிருந்தது. ராமநகரத்தில் யாதொரு சேதமும் ஏற்பட்ட தாகத் தெரிவிக்கப் பட்டிருக்கவில்லை; ஆனால் அரசர் பெருமா னின் பதுமை யொன்று ஏப்ரல் மாதம் 15-ந் தேதி கொளுத்தப் பெற்ற தென்றும், சாம்பல் ஆற்றினுள் எறியப் பெற்றதென்றும் சொல்லப்படுகின்றன. நாங்கள் மிக்க ஜாக்கிரதையுடன் இவ் விஷயத்தைப் பற்றி விசாரணை செய்தோம். நாங்கள் நூற்றுக் கணக்கான சாட்சிகளைப் பரிசோதித்துப் பார்த்தோம். இவ் விடம் சேகரிக்கப் பெற்ற சாட்சியமே இக்குற்றத்தை மறுக்கப்

போதியதாக விருந்தும் இதற்கு மாறாகத் தெரிவிக்கக் கூடியவர்கள் பகிரங்கமாகத் தெரிவிக்கலாமென அழைக்கப்பட வேண்டுமென்று தீர்மானிக்கப் பெற்றது. எனவே 1919-ம் வருஷம் நவம்பர் மாதம் 30-ந் தேதி ராமநகரத்தின் ஒரு வெளியிடத்தில் ஒரு பொதுக் கூட்டம் கூட்டப்பெற்றது. அரசர் பெருமானாரின் பதுமை கொளுத்தப் பெற்றதென நம்பியவர்களேனும், அவ்விஷயமாக ஏதேனும் தெரிவிக்கக் கூடியவர்களேனும், பகிரங்கத்திலேனும், தனிமையிலேனும், வந்து வாக்கு மூலம் கொடுக்கலாமென அழைக்கப் பெற்றார்கள். ஆனால் அரசர் பெருமானாரை அங்ஙனம் இழிவுபடுத்தியதாகக் கூற ஒரு சாட்சியும் முன் வந்தாரில்லை. இது முற்றிலும் கற்பனை செய்யப் பெற்ற குற்றமென்றே நாங்கள் கருதுகிறோம். எப்ரல் மாதம் 23-ந் தேதி வரையில் இவ்விஷயத்தைப் பற்றிப் போலீஸ் அதிகாரிகள் எங்கும் ஒன்றுஞ் சொல்லி யிருக்கவில்லை யென்பதை நாங்கள் சேகரித்துள்ள வாக்குமூலங்கள் காட்டா நிற்கும். கர்னல் ஓப்ரையன் எங்களால் ஜாக்கிரதையுடன் பரிசோதிக்கப் பெற்ற தம்முடைய தீர்ப்பில், இச்சம்பவம் குறிப்பிடப் பெறுவதில் தாமதம் ஏற்பட்டதற்குக் காரணம் போலீசார் அதிக வேலையில் ஆழ்ந்திருந்ததே யென்று கூறியிருக்கிறார். இது முற்றிலும் அங்கீகரிக்கப்படத் தக்கதன்று; ஏனெனில், போலீஸ் டையரியிலேனும் இச்சம்பவம் குறிப்பிடப் பெற்றிருத்தல் வேண்டும். எப்ரல் மாதம் 17-ந் தேதி போலீஸ் இன்ஸ்பெக்டர், ராமநகரம் முழுவதும் சுற்றி வந்திருந்தும், இதைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை. இதிற் சம்பந்தப் பட்டதாகக் கருதப் பெற்ற முக்கியஸ்தர், அப்பொழுதே அகப்படுபவரா யிருந்தும், மே மாதம் 9-ந் தேதிக்கு முன் கைது செய்யப் பெறவில்லை.

ராம நகரவாசிகளெல்லோரும் இவ்விழிவால் வருந்தவேண்டியிருந்ததோடு, அவர்களுள் முக்கியமானவர்கள் வேண்டுமென்றே

எடுத்துக் கொள்ளப்பெற்றதும் சாதாரண விசாரணைகளில் அனு சரிக்கப்பெறும் முறைகளைப் பொருட்படுத்தாத விசாரணையில் கற்பனை செய்யப்பெற்ற சாட்சியத்தால் ஆதரிக்கப் பெற்றது மான சட்ட நடவடிக்கையால் மிகவும் வருந்தலானுர்கள்.

60 வயதுடையவரும் மதப்போக்குள்ள மன நிலை யுடைய வரும், தனிமையில் வாழ்ந்து வருபவருமான லாலா கரம் சந் தும் இத்துன்பத்திற்கு உள்ளாயினர். அவர் மற்றும் 27 பேரோடு பிடித்துத் தண்டனை விதிக்கப் பெற்றனர். அவர் 1877-ம் வருஷம் முதல் 1900-ம் வருஷம் வரையில் தபால் இருப்புப் பாதை இலாக்காக்களில் அரசாங்க உத்தியோகம் வகித்துவந்தவர். 1910-ம் வருஷத்திற்குப் பிறகு, "அவர் உலக விஷயங்களை அநேகமாய்த் துறந்து விட்டனர்." அவர் வரு ஷத்தில் 9 மாதங்களை ஹரித்வாரத்தில் கழித்தனர். "யாதொரு மரணச் சடங்கு ஏற்பாடு செய்யப் பெற்றதென்பதையும் அல்லது எந்தப் பதுமையேனும் கொளுத்தப் பெற்றதென்பதையும்" அவர் மறுக்கின்றனர். சிறுவர்கள் சிலர் ஏப்ரல் மாதம் 15-ந் தேதி கடைத்தெரு வழியாகச் சென்றுகொண்டே "ஹைஹை ரௌலட் பில்" (ஐயோ ரௌலட் மசோதாவே!) என்று கூச்ச லிட்டார்களென அவர் ஒத்துக் கொள்கிறுர். ஏப்ரல் மாதம் 17-ந் தேதி சப்-இன்ஸ்பெக்டர் ஒருவர் ராமநகரம் சென்று, அங்கே வேலை நிறுத்த மிருந்ததென்பதைத் தவிர வேறென் றையும் குறித்துக் கொள்ளவில்லை யென அவர் சொல்லுகிறுர். ஏப்ரல் மாதம் 23-ந் தேதியே ரெவினியூ உத்தியோகஸ்தர் ராம நகரத்திற்குச் சென்று ஜெயில்தாருடன் கலந்து ஆலோசனை செய்த பிறகு, விசாரணை செய்தல் என்னும் போலிக் காரணம் காட்டி அவரையும் பிறரையும் அகல்காருக்கு அனுப்பினர். 24-ந் தேதி அவர்கள் கைவிலங்கிடப்பெற்று, குஜரான்வாலாவிற்கு அனுப்பப் பெற்றனர். அவர்கள் அங்கே மே மாதம் 16-ந் தேதி

வரையில் சிறைச்சாலையிலிருந்து வந்தார்கள். அது வரையில் தாங்கள் எதற்காகக் கைதுசெய்யப் பெற்றார்களென்பதை அவர்கள் அறிந்துகொண்டார்களில்லை. மே மாதம் 17-ந் தேதி அவர்கள் ராம நகரத்திற்குத் திருப்பிக்கொண்டு வரப்பட்டார்கள். 19-ந் தேதி அவர்கள் தங்கள் சாட்சிகளின் பெயர்களைத் தெரிவிக்குமாறு அறிவிக்கப்பெற்றார்கள்; 22-ந் தேதி நாங்கள் முன்னரே கூறியுள்ளபடி அவர்கள் விசாரணை செய்யப்பட்டார்கள்.

கைது செய்யப்பெற்றதன் சம்பந்தமாகத் தந்திகள் அனுப்பப் பெறுதலும் தடுக்கப்பெற்றதென லாலா சுந்தரதாஸ் தெரிவிக்கிறார். அவரும் பிறரும் ஜூன் மாதம் 11-ந் தேதி குஜரான்வாலாவில் டெபுடி கமிஷனரிடம் கொண்டுவரப் பெற்றனர்; அவர்கள் விடுவிக்கப்பெறுமுன் அவர்களைத் "தங்கள் மூக்குகளால் தரையின்மேல் கோடுகளிழுத்துத் தாங்கள் வருந்துவதாகத் தெரிவிக்குமாறு" கர்னல் ஓப்ரையன் அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

ராம நகரத்தின் லம்பர்தார் அப்துல்லா என்பவர் மே மாதம் 8-ந் தேதி தம்மிடம் வந்து தாம் 200 ரூபா கொடாவிடில் மறுநாட் காலை கைதுசெய்யப் பெறுவரெனத் தெரிவித்ததாக லாலா ஹன்ஸ்ராஜ் சொல்லுகிறார். சாட்சி அங்ஙனம் கொடுக்க மறுத்தனர். இன்னும் அவர் சொல்வதாவது: "மறுநாட் காலையில் லம்பர்தார் அப்துல்லாவின் சகோதரரும் குற்றவாளி வகுப்பைச் சார்ந்த இன்னொருவரும் கையில் தடிகளுடன் என் வீட்டுக் கதவண்டை உட்கார்ந்திருந்ததைக் கண்டேன். நான் கதவைத் திறந்தவுடன் அவர்கள் என்னைத் திடீரெனப் பிடித்துக்கொண்டு கடைத்தெருவிற்கு இழுத்துப்போய் விட்டார்கள்." சாட்சி அப்பொழுதும் பணம் கொடுக்க மறுத்தனர். பிறகு அவர் பலவந்தமாய்ப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். தமக்கும் பிறருக்கும் விரோதமாகச் சாட்சியம் கற்பனை

செய்யப் பெற்றதையும், தமக்கு இஷ்டமாயின் தாம் அரசாங்கத்தார் தரப்பில் சாட்சியங் கொடுக்க வரலாமெனத் தெரிவிக்கப் பெற்றதையும் அவர் விளக்கிக் கூறுகிறார். சாட்சி ஏப்ரல் மாதம் 15-ந் தேதி வாஜிரபாதிலிருந்து, அன்று மாலை 5-15 மணிக்கு அகல்கார் வந்து சேர்ந்திருந்தனர். எனவே ராம நகரத்தில், அரசர் பெருமானாரின் பதுமை கொளுத்தப்பெற்றதாகச் சொல்லப்பட்டுள்ள காலத்தில் நடைபெற்ற யாதொரு ஊர்வலத்திலும் ஆடம்பரத்திலும் அவர் கலந்திருத்தல் முடியாது.

இவ்வழக்குச் சம்பந்தமாக டெபுடி கமிஷனரிடம் செல்லத் துணிந்ததற்காக லாலா கோவிந்த ஸஹாயும் ஏனையோரும் கைது செய்யப்பெற்றனர். அவர்கள் லாலா சுந்தர தாஸைப் போல் துன்ப மனுபவித்த பிறகு ஜூன் மாதம் 11-ந் தேதி விடுவிக்கப் பெற்றார்கள்.

ஒரு பதுமை மரணச் சடங்கை முன்னிட்டு ஊர்வலமாக வெடுத்துச் செல்லப்பெற்று அநேக மணங்கு கட்டைகளைக் கொண்டு கொளுத்தப்பெற்றதென்று முதலில் பிராசிகியூஷன் தரப்பார் ஜோடித்திருந்த கதை துணி பொம்மையொன்று கொளுத்தப்பட்டதென எங்ஙனம் மாற்றப்பெற்ற தென்பதை லாலா ராமசந்த் விளக்கிக் கூறுகிறார்.

ஸ்டேஷன் மாஸ்டர் வேலை பார்த்து அப்பதவியினின்றும் விலகிக் கொண்டுள்ள சையத் அகிம்ஷா பிராசிகியூஷன் கதை மாறியதையும், தாம் அன்று மாலையே ஆற்றிற்குச் செல்ல நேர்ந்தபோது யாதொன்றும் கொளுத்தப் படுவதை அங்கே காணவில்லை யென்பதையும், மே மாதம் 22-ந் தேதி பிராசிகியூஷன் தரப்பில் சாட்சியம் கொடுக்குமாறு தாம் கேட்டுக் கொள்ளப் பெற்றதையும், தாம் அங்ஙனம் கொடுக்க மறுத்ததற்காகக் கொடுமையாய் நடத்தப் பெற்றதையும் அவர் விரிவாகக்

கூறியிருக்கிறார். அவர் ரெயில்வே இலாகாவில் 37 வருஷம் உத்தியோகம் செய்தவர்.

பதுமையை யெரித்த வழக்கில் அப்ரூவராயிருந்த பகவான் தாஸ் பிராசிகியூஷன் தரப்பில் தாம் எத்தகைய சந்தர்ப்பங்களின் கீழ்ச் சாட்சியம் கொடுக்க நேர்ந்ததென்பதைக் கூறி, அச்சாட்சியம் முழுவதையும் மறுத்து, இப்பொழுது ஒரு நீண்ட வாக்கு மூலம் கொடுத்திருக்கிறார்.

முதன்முதலாகத் தேசிய உணர்ச்சியைப் பெற்று, பொது விஷயங்களில் ஆவல் கொள்ளத் தொடங்கியிருந்த ஜனங்களுக்கு ஒரு கொடிய பாடங் கற்பிக்க வேண்டுமெனக் கர்னல் ஓப்ரையன் கருதிய காரணத்தாலேயே அகல்காரும் ராமநகரமும் இழிவு படுத்தப்பெற்று, சுதந்தரத்தையும் பணத்தையு மிழந்து, கொடிய கவலைக்குள்ளாக வேண்டியிருந்தன வென்று நாங்கள் கருதுகிறோம். ஜனங்கள் அனுபவித்த கொடுமை முற்றிலும் பழிக்கஞ் சாத பிரதேச உத்தியோகஸ்தரான மலிக் சாஹிப்கான் அங்கிருந்து வந்ததன் காரணமாகப் பன்மடங்கு அதிகமாகப் பெருகலாயிற்று. இக்கிராமங்கள் சம்பந்தமாக நாங்கள் சேகரித்துள்ள வாக்கு மூலங்களில் இவர் பெயரே பொலிவுற்று விளங்குகின்றது.

## 11. ஹாபிஜபாத்.

ஹாபிஜபாத் வாஜிரபாத் லயர்பூர் இருப்புப்பாதையில் அகல்காருக்கு 15 மைல் தூரத்திலுள்ளது. அது ஒரு பெரிய வியாபாரஸ்தலம். அது 5000-க்கு மேலான ஜனத்தொகையுள்ளது.

10-ந் தேதி லாகூரிலும் அமிர்த சரஸிலும் அதிகாரிகள் செய்த செய்கையை மறுக்கும் பொருட்டு வேலை நிறுத்தஞ் செய்ய வேண்டுமென்ற கொள்கை இருப்புப்பாதை முழுவதுஞ் சென்று ஹாபிஜபாதிற்கும் எட்டலாயிற்று. எப்ரல் மாதம் 14-ந்

தேதி அங்கே முழு வேலை நிறுத்தம் ஏற்பட்டது. குடித்துச் சோம்பித்திரிபவர்களைப் பிரதானமாகக் கொண்டுள்ள கூட்டமொன்று ஸ்டேஷனுக்குச் சென்றிருந்தது. ஸ்டேஷனிலிருந்து சுமார் 300 கஜ தூரத்திலுள்ள ரஸ்தாச் சந்திப்பினருகில் இக் கூட்டம் வண்டியை நிறுத்தி, முதல் வகுப்பு வண்டியில் தம் சிறு குமாரனுடனிருந்த லெப்டினண்ட் டாடம் என்பவரை வேண்டுமென்றே தாக்கியது. அவர்கள் வண்டியின் கண்ணாடி பில்லைகளை உடைத்து விட்டார்கள். இதனிடையில், கூட்டத்திலுள்ள மற்றுஞ் சிலர் இம் மிருகத்தனமான செயலைக் கண்டித்து, தங்களுக்குச் சிறிது அபாய முண்டாவதாயிருந்தும் லெப்டினண்ட் டாடம் என்பவரைப் பாதுகாத்தனர். லெப்டினண்ட் டாடம் வேண்டிக் கொண்ட தன் மேல், வண்டி யோட்டுபவர் வண்டியை அதிவேகமாகச் செலுத்தினர்.

வண்டி பத்திரமாய் வாஜிரபாதிற்கு வந்து சேர்ந்தது. 15-ந் தேதி டாப் என்னும் குடிகாரனொருவன் சுமார் 100 பேரைக் கொண்ட கூட்டமொன்றை நடத்திச்சென்று கம்பிகளையறுத்துக் குறிகாட்டும் சேவகன் குடிசையை நாசப்படுத்தினுன். டாப் பாதுகாப்பில் வைக்கப்பெற்ருன். கூட்டம் தாசீல் கட்டிடத்திற்கு அவனைப் பின்பற்றிச் சென்று, கல்லெறிந்து தாசீல் பல கணிகளை உடைத்தது. ஆகாயத்தில் சுடப்பெற்ற ஒரு குண்டு கூட்டத்தைக் கலைத்தது.

கர்னல் ஓப்ரையன் ஏப்ரல் மாதம் 22-ந் தேதி ஹாபிஜ பாதிற்குச் சென்றனர். அகல் காரிலும் பிற விடங்களிலும் நடைபெற்ற சம்பவங்களெல்லாம் அங்கும் நடைபெற்றதன் பயனுக ஜனங்களெல்லோரும் பயங்கொள்ளலாயினர்.

அவர் தம் வாக்கு மூலத்தில் குறிப்பிட்டுள்ள காரணங்களை முன்னிட்டும் வண்டித் தொடரைத் தாக்கியதன் சம்பந்தமாகவும் பிஹாரிலால் கபூர் தம் வேலைக்காரச் சிறுவனுடன் கைது செய்

யப்பெற்றனர். இரண்டு சிறுவர்களும் அரசாங்க உத்தியோகஸ்தர் ஒருவரும் தங்களுக்கு விரோதமாகச் சாட்சியங் கூறுமாறு கொண்டுவரப் பெற்றார்களென்றும், ஆனால் தாங்கள் ஒரு மாதம் 9 நாள் பாதுகாப்பில் வைக்கப்பெற்ற பிறகு விடுதலை செய்யப் பட்டார்களென்றும் அவர் சொல்லுகிறார்.

ஹரிநாம சிங் தம் குமாரனைக் காப்பதற்காக 200 ரூபா வற்புறுத்தி வாங்கப் பெற்றனர்; ஆயினும் அதனால் பயன் விளையவில்லை. அவர் குமாரன் கைது செய்து விசாரணை செய்யப் பெற்றுச் சிறைச்சாலையி லடைக்கப் பெற்றான்.

போலீசாருக்கு லஞ்சம் கொடுக்கத் தன்னிடம் பணமில்லாமை காரணமாகத் தன் மகன் சிறைச்சாலைக்குச் செல்லவேண்டியிருந்தானென ஹுகம் தேவி யென்னும் மாது சொல்லுகிறாள்.

யுத்த காலத்தில் சிறந்த வேலை செய்திருந்த ஜனத் தலைவர்களையும் கெடுக்கும் பொருட்டு, ஒருவருக் கொருவர் செய்து கொள்ளும் வாக்கு வாதமும் எங்ஙனம் உபயோகிக்கப் பெற்றதென நியாயவாதியின் குமாஸ்தாவான ருல் குராம் விளக்கிக் கூறுகிறார். போலீசார் சாட்சியம் ஜோடித்த விதத்தையும் அவர் விரிவாகக் கூறுகிறார்.

உதவிப் பத்திராதியர் ஸர்தார் திவான் சிங் பின்வருமாறு சொல்லுகிறார் :—“ முதல் முதல் மிக்க மதிப்புவாய்ந்த அறுவர் கைது செய்து கைவிலங்கிடப் பெற்றனர். அவர்கள் மேல் சாட்டப் பெற்ற குற்றங்களேனும் பிற விஷயங்களேனும் அவர்களுக்கு அறிவிக்கப்படவில்லை. ஒன்றரை மாதஞ் சென்ற பிறகு அவர்களின் மேல் குற்றங்கள் ஜோடிக்கப் பெற்றன. தவறான பிராசிகியூஷன் சாட்சியங்களைப் பெறும் பொருட்டு ஜனங்கள் தேகத்தைப் பாதிக்குந் தண்டனை விதிக்கப் பெற்றார்கள் ; கடைத் தெருவில் அவர்கள் வசை மொழிகளாலும் காதினாற் கேட்க வொண்ணாத தகா மொழிகளாலும் அலங்கரிக்கப் பெற்

ஞர்கள். அவர்கள் மிகவும் கொடுமையாய் நடத்தப்பட்டார்கள். மதிப்புள்ளவர்களைப் போலீசார் பல விதமான கஷ்டங்களுக்கும் சிறுமைச் செயல்களுக்கும் உட்படுத்தினுர்கள.........பிராசிகியூஷன் தரப்பில் பொய்ச் சாட்சியம் வாங்கப்பட்டதைப் பற்றி இராஜப் பிரதிநிதியாருக்கும் பஞ்சாப் லெப்டினெண்ட் கவர்னருக்கும் தந்திகள் அனுப்பப்பெற்றன.

"ஆனல் அவைகள் கவனிக்கப் பெறவுமில்லை, யாதொரு விசாரணையும் நடத்தப் பெறவுமில்லை...........இத்தகைய தந்திகள் அனுப்பப் பெற்ற சங்கதி கர்னலுக்குத் தெரியவந்தபொழுது அவைகள் பரிசோதிக்கப் பெற்று மறுக்கப்பட்டன. ஸம்மரி கோர்ட் மார்ஷல் ஹாபிஜபாத் வழக்குகளை யெல்லாம் ஒரே நாளில் பைசல் செய்துவிட்டது...........ஹாபிஜபாத் வழக்குகளில் சம்பந்தப்பட்ட குற்றவாளிகள் பெரிய நிலச்சுவான்தார்களாகவும் பாங்கர்களாகவும் நியாயவாதிகளாகவும் மற்றும் மதிப்புள்ளவர்களாகவும் இருந்தார்கள். அவர்கள் தெருக்களின் வழியே நடத்திச் செல்லப் பெற்று வேண்டுமென்றே இழிவுபடுத்தப் பட்டார்கள்."

ஆள் சேர்த்தல் சம்பந்தமாகவும், பிறகு இராணுவச் சட்டத்தின்படி சட்ட நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்ட தன் சம்பந்தமாகவும் கர்னல் ஓப்ரையன் கைக் கொண்டிருந்த ஊக்கமுள்ள முறைகளை லாலாரூப் சந்த் சோப்ரா விளக்கிக் கூறியிருக்கிறுர். விஷயங்கள் தமக்குத் திருப்தி யுண்டாகுமாறு நடைபெறுததை, அதாவது, ஏப்ரல் மாதம் 30-ந் தேதி வரையில் அனேகர் கைது செய்யப் பெறுதிருந்ததைக் கண்டு, கர்னல் ஓப்ரையன் பழைய உத்தியோகஸ்தர்கள் சிலரை நீக்கி விட்டதாகவும் தமக்கு இஷ்டமுள்ளவர்களை அவர்களுக்குப் பதிலாக நியமித்ததாகவும் சொல்லப்படுகிறது. ஏப்ரல் மாதம் 30-ந் தேதி மாலை, தலைப்பாகை யணிந்துள்ள ஒவ்வொருவரும் மறு நாட்

காலையில் தாசீல் கட்டிடத்திற்கு முன்பாக வந்து ஆஜராக வேண்டுமென்றும், அங்ஙனம் வாராதவர் சுடப் பெறுவரென்றும் பறை யறைவிக்கப் பெற்றது. இப்புதிய அதிகார முறையில் ஜனங்கள் பகலெல்லாம் வெளியிடத்தில் உட்காரவைக்கப் பட்டார்களென்றும், இம்முறை ஒவ்வொருநாளும் அனுஷ்டிக்கப் பட்டதென்றும் அவர் சொல்லுகிறார்.

பள்ளிச்சிறார்கள் விஷயமாக மற்ற விடங்களில் பிறப்பிக்கப்பெற்ற உத்தரவே இங்கும் பிறப்பிக்கப்பட்டது. பிரிட்டிஷ் போர்வீரர் சிலர் பணமொன்றுங் கொடாமல் கடைக்காரர்களிடமிருந்து பலவிதமான பொருள்களைத் தாங்களாக எடுத்துச் சென்றனர். அக்டோபர் மாதம் 20-ந் தேதி இந்தச் சாட்சி மிஸ்டர் ஆண்ட்ரூஸ் என்பவருடன் இன்ஸ்பெக்டர் வீட்டுக்குச் சென்றார். தண்டனைப் போலீசார் வற்புறுத்திப் பணம் வாங்கிய விஷயம் அவர் பார்வைக்குக் கொண்டுவரப்படவும், இரண்டு சேவகர்கள் வேலையினின்றும் நீக்கப் பெற்றனர்; ஹவல்தார் ஒருவர் பதவியிற் குறைக்கப் பெற்றனர். தாம் ஆக்ஸ்பர்டில் இருந்தவரென்றும், இங்கிலாந்தில் 13 வருஷம் வசித்தவரென்றும், லண்டனில் சேர்க்கப்பெற்ற இந்தியன் ஆம்புலன்ஸ் கூட்டத்தில் சேர்ந்தவரென்றும், எப்பொழுதும் அரசியல் விஷயத்தில் தலையிட்டதில்லையென்றும், ஆனால் ஜனங்களுக்குச் செய்யப்பட்ட தவறுகளுக்குப் பரிகாரம் தேடும் பொருட்டே தாம் இவ்வாக்குமூலங்கொடுக்க முன் வருவதாகவும் சொல்லி மிஸ்டர் சோப்ரா தம் வாக்குமூலத்தை முடிக்கின்றனர்.

லாலா பேலி ராம் கபூர் மற்றும் 23 பேரோடு கைது செய்யப்பெற்று 12 அடி நீளமும் 15 அடி அகலமுமுள்ள ஓரறையில் அடைக்கப்பெற்றனர். அவ்வறையிலேயே அவர்களெல்லோரும் ஜலமலங் கழிக்கவும் வேண்டியிருந்தது. அவர்கள் ஜூன் மாதம்

6-ந் தேதி வரையில் விசாரணையிலுள்ள கைதிகளாக வைக்கப் பெற் றிருந்தார்கள்.

காட்டிலாகாவில் பிரதான குமாஸ்தாவாக வேலை பார்த்து உபகாரச் சம்பளம் பெற்றுக்கொண் டிருப்பவரான ஸர்தார் மீவா சிங் சேனைக்கு ஆள் சேர்க்கும் முறைகளின் கொடுமையை விளக்கிக் கூறுகிறார். தாம் கைது செய்யப்பெற்ற விஷயமாக அவர் பின்வருமாறு சொல்லுகிறார் :—“ஏப்ரல் மாதம் 21-ந் தேதி நான் வாரண்டின்றிக் கைது செய்யப்பெற்றேன். 22-ந் தேதி வாரண்டுகள் தயாரிக்கப்பெற்று, ஜில்லா மாஜிஸ்டிரேட் டின் கையொப்பம் வாங்கப்பெற்றது. நான் இரண்டு நாள் ஹாபிஜபாத் லாக்-அப் அறையில் வைக்கப்பெற்றிருந்தேன். அவ்வறை மிகவும் அழுக்குப் படிந்ததா யிருந்தது. அந்த ஒரே அறையில் 23 பேர் நெருக்கமாக அடைக்கப்பெற் றிருந்தனர். அதில் நான்கு பேரும் சரியாக இருத்தல் முடியாது. தேவை யானபோது ஜலமலங்கழிக்கவும் அனுமதியளிக்கப் படாமையால் நாங்கள் அஞ்சக்கூடிய அசௌகரியங்களுக்கு உட்படுத்தப் பட் டோம். ஏககாலத்தில் எங்களிலிருவர் கைவிலங்குடன் வெளியே கொண்டுபோகப் பெற்றோம். சில சமயங்களில் நாங்கள் அவ் வறையிலேயே மலங்கழிக்க வேண்டியவர்களானோம். 1919-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 23-ந் தேதி நாங்கள் குஜரான் வாலா ஜில்லா சிறைச்சாலைக்கு அகற்றப்பட்டோம். 23 பேரும் ஒரே சங்கிலியால் பிணைக்கப்பெற்றிருந்தோம். ஒவ்வொருவர் கரங் களிலும் விலங்குகள் போடப்பெற்றன. நாங்கள் அங்கே மிக்க பாதுகாப்புடனும் ஆயுதமேந்திய இராணுவப் போலீஸ் பாது காவலருடனும் கொண்டு செல்லப்பெற்றோம். நாங்கள் வழியில் ஜலமலங்கழிக்க வேனும் தண்ணீர் குடிக்க வேனும் விடப்பட வில்லை. சில்லரை வேலைக்காரர்கள் எங்களை நடத்திய விதம் பொறுக்கக் கூடாததா யிருந்தது. 1919-ம் வருஷம் மே மாதம்

23-ந் தேதி நாங்கள் மறுபடியும் அடையாளங் கண்டுகொள்ளப் பெறும்பொருட்டு ஹாபிஜபாதிற்கு அழைத்துச் செல்லப்பெற்றோம். நாங்கள் ஹாபீஜபாதிற்குச் சென்ற வழியில் போலீசார் எங்களைக் கொடுமையாக நடத்திய தன்மையை என்னால் வெளியிட முடியவில்லை. குஜரான்வாலா சிறைச்சாலை மேற்பார்வை அதிகாரி ஏழெட்டுப் பேருக்கு அவர்களுடைய சொந்த உணவு கொண்டுவரப் படலாமென உத்தரவு கொடுத்தார். நாங்கள் கை விலங்குடன் குஜரான்வாலா சிறைச்சாலையிலிருந்து அழைத்துச் செல்லப்பட்டபொழுது, சித்தமாயிருந்த உணவை உட்கொள்ளுமாறு எங்களுக்கு அனுமதி கொடுக்க வேண்டுமெனச் சிறைச்சாலை அதிகாரி போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரைக் கேட்டுக் கொண்டார். ஆனால் சப்-இன்ஸ்பெக்டர் எங்களுக்கு அனுமதி யளித்தாரில்லை. இங்ஙனமே நாங்கள் அன்று முழுவதும் பட்டினி கிடக்க வேண்டியவர்களானோம். மே மாதம் 29-ந் தேதி நாங்கள் லாகூருக்குக் கொண்டுவரப்பெற்றோம். எங்கள் வழக்குச் சம்பந்தமான தஸ்தா வேஜுகள் அரசாங்க நியாயவாதியிடங் காட்டப்பட்டன. அவர் எங்களுடைய குற்றம் மிகவும் அற்பமானதெனக் கருதி இவ்வழக்கைத் திருப்பி யனுப்பிவிட்டனர். ஜூன் மாதம் 4-ந் தேதி மாலை மிஸ்டர் வேஸ் எங்களிடம் வந்து டிபன்ஸ் சாட்சிகளின் பட்டியொன்றைக் கொடுக்குமாறு எங்களுக்குத் தெரிவித்தனர். நாங்கள் பன்முறை வேண்டிக்கொண்டும், எங்கள்மேற் சாட்டப்பெற்றிருந்த குற்றங்கள் தெரிவிக்கப்படவில்லை. பிராசிகியூஷன் தரப்புச் சாட்சிகளின் பெயர்களும் எங்களுக்கு அறிவிக்கப்படவில்லை. வழக்கு விசாரணை ஜூன் மாதம் 7-ந் தேதி வைத்துக்கொள்ளப்பட் டிருந்தபடியால் எங்கள் டிபன்ஸைத் தயார்செய்ய எங்களுக்குச் சிறிதளவு காலமே யிருந்தது. நாங்கள் எங்கள் உறவினர்க்குத் தெரிவிக்கக் கூடாமலும் நியாயவாதிகளின் உதவிபெறக் கூடாமலு

மிருந்தோம். என் டிபன்ஸ் சாட்சிகளுள் ஒருவரான அஸிஸ்டண்ட் சர்ஜன் டாக்டர் உம்ரேக் சிங்க் சிம்லாவிலிருந்தனர். அவர் அழைக்கப்படவில்லை. குறுக்கு விசாரணையில், என்னிடம் விரோதங்கொண் டிருந்ததாக டாக்டர் தௌலத் ராம் ஒத்துக்கொண்டனர். ஏனைய பிராசிகியூஷன் சாட்சிகள் போலீசாரிடம் பயந்திருந்ததனாலேயே வரலானார்கள். என்னுடைய டிபன்ஸ் சாட்சிக ளெல்லோரும் மதிப்புள்ள கனவான்கள். அவர்கள் நான் கண்வலியால் படுத்திருந்தே னென்றும், எனவே என் வீட்டை விட்டு நான் சென்றிருத்தல் முடியாதென்றும், சாட்சியங் கொடுத்திருந்தனர். எனக்கு 60 வயதிற்கு மேலாகிறது. நான் அரசியற் கூட்டமொன்றிலும் சம்பந்தப்பட் டிருந்ததில்லை. மிஸ்டர் வேஸ் டெபுடி கமிஷனர் கர்னல் ஒப்ரையனோடு கலந்து ஆலோசித்த பிறகு, எனக்கு 500 ரூபா அபராதம் விதித்தனர். கருணை காட்டப்பெற வேண்டுமென நான் கொடுத்த விண்ணப்பம் இன்னும் கவனிக்கப் படாமலிருக்கிறது. இஃதெல்லாம் அயோக்கியர் சிலரைத் தங்களுக்கு ஆதாரமாகக் கொண்டுள்ள போலீசாரால் விளைந்த தாம். இங்ஙனமே எல்லாச் சம்பவங்களும் ஒரே நாளில் ஒரே இடத்தில் நடை பெறலாயின. 14-ந் தேதியும் 15-ந் தேதியும் குழப்பங்கள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. முதல் நாள் போலீசார் ஜனங்களுடைய செய்கைகளைத் தடுக்க முயற்சியெடுத்துக் கொள்ளவேயில்லை. அவர்களே இச்செய்கைகளுக்குத் துணை நின்றார்கள். இரண்டாம் நாள் வெற்றுத் தோட்டாக்களைக் கொண்டு சுட்டு, பிரத்தியேக போலீஸ் இராணுவ உதவிகளின்றியே குழப்பங்களை அடக்கி விட்டார்கள். போலீசார் முதல் நாள் தங்கள் கடமையைச் செய்திருப்பின், இச்சம்பவங்கள் நடைபெற்றிருக்கமாட்டா. ஹாபிஜபாதில் கட்டிடங்களுக்கு ஏற்பட்ட அழிவினால் சிறிதளவு ரூபாயே நஷ்டமுண்டாயிருக்கும். அவ்வூர் வாசிகளிடமிருந்து

6,000 ரூபா அபராதத் தொகையாக வசூலிக்கப் பெற்றது. ஜனங்கள் தண்டனைப் போலீசாரின் செலவுகளை ஏற்றுக்கொள்ள வேண்டியவர்களா யிருக்கிறார்கள். அரசர் பெருமானின் எளிய குடிமக்கள் இதனால் மிக்க துன்ப மனுபவிக்க வேண்டியவர் களானார்கள்.''

ஆங்கிலோ சமஸ்கிருத பாடசாலையின் தலைமை உபாத்தி யாயர் லாலா ராம ஸஹாயும் கைது செய்யப் பெற்றவர்களுள் ஒருவர். அவர் வீட்டிலில்லாத காலத்தில் அவர் வீடு சோதனை செய்யப்பெற்றது. சோதனை இரவு 11-மணி வரையில் நடை பெற்றது. அவர் குஜரான் வாலா சிறைச்சாலைக்குக் கொண்டு போகப் பெற்று, இரண்டு வாரங்களுக்குப் பிறகு ஹாபிஜபாதிற் குக் கொண்டுவரப் பெற்றனர். அவர் சொல்வதாவது :—
''இங்கே பிராசிகியூஷன் தரப்பில் சாட்சியங் கொடுக்குமாறு என்னை வற்புறுத்தினர். போலீஸ் இன்ஸ்பெக்டர் தம் தேக பலத்தை உபயோகிக்கவில்லை யெனினும், மனோ சக்தி வலி மையை யெல்லாம் காட்டலாயினர். நான் கல்வி கற்றவனென அவர் முதலில் என்னைப் புகழ்ந்து கூறிவிட்டு, நான் தூக்கிடப் பெறுவேனென்றும் என் பொருள்களெல்லாம் பறி முதல் செய் யப் படுமென்றும் அல்லது நான் தீவாந்தர தண்டனை விதிக்கப் பெறுவேனென்றும் கூறி என்னைப் பயமுறுத்திவிட்டனர். நான் நம்பிக்கைத் துரோகியைப் போல் நடந்துகொள்ள எனக் கிஷ்டமில்லை யென முதலில் அவரிடந் தெரிவித்தேன். உண் மையைச் சொல்லுதல் நம்பிக்கைத் துரோகமாகாதென அவர் வாதஞ் செய்யலானார். பிறகு நான் என் தகப்பனாரோடும் பள் ளிக்கூடத்தின் மதபோதகாசிரியரோடும் கலந்து ஆலோசித்து, உண்மையை யன்றி வேறொன்றையுஞ் சொல்லுதல் கூடா தெனத் தீர்மானித்துவிட்டேன். நான் இன்ஸ்பெக்டரிடம் இங்ஙனஞ் சொல்லியதற்கு அவர் தமக்கு வேண்டுவது உண்

மையே யென என்னிடஞ் சொன்னார். ஆனால் நான் என் வாக்கு மூலத்தைக் கொடுத்தபொழுது, ஏப்ரல் மாதம் 6-ந் தேதி நடைபெற்ற சமாதான முள்ள கூட்டத்தில் நான் பேசச் சித்த மாயிருந்தேனென்பதைச் சொல்லுதல் கூடாதென அவர் என்னிடஞ் சொன்னார். ஜனத்தலைவர்கள் கொடுஞ்செயல்களில் தலையிட்டிருந்தார்களா, இல்லையாவென என்னைக்கேட்டால், நான் அச்சமயம் அங்கில்லாததால் அதனைத் தெரிந்துகொண்டிருத்தல் முடியாதெனச் சொல்லி விடவேண்டுமெனவும் அவர் என்னிடந் தெரிவித்தார். குற்றவாளிகளுள் ஜனத் தலைவர்களாகவுள்ள குருதயாள் சிங்க், லாலா ராமஸஹாய் முதலியவர்கள் கொடுஞ் செயல் செய்யவில்லை யென்பதை நான் அப்பொழுதும் நம்பினேன்; இப்பொழுதும் நம்புகிறேன். ஆனால் என்னைச் சூழ்ந்திருந்த நிலைமைக்கேற்ப நான் இதனை என் வாக்கு மூலத்திற் சேர்க்கா தொழித்தேன். நான் வாக்குமூலங் கொடுத்தான பிறகு, எனக்கு விரோதமாகச் சாட்சியமொன்று மில்லையென்றும், எனவே நான் விடுதலை செய்யப்பெற்றுப் பிராசிகியூஷன் சாட்சியாக எடுத்துக்கொள்ளப் படுவேனென்றும் தெரிவித்துவிட்டனர். நான் உண்மையைச் சொல்ல ஆயத்தமாயிருந்தேன்; குற்றவாளிகள் கொடுஞ் செயல் செய்யவில்லை யென்பதைக் கூறா தொழித்ததைத் தவிர நான் மற்றப்படி உண்மையையே சொல்லலானேன். நியாயஸ்தலத்தில் கொடுஞ் செயலைப் பற்றி என்னை ஒன்றுங் கேட்கவில்லை.

"1919-ம் வருஷம் மே மாதம் 21-ந் தேதி நாங்கள் திரும்பவும் ஹாபிஜபாதிற்குக் கொண்டுவரப் பெற்றோம். வேசிகளும் ஏனைய கீழ்மக்களும் எங்களை அடையாளங் கண்டுபிடிக்க வந்தார்கள். இம்முறை, எங்கள் தொகை பெரிதாயிருந்தபடியாலும், சிறைச்சாலைகளில் போதிய இடமின்மையாலும், நாங்கள் ஒரு பெரிய உத்தியோக சாலை அறையில் வைக்கப் பெற்றோம். நாங்

கள் இரவும் பகலும் கை விலங்கிடப் பெற்றிருந்தோம்; ஒரு வரை யொருவர் நிர்வாண நிலையிற் பார்த்துக்கொண்டே நாங்கள் கூட்டங் கூட்டமாக ஜலமலங் கழிக்க வேண்டியவர்களானோம். நாங்கள் இருவர் இருவராகக் கை விலங்கிடப் பெற்றிருந்தோம். அதே நிலையில் நாங்கள் ஜலமலங் கழித்தோம். இரவில் நாங்கள் கைவிலங்குடன் வெளியிடத்திற் படுத்துறங்கினோம்.

"1919-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 23-ந் தேதி நான் கர்னல் ஓப்ரையன் முன்பாகக் கொண்டு நிறுத்தப் பெற்றேன். அவர் என்னை 1000 ரூபா ஜாமீன் கட்டச் சொன்னார். அங்ஙனமே ஜாமீன் கட்டியானதும் என்னை விடுதலை செய்தனர். நான்கு நாட்களுக்குப் பிறகு, டெபுடி கமிஷனர் மறுபடியும் என்னைக் கூப்பிட்டனுப்பினார். அவர் பங்களாவின் வெளிப்புறத்தில் நான் இனிக் கட்டுப்படுத்தப் பட்டிருக்கவில்லை யெனத் தெரிவிக்கப்பெற்றேன். கர்னல் ஓப்ரையன் வெளியே வந்து, "டோபா கரோ" (வருந்துவதாகத் தெரிவியும்) என்று சொன்னார். நான் குற்றமற்றவனென்பது எனக்குத் தெரிந்திருந்தும், வாய் மொழியாலும் செய்கையினாலும் வருந்துவதாகத் தெரிவித்துக் கொண்டேன். பிறகு அவர் நான் "என்னை விடுவித்துக் கொள்ளவேண்டும்" என்று சொன்னார். நான் பிராசிகியூஷன் தரப்பில் சாட்சியங் கொடுக்கவேண்டுமென்பதே அவருடைய உட்கருத்து.

"மேலே குறிப்பிட்டுள்ளபடி, நான் என் வாக்குறுதிக்கிணங்கப் பிறகு பிராசிகியூஷன் சாட்சியாகச் சென்றேன். நான் பிராசிகியூஷன் சாட்சியாக வந்திராவிடில் தாம் என்னை மறுபடியும் கைது செய்திருப்பரெனப் போலீஸ் டெபுடி சூபரின்டெண்டெண்ட் பிறகு என்னிடந் தெரிவித்தனர். இராணுவச் சட்டம் இன்னும் ஒழிந்தபாடில்லை.

"ஸ்டேஷனிலேனும் தாசீல் கட்டிடத்திலேனும் செய்யப் பெற்ற கொடுஞ் செயல்களில் தலைவர்கள் சம்பந்தப்படவில்லை யென்பதை நான் இன்னொருமுறை வற்புறுத்திக் கூற விரும்பு கிறேன்."

கல்வி கற்ற ஒருவரைப் பொய்ச் சாட்சியங் கூறச் செய்யு மாறு எத்தகைய நுண்ணிய நிர்ப்பந்த முறை அவர் விஷயத்தில் அனுஷ்டிக்கப்பட்ட தென்பதையும், கர்னல் ஒப்ரையனும் பய முறுத்தல் முதலாய முறைகளை எங்ஙனம் கைக்கொண்டன ரென்பதையும் விளக்கும் பொருட்டே நாங்கள் இவ்வாக்கு மூலத் தினின்றும் நீண்டதொரு பகுதியைப் பெயர்த்து வெளியிட்டுள் ளோம். தவறாகக் கைது செய்யப்பெற்ற கற்றோரையும் கன வான்களையும் மரியாதைக் குறைவாகவும் மூர்க்கத்தனமாகவும் நடத்தியது, உத்தியோகஸ்தர்கள் கிளர்ச்சியை அடக்கும் பொருட்டு எவ்வளவு தாழ்ந்த நிலையை யடைந்து விட்டார்க ளென்பதைக் காட்டுகின்றது.

## 12. ஸாங்க்லா ஹில்.

ஸாங்க்லா ஹில் சமீப காலத்தில் தோன்றிய இடமாகும், அது லாகூர் லயல்பூர் கிளையில் லாகூருக்கு 62 மைல் தூரத்தி லுள்ள ஒரு ரெயில்வே ஸ்டேஷன். அஃது ஏறக்குறைய 4,000 ஜனத்தொகையுள்ளது. மகாத்மா காந்தி கைது செய்யப் பெற்ற காரணமாக ஏப்ரல் மாதம் 12-ந் தேதி அங்கே வேலை நிறுத்தந் தோன்றியது. மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் சொல்லுகிறபடி "வேலை நிறுத்த சம்பந்தமான கூட்டத்தின் பயன் உடனே வெளிப்படையாகத் தோன்றவில்லை. 13-ந் தேதி வைசாகிச் சந்தை கூடியவரையில் அமைதியாகச் சென்றது................... 15-ந் தேதி ஸாங்க்லாவுக்கும் ஸாலன் வாலாவுக்கு மிடையில் தந்திக் கம்பிகள் அறுக்கப்பெற்றன. 16-ந் தேதி, சீக்கியரொரு

வர் மற்றுஞ் சில சீக்கியரோடு, நகரத்திலிருந்து வந்த கூட்டத்தால் உதவப்பெற்று, ஸாங்க்லா ஸ்டேஷனிலிருந்த இராணுவக் கைதியொருவரைப் பலவந்தமாய் விடுதலை செய்துவிட்டனர். அக்கைதி இந்தியர். அன்று மாலை தந்தி இன்ஸ்பெக்டர் மிஸ்டர் வெல்ஸைச் சிலர் கொலைசெய்யுமளவாக எதிர்க்கலாயினர்."

இவ்வாறு முற்றிலும் மிகைபடக் கூறப்பட்டிருக்கின்றது. இராணுவக் கைதியை விடுவித்த சீக்கியர் வெறி பிடித்தவர்போல் தனியே ஓடினரென்றும், அவருக்குப் பின்னே யாதொரு கூட்டமுமில்லையென்றும் எங்களிடமுள்ள சாட்சியம் காட்டுகின்றது. அது ஒருவர் செய்த செய்கையாகும். 15-ந் தேதி யேனும் வேறெந்தத் தினத்தன்றும் மிஸ்டர் வெல்ஸ் கொலை செய்யப்படுமளவாக எதிர்க்கப்படவில்லை; அவருக்குப் பலத்த காயமும் உண்டாகவில்லை. ஸாங்க்லா வாசிகள் எவர் எதிர்க்கப்பட்டதிலும், எந்தப்பொருள் அழிக்கப் பெற்றதிலும் சம்பந்தப்படவில்லையென்பது எங்களிடமுள்ள சாட்சியத்தினால் நன்கு விளங்கும். ஆயினும் எப்ரல் மாதம் 19-ந் தேதி இராணுவச் சட்டம் அறிவிக்கப்பட்டது. டெபுடி கமிஷனர் ஸாங்க்லாவுக்கு விஜயஞ்செய்து, ஜனங்கள் மறுபடியும் வேலை நிறுத்தஞ் செய்தல் கூடாதென எச்சரித்ததைத் தவிர அப்பொழுது வேறொன்றுஞ் செய்தாரில்லை. 22-ந் தேதி பிரிட்டிஷ் போர்வீரர் சிலருடன் ஓர் அதிகாரி அங்குவந்து, ஜனத்தலைவர்கள் பதினொருவரைக் கைதுசெய்து, சில மணிநேரம் காப்பில் வைத்திருந்த பிறகு அவர்களை விடுவித்து விட்டனர். ஆயினும் எப்ரல் மாதம் 26-ந் தேதி கைது செய்தல் தொடங்கப் பெற்றது. கைது செய்யப்பெற்றவர்கள் 29-ந் தேதி விடுவிக்கப் பெற்றார்கள். ஆனால் மே மாதம் 12-ந் தேதி இராணுவ ஆடம்பரமொன்று நடந்தேறியது. ஜனங்களைப் பய முறுத்தும் நோக்கத்துடன் குன்றிலிருந்து

குண்டுகள் விடப்பட்டன. தாங்கள் "பீரங்கி வண்டியைக் கொண்டும் லூயி பீரங்கியைக் கொண்டும் பல ஜனங்கள் முன்னே ஆடம்பரஞ் செய்ததாக" க் காப்டன் எவிங்க் ஹண்டர் கமிட்டியார் முன் கூறியிருக்கின்றனர். அன்றையதினமே 13 ஜனத் தலைவர்கள் திரும்பவும் கைது செய்து கை விலங்கிடப்பெற்று, இழிவுபடுத்தக் கூடிய நிலையில் நடத்திச் செல்லப்பட்டார்கள். மே மாதம் 13-ந் தேதி இன்னும் 64 பேர் கைது செய்யப் பெற்றனர். அவர்கள், மிகவும் வெட்ககரமான முறையெனக் கருதப்படுமாறு, தங்கள் தலைப்பாகைகளைக் கொண்டே கட்டப் பெற்று, போலீஸ் ஸ்டேஷனுக்கு நடத்திச் செல்லப்பட்டார்கள். சில நாட்கள் வரை அவ்வூர் வாசிகள் ஆஜராயிருக்கிறார்களா வென்பதைக் கண்டுகொள்ளுமாறு அதிகாரிகள் அவர்கள் பெயர்களைப் பிரதிதினமும் கூப்பிட்டு வந்தார்கள். 14-ந் தேதி இன்னும் 47 பேர் கைது செய்யப் பெற்றனர். கைதுசெய்யப் பெற்றவர்கள் 50,000 ரூபா அபராதஞ் செலுத்தினால் அவர்களெல்லோரையும் விடுதலைசெய்து விடுவதாக மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் 18-ந் தேதி அவர்களிடந் தெரிவித்தனர். தாம் ஸாங்க்லா வாசிகளுக்கு 50,000 ரூபா அபராதம் விதிக்க விரும்பினரென்பதை மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் ஒத்துக்கொள்ளுகிறார். ஆனால் இதை விடுதலையின் நிபந்தனையாகத் தாம் கொண்டிருந்தனரென்பதை அவர் மறுக்கின்றனர். அஃது எங்ஙனமாயினும், கைதுசெய்யப் பெற்றிருந்த 124 பேரில் 116 பேர் மே மாதம் 19-ந் தேதி விடுதலை செய்யப்பெற்ற உண்மை நம் முன் இருக்கின்றது. கைது செய்யப் பெற்றவர்களல்லாத மற்றவர்களுள் சிலர் 50,000 ரூபா அபராதத்திற்குச் சம்மதித்தனரென ஜனங்கள் வாதிக்கிறார்கள். விடுதலை செய்யப் பெறாத 8 பேரும் ஜூன் மாதம் முதல் தேதி விசாரணை செய்யப்பெற்று, குற்றத்தை நிலை நாட்டப் போதாத சாட்சியத்தைக் கொண்டே, ஆறுமாதச்

சிறைச்சாலை தண்டனையும் நபருக்கு 100 ரூபா அபராதமும் விதிக்கப்பெற்றனர்.

வழக்கமாக முன் வைத்திய பரிசோதனை யொன்றுமின்றி ஜனங்கள் மிகவும் அற்ப காரணங்களை முன்னிட்டுக் கசையா லடிக்கப்பட்டார்கள். சாமான்கள் பணங் கொடாமல் கடைக் காரர்களிடமிருந்து கொண்டுபோகப்பட்டன. மதிப்புள்ளவர்கள் உத்தியோகஸ்தர்களுக்குப் பங்கா இழுக்கக் கூப்பிடப் பட்ட துடன், அப்போதைக்கப்போது வெய்யிலில் நின்றிருக்குமாறும் பணிக்கப்பெற்றார்கள். இளம்பிராய முள்ளவர்களுட்படப் பள்ளிக் கூடத்துப் பிள்ளைகள் பிரதிதினமும் பெயர் கூப்பிடும்பொழுது வருமாறும், கொடிய வெய்யிலில் நின்று கொண்டு "ஐயா நாங் கள் ஒரு குற்றமுஞ் செய்யவில்லை; இனிமேலும் நாங்கள் ஒரு குற்றமுஞ் செய்யமாட்டோம்" என்று சொல்லுமாறும் கட்டா யப் படுத்தப்பட்டார்கள். இவ்வுத்தரவு மிகக் கடுமையானதாக விருந்ததால், மிஸ்டர் பாலமுகுந்தர் 7 வயதுள்ள தம் மருமகனை இதனின்றும் தப்புவிக்க முடியாமலிருந்தார். ஆஜர் கூப்பிடும் பொழுது பிள்ளைகள் செல்லாதிருக்க அவர் தம்மாலான பாடுபட்டும் பயன்படவில்லை." எனவே அந்தப் பையன் கிரம மாக மூன்று நாள் சென்றிருந்தான். ஐந்தா நாள் அவன் திரும்பி வந்தபொழுது அவன் தேகத்தில் வேர்வை கொட்டிக்கொண் டிருந்தது. "அவன் கீழே விழுந்து வாந்தி யெடுக்கத் தொடங் கினன். ஸாங்க்லாவிலுள்ள டாக்டர் கயன் சந்த் வரவழைக்கப் பெற்றும் பயன்படவில்லை. அதன் பிறகு, அங்கிருந்த இரா ஜுவ வைத்திய ரொருவர் வரவழைக்கப் பெற்றனர். அவரா லும் உதவி செய்ய முடியவில்லை. பையன் மே மாதம் 7-ந் தேதி இறந்துவிட்டான்." பிரதிதினமும் நான்கு முறை பிள்ளை கள் ஆஜர் சொல்லுதல் கட்டாயமாயிருந்தது.

மே மாதம் 19-ந் தேதி வசந்தராம் மற்றும் 25 பேருடன் கைது செய்யப் பெற்றனர். அவரும் மற்றவர்களும் மேமீ 22-ந் தேதி விடுதலை செய்யப்பட்டார்கள். அவர்களிடமிருந்து யாதொரு வாக்கு மூலமும் வாங்கிக் கொள்ளப் பெறவில்லை. வசந்தராம் பின்வருமாறு கூறுகிறார். "நாங்கள் கைது செய்யப் பெற்றிருந்த காலத்தில், ஏதேனும் பணங் கொடுத்தாலன்றிப் போலீசார் ஜலமலங் கழிக்கவும் எங்களுக்கு அனுமதியளிப்பதில்லை. இதற்காகவே நாங்கள் பிரதிதினமும் இரண்டு ரூபா கொடுத்து வந்தோம்." மே மாதம் 23-ந் தேதி அவர் திரும்பவும் அழைக்கப்பெற்றனர். அப்பொழுது போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் அவர் இன்னுஞ் சாட்சியங் கொடுக்க மறுப்பின் அங்கேயே பாடங் கற்பிக்கப்படுவரென அவரிடந் தெரிவித்தனர். பின்னும் அவர் கூறுவதாவது: "அவர் கடைத்தெருவில் என்னைப் பிடித்துப் போலீஸ் ஸ்டேஷனுக்கு இழுத்துச் சென்றார்."

போர்வீரர்கள் பணங் தொடாமல் ஸோஹன்மாலிடமிருந்து அநேக மணங்கு பனிக்கட்டி யெடுத்துச் சென்றார்கள்.

ஹரிச்சந்திரன் என்னும் மாணவனொருவன், சலாஞ் செய்திருந்தும், போர் வீரர்களால் நிறுத்தப் பெற்றான். அவனை விசாரியாமலே அவன் கால்களிலும் கைகளிலும் முதுகிலும் பிரம்பால் 6 அடி அடித்தார்கள். இச்சாட்சி பின் வருமாறு கூறுகிறார்: "கமாண்டிங்க் ஆபிசர் கோபங்கொண்டு என்மேல் தோற் கசையொன்றை எறிந்தனர். அஃது என் பாதங்களைச் சுற்றிக் கொண்டது. அவர் அதனை மறுபடியும் இழுத்துக் கொள்ளவும், அவை தம் வழியே செல்லலாயின."

ஸர்தார் சிங்க் பொய்ச்சாட்சியங் கொடுக்குமாறு வற்புறுத்தப் பெற்றனர். அவர் அங்ஙனம் கொடுக்கமறுத்தனர். எனவே அவர் கைது செய்யப்பெற்று நான்கு நாள் லாக்-அப் அறையில்

அடைக்கப்பட்டார். அவர் சொல்வதாவது: "நகர பரிபாலன கமிட்டி அங்கத்தினர்களும் லாக்-அப் அறைக்கு வந்து, நாங்கள் விடுதலை செய்யப்படவேண்டுமாயின், சாட்சியங் கொடுக்க வேண்டுமென எங்களைக் கேட்டுக் கொண்டார்கள்." இச்சாட்சி மற்றும் 97 பேருடன் லாக்-அப் அறையிலிருந்தனர்.

லக்ஷ்மண தாஸ் இளேப்பாறும் விடுதியொன்றைக் குத்தகை யெடுத்திருந்தனர். இராணுவச் சட்ட காலத்தில் போர்வீரர்கள் அக்கட்டிடத்தைத் தங்கள் உத்தியோகசாலையாக வைத்துக் கொண்டு, பிரயாணியொருவரையும் அதில் தங்கியிருக்க விட வில்லை. அவர் மாதம் ஒன்றிற்கு 75 ரூபா குடிக்கூலியும் தம் வேலைக்காரர்களுக்கு 30 ரூபாயும் கொடுத்து வந்தனர். அவருக்கு மாதத்தில் 150 ரூபா நஷ்டமேற்பட்டது. உத்தியோகஸ் தர்கள் அங்கே இரண்டுமாதம் தங்கியிருந்தார்கள். உணவுப் பொருள்கள் தம்மிடமிருந்து வாங்கிப்போகப் பட்டபடியால் அவர் இரவும் பகலும் தம் கடையிலிருக்க வேண்டியவரானர். ஓரிரவு உத்தியோகஸ்தர்களின் வேலைக்கார னொருவன் எக்ஸ்டிரா அஸிஸ்டெண்ட் கமிஷனருக்காகவும் போலீஸ் இன்ஸ்பெக்டருக்காகவும் பால் வாங்கிப்போகவந்தான். எனவே அவர் விளக்கேற்றவேண்டியிருந்தது. இஃது ஊரடங்கு முத் தரவை மீறிச் சென்றதாகக் கமாண்டிங் ஆபீசரால் கருதப் பட்டபடியால், அவரும் அவர் சகாவும் கைது செய்யப்பெற்ற னர். தாம் உத்தியோகஸ்தர்களுக்குப் பால் கொடுக்கக் கடமைப் பட்டிருந்ததாகவும், கொடாவிடில் தாம் குற்றஞ் செய்தவராவ ரென்றும், விளக்கேற்ருமல் பால் கொடுத்தல் முடியாததாயிருந்த தென்றும் அவர் தெரிவித்துக்கொண்டனர். அவ்வேண்டு கோளை உத்தியோகஸ்தர்கள் கவனித்தார்களில்லை. இதனிடை யில் அவருடைய மூத்த சகோதரர் அடுத்த வீட்டிலிருந்து வந்து என்ன சமாசாரமெனக் கேட்கவும், அவரும் கைது செய்யப்

பெற்றனர். அவர்களெல்லோரும் இரண்டுநாள் காப்பிலிருந்தனர். பிறகு அவர்கள் ஜாமீன்மேல் விடுதலை செய்யப்பெற்றனர். ஐந்து நாட்களுக்குப் பிறகு அவர்கள் ஸ்டேஷனுக்கு வரவழைக்கப் பெற்று, ஒவ்வொருவரும் 5 கசையடிகள் அடிக்கப்பெற்று 50 ரூபா அபராதம் விதிக்கப்பெற்றனர்.

லக்ஷ்மண தாஸ் கசையடியைத் தாள மாட்டாரென வைத்திய பரிசோதனையில் சொல்லப்பட்டிருந்தது. எனவே கசையடிக்குப் பதிலாக அவருடைய அபராதத் தொகை இருமடங்காக்கப் பெற்றது.

காப்பிலிருந்த காலையில் வெய்யிலில் நிற்கவேண்டி யிருந்த பொழுது, ஷாம் தாஸ் தண்ணீர் குடிக்க அனுமதியளிக்கப் படவில்லை. எனவே அவர் வியாதியுற்றனர். ஆயினும் அவருக்கு வைத்திய உதவி யொன்றும் கிடைக்கவில்லை. 9 நாட்களுக்குப் பிறகு அவர் விடுவிக்கப்பெற்றனர். "இப்பொழுதும் நான் எதற்காகக் கைது செய்யப் பட்டேனென்பது எனக்குத் தெரியாது" என்று அவர் சொல்லுகிறார்.

அதிகாரிகள் நிஹல் சந்தரின் மருமகனைத் தேடினார்கள். அச்சமயம் அவன் ஸாங்க்லாவி லில்லாதபடியால் மாமனைக் கைது செய்துவிட்டார்கள். மற்றும் பலரைப் போலவே அவர் வெய்யிலில் நிறுத்தப்பெற்றார். அவர் பின்வருமாறு கூறுகிறார்: "நான் கிழப்பருவ முடையவனாதலாலும் கொடிய வெய்யிலினாலும் மும்முறை மூர்ச்சித்துக் கீழே விழுந்துவிட்டேன். யாதொரு காரணமும் கூறப்படாமல் நான் நாலைந்து நாட்களுக்குப் பிறகு விடுதலை செய்யப் பெற்பேன்."

ஒவ்வொரு நாளும் தாங்கள் காக்கவைக்கப் பெற்றிருந்த பொழுது உண்ணவாவது தண்ணீர் குடிக்கவாவது முடியாதிருந்ததென ஜான் மகமத் படோலி கூறுகிறார். அவரும் மேற்கூறிய சாட்சியைப் போலவே வெய்யிலின் கொடுமையால்

வியாதியுற்றனர். அவர் 10 நாட்களுக்குப் பிறகு விடுவிக்கப் பெற்றனர். தாம் கடையைத் திறந்தபொழுது, போலீஸ் சேவ வர்கள் தம் பொருள்களை எடுத்துப் போய்விட்டார்களென அவர் சொல்லுகிறுர். அவர் விலைப்பட்டிகளனுப்பியும் பணமொன்றுங் கொடுக்கப் படவில்லை.

ஸாங்க்லா ஹில் வாசிகளுள் மதிப்புள்ளவர்களும் பேர்பெற்ற வர்களுமான ஸோஹறன்லாலும் இன்னும் இருவரும் ஒன்று சேர்ந்து ஒரு வாக்குமூலங் கொடுத்திருக்கின்றனர். சப் டிவிஷனல் ஆபீசர் ராய் ஸ்ரீராம் 18-ந் தேதி ஸாங்க்லா ஹில்லுக்கு வந்ததாக அவர்கள் சொல்லுகிறுர்கள். அவர் ஜனங்களைப் பார்த்துவிட்டு ஒருவரையுங் கைதுசெய்யாமற் போய்விட்டனர். 19-ந் தேதி கர்னல் ஒப்ரையன் ஸாங்க்லா ஹில்லுக்கு விஜயஞ் செய்தனர். அவரும் ஜனங்களைப் பார்த்துவிட்டு, வேலை நிறுத்த விஷயமாக அவர்களை மன்னிக்க மனங்கொண்டிருந்த தாகத் தெரிவித்தனர். ஏப்ரல் மாதம் 22-ந் தேதியே ஜனங் களிற் சிலர் கைது செய்யப்பெற்றனர். ஸாங்க்லாஹில்லில் ஏற் பட்ட குழப்பங்களைப் பற்றி மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் கூறியது உண்மையா யிருந்திருப்பின், பொறுப்புள்ள அதிகாரிக ளிரு வரும் ஒருவரையும் கைது செய்யாமற் சென்றிருக்கமாட்டார். எனவே நிலைமையை மாற்றிக் கைது செய்தலை வேண்டுமெனக் கைக் கொண்டு, ஸாங்க்லாவைப் பொறுத்த வரையில், தனிமனிதர் செய்த குற்றங்களை ஜனங்கள் ஒன்று சேர்ந்து செய்த குழப்ப மாகக் கொண்டவர், மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் துரைமகனுரே யென்பது இதனுல் நன்கு விளங்கும். ஸாங்க்லாவுக் கருகில் தந்திக் கம்பிகள் அறுக்கப்பெற்றன வென்பது உண்மையே. ஸாங்க்லாவுக்கு அருகிலுள்ள மோமன் ஸ்டேஷன் எரித்துக் கொள்ளை யடிக்கப்பெற்றது. ஆயினும் கம்பிகளை அறுத்ததி லேனும் ஸ்டேஷனைக் கொளுத்தியதிலேனும் ஸாங்க்லா வாசி

கள் நேராகச் சம்பந்தப்பட்டிருந்தார்களெனக் கண்டு பிடிக்கப் பட்டாலன்றி அவர்கள் பொறுப்புடையவர்களாகச் செய்யப் படுதல் கூடாது.

மேற்கூறிய மூன்று சாட்சிகளும் கைது செய்யப் பெற்றவர்களின் பெயர்களையும் மற்ற விவரங்களையும் தெரிவித்திருக்கிறார்கள். ஸாங்க்லாவில் இராணுவச் சட்டம் நிர்வாகஞ் செய்யப்பட்ட விஷயத்தை விளக்கியபோது, கைது செய்யப் பட்ட வரலாற்றையும் கூறியிருக்கிறோம். சாட்சியம் எங்ஙனம் கற்பனை செய்யப்பெற்றதென்னும் விஷயத்தை இன்னொரு முறையும் எடுத்துக் கூறுதல் பொருந்தும். அவ்விஷயமாக இச் சாட்சிகள் கூறுவதாவது :—"மே மாதம் 11-ந் தேதி, போலீசார் கொடுமையாகப் பயமுறுத்தியும் அடித்தும் வெய்யிலில் நிற்க வைத்தும் 29 பேரைப் பிராசிகியூஷன் சாட்சிகளாக எடுத்துக் கொண்டனர். இவர்களுள் பத்து வயதுள்ள சிறுவர்களும், ரெயில்வே உத்தியோகஸ்தர்களுள் 14 பேரும் அடங்கியிருந்தார்கள். பலவந்தமாய் நரசோரஞ் செய்ததாகக் குற்றஞ் சாட்டப் பெற்று $3\frac{1}{2}$ வருஷச் சிறைச்சாலை தண்டனை விதிக்கப்பட்டவரான ப்ரேம் சிங்க் பஜாஜ் என்பவரும் ஒரு சாட்சியாக எடுத்துக் கொள்ளப் பெற்றனர்."

டாக்டர் கரம் சிங்க் நந்தா தாம் மற்றவர்களுடன் அடையாளங் கண்டு கொள்ளப்படும் பொட்டுப் பிரதிதினம் செல்ல வேண்டி யிருந்ததையும், உணவேனும் தண்ணீரேனு மின்றி வெய்யிலில் நிற்கவேண்டி யிருந்ததையும் விளக்கிக் கூறுகிறார். பலர் மயங்கி விழுந்துவிட்டனரென்றும், வெய்யிலில் நின்றதன் பயனாகத் தாம் நாளுக்கு நாள் வியாதியுற்று இரண்டு மாத காலம் பலவீனப் பட்டிருந்தனரென்றும் அவர் சொல்லுகிறார். 12-ந் தேதி தாம் ஸாங்க்லாவிலிருந்ததாக அடையாளங் கண்டு சொல்லப் பெற்றனரென்றும், ஆனால் அன்று சாட்சியங் கொடுப்பதற்

காகத் தாம் குஜரன்வாலா நியாயஸ்தலத்திலிருந்தனரென்றும் அவர் தெரிவிக்கிறார். கைது செய்யப் பெற்ற 180 பேர் 9 நாள் காப்பில் வைக்கப்பெற்றிருந்தன ரென்றும், அவர்கள் விடுதலை செய்யப்பட விரும்பின் 50,000 ரூபா கொடுக்க வேண்டுமெனத் தெரிவிக்கப் பட்டார்களென்றும் அவர் குறிப்பிடுகிறார்.

பிரிட்டிஷ் போர்வீரர்கள் பணங் கொடாமல் கடைகளிலிருந்து சாமான்களை யெடுத்துப் போன வரலாற்றைக் கமிஷன் ஏஜண்ட் குண்டன்லால் தெரிவிக்கின்றனர்.

## 13. மோமன்.

மோமன், ஸாங்க்லாவுக்கு 6 மைல் தூரத்தில் லாகூர் மார்க்கத்திலுள்ள ஒரு ரெயில்வே ஸ்டேஷன். சுற்றப் புறத்துக் கிராமங்களினின்றும் ஒரு கூட்டம் இங்கே சென்று அதைக் கொளுத்திக் கொள்ளையடித்த தென்பதிற் சந்தேகமொன்றுமில்லை. இச்செய்கைக்கு யாதொரு காரணமும் ஏற்படவில்லை. இது வேண்டுமென்றே நாசப்படுத்திய ஒரு செய்கையாகும். ஸ்டேஷனைக் கொளுத்தியது சுற்றுப்புறத்துக் கிராமவாசிகளா பிறராவென்பது நிச்சயமாய்த் தெரியவில்லை. அஃது எங்ஙனமிருப்பினும், பதிலுக்குப் பதில் தண்டனைவிதிக்கும் பொருட்டு அதிகாரிகள் கைக்கொண்டமுறை முற்றிலும் அநாவசியமானது. மோமன் ஏறக்குறைய ஸாங்க்லாவைச் சேர்ந்துள்ளபடியாலும், சுற்றுப்புறத்திலிருந்த ஜனங்களும் ஸாங்க்லா வாசிகள் அனுபவித்த கஷ்டங்களை அனுபவித்தபடியாலும் நாங்கள் மோமனிலிருந்து தனிவாக்குமூலங்கள் பல வாங்காமல் விடுத்துள்ளோம்.

## 14. மணியன்வாலாவும் அதற்கடுத்த ஊர்களும்.

மணியன் வாலா 500-மனிதர்களுக்குக் குறைந்த ஜனத்தொகையுள்ள ஒரு கிராமம். அது தாபன் சிங்க் ரெயில்வே

ஸ்டேஷனுக்கு அருகிலுள்ள கிராமங்களுள் ஒன்ருகும். சுற்றுப் புறத்து ஊர்களிலுள்ள ஜனங்கள் 1919-ம் வருஷம் ஏப்ரல்மாதம் 16-ந் தேதி இந்த ஸ்டேஷனைக் கொளுத்திக் கொள்ளையாடினுர் கள். கிராமவாசிகள் அமிர்தசரஸ் சம்பவங்களைப்பற்றி ஒன்றுக் குப் பத்தாகக் கேள்வியுற்றிருந்ததன் பயனுக அவர்கள் இங் ஙனம் கொள்ளிவைக்கத் துணிந்து செல்லலானுர்கள். சாட்சி களிலொருவர் கூறுகிறபடி, பழிக்குப் பழியாகத் தொடங் கப்பெற்ற வேலை தீயவர்கள் கொள்ளையடிக்குஞ் செயலில் முடிந்தது.

கிராமத்தார்களுள் சிலரது செய்கை கொடியதெனினும், அதிகாரிகள் அவர்களுக்கு விதித்த தண்டனை இரக்க மற்ற தாகவும் ஒழுக்கத்தின் வரம்பு கடந்ததாகவு மிருந்தது. ஏப் ரல் மாதம் 19-ந் தேதி தாபன் சிங்க் ஸ்டேஷனுக்கு ஒரு துருப்பு வண்டி வந்து சேர்ந்தது. மணியன் வாலா புறமாகத் துப்பாக்கிகள் திருப்பப் பெற்றன. போர் வீரர் சிலர் வண் டியினின்று மிறங்கித் துப்பாக்கியாற் சுட்டுக்கொண்டே கிரா மத்திற்குச் சென்றனர். ஒருவர் சுட்டுக் கொல்லப்பட்டார். மற்றவர்கள் காயப்படுத்தப்பட்டார்கள். குறைந்தது ஒருவ ரேனும் வேலைசெய்ய முடியாதவாறு அங்கவீனராயினர். இங்ஙனம் சுட்டதற்கு யாதொரு காரணமு மேற்பட்ட தாகத் தெரியவில்லை. துப்பாக்கிச் சத்தத்தைக் கேட்டவுடன் ஸ்திரீகளெல்லோரும், கர்ப்பிணிகள் உட்பட, தங்கள் வீட்டை விட்டு ஓடலானுர்கள். முப்பது வருஷம் லம்பர்தாராயிருந்த வரும் இக்கிராமத்தைக் கண்டவருமான ஸர்தார் ஆதர் சிங்க் உயிர் தப்பியது அரிதாய் விட்டது. அவர் வீடு சோதனைசெய் யப்பெற்றது ; பெட்டிகள் உடைக்கப்பெற்று, பணமும் பொருள் களும் எடுத்துச் செல்லப்பட்டன. ஆதர்சிங்க் 115 வயதானவ ரெனச் சொல்லப்படுகிறது. அவருக்கு 100 வயதுக்கு அதிகமா

யிற்றென்பது நிச்சயம். அவர் நடமாடச் சக்தியின்றி, எப்பொழுதும் படுக்கையின்மேல் உட்கார்ந்துகொண்டே காலங்கழித்து வருகிறார். அவரும் இந்திரசிங்கும் கைது செய்யப்பெற்றனர். அவர் நடக்க முடியாமலிருந்தபடியால் குதிரையின்மே லேற்றப்பட்டார். அவ்விருவரும் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோகப் பெற்று, ஓர் இருப்பு வண்டியில் அடைக்கப்பெற்றனர். இவ்வண்டி அச்சமயம் ஒரு லாக்-அப் அறையாக உபயோகிக்கப்பட்டது. அங்கே அவர்கள் சில நாட்கள் வைக்கப்பெற்றிருந்தனர். இவ்வண்டி இரும்பினுற் செய்யப்பட் டிருந்தபடியால், அதிலிருந்தவர்கள் ஏப்ரல் மாதத்தின் கொடிய வெய்யிலைத் தாங்குதல் கஷ்ட சாத்தியமா யிருந்தது. இங்ஙனமே மற்றும் பல கிராமத்தினரும் உணவேனும் தண்ணீரேனு மின்றி அதிற் காலங் கழிக்க வேண்டியவரா யிருந்தனர்.

சில நாட்களுக்குப் பிறகு, மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் போர் வீரர் கூட்டமொன்றுடன் அங்கே ஒருமுறைக்கு அதிகமாக வந்தனர். எங்களிடங் கொடுக்கப்பெற்றிருந்த மனந் திடுக்கிடச் செய்யும் சாட்சியத்தை இன்னொருமுறை பரிசீலனை செய்து வரும்பொருட்டு நாங்கள் மாஜி போதகாசிரியர் பாரிஸ்டர் லாப் சிங்க் எம். ஏ. அவர்களை மணியன்வாலாவுக்கு அனுப்பலானோம். அவர் கொண்டுவந்துள்ள வாக்கு மூலங்களை எங்கள் குறிப்பின் பகுதியாகவே வெளியிட் டிருக்கின்றோம். தேஜாசிங்க் என்னுஞ் சாட்சி அவர் முன் கொடுத்த வாக்கு மூலம் வருமாறு:—

"போலீசாரின் உத்தரவின்படி கிராமத்தினருள் பெரும்பாலார் சென்றிருந்த பங்களாவிற்கு நான் இன்னும் புறப்படவில்லை. என்னெதிரிலேயே மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் முன்ஷி நவாப் தீனையும் லேஹ்ந சிங்கையும் நையப்புடைத்தனர். பாய் மூல் சிங்குக்கு விரோதமாகச் சாட்சியங்கொடுக்க வேண்டுமென்றும், அவர் அரசாங்கத்தாருக்கு விரோதமாகப் பேசினரெனச்

சொல்லவேண்டுமென்றும் மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் அவரைக் கேட்டனர். பங்களாவுக்கு அழைத்துச் செல்லுமாறு போலீஸ் சேவகனொருவனிடம் அவரை விட்டு விட்டு, மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் ஸ்திரீகளிருக்குமிடத்தை நோக்கிச் சென்றனர். அவர் அவர்களுடைய முகபடாங்களை விலக்கிவிட்டு அவர்களை வைதனர். அவர் அவர்களை "ஈக்களென்றும் பெண் நாய்களென்றும், பெண் கழுதைகளென்றும்" பலவாறாக இழித்துக் கூறினர். "உங்களுடைய உடைகள் போலீஸ் சேவகர்களால் பரிசோதிக்கப்படும். நீங்கள் உங்கள் புருஷர்மாருடன் தூங்கிக்கொண் டிருந்தபொழுது அவர்கள் எழுந்து செல்லுமாறு ஏன் விட்டீர்கள்?" என்று அவர் ஸ்திரீகளைக் கேட்டனர். அவர் அவர்கள்மேல் எச்சிலும் உமிழ்ந்தனர்.

காலஞ்சென்ற மங்கள ஜாதின் மனைவியான குருதேவியென்னும் மாது மிஸ்டர் லாப் சிங்கின் முன் பின்வருமாறு வாக்குமூலங் கொடுத்திருக்கின்றனர்:—"இராணுவச் சட்ட காலத்தில் ஒருநாள் மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் எங்கள் கிராமத்திலுள்ள 8 வயதுக்கு மேற்பட்ட ஆடவர்களையெல்லாம் கிராமத்திலிருந்து சிலமைல் தூரத்திலுள்ள பங்களாவில் விசாரணை செய்வதற்காக ஒருங்கு சேர்த்தனர். புருஷர்கள் பங்களாவிலிருந்தபொழுது, அவர் எங்கள் கிராமத்திற்குக் குதிரை மீதேறி வந்தனர். பங்களாவிலிருந்த புருஷர்களுக்கு உணவு கொண்டு சென்ற ஸ்திரீகளை அவர் வழியிற் கண்டு அவர்களைத் திருப்பி யழைத்து வந்து விட்டனர். கிராமத்தை யடைந்ததும் அவர் சந்துகளைச் சுற்றி வந்து, கையில் தடியை வைத்துக்கொண்டே எல்லா ஸ்திரீகளையும் வெளியே வருமாறு கட்டளையிட்டனர். அவர் எங்களெல்லோரையும் கிராம டைராவண்டை நிற்க வைத்தனர். ஸ்திரீகள் அவர் முன்னே கைகட்டி நின்றார்கள். அவர் சிலரைத் தடியாலடித்து, எச்சிலுமிழ்ந்து

வாய்க்கு வராத வசை மொழிகளை வழங்கினர். அவர் என்னை இரு முறை அடித்து என் முகத்தில் எச்சிலுமிழ்ந்தனர். அவர் பலவந்தமாய் எல்லா ஸ்திரீகளின் முகங்களையுந் திறந்து, அவர்களுடைய முக படாங்களைத் தம் தடியினுல் அப்பால கற்றி விட்டனர். அவர் அவர்களைப் " பெண் கழுதைகளென்றும், பெண் நாய்களென்றும், ஈக்களென்றும், பன்றிகளென்றும் " அழைத்து " நீங்கள் உங்கள் புருஷர் படுத்திருந்த படுக்கைகளிலேயே படுத்திருந்தீர்கள். குறும்புச் செயல் செய்ய வெளியே செல்லாதபடி நீங்கள் அவர்களை ஏன் தடுக்கவில்லை? இப்பொழுது உங்கள் உடைகள் போலீஸ் சேவகர்களால் பரிசோதிக்கப்படும் " என்று தெரிவித்தனர். அவர் என்னை உதைத்தார். பிறகு அவர் கைகளைக் கால்களில் நுழைத்து வளைத்துக் காதுகளைப் பிடித்துக் கொண்டு குனிந்திருக்குமாறு எங்களுக்குக் கட்டளையிட்டனர்." இவ்வாக்கு மூலம் மணியன்வாலாவிலுள்ள இன்னும் பல ஸ்திரீகளால் ஆதரிக்கப் பெற்றிருக்கிறது.

மூல் சிங் அரசாங்கத்திற்கு விரோதமாகப் பேசினரெனக் கூறுமாறு மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் தம்மை வற்புறுத்தியதாக அரசாங்க பாடசாலை உபாத்தியாயர் நவாப்தீன் சொல்லுகிறுர். பின்னும் அவர் கூறுவதாவது :—" ஆனுல் அஃது உண்மையல்லவென நான் திரும்பவுஞ் சொல்லியபொழுது அவர் என்னைத் தடியாலடிக்கத் தொடங்கினுர். அவர் வெகு நேரம் வலுக்க அடித்துக் கொண்டிருந்தபடியால் அடிகளின் குறிகள் மணிக்கட்டிலும் கணுக்கால்களிலும் வெகு நாள் தெரிந்துகொண்டிருந்தன. நான் அரசாங்க ஊழியனுனபடியால் அரசாங்கத்தார் சார்பாகச் சாட்சியங் கொடுக்க வேண்டுமென அவர் தெரிவித்தார். அவர் சற்று நேரம் வரையில் என்னை அடித்துக்கொண்டிருந்துவிட்டுக் கடைசியில் என்னைப் பங்களாவுக்கு அழைத்துச் செல்லுமாறு போலீஸ் சேவகனெருவனுக்குக் கட்டளை யிட்டனர்."

லேஞ்சிங் என்னு மொருவரும் இங்ஙனமே நடத்தப்பெற்றனர். "நாங்கள் பங்களாவுக்குச் சென்ற பிறகு துரை (சாஹிப்) ஸ்திரீகளிடம் பேசலாயினர்; நாங்கள் சென்றுகொண்டிருந்த பொழுது அவர்கள் கூக்குரல் எங்கள் செவிகளில் விழுந்தது" என்று அவர் சொல்லுகிறார்.

நாங்கள் இச்சம்பங்களைச் சிறிது விளக்கமாகக் கூறியிருக்கிறோம். மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் நடந்து கொண்டதாகத் தெரிய வருகிறபடி நடந்து கொள்ளக் கூடிய ஓர் உத்தியோகஸ்தர் நாகரிகமுள்ள அரசாங்கத்தில் பொறுப்புள்ள பதவியொன்றை வகிக்க யோக்கியதை யுடையவரல்லரென்றும், சக்ரவர்த்திப் பெருமானாது உடையைத் தரித்துக் கொள்ள அருகராக மாட்டாரென்றும் நாங்கள் கருதுகிறோம்.

மணியன்வாலா சம்பவத்தைப் பற்றி எங்களுக்குக் கிடைத்துள்ள ஏனைய வாக்குமூலங்கள் கிராமத்தார்களுள் 80 பேர் எங்ஙனம் கைது செய்யப் பெற்று மிக்க அசௌகரியத்திற்கு உட்படுத்தப் பெற்றன ரென்பதையும், காப்பில் வைக்கப் பெற்றவர்களுக்கு அரசாங்கத்தாரே உணவளிக்கக் கடமைப் பட்டிருந்தும் அவர்களுக்கு அளிக்கப்பெற்ற உணவுக்காகக் கிராமத்தினர் பணங் கொடுக்குமாறு எங்ஙனம் வற்புறுத்தப் பெற்றனரென்பதையும், பொய்ச்சாட்சியங் கொடுக்குமாறு அவர்கள் பயமுறுத்தப் பெற்று எங்ஙனம் பலவாறு நிர்ப்பந்தப் படுத்தப்பட்டார்களென்பதையும், கசையடி எங்ஙனம் கையாளப் பெற்றதென்பதையும், மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் எங்ஙனம் தம் விசாரணைகளை நடத்தினரென்பதையும், வாக்குமூலங்களிற் குறிப்பிடப் பெற்றுள்ள தன்மையவான சாட்சியத்தைக் கொண்டு கிராமத்தினர் எங்ஙனம் இராணுவச் சட்டக் கமிஷன்கள் முன் விசாரணை செய்யப் பெற்றனரென்பதையும், அவர்களுட் சிலர் எங்ஙனம் தீவாந்தர சிட்சை விதிக்கப்பட்டனரென்பதையும் விளக்

இக் கூறுகின்றன. நல்ல வேளையாய் இத்தண்டனைகள் குறைக்கப் பெற்றன. இங்ஙனம் தண்டனை விதிக்கப்பட்டவர்களே அரசர் பெருமானரின் சாசனத்திற் கிணங்க விடுதலை செய்யப் பெற்றார்கள். இக்கிராமத்தினருள் பெரும்பாலோர் முற்றிலும் குற்ற மற்றவர்களானபடியால், இங்ஙனந் தண்டனை விதிக்கப் பட்டவர்களை விடுவித்தது அங்கே நடைபெற்ற அநியாயத்திற்குப் பரிகாரந்தேடிய தாகாது. தண்டனைப் போலீஸ் கூட்டமொன்று அக்கிராமத்தினரிடம் விடப்பெற்றிருந்தது. மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் அக்கிராமத்தினரிடமிருந்து நஷ்ட ஈடும் வசூலிக்க உத்தரவு செய்தார். இந்தத் தொகை பிறகு குறைக்கப் பெற்றது.

மிஸ்டர் சி. எப். ஆண்ட்ரூஸ் காங்கிரஸ் சப்-கமிட்டியாருக்காக மணியன்வாலாவுக்கு நேராகச்சென்று, மேலே விளக்கிக் கூறப்பட்டுள்ள மனிதத் தன்மைக்கு மாறுபட்ட செய்கையை ஆதரிக்கும் வாக்குமூலங்கள் கொண்டுவந்தனரென்பதைக் குறிப்பிடாமல் மணியன்வாலாவில் நடைபெற்ற மிருகத்தனமான செயல்களின் இச்சுருக்கமான ஆராய்ச்சியைமுடித்தல் கூடாததாயிருக்கிறது.

## 15. நவன் பிண்ட்.

இதுவும் ஒரு சிறு கிராமம். இது மணியன்வாலாவைக் காட்டிலுஞ் சிறியது. இது காங்கா டோக்ரான் தாசீலிலுள்ளது. இதுவும் தாபன்சிங்க் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபத்திலிருக்கிறபடியால் ஏறக்குறைய மணியன்வாலாவைப் போலவே நடத்தப்பெற்றது. ஆனல் இக்கிராமத்து ஸ்திரீகள் மணியன்வாலாவிலுள்ள தங்கள் அதிர்ஷ்டவீனமுள்ள சகோதரிகள் வெட்க கரமாக நடத்தப் பெற்றதுபோல் நடத்தப்படவில்லையெனத் தெரியவருகிறது. இக்கிராமத்தினர் சிலர் தாபன்சிங்க்

ஸ்டேஷன் கொளுத்தப்பெற்ற சம்பவத்திற் சம்பந்தப்பட்டிருக்கலாம். ஆயினும் பழிக்குப்பழி தண்டிக்கும் பொருட்டு அக்கிராமத்தின ரெல்லோரும் கொடுமையாகத் தண்டிக்கப்பெற்றது சிறிதும் நியாயமாகாது. ஒரே தன்மையனவான சம்பவங்களைப் பற்றிக் கொடுக்கப்பெற்றுள்ள சுமார் 40 சாட்சியங்களுள் நாங்கள் தெரிந்தெடுத்தவைகள் மணியன்வாலா வாசிகளுக்கு விதிக்கப்பட்ட தண்டனைகளே நவன் பிண்ட் வாசிகளுக்கும் விதிக்கப்பெற்றன வென்பதைக் காட்டுகின்றன.

ஸ்டேஷன் கொளுத்தப்பெற்றதற்கு அடுத்தநாள், சுற்றுப்புறத்துக் கிராமவாசிகள், நவன் பிண்ட் வாசிகள் உட்பட, ரெயில்வே ஸ்டேஷனில் வந்து கூடினார்களெனக் குலால்சிங் தெரிவிக்கிறார். தாசில்தார் ஜில்லா போர்டுக்கு ஓர் அங்கத்தவரைத் தெரிந்தெடுக்க வந்திருந்தனர். கிராமத்தினர்கள் வந்து சேர்ந்தவுடன் டிக்கெட் கொடுக்குமறையில் தீப்பிடித்துக் கொண்டது. தங்கள் ஓட்டுகளைக் கொடுத்தானதும் கிராமத்தினர் திரும்பிச் சென்றனர். தாசீல்தர்ர் ஓட்டர்களிற் பலரைத் தெரிந்துகொண்டிருத்தல்வேண்டும். ஆயினும் அவர்களுள் பலர் ஸ்டேஷன் கொளுத்தப்பெற்ற விஷயமாகக் கைதுசெய்யப்பெற்றனர். தாம் ஸ்டேஷன் கொளுத்தப்பட்ட மூன்றுநாள் ஸ்டேஷனுக்குச் சென்றிருந்தபொழுது, சப் இன்ஸ்பெக்டர் போர்ட்டர்களை யழைத்து, கொளுத்தியவர்களை அடையாளங் கண்டுபிடிக்கச் சொல்லிக் கொண்டிருந்தாரென இச்சாட்சி கூறுகிறார். ஜனங்கள் அதிகமா யிருந்தபடியாலும், இராக்காலமாயிருந்தபடியாலும், தாங்கள் அடையாளங் கண்டுபிடித்தல் முடியாதென அவர்கள் மறுத்துவிட்டார்கள். சப் - இன்ஸ்பெக்டர் அவர்களை மருட்டியதாகத் தெரியவருகிறது. அக்கிராமங்களினின்றும் தாம் ஜனங்களைக் கூட்டுவதாகவும், போர்ட்டர்கள் அவர்களுள் சிலரைக் காட்டிவிட்டாற் போதுமென்றும்,

அவர்களைக் கைது செய்யும் விஷயத்தைத் தாம் பார்த்துக் கொள்வதாகவும் அவர் தெரிவித்தனர். ஸ்திரீகளும் சிறுவர்களும் நீங்கலாகவுள்ள மற்றவர்களெல்லோரும் மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் முன்பாக வரும்படி கட்டளையிடப் பெற்றனர். "சாஹிப் (துரை) வந்தவுடன் நாங்களெல்லோரும் வரிசை வரிசையாக நிறுத்தப்பெற்றோம். போர்ட்டர்களும் ரெயில்வே உத்தியோகஸ்தர்களும் துரையுடன் வந்தார்கள். ரெயில்வே ஸ்டேஷனைக் கொளுத்தியவர்களை வரிசையாக நின்றிருந்த வர்களிலிருந்து தெரிந்தெடுக்குமாறு துரைமகனார் போர்ட்டர்களுக்கு உத்தரவு செய்தனர். போர்ட்டர்களால் தொடப் பெற்றவர்கள் மற்றவர்களிடமிருந்து வேறு பிரிக்கப்பெற்றுக் கைகால்களைக் கட்டப் பெற்றார்கள். கீழ்க் கண்டவாறு அடையாளங்கண்டு பிடிக்கப் பெற்றது ; லம்பர்தாரும் ஜெயில்தாரும் போலீஸ் சப் இன்ஸ்பெக்டரும் தன் முழங்கைக் கருகிலிருக்கப்பெற்ற ஒருவர் ஒரு போர்ட்டரால் அடையாளங்கண்டு பிடிக்கப்பட்டார். மறுபடியும் இன்னொரு போர்ட்டர் அவரையே அங்ஙனம் அடையாளங் கண்டு பிடிக்குமாறு செய்யப்பெற்றான். இங்ஙனம் 28 அல்லது 29 பேர் கைது செய்யப்பெற்றனர். குறிப்பிட்ட தினம் தாம் வீட்டை விட்டு வெளியே செல்லவில்லையெனப் பகவான் தாஸ் தெரிவித்து வேண்டலாயினர். அவர் விண்ணப்பஞ் செய்து கொண்டதற்காக அவரை மரத்திற் கட்டி 12 முறை கசையாலடிக்குமாறு சாஹிப் உத்தரவு செய்தனர். அதன் பிறகு, போர்ட்டர்களால் தெரிந்தெடுக்கப் பெற்றவர்களெல்லோரும் ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கொண்டு செல்லப்பெற்றனர். அங்கே அவர்களுடைய பெயர்கள் பட்வாரியால் கூப்பிடப் பெற்றன. ஈசுவர சிங் அங்கே இருக்கவில்லை. அவருடைய உறவினர் எவரேனும் வந்திருந்தனராவெனத் துரைமகனார் கேட்கலாயினர். அவருடைய மைத்துனனாகிய நான் (குசால் சிங்) அங்கிருந்த

தாகப் பட்வாரி பதிலளித்தனர். உடனே என்னைக் கைது செய்யுமாறு சாஹிப் உத்தரவு செய்துவிட்டனர். நாங்களெல்லோரும் இளைப்பாறும் விடுதிக்குக் கொண்டு போகப் பெற்று ஓரறையில் அடைக்கப் பெற்றோம். வெளிப்புறத்தில் காவலாளர் நிறுத்தப்பட்டனர். நாங்கள் உண்ணவேனும் குடிக்க வேனும் ஒன்றுமின்றி அங்கே இரண்டு நாள் தங்கியிருந்தோம். உணவு கொண்டுவந்த உறவினர்கள் திருப்பி யனுப்பப்பெற்றார்கள். ..............9-ம் நாள் நாங்கள் கனூல் பங்களாவுக்குக் கொண்டு போகப் பெற்றோம். ஈசுவர சிங்கும் அன்று வந்து சேர்ந்தனர். அவர் பிராசிகியூஷன் தரப்பில் சாட்சியங்கொடுத்தால் கைது செய்யப்படமாட்டாரெனப் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் அவரிடந் தெரிவித்தனர். நவன்பிண்ட் மாயாசிங் கம்புவின் குமாரரான தேஜாசிங்கும் அச்சமயம் அங்கிருந்தனர். அவர் பிராசிகியூஷன் சாட்சியாக எடுத்துக் கொள்ளப்பெற்றனர். தட்டார் ஸாது சிங்கும், ஜெயில்தார் ஜ்வாலா சிங்கும் ஜ்வாலா சிங்கின் குமாரர் பக்தா சிங்கும் கைதுசெய்யப் பெற்றனர். அவர்கள் பிராசிகியூஷன் தரப்பில் சாட்சியங்கொடுப்பதாக வாக்களித்ததன்மேல் சப் இன்ஸ்பெக்டர் அவர்களை விடுதலை செய்துவிட்டனர். நான் பிராசிகியூஷன் சாட்சியாக எடுத்துக்கொள்ளப் பட்டவுடனே விடுதலை செய்யப்பெற்றேன். ஆண்மக்களும் பெண்மக்களுமான ஒவ்வொருவரும் தாசீல்தார் முன்னிலையில் உட்காரவைக்கப்பெற்றனர். கைது செய்யப்பெற்ற ஒவ்வொருவரும் கூப்பிட்டுத் தண்டனை விதிக்கப்பெற்றனர். யாதொரு சாட்சியமும் வாங்கப்படவில்லை. எவரேனும் ஏதாவது சொன்னால் அவர் அடிக்கப்பெற்றனர்.''

மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் நடத்திய விசாரணைகளெனச் சொல்லப்படுபவைகளையும், பிராசிகியூஷன் தரப்புச் சாட்சியம் கற்பனை செய்யப் பெற்ற தன்மையையும் நாம் இங்கே தெளிவாகக் காண்கிறோம். பஞ்சாபிலுள்ள கலாசாலைகளில் மிகப் பெரி

தானவைகளுள் ஒன்றுன அமிர்தசரஸ் கால்ஸா கலாசாலையின் தலைவர் மிஸ்டர் வாதென் நவன் பிண்டில் நீதி எங்ஙனம் தவருனவழியிற் செலுத்தப்பெற்ற தென்பதைப் பற்றிக் குறித்துக் கொடுத்திருக்கிருர். அவர் கூறியுள்ளதை அங்ஙனமே அடியிற் குறிப்பிடுகின்றேம் :—

" குஜரான் வாலா ஜில்லா காங்காடோக்ரான் தாசீல் 78 வது சாக் நவன் பிண்டிலுள்ள ஜீவன் சிங்கின் குமாரர்களான பகவான் சிங்க் மகார்சிங்க் என்பவர்களுடைய வழக்கு:—

இவ்விருவரும் 1919-ம் வருஷம் மே மாதம் 9-ந் தேதி இந்தியன் பினல் கோட் 6-வது ஆர்ட்டிகிலின் (a) (b) (c) பிரிவுகளின்படி கைது செய்யப்பெற்றனர். அவர்கள் தாமன்சிங்க் ரெயில்வே ஸ்டேஷன் கொளுத்தப் பெற்ற சம்பவத்திற் சம்பந்தப்பட்டிருந்தார் களென்பதே அவர்கள் மேற் சாட்டப்பெற்ற குற்றமாகும். அவர்கள் ஒவ்வொருவருக்கும் இரண்டு வருடக் கடுங்காவல் தண்டனையும் 200 ரூபா அபராதமும் விதிக்கப் பெற்றன.

இவர்கள் கீழ்க்கண்ட காரணங்களை முன்னிட்டு இப்பொழுது அப்பீல் செய்திருக்கிருர்கள் :—

(a) அவர்கள் அன்றையதினம் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றிருக்கவில்லை. தாங்கள் இல்லாததை ருஜூப்படுத்துமாறு பல சாட்சிகளைக் கொண்டுவருவதாகத் தெரிவித்திருந்தும், நியாயஸ்தலத்தார் சாட்சிகளைக் கூப்பிட்டாரில்லை.

(b) தங்களை யறியாத ரெயில்வே கூலியாட்களாலேயே அவர்கள் அடையாளங் கண்டு பிடிக்கப்பட்டார்கள். இவ்விரு சகோதரர்களையும் தெரிந் தெடுக்குமாறு அவர்களுடைய விரோதிகள் சிலர், கூலியாட்களுக்கு இலஞ்சங் கொடுத்ததாகவுஞ் சொல்லப்படுகிறது.

(c) ஜெயில்தார் ஜ்வாலா சிங்கும் லம்பர்தார் ஜீவன்சிங்கும் தங்களுடைய விரோதிகளென அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். அவர்களுக்கும் ஜீவன்சிங்க் குடும்பத்தாருக்கும் லம்பர்தார் உத்தியோகத்தைப் பற்றி நெடுநாட் பகை இருந்து வந்திருக்கிறது. இச்சண்டை 5-வருஷ காலம் நடந்து வந்திருக்கிறது. இதைப்பற்றி எளிதில் சாட்சியங் கொண்டு வரப்படலாம். அவர்கள் அங்ஙனம் கொண்டு வருவதாகவும் தெரிவித்தார்கள்; ஆனால் சாட்சிகள் கூப்பிடப்படவில்லை.

(d) இவ்வாக்கு மூலம் குற்றவாளிகளின் கடைசிச் சகோதரனை ஜகத்சிங்க் என்னும் 18 வயதுள்ள பையனால் என்னிடங் கொடுக்கப் பெற்றது. இவனை நான் நன்கறிவேன். இவன் பள்ளிக்கூடத்திலும் கலாசாலையிலும் நான்கு வருஷம் என் மாணவனாயிருந்திருக்கிறான். ஜகத் சிங்கின் இராஜபக்தியில் எனக்கு யாதொரு சந்தேகமுமில்லை. அவனுடைய எண்ணம் எத்தகைய தென்பதை நானறிவேன். ஜகத் சிங்க் அரசியல் விஷயத்தில் தலையிடுபவனென்றும் பிரிட்டிஷாருக்கு விரோதமான மனப்போக்குள்ளவனென்றுங் கூறுதல் நகைப்புக் கிடந்தருவதொன்றாம். இவனை ஆதரிக்கும் சகோதரர்கள் இவனை இங்கே அனுப்பியதும் அவர்களுடைய இராஜபக்தியைக் குறிப்பிடுவதாகும். இராஜபக்திமிக்க சீக்கியரே சர்க்காரின் பிரத்தியேக ஆதரவைப்பெற்றிருப்பதாகக் கருதப்படும் இக்கலாசாலைக்குத் தங்கள் பிள்ளைகளை வெகு தூரத்தினின்றும் அனுப்புகின்றனர். நான் ரெயில்வே கூலியாட்களை விசாரித்துப் பார்த்தேன். அவர்களுள் பலர் குற்றஞ் சாட்டப் பெற்றுள்ள இரு சகோதரர்களையுமறிவர். சகோதரர்கள் முற்றிலும் குற்ற மற்றவர்களென்றும், அவர்களுடைய விரோதிகளினு

லேயே இவ்வழக்கு ஜோடிக்கப்பெற்றதென்றும் கூலியாட்கள் ஒரே மனதாய் அபிப்பிராயப் படுகிறார்கள்.

(e) இச்சகோதரர்களுக்கு விரோதமாகக் கொடுக்கப் பெற்றுள்ள சாட்சியம் தவறானதென்பதைக் காட்டுவது யாதெனில், மூன்றாவது சகோதரரான மங்கள சிங்கும் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்ததாக அதே கூலியாட்களால் அடையாளங் கண்டுபிடிக்கப் பட்டதேயாம். தாபனிலிருந்ததாகச் சொல்லப்பட்ட அன்றையதினம் அவர் கால்ஸா கல்லூரியில் ஜகத்சிங்குடன் இருந்திருக்கிறார். கலாசாலையின் உதவித் தலைவரும் போதகாசிரியர் சிலரு முட்பட நம்பத்தக்க சாட்சிகள் அவரை அங்கே பார்த்திருக்கிறார்கள்.

ஜகத்சிங்குக்கு இராஜா பெறுமாறு அவர் (மங்களசிங்க்) என்னைப் பார்க்க வந்திருந்தார். இதனை நான் டெபுடி கமிஷனருக்கு எழுதி யறிவித்ததன்மேல் அவர் மங்கள சிங்கை விடுதலைசெய்து விட்டனர். ரெயில்வே ஸ்டேஷனில் இல்லையென ரூபிக்கப் பெற்ற மங்கள சிங்க், பகவான்சிங்க், மகார் சிங்க் ஆகிய இருவருடைய சகோதரரென்பதை நியாயஸ்தலத்தார் உணர்ந்திருப்பின், அவர்கள் தவறாக அடையாளங் கண்டுபிடிக்கப் பெற்றனரெனக் கருதியிருப்பரென்று நான் அபிப்பிராயப்படுகிறேன். ஏனெனில் பகவான்சிங்க் மகார்சிங்க் இருவரையும் அடையாளங் கண்டு சொல்லிய கூலியாட்களே மங்களசிங்கையும் அடையாளங்கண்டு சொன்னார்கள்.

(ஒப்பம்) ஜீ. ஏ. வாதேன்,

தலைவர்,

கால்ஸா கலாசாலை, அமிர்தசரஸ்.

தாவா மனிதர்கள் மிஸ்டர் வாதெனது கடிதம் காட்டப் பெற்றதும் விடுதலை செய்யப்பட்டார்கள். ஆனால் மிஸ்டர்

வாடெதன் வகித்துள்ள நிலைமையிலுள்ளவரைத் தெரிந்துகொண்டுள்ள ஜகத் சிங் போன்ற நடு மனிதரொருவர் ஒவ்வொருவருக்கும் கிடைத்தல் அரிதாமன்றோ? பிஷன் சிங் விசாரணையைப் பற்றி விரிவாகக் கூறியுள்ளார். ரெயில்வே உத்தியோகஸ்தரொருவர் தம்மால் அடையாளங்கண்டு பிடிக்க முடியவில்லையெனச் சொல்லிய பொழுது, லம்பர்தாரும் ஜெயில்தாரும் அவரிடம் இச்சகம் பேசினரென்றும், நவன்பிண்டை விட்டுச் சென்றிருந்த ஒருவர் அடையாளங்கண்டு பிடிக்கப் பெற்றுக் குற்றஞ் சாட்டப்பட்டன ரென்றும் அவர் கூறுகிறார்.

ஒருகைதிக் கூட்டத்தார் விசாரணை செய்யப் பெற்ற பொழுது, மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் மங்கள சிங் இருந்தனராவென ஸுரேன் சிங்கைக் கேட்கலாயினர். அவர் கூறுவதாவது:—"அவர் அங்கே இல்லையென நான் சொன்னேன். ஜெயில்தார் ஜ்வாலா சிங், ஜீவன் சிங் முதலிய வேறு சிலர் அவர் கலகக்காரர்களுள் கலந்திருந்தனரெனச் சொல்லலாயினர். இதன்மேல் மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் எனக்கு உடனே மூன்று மாதச் சிறைச்சாலை தண்டனை விதித்து விட்டனர். சம்பவம் நடந்தவன்று மங்கள சிங் அமிர்தசரஸி லிருந்ததாகக் கால்ஸா கலாசாலைத் தலைவரின் கடிதத்தினால் பிறகு ரூபிக்கப் பெற்றபடியால் நான் விடுதலை செய்யப்பெற்றேன்." ஸுரேன் சிங் பொய்ச் சாட்சியங் கூறியதாகக் குற்றஞ் சாட்டப்பெற்றுத் தண்டனை விதிக்கப்பெற்றனரென நாங்கள் கருதுகின்றோம். அவர் ஒரு லம்பர்தார். மிஸ்டர் வாடெதனுடைய கடிதத்தைக் கொண்டு அவர் தம் முழுச் சிறைச்சாலை தண்டனையினின்றுந் தப்பித்துக்கொண்டிருத்தல் கூடும். ஆயினும் தாம் குற்றமற்றவ ரென்பதை அவர் ரூஜுப்படுத்தியிருந்தும், அவர் வேலையினின்றும் நீக்கப்பெற்றது இன்னும் மாற்றப்படாமலேயிருக்கிறது.

ஸோஹறன் சிங்கும் அதே காரணத்தை முன்னிட்டுத் தண்டனை விதிக்கப் பெற்று, அதே வெளிப்பாட்டின் மேலேயே விடுதலை செய்யப் பெற்றனர். அவரும் ஒரு லம்பர்தார்; ஸுரேன் சிங்கைப்போல் அவரும் வேலையினின்றும் நீக்கப் பெற்றார்.

குசாலின் மனைவியான நந்தி தம் மகனைப் பற்றிப் பின்வருமாறு சொல்லியிருக்கின்றனர்: "டிபன்ஸ் கேட்கப்படவேயில்லை. ரெயில்வே கூலியாட்களால் தெரிவிக்கப்பட்டவர்கள் தண்டிக்கப் பெற்றார்கள். தம் சொந்த வாக்கு மூலத்தைக் கொடுக்குமாறும் ஒருவருங் கேட்டுக் கொள்ளப்படவில்லை. அவர்கள் கிராமத்தாரொருவன் இம்முறையைக் கண்டித்தான். அவன் ஷிஷாம் மரத்திற் கட்டி நன்றாயடிக்கப் பெற்றான்."

மற்ற விடங்களிற் செய்ததைப் போலவே உத்தியோகஸ்தர்கள் ஜனங்களுடைய பொருள்களைத் தாராளமாக எடுத்துக் கொண்டார்கள். ஹீராசிங்கிடமிருந்து மா, பருப்பு, சர்க்கரை, நெய், பால் முதலிய பண்டங்கள் 108 ரூபா மதிப்புக்கு மேல் எடுத்துக் கொள்ளப்பட்டன. கிராமத்தார் இந்தத் தொகையை வசூலித்து இவ்வெளியவருக்குக் கொடுத்தனர்.

தாம் மிஸ்டர் பென்னி, மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் ஆகிய இருவருடைய பரிவாரங்களுக்கும் பிறருக்கும் 400 ரூபா மதிப்புள்ள உணவுப் பொருள் கொடுத்ததாகக் கிஷன் சந்த் சொல்லுகிறார். கிராமத்தார் இத்தொகையை வசூலித்துக் கொடுத்தனர்.

கான்சிங்கின் மனைவியான ஜ்வாலி என்னும் மாது, 70 வயதுள்ள தம் கணவன் பலவீனராயிருந்தும் கைது செய்யப் பெற்றனரெனத் தெரிவிக்கின்றனர். அம்மாது பின்னுங் கூறுவதாவது: "வேலை பார்த்துக்கொண்டிருந்த போலீசார் பணங் கொடாவிடில் எங்கள் உறவினர்களுக்கு உணவளிக்குமாறு எங்களுக்கு அனுமதியளிக்கமாட்டார். நான் மற்றவர்கள் கொடுத்

தது போலவே பிரதிதினமும் நபர் ஒன்றுக்கு ஒரு ரூபா வீதம் கொடுக்கவேண்டியிருந்தது."

நந்த் சிங்க் பின்வருமாறு கூறுகிறார்: "10 வயதுள்ளவரும் அதற்குமேற்பட்ட வருமான கிராமத்திலுள்ள புருஷர்களெல்லோரும் வரவழைக்கப் பெற்றனர். காலை முதல் மாலை வரையில் அவர்கள் வெய்யிலில் வரிசையாக உட்கார வைக்கப் பட்டார்கள். மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் அங்கே யிருந்தார். என் சகோதரர் பகவான் சிங்க் கைகட்டி நின்று, தாம் குற்றமற்றவரென்றும், யாதொரு தீங்குஞ் செய்யவில்லை யென்றுந் தெரிவித்தார். இதன்மேல் மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் கோபங்கொண்டு அவரை அடிக்குமாறு உத்தரவு செய்தனர். ஒரு கயிறு வேண்டுமெனக் கேட்கப் பெற்றதன் மேல் சௌகிதார் ஸாத்ரு அதனைக் கொண்டு வந்து கொடுத்தனர். உடனே பகவான் சிங்க் கட்டப்பெற்றார். அவரைப் பிரம்பாலடிக்குமாறு ஸாத்ரு கட்டளையிடப் பெறவும், அவர் 12 அடி அடித்தனர். மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் அவரருகில் நின்றுகொண்டு பகவான் சிங்க் இறந்தாலும் தமக்குக் கவலை யில்லையெனத் தெரிவித்தனர். பகவான் சிங்க் மூர்ச்சித்துவிட்டனர். அவர் வாயில் தண்ணீர் ஊற்றப்பெற்றதன் மேல் மூர்ச்சை தெளிந்தனர். பிறகு சப் இன்ஸ்பெக்டர் அவரைக்கொண்டு போய்க் கைது செய்து விட்டனர். இது ஜனங்களெல்லோருக்கும் பயத்தை உண்டு பண்ணிய படியால் ஒருவரும் பேசத் துணிந்தாரில்லை. எல்லோரைச் சுற்றிலும் போர்வீரர்கள் துப்பாக்கிகளை யேந்திய வண்ணம் நின்று கொண்டிருந்தார்கள். எவரேனும் பேசினால் அவரும் அங்ஙனமே நடத்தப் பெறுவரென மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் கூறினார்."

இக்கிராமத்திற்கு 10,000 ரூபா அபராதம் விதிக்கப்பட்டது. சென்ற ராபியில் மூன்றிலொருபங்கு வசூலிக்கப்பெற்றது.

## 16. சுஹர்கானு.

இது ஒரு முக்கியமான மண்டி அல்லது வியாபார ஸ்தலம். சுற்றுப்புறத்திலுள்ள கிராம வாசிகள் தங்கள் சாமான்களை யெடுத்துக்கொண்டு நூற்றுக் கணக்காய் வந்து கூடுவார்கள். சுஹர்கானு கிராமம் மண்டிக்கு ஒன்றரைமைல் தூரத்திலுள்ளது. சுஹர்கானு ஸ்டேஷன் மண்டியினருகிலிருக்கின்றது.

ஏப்ரல்மீ 12-ந்தேதி வேலை நிறுத்தம் கைக்கொள்ளப் பெற்றது. அதனை அறிவிக்குமாறு அதற்கு முதல்நாள் ஒரு பொதுக் கூட்டங் கூட்டப்பெற்றது. முனிசிபல் கவுன்சிலர்கள் உட்பட எல்லோரும் அதற்குச் சென்றிருந்தனர். 14-ந் தேதி வரையில் யாதொரு சம்பவமும் நடைபெறவில்லை. ஆனால் 15-ந் தேதிக்குள்ளாக அமிர்தசரஸ், லாகூர் சம்பவங்கள் எல்லோருக்குந் தெரிந்துவிட்டன. ஜனங்கள் அவைகளைக் கேட்டு மிக்க கொதிப்புறலானார்கள். மண்டியில் வசிப்பவர்களுள் சிலரும், கிராமங்களிலிருந்து மண்டிக்கு வந்திருந்தவர்களும் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சென்று, பட்டப்பகலில் ரெயில்வே காங்கிடமிருந்து ஆயுதங்களைக் கைக்கொண்டு, இருப்புப் பாதையை நாசப்படுத்தி ஸ்டேஷனைக் கொளுத்திவிட்டார்கள்.

இதன் மேல் போர்வீரர்கள் மெஷீன் பீரங்கிகளோடும் ஆயுத வண்டியோடும் வந்து சேர்ந்தார்கள். போர்வீரர்கள் மனம் போன போக்காகச் சுடலானார்கள். இங்ஙனம் சுட்டது நியாயமென ராய் சாஹிப் ஸ்ரீராம் ஸத் ஹண்டர் கமிட்டியார் முன் கொடுத்துள்ள சாட்சியத்திற் கூறியிருக்கிறார். ஆனால் எங்களிடமுள்ள சாட்சியமெல்லாம் அவர் வாக்குமூலத்திற்கு மாறாகவிருக்கிறது. அவர் தம் வாய்மொழியைக் கொண்டே குற்றங் காணப்பெற்றிருக்கின்றனர். இராணுவச் சட்டம் அறிவிக்கப் பட்டதற்கு முன்னரே சுடப்பட்டதென்பதும் ஞாபகத்தில் வைத்

துக்கொள்ளப்படல் வேண்டும். ஸ்ரீராம் ஸத்.பல ¦வருஷ அனு பவமுள்ள சப்-டிவிஷனல் ஆபிசர். அவர் இந்த ஜில்லாவில் 1918-ம் வருஷம் முதல் உத்தியோகஞ் செய்திருக்கிறார். எனவே அவர் ஜனங்களை அறிந்துகொண்டிருக்கிறார். சுடப் பெற்றதற்கு அவர் தம்மையே முக்கியமாகப் பொறுப்புள்ளவ ராக்கிக்கொண் டிருக்கிறார். பண்டித ஜகத் நாராயணர் அவரைக் குறுக்கு விசாரணை செய்து மடக்கியபொழுது, அவர் கிரிமினல் புரொசீஜர் கோடிலிருந்தே தம் அதிகாரத்தைப் பெற்றதாகக் கூறி னார். தாம் எதைக்கொண்டு சுடத் தீர்மானித்தனரென ஸர் சிமன் லாலினால் வினவப்பெற்றபொழுது அவர் "கூட்டம் முன்னரே அங்கே கூடியிருந்ததாக நாங்கள் தெரிந்துகொண் டிருந்தோம். அதைப்பற்றி நம்பக்கூடிய செய்தி முன்னரே கிடைத்தது" என்று சொன்னார். பின்னும் அவர் சொல்வதாவது:—"சுஹர் கானா வாசிகள் கொள்ளையடிக்கக் கடைத்தெருவிற்குச் சென்று கொண்டிருந்தன ரென்பதைச் செவியேற்கு முன்னரே" "எனவே வேறொரு விசாரணையுமின்றி நீங்கள் சுடத் தொடங்கினீர்களோ?" என்று ஸர் சிமன்லால் கேட்டனர். அவர் "ஆம், நாங்கள் சுடத் தீர்மானித்தோம்" என்று பதி லளித்தனர். "பயமுறுத்த வேண்டுமென்பது உமது நோக்கமா?" என்று அவர் வினவப்பெற்றனர். அவர் பின் வருமாறு அதற்கு மறுமொழி கூறினர்: "நல்லது, தேவையாயின். தேவையிருந்த தென்பதை நாங்கள் கண்டு கொண்டோம்." "சுட்ட பிறகு நீங்கள் ஸ்டேஷனுக்குச் சென்றீர்களா?" என்றுஸர் சிமன் லால் கேட்டதற்கு அவர் "ஆம்" என்று பதிலளித்தனர். ராய் சாஹிப் பிறகு ஜனங்களின் நடமாட்டங்களை விளக்கிக் கூறினார்.

வினா:—நடமாடுதல் என்பதற்கு நீவிர் யாது பொருள் கொள்கின்றீர்? அவர்கள் குறும்புத் தனமான செய்கை யொன் றுஞ் செய்துகொண் டிருக்கவில்லையே?

விடை :—இல்லை, அச்சமயம் செய்யவில்லை. ஜனங்கள் வெளியே வந்துகொண்டும் கிராமத்திற்குட் சென்றுகொண்டு மிருந்தார்கள்.

வினு :—கிராமத்திற்கு வெளியிலும் உள்ளும் போய்க் கொண்டும் வந்து கொண்டு மிருந்ததில் அவர்களுடைய நோக்கம் என்னவென்பது உமக்குத் தெரியாதோ ?

விடை :—நல்லது, ஆயுதவண்டித் தொடரைத் தாக்க வேண்டுமென்பதே அவர்களுடைய நோக்கம்.

வினு :—ஆயுத வண்டித் தொடரைத் தாக்குவதற்காக அவர்கள் கூடிக்கொண் டிருந்தார்களென்பதைத் தூரத்திலிருந்து நீவிர் எப்படி அறிந்து கொண்டீர் ?

விடை :—துரதிர்ஷ்ட வசமாய், என் மூளையிலுள்ள விஷயங்களை நான் பிரகாசிக்கச் செய்யக் கூடாதவனு யிருக்கிறேன்.

வினு :—லாலா, என்னை மன்னித்தல் வேண்டும். உமக்கு அப்பொழுது எந்த ஆதாரங்கள் கிடைத்தனவென்பதைப் பற்றியும், நீவிர் அப்பொழுது எதைப் பார்த்தீரென்பதைப் பற்றியும் நாம் விசாரணை செய்து கொண்டிருக்கிறோம்.

விடை :—அவர்கள் வந்து கொண்டும் போய்க்கொண்டு மிருந்தார்களென நான் சொன்னேன். அவர்கள் ஒன்று சேர்ந்து கொண்டிருந்தார்களென நான் நினைக்கிறேன்.

வினு :—என்ன நோக்கத்துடனென்பதை உம்மாற் சொல்ல முடியாதா ?

விடை :—அவர்கள் ஏதோ கெட்ட நோக்கத்துடன் கூடிக் கொண்டிருந்தார்கள்.

வினு :—ஜனங்களுள் சிலர் கிராமத்திற்குள்ளும் மற்றுஞ் சிலர் கிராமத்திற்கு வெளியிலும் சென்று கொண்டிருந்ததை நீவிர் பார்த்ததிலிருந்து அவர்கள் தீய நோக்கத்துடன் கூடிக் கொண்டிருந்ததாக நீவிர் கருதினீரா ?

விடை :—அவர்கள் எங்களுடைய ஆயுத வண்டித் தொடரைப் பார்த்தும் ஒளித்துக் கொள்ளவில்லை. இதனால் என்ன நினைத்தல் வேண்டும்?

ராய் சாஹிப் இச்சாட்சியத்தை டிசம்பர் மாதம் 17-ந் தேதி கொடுத்திருக்கிறார். எங்களுக்காகச் சேகரிக்கப் பெற்றுள்ள சாட்சியம் அதற்கு வெகு நாள் முன்னரே வாங்கப் பெற்று, டிசம்பர் மாதம் 6-ந் தேதி எங்களுள் ஒருவரால் பரிசோதித்துப் பார்க்கப் பெற்றது. கூட்டமொன்றுங் கூடவில்லை யென்றும், ராய் சாஹிப் பார்த்த நடமாட்டம் அவர் கருதியதற்கு நேர் விரோதமான தென்றும் எங்கள் சாட்சியங் காட்டுகின்றது. ஜனங்கள் வெளியே சென்று பயத்தினால் ஒளித்துக்கொண்டிருந்தார்கள்.

தாம் பேசுவது இன்னதென்பதை அறிந்து கொள்பவரும் எல்லாவற்றையும் நன்கறிந்தவராகக் காணப் படுபவருமான துலா சிங்க் என்னும் ஜாது ஒருவர் பின்வருமாறு சொல்லுகிறார்: "பயத்தினால் கிராமத்தை விட்டுச் சென்று கொண்டிருந்தவர்களை அவர்கள் மெஷீன் பீரங்கியைக் கொண்டு சுட்டார்கள். மெஷீன் பீரங்கியின் நெருப்பினால் காயமுற்று மூவர் கீழே விழுந்ததை நான் கண்டேன். கமிட்டி அங்கத்தினர்களான மௌலா பக்ஷும் கர்த்தர் சிங்கும் வண்டியிலிருந்தனர்."

கணபதி மல் பின்வருமாறு கூறுகிறார் :—"மெஷீன் பீரங்கிகளைக் கொண்டு வெகு நேரம் சுடப்பட்டது. ஜனங்கள் இங்குமங்கும் ஓடிக்கொண்டே இருந்தார்கள்..............ஏப்ரல் மாதம் 17-ந் தேதி இதே முறை கைக்கொள்ளப் பெற்றது. பிரிட்டிஷ் போர்வீரர்கள் மெஷீன் பீரங்கிகளுடன் வந்தார்கள். அவர்கள் ஒரு வண்டித் தொடரினின்று மிறங்கி, இங்குமங்கும் ஓடிக் கொண்டிருந்த ஜனங்களைச் சுட்டார்கள்."

இராணுவச் சட்டத்திற்கு முன் சுட்டது நியாயமல்லவென நாங்கள் சொல்லமாட்டோமெனினும், சப்-டிவிஷனல் ஆபிசரால் குறிப்பிடப் பெற்றுள்ள துப்பாக்கிப் பிரயோகம் அவசரமானதும், அகாலத்திற் கைக்கொள்ளப் பெற்றதும், யோசனையற்றதும், கலவரத்தினுலோ அதிக ஊக்கத்தினுலோ கைக்கொள்ளப் பெற்றதுமாமென நாங்கள் கருதுகிறோம். பயமுறுத்துவது உத்தியோகஸ்தர்களின் வேலையன்று. அது பலத்தின் அறிகுறியாயிராமல் பல வீனத்தின் அறிகுறியாகவே இருக்கின்றது; நியாயத்தை வெளிப்படுத்துவதா யிராமல் அநியாயத்தை நிலைநாட்டுவதா யிருக்கின்றது. குற்றமுள்ள மனமே பயமுறுத்தலைக் கைக்கொள்ளா நிற்கும். கொளுத்தப் பெற்றதும், கொள்ளையடிக்கப் பெற்றதும், தந்திக் கம்பி யறுக்கப்பெற்றதும் கொடியவைகளென்பதையும், அநாவசியமானவை களென்பதையும், வெட்ககரமானவை களென்பதையும், குற்றவாளிகள் தக்க தண்டனை விதிக்கப்பட வேண்டுமென்பதையும் நாங்கள் ஒத்துக்கொள்ளுகிறோம். ஆயினும் ஜனங்கள் செய்த எந்தச் செய்கையும் மனம் போனவாறு துப்பாக்கியாற் சுட்டுப் பலருக்குக் காயமுண்டாக்கிச் சிலர் உயிரை மாய்த்ததையும், ஜனங்களைப் பயமுறுத்தும் பொருட்டு அநாகரிக முறைகளைக் கைக்கொண்டிருந்ததையும் நியாயமானவைகளாகச் செய்யாது.

மற்ற முறைகள் ஏறக்குறைய எல்லா விடங்களிலும் ஒரே விதமாக விருந்தன. போர்வீரர்கள் கொள்ளை யடித்த விஷயமாகச் சுஹர் கானுவிற் கிடைத்துள்ள சாட்சியம் மற்ற விடங்களிற் கிடைத்த சாட்சியத்தைக் காட்டிலும் பலத்ததாகவும் அளவிற் பெரியதாகவு மிருக்கிறது. போர்வீரர்களுக்காக ஆடு மாடுகள் பல வந்தமாகப் பிடித்துக் கறக்கப்பட்டன. சொந்தக்காரர்களில்லாத போதும், வெள்ளாடுகள், பாத்திரங்கள், தின்பண்டங்கள் முதலியவை எடுத்துக்கொண்டு போகப்பட்டன.

இராணுவச் சட்டகாலத்தில் ஜனங்களுக்கு எவ்வளவு பொருள் நஷ்டமுண்டாயிற்றென்பதை மதிப்பிட்டுக் கூறுதல் கஷ்ட சாத்தியமாகும்.

ஸுகாசிங்க் பின்வருமாறு சொல்லுகிறார்: "போலீசார் என்னைப் பயமுறுத்தி ஒரு படுக்கை வாங்கிச் சென்றனர். அஃது இன்னும் திருப்பி யளிக்கப்படவில்லை."

அங்கிருந்த சிப்பாய்கள் தங்கள் குதிரைகளின் உபயோகத்திற்காகத் தம்முடைய மாகூல்களைப் பலவந்தத்தின் மேல் கைப்பற்றிக் கொண்டார்களென ஷாமன் தெரிவிக்கின்றனர்.

மோகன் லால் கூறுவதாவது: "மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் இங்கு வந்தபொழுது, 45 ரூபா மதிப்புள்ள சாமான்கள் எங்கள் கடையிலிருந்து கொண்டுபோகப் பட்டன. ஆனால் இதுகாறும் அந்தப் பணம் கிடைக்கவில்லை."

ஹவலி ராம் சொல்வதாவது: "என்னுடைய கடையும் வீடும் 10 அல்லது 15 நாட்கள் பூட்டப் பெற்றிருந்தன.......... மண்டிக் கடைகளிற் பல சோதனை செய்யப்பெற்றன. பிரிட்டிஷ் போர்வீரர்கள் மண்டியில் உலாவி வந்து ஜனங்களைக் கொடுமையாய் நடத்தினார்கள். அவர்கள் கடைகளுள் பிரவேசித்து, தங்களுக்கு வேண்டிய எந்தப் பொருளையும் எடுத்துச் செல்வது வழக்கம்......................போர்வீரர்கள் என்னிடம் வாங்கிய பொருள்களின் விலையாக எனக் கொன்றும் கொடுத்தார்களில்லை."

கணபதி மல் கூறுவதாவது: "அவர்கள் தங்கள் உணவுக்காகும்படி பார்த்ததையெல்லாம் எடுத்துப்போய்விட்டார்கள்: பெட்டைக் கோழிகள்,முட்டைகள்,வெள்ளாடுகள், பால் முதலிய வெல்லாம் ஜனங்களிடமிருந்து பலவந்தமாய்ப் பிடுங்கப்பெற்றன. போலீசார் ஜனங்களிடம் வந்து படுக்கைகள் கேட்டனர். ஜனங்கள் அவர்களிடம் பயந்திருந்தபடியால் அங்ஙனமே கொடுக்க வேண்

டியவர்களானுர்கள். இதுகாறும் அந்தப் படுக்கைகள் திருப்பி யளிக்கப் பெறவில்லை. போலீசார் என்னிடமிருந்து பல வந்தமாக எருமைப் பால் வாங்கிச் சென்றனர். என் குழந்தைகளுக்குச் சிறிதளவு பாலும் மீதியாகவில்லை. நான் ஒரு படுக்கை கொடுத்தேன். அஃது இன்னும் திருப்பி யளிக்கப்படவில்லை ...............இராணுவச் சட்ட நாட்களில் இராணுவ உணவுச் செலவிற்காக நான் மண்டிப்புறத்திலிருந்து 25 ரூபாயும் கிராமத்தின் புறத்திலிருந்து 10 ரூபாயும் கொடுக்க வேண்டியிருந்தது."

போர்வீரர்களுக்கு உணவுப்பொருள்கள் வழங்கிவந்த கடைக்காரர் சிலர் தாங்கள் கொடுத்த பொருள்களின் பட்டியை அதிகாரிகளுக்கு அனுப்பினர். குஜரன்வாலா போலீஸ் சூபரின்டெண்டெண்ட் அதற்கு அனுப்பிய பதில் வருமாறு :—" இந்தப் பணம் எக்காரணங் கொண்டும் இப்பொழுது கொடுக்கப் படாதென்ற உத்தரவுடன் இது சப்-இன்ஸ்பெக்டருக்குத் திருப்பியனுப்பப் படல்வேண்டும். மனுதார்கள் நம்மை அடிக்கடி தொந்தரவு செய்தல் கூடாதென்பதை அறிந்து கொள்ளுதல் வேண்டும்."

கிராமவாசிகள் தங்கள் மாசூல்களை அறுவடைய் செய்தல் கூடாதெனச் சில நாட்கள் தடுக்கப் பெற்றிருந்தார்கள். சிலருடைய மாசூல் யாதொரு தக்க காரணமுமின்றிப் பறிமுதல் செய்யப்பட்டது. ஸாங்க்லா ஹில்லுக்கும் ஷெயிகுபுரத்திற்குமிடையில் இராணுவச் சட்ட நிர்வாகத்தின் பொறுப்பை வகித்திருந்த மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் இச்செயல்களை அநேகமாய் ஒத்துக் கொள்ளுகிறுர்.

ஷான்சிங்க் சொல்வதாவது : " என் மாசூல்களுக்கு ஏற்பட்ட அழிவினுல் எனக்கு ஏறக்குறைய 2,000 ரூபா பண நஷ்டமுண்டாயிற்று."

ஜிவாயா சொல்வதாவது : " ஷெர் சிங்க் நிலத்திற்கருகில் நான் பயிரிட்டிருந்த 31 க்வில்லா கொள்ளையும் போர்வீரர்கள் தங்

கள் குதிரைகளுக்கு எடுத்துக் கொண்டார்கள். அவர்கள் அதற்காகப் பணங் கொடுக்கவேயில்லை. அங்ஙனஞ் செய்தல் கூடாதெனச் சொல்லியபோது அவர்கள் பச்சை தானியத்தையெடுத்துச் செல்வதைத் தடுத்தால் என்னைத் துரையிடஞ் சொல்லித் தண்டிக்கச் செய்வதாகப் பயமுறுத்தினர்கள்." கணபதி மல் கூறுவதாவது : "அங்கிருந்தவர்க ளெல்லோரும் கிராமத்திற்குள்ளேயே இருக்கவேண்டுமென்றும், கோதுமை மாசூலை அறுவடை செய்ய ஒருவரும் வயல்களுக்குச் செல்லக் கூடாதென்றும் உத்தரவு செய்யப்பட்டது. ஜனங்கள் தங்கள் மாசூல்களை அறுவடை செய்யாமலிருக்கும் பொருட்டும், தங்களிடமுள்ள மாடு கன்றுகளுக்கு யாதொரு தீனியும் போடாமலும் அவைகளைப் பாதுகாவாமலு மிருக்கவும் பட்வாரி வயல்களைச் சுற்றி வருமாறு கட்டளையிடப் பெற்றனர். அங்ஙனமே, கவனிப்பாரின்றி ஆடு மாடுகள் திரியலாயின ; மாசூல்கள் அழிந்தன. மாசூல்களிற் சில போர்வீரர்களால் அழிக்கப் பெற்றன. நாங்கள் மாசூலில் காற் பாகத்தையே பெறலானேம்."

விசாரணைகளெனச் சொல்லப் படுபவைகளைப் பற்றியும், அவைகளுக்கு முன் கைக்கொள்ளப்பெற்ற நடை முறையைப் பற்றியும் கிடைத்துள்ள வாக்குமூலங்கள் மற்ற விடங்களைப் பற்றி நாங்கள் சொல்லியவற்றை ஆதரிப்பனவா யிருக்கின்றன. அடையாளங் கண்டு பிடிக்கும் பொருட்டு மனிதர்கள் வரிசையாய் நடத்திக் கொண்டு செல்லப்பட்ட பொழுது மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் பின்வருமாறு கூறியாதாக மிஸ்டர் தோடர் மால் கூறியிருக்கிருர் : " எனக்குப் பெரிய மனிதர்கள் தான் தேவை. அவர்கள் காண்டிமாகி(?), சாதாரண ஜனங்கள் எனக்கு வேண்டாம்." இச்சாட்சி குற்றவாளிகளுள் ஒருவரென ஸர்தார் கர்த்தர் சிங்கினல் காட்டப்பெற்றனர். " நான் உடனே அவர் என் என்னைத் தெரிந்தெடுத்தன ரென்று அவரைக் கேட்டேன்"

என்று அவர் சொல்லுகிறார். "குற்ற பரிசீலனை இலாகா உத்தி யோகஸ்தர்கள் தம்மைத் தடுத்திருந்ததனால் தாம் காரணத்தைக் கூற முடியாதென அவர் சொன்னார். அவர் தமக்குத் தெரிவிக்கப் பட்டதையே செய்ய வேண்டியவராயிருந்தார்." அவர் விசாரணை செய்யப்பெற்று இராணுவச் சட்டக் கமிஷனால் விடுதலை செய்யப் பெற்றனர். கான்ஷி ராம் கூறுவதாவது: "நாங்கள் டெபுடி கமிஷனரிடம் கொண்டுவர விரும்பிய டிபன்ஸ் சாட்சி ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஒருவருடைய வாக்குமூலமும் குறித்துக் கொள்ளப்படவில்லை." தம் குமாரன் உஜகர்சிங்க் மருந்து வாங்கி வரச் சென்றிருந்தானென்றும், அவன் மற்றவர்களுடன் கைது செய்யப் பட்டானென்றும் மாயாசிங்க் சொல்லுகிறார். அவர் இதனைக் கண்டிக்கவும், "லாங்க்ரா சாஹிப் (மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித்) அவரை மரத்திற்கட்டி 25 அடி அடிக்குமாறு உத்தரவு செய்தனர்...........அவர் 10 நாள் அறையில் அடைக்கப்பெற் றிருந்தனர். குற்றவாளிகள் கனல் இளப்பாறும் விடுதியில் அடையாளங் கண்டு சொல்லப்பட்ட பொழுது, ஒருவரும் அவ ரைக் காட்டாத படியால் அவர் விடுதலை செய்யப்பட்டார்." ஹெவெலிராம் சொல்வதாவது: "மண்டிக்கார ரெல்லோரும் மறு நாட்காலை கனல் பங்களாவிற்குச் சென்றிருக்கவேண்டு மென் றும், செல்லாதவர்களுடைய சொத்துக்கள் பறிமுதல் செய்யப் படுமென்றும் ஒருநாள் காவற்கார லடா சிங்க் தெரிவித்தான். நாங்கள் மறுநாட் காலை பங்களாவுக்குச் சென்று, உணவேனும் தண்ணீரேனுமின்றி உட்கார்ந்திருந்தோம். நாங்களெல்லோரும் 12 மணி வெய்யிலில் நிற்க வைக்கப் பெற்றோம். இரண்டு மணி நேரம் நாங்கள் அங்ஙனம் நிற்கவேண்டியிருந்தது. லம்பர்தாரின் தூண்டுதலின் மேல் போர்ட்டர்களால் காட்டப்பெற்ற எல்லோ ரும் கைது செய்து போலீஸ் ஸ்டேஷனுக்கு அனுப்பப் பெற்ற னர். உண்ணவேனும் குடிக்கவேனும் அவர்களுக்கு ஒன்றும்

கொடுக்கப்படவில்லை. யாரேனும் எதாவது கொண்டுவந்து கொடுக்க வந்தால் அவர் அடிக்கவும் வையவும் பெற்றனர். அவர்கள் மறுநாள் லாகூருக்குக் கொண்டு போகப்பட்டார்கள். அவர்கள் கூட்டங்கூட்டமாகக் கொண்டுவரப் பெற்று, அவர்களுடைய குற்றங்கள் படித்துக் காட்டப்பட்டன." ஸர்தார் ஷான் சிங் பின் வருமாறு கூறுகிறார்:—"நான் என் முதுகிற்குப் பின்புறமாகக் கைவிலங்கிடப் பெற்ற பிறகு, கைதுசெய்யப் பெற்ற மற்றவர்களுடன் ஸாராயில் அடைக்கப் பெற்றேன். நான் அங்கே 15 அல்லது 16 நாள் தங்கியிருக்க வேண்டியிருந்தது. நான் உணவை உட்கொள்ள முடியாமலு மிருந்தேன். பின் புறமாக என் கைகளில் விலங்கிடப் பெற்றிருந்ததன் காரணமாக நான் என் தலைப்பாகையைக் கட்டிக்கொள்ளவும் முடியாமலிருந்தேன். இராக்காலத்திலும் நான் கைவிலங்குடனிருந்தேன். அப்பொழுது என்னோடு அடைக்கப் பெற்றிருந்தவர்கள் என் வாயில் உணவைப் போடுவார்கள். மற்றுஞ் சிலர் என் தலைப்பாகையைக் கட்டுவர். என் மூத்த சகோதரர் கான்சிங்கும் அங்கு என்னோடு அடைக்கப்பெற்றிருந்தனர். அவரிடமிருந்த அராபியக் குதிரையைக் கொடுத்தால் அவரை விட்டுவிடுவதாகப் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் அவரிடந் தெரிவித்தனர். தாம் குற்றமற்றவரென்றும், ஒன்றுஞ் செய்யாதற்காகத் தம் குதிரையைக் கொடுக்க முடியாதென்றும் என் சகோதரர் கூறிவிட்டனர். போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் அவரிடம் மிக்க கோபங்கொண்டு அவர் மேல் பல குற்றங்களைச் சுமத்துவதாகத் தெரிவித்தனர். அவர் முதல் முதல் ரெயில்வே உத்தியோகஸ்தரொருவருடைய பொருள்கள் சிலவற்றைக் கள்ளத்தனமாய் என் சகோதரர் வீட்டிற் போட்டுவிட்டு, சோதனை செய்தான பிறகு அந்தப் பொருள்களை என் சகோதரர் வீட்டிலிருந்து கொண்டுவரச் செய்தார். ..................நான் என் தோலைக் காப்பாற்றிக்கொள்ள விரும்

பின், 500 ரூபா கொடுத்தல் வேண்டுமெனப் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் என்னைக் கேட்கலாயினர். நான் கொடுக்க மறுத்ததன் மேல் நானும் என் சகோதரருடன் வைக்கப் பெற்றிருந்தேன். ஆனால் பிறகு என் மனைவி யாரிடமிருந்தோ 500 ரூபா கடன் வாங்கிவந்து, மனோரா சாக் ஷெயிகுபுரம் ஜமீன்தார் சுந்தர் சிங் மூலமாக அதனைப்போலீஸ் சப்-இன்ஸ்பெக்டருக்குக் கொடுப்பித்தாள். அதன் மேல் சப்-இன்ஸ்பெக்டர் என்னை விடுதலை செய்வதாக வாக்களித்தனர்... ..............எனக்கு விரோதமாகச் சாட்சியங் கொடுக்க விருந்தவர்களை அவர் நிறுத்திவிட்டு, சாதாரண சாட்சி யொருவரையே வைத்துக் கொண்டனர். சாட்சியம் பலமாயில்லாததன் காரணமாக நான் விடுதலை செய்யப் பெற்றேன். குருடரும் இத்தகைய உபத்திரவத்திற்குத் தப்பியிருக்கவில்லை. லடாமால் என்னுங் குருட ரொருவர் தம்மகனைக் கொண்டு வருமாறு கட்டளையிடப் பெற்றனர். மகன் அச்சமயம் இல்லாது போகவே, அவர் கைது செய்யப்பட்டார். அவர் மனைவி மகனைக் கொண்டுவந்த பிறகே அவர் விடுதலை செய்யப்பட்டார். கிராம வாசிகளெல்லோரும் வந்து கூடாவிடில் அவர்களுடைய சொத்துக்கள் கொளுத்தப் படும், அல்லது பறி முதல் செய்யப்படுமெனக் கூறி மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் அவர்களைக் கூடுமாறு உத்தரவு செய்தனரெனக் கணபதிமால் சொல்லுகின்றனர். பின்னும் அவர் கூறுவதாவது:—
"அங்ஙனமே ஜனங்களெல்லோரும் பயத்தின் மேலீட்டால் தர்ப்பார் சாஹிபில் வந்து கூடினர். "லாங்க்ரா சாஹிப்" சென்ஸஸ் ரிபோர்ட்டைக் கொண்டு வருமாறு பட்வாரிக்குக் கட்டளையிட்டனர். ஷெயிகு புரத்தின் டெபுடியான லாலா ஸ்ரீராம் வராதவர்கள் பெயர்களை ரிபோர்ட்டினின்றும் வாசிக்கலாயினர். போலீசாரைக் கொண்டு ஸ்திரீகள் வரவழைக்கப் பெற்றார்கள். தங்கள் புருஷர்மாரைக் கொண்டுவருமாறு சாஹிப்

அவர்களுக்கு உத்தரவு செய்தனர். இல்லாவிடில் அவர்களுடைய வீடுகள் கொளுத்தப் பெறுமென்றும், நிலங்கள் பறி முதல் செய்யப்படுமென்றும் அவர் தெரிவித்தனர். இவ்வுத்தரவு செய்தானதும் ஸ்திரீகள் செல்லுமாறு தெரிவிக்கப்பட்டார்கள். வராமலிருந்தவர்களுடைய சகோதரர்களும் தகப்பன்மார்களும் கைது செய்து கொண்டுபோகப் பட்டார்கள். கைது செய்யப்பட்டவர்கள் 10 அல்லது 12 பேர் சேர்ந்துள்ள கூட்டங் கூட்டமாகக் கொண்டுவரப்பெற்று, ஒவ்வொருவரும் இரண்டு வருஷச் சிறைச்சாலை தண்டனையும், 200 ரூபா அபராதமும் விதிக்கப் பெற்றனர். யாதொரு சாட்சியமும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. அவர்கள் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுமாறு தெரிவிக்கப்பட்டார்கள். ஜனங்க்ள் அதற்குப் பின்வருமாறு பதிலளித்தார்கள்:- "ஐயா, நாங்கள் குற்றமற்றவர்கள்; நாங்கள் ஏதேனுஞ் செய்திருப்பின் எங்களை மன்னித்தல் வேண்டும்." தாம் 400 ரூபா வருமாறு வரி செலுத்துவதாகவும், 800 ரூபாய்க்கு யுத்தக் கடன் பத்திரங்கள் வாங்கி யிருப்பதாகவும் ஸர்தார் ஹரி நாமசிங்க் சொல்லுகிறார். அவர் வீட்டு வரியாக 60 ரூபா செலுத்துகிறார். அவர் சகோதரர் குசால்சிங்க் கைது செய்யப்பட்டார். அவர் தம்பக்கம் வாதிப்பதற்காக 1,000 ரூபா கொடுத்து மிஸ்டர் மார்ட்டினை வைத்துக்கொண்டார். ஆனால் அவர் பின்வருமாறு சொல்லுகிறார்:—"ஒருவரும் அவரை வாதிக்க விடவில்லை. அங்கே வந்திருந்த டிபன்ஸ் சாட்சிகளை ஒருவரும் விசாரிக்கவில்லை. அவர்கள் கூப்பிட்டனுப்பப் பெறவுமில்லை. 5 நிமிஷங்களுக்குள் குசால் சிங்கின் வழக்கு முடிவு செய்யப் பெற்றது. மீண்டும் அவர் தெரிவிப்பதாவது: "அவசர விசாரணைகளெல்லாவற்றிலும், மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் துரையோ அங்குள்ள போலீஸ் இன்ஸ்பெக்டரோ குற்றவாளிகளைப் பின் வருமாறு கேட்பது வழக்கம். "நீங்கள் மன்னிக்குமாறு வேண்டுகின்றீர்

களா?" இதற்குக் குற்றவாளிகள் அநேகமாய்ப் பின் வருமாறு பதிலளிப்பார்கள்: "ஐயா, நாங்கள் குற்றமற்றவர்கள். எங்களை மன்னித்தல் வேண்டும்." ஆனால் இது குற்றவாளிகள் தங்கள் குற்றத்தை ஒப்புக் கொண்டது போல் குறிப்பில் பதிவு செய்து கொள்ளப்படும். டிபன்ஸ் சாட்சி யொருவரும் விசாரிக்கப் படவில்லை. டிபன்ஸைச் சித்தஞ் செய்யவும் அவகாச மளிக்கப் படவில்லை. முதல் நாள் சுமார் 200 பேர் குற்றவாளிகளாகத் தீர்ப்புச் செய்யப் பெற்றனர். இரண்டு மூன்று மணி நேரத்திற் குள்ளாக அவர்களுடைய தீர்ப்புகளும் உத்தரவுகளும் எழுதி முடிக்கப் பெற்றன."

சுஹர் கானாவிலிருந்து 5,000 ரூபா அபராதம் வசூலிக்கப் பெற்றது. இதற்காக மங்கள சிங்கும் அவர் சகோதரரும் 230 ரூபா கொடுத்தனர். லாலா பகீர் சந்த் ஜங்க்லி மால் கம்பெனியார் ஏப்ரல் மாதத்தில் துருப்புகளின் சாப்பாட்டுச் செலவிற்காக 50 ரூபாயும், தண்டனைப் போலீசாருக்காக 114 ரூபாயும், லெப்டி னண்ட் கவர்னரின் ஞாபகச் சின்னத்திற்காக 20 ரூபாயும் கொடுத்திருக்கின்றனர். "இந்தத் தொகைகள் எங்களிடமிருந்து பலவந்தமாய் வாங்கப் பெற்றன" என்று ஏஜெண்ட் கூறுகின்ற னர்.

## 17. ஷேயிகுபுரம்.

ஷெயிகுபுரம் லாகூரிலிருந்து 25 மைல் தூரத்திலுள்ள சரித்திர சம்பந்தமான இடமாகும். குஜரன்வாலா ஜில்லாவில் இதுவே கடைசியாகக் கவனிக்கப்பட வேண்டிய இடம். இவ்வூர் ஜஹான் கீர் சக்ரவர்த்தியின் செல்வப் பெயரினின்றும் இங்ங னம் வழங்கப் பெறலாயிற்று. மகாராஜா ரஞ்சிட் சிங்கின் பத் தினியாகிய ராணி நாகேயினது வாசஸ்தலமும் இதுவே. அஃது ஏறக்குறைய 2,500 ஜனத் தொகையுள்ளது.

ஏப்ரல் மாதம் 6-ந்தேதி ஷெயிகுபுரத்தில் வேலை நிறுத்த மேற்பட்டது. சப்-இன்ஸ்பெக்டர் ஜனங்களைத் தடுக்க முயன்றும் வேலை நிறுத்தம் திடீரெனத் தோன்றி முற்றிலும் நிறைவேறியது. அன்று மாலை ஒரு கூட்டங் கூட்டப் பெற்றது. அதில், உத்தியோகஸ்தர்கள் ஒத்துக் கொண்டுள்ளபடி, மிதமான உரைகளே பேசப் பெற்றன. சப் டிவிஷனல் ஆபிசர் ராய் சாஹிப் ஸ்ரீராம் ஸத் நியாயவாதிகளை வரவழைத்து அவர்களிடம் பயமுறுத்து மொழிகளை உபயோகித்துக் கூட்டத்தை நிறுத்த முயன்றும் பயன்படவில்லை. பிறகு 13-ந்தேதி வரையில் முழுச் சமாதானம் குடி கொண்டிருந்தது. ஆயினும் அமிர்த சரஸ் லாகூர் சம்பவங்களின் செய்தி ஷெயிகுபுரவாசிகளைத் துண்டா நின்றன. 14-ந்தேதி இன்னொரு முறை திடீரென வேலை நிறுத்தந் தோன்றிவிட்டது. அப்பொழுதும் அதிக்கிரமமான சம்பவமொன்றும் நடைபெற்றிலது. ரொட்டிக் கடையொன்று அன்று பலவந்தமாய் மூடப் பெற்றதென்றும், ரொட்டிக்காரன் தாக்கப்பட்டானென்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. அவசர நியாயஸ்தலத்தாரால் அங்ஙனம் பதிவு செய்து கொள்ளப்பெற்றிருந்தும், இவ்வாக்மூலம் மறுக்கப்படுகின்றது. ஆயினும் இரவில் யாரோ சிலர் தந்திக்கம்பிகளையும் ஸிக்னல் கம்பிகளையும் அறுத்துவிட்டனர். கம்பிகளை அறுத்தவர்கள் ஷெயிகுபுரவாசிகளாகவே யிருக்கலாம்.

அஃது எங்ஙனமாயினும், வேலை நிறுத்தத்தினால் இந்த உபத்திரவ முண்டாகவில்லை. ஆயினும் 19-ந் தேதி இராணுவச் சட்டம் அறிவிக்கப்பட்டது. மற்ற விடங்களில் நடைபெற்றதாகச் சொல்லப்பட்டுள்ளவைகளெல்லாம் ஷெயிகு புரத்திலும் நடை பெறலாயின. நியாயவாதிகள் முக்கியமாகக் கவனிக்கப் பெற்றார்கள். அவர்கள் பிரத்தியேகமான சிறுமைச் செயல்களுக்கு உட்படுத்தப்பட்டார்கள். அவர்கள் கைதுசெய்து

40 நாள் காப்பில் வைக்கப்பெற்றிருந்து, விசாரணை செய்யப் பெறாமலும் குற்றம் இன்னதென்பது அறிவிக்கப் பெறாமலும் கடைசியில் விடுதலை செய்யப்பட்டார்கள். ஷெயிகு புரத்தில் நடந்த விநோதம் யாதெனில், அவர்கள் இழிவு படுத்தப்பெறும் பொருட்டே 10 வயதுக்கு மேற்பட்ட ஆண்மக்கள் விஸ்தார மான நிலத்தைத் துடைப்பங்கொண்டு பெருக்குமாறு கட்டளை யிடப்பட்டார்கள். விசாரணை செய்யப்படுவதற்காக அவர்கள் அதிகாலையிலிருந்து மாலை வரையில் 7 நாள் செல்ல வேண்டிய வர்களானார்கள். மற்ற விடங்களிற் சென்றது போலவே பள் ளிச்சிறார்களும் செல்லவேண்டியவர்களானார்கள். 38 வருஷ அனுபவமுள்ளவரும் 60 வயதுள்ளவருமான மதிப்புள்ள லம்பர் தாரும் வேலையினின்றும் விலகிக்கொண்டுள்ள போலீஸ் இன்ஸ் பெக்டருமான ஒருவர், வேண்டியபோது அவர் குமாரர்கள் ஷெயிகுபுரத்தில் இல்லாத காரணத்திற்காகக் கைது செய்யப் பெற்றனர். அவர் சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டன. அவருடைய குடியானவர்கள் மாசூல்களைச் சேகரியாதவாறு தடுக் கப் பெற்றார்கள்.

போர்வீரர்களும் போலீசாரும் ஜனங்களுடைய பொருள் களைத் தாராளமாகக் கொண்டுபோனார்கள். சாட்சியம் பெறும் பொருட்டு வழக்கம்போல் நிர்ப்பந்த முறைகள் கையாளப்பெற் றன. மற்ற விடங்களில் செலுத்தப்பெற்றது போலவே இங் கும் விசாரணைகளினால் நியாயம் தவறான வழியிற் செலுத்தப் பட்டது. ஆனால் மற்ற விடங்களிற் செய்யாதவாறாக மிஸ்டர் பாஸ்வர்த்ஸ்மித் நியாயவாதிகளின் உத்தியோகஞ் செய்யும் உரிமை பிடுங்கப் பெறவேண்டுமென ஹைகோர்ட்டாருக்கு அறிவித்திருந்தார். ஏறக்குறைய 70 வாக்குமூலங்களுள் நாங் கள் 30 வாக்குமூலங்களை வெளியிடுவதற்காகத் தெரிந்தெடுத்

திருக்கிறோம். அவைகளெல்லாம் மேற் கூறிய வாக்குமூலங்களை ஆதரிக்கின்றன.

ஸர்தார் பூடா ஸிங்க், பி. ஏ., எல். எல். பி., ஜில்லா யுத்த சங்கத்தின் அங்கத்தினராயிருந்து, ஆள் சேர்க்கும் வேலையில் உதவி புரிந்து, தமது வேலைகளுக்காக ஒரு நற்சாட்சிப் பத்திரம் பெற்றிருக்கின்றனர். தாம் வேலை நிறுத்த மேற்பட்ட இரு முறைகளிலும் வேலையாய் வெளியே சென்றிருந்தபடியால் அதிற் சம்பந்தப் படவில்லையென அவர் தெரிவிக்கிறார். ஏப்ரல் மாதம் 14-ந் தேதியைப் பற்றி எழுதும்போது அவர் சொல்வதாவது: "எவ்விடத்திலும் கூட்டங்கூடி யிருந்ததாகத் தென்படவில்லை. எங்கும் யாதோர் ஆடம்பரமுஞ் செய்யப்படவில்லை. ஜனங்கள் வழக்கத்திற்கு மாறாக யாதொன்றுஞ் செய்யவில்லை."

ஏனைய பிரதேச நியாயவாதிகளுடன் அவர் 19-ந்தேதி காலையில் திடீரெனக் கைது செய்யப் பெற்றனர். "நாங்களெல்லோரும் 25 போர்வீரர்களின் பொறுப்பில் விடப் பெற்றிருந்தோம். அவர்கள் ஈட்டிகள் சேர்க்கப் பெற்றுள்ள துப்பாக்கிகளைத் தாங்கியிருந்தார்கள். இந்நிலையில் நாங்கள் நகர்வலம் வருமாறு செய்யப் பெற்றோம். ஒரு முறைக்கு மேல் எங்கள் கிராமத்தார் முன்னிலையில் நாங்கள் அசுத்தமான இடத்தில் உட்கார வைக்கப் பெற்றோம். எங்கள் தாழ்வுள்ள நிலையை ஒரு மணி நேரம் பகிரங்கப்படுத்திய பிறகு, எங்களை ஆயுத வண்டிக்கு இரு மடங்கு விசையில் அழைத்துச் சென்றார்கள்...........நான் தேகசௌக்கியங் குன்றியிருந்ததால் மற்றவர்களுடன் நடக்கப் பின் வாங்கியதன் காரணமாக என்னைத் திட்டி, ஏளனஞ் செய்து, தடியாலடித்தார்கள்." கைதிகள் லாகூருக்குக் கொண்டு போகப் பட்டார்கள். அவர்கள் இரண்டுமணி நேரம் பிரயாணஞ் செய்தார்கள். ஜலமலங்கழிக்க அனுமதியளிக்குமாறு அவர்கள் பல முறை கேட்டுக்கொண்டும், காரர் மறுத்துவிட்டனர். மாலை வெகு

நேரம் வரையில் அவர்களுக்கு உணவொன்று மளிக்கப்படவில்லை. "ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து நாங்கள் லாகூர் சென்ட்ரல் ஜெயிலுக்குக் கொண்டு போகப் பெற்ருேம். அங்கே நாங்கள் கைவிலங்கிடப் பெற்றுத் தனியறைகளில் அடைக்கப்பட்டோம். 40 நாள் நாங்கள் இங்ஙனம் அடைக்கப் பெற்றிருந்தோம். அத ஞல் எங்களுக்கு ஏற்பட்ட அசௌகரியமும் கஷ்டமும் இவ்வள வவ்வளவன்று" இஃதெல்லாம் போதாதென, விடுதலை செய்யப் பெற்ற போதும் அவர்கள் சிறுமைச் செயல்களுக்கு உட்படுத்தப் பட்டார்கள். அவர்கள் கைவிலங்குடன் ஷெயிகுபுரத்திற்குக் கொண்டு போகப்பெற்று, போலீஸ் ஸ்டேஷனுக்கு நடத்திச் செல்லப் பட்டார்கள். பிறகு அவர்கள் நகரத்திலுள்ள நாயிப் தாசீல்தார் வீட்டிற்கழைத்துச் செல்லப் பெற்றுக் கடைசியாக அங்கே விடுதலை செய்யப்பட்டார்கள். இவைகளெல்லாம் அவர் களை இழிவு படுத்தும் பொருட்டே செய்யப்பட்டன.

லாலா உஷ்ணக் ராய், பி. ஏ., எல். எல். பி., 9 வருஷ அனு பவமுள்ள முதல் வகுப்பு நியாயவாதி. அவர் இரண்டு கிராமங்க ளின் பாம்பரை லம்பர்தாரா யிருந்து வந்திருப்பதுடன், ஏராள மான நிலங்கள் படைத்துள்ளவராகவு மிருக்கிருர். அவர் யுத்த நிதிகளுக்குத் தளராது பணவுதவி செய்து வந்திருக்கின்றனர். அவர் சொல்வதாவது: "சென்ற ஏப்ரல் மாதம் வரையில் நான் எந்த அரசியற் கூட்டத்திலும் சம்பந்தப்பட் டிருந்ததில்லை." 15-ந்தேதி காலையில் சப்-டிவிஷனல் ஆபீசர் அவரைக் கூப்பிட் டனுப்பினுர். சட்டத்தையும் சமாதானத்தையும் நிலை நிறுத்தும் விஷயத்தில் தாம் அதிகாரிகளுடன் ஒத்துழைப்பதாக அவர் வாக்குறுதி செய்தனர். அன்று மாலையே சப் டிவிஷன் ஆபீசர் சுஹுர் கானுவுக்குச் சென்றனர். சுஹுர் கானுவின் சமாதானம் வெளிப்படையானதா யிருந்ததன்றி உண்மையானதா யிருக்க வில்லையென அவர் ஹண்டர் கமிட்டியார் முன் கூறியிருப்

பதற்கு, இப்பொழுது கைக்கொள்ளப் பெற்ற முறை பொருத்த முடையதா யிருக்கவில்லை. முன்னரே குறிப்பிடப் பெற்றுள்ள தந்திக்கம்பியறுக்கப் பெற்ற சம்பவம் நடந்திருந்தும் அவர் ஷெயிகுபுரத்தை விட்டுச் சென்றன ரென்பது ஈண்டு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளப்படல் வேண்டும். எப்ரல் மாதம் 18-ந் தேதி வரையில் தாம் பிரதேச எக்ஸ்ட்ரா அஸிஸ்டண்ட் கமிஷனருடன் ஒத்துழைத்ததாக இச்சாட்சி கூறுகின்றனர். அவர் 19-ந் தேதி சப்-டிவிஷனல் ஆபீசரிடஞ் சென்று ஷெயிகு புரத்தில் எல்லாம் சரியாயிருந்ததாக அறிவித்தனர். ஆயினும் சில நிமிஷ நேரத்திற்கெல்லாம் அவர் தம் வீட்டிலேயே கைது செய்யப்பெற்றனர். வீட்டுக் கதவுகளை மூடவேனும், மேற் சட்டையை அணிந்துகொள்ளவேனும் அவர் அனுமதி யளிக்கப்படவில்லை. பின்னும் அவர் கூறுவதாவது: "என் காரியஸ்தலத்திற்குச் சமீபத்திலுள்ளவரான கொஸேன் மாயாராமுக்காக அவர்கள் காத்திருந்தபொழுது நான் அழுக்கான தரையில் உட்கார வைக்கப்பெற்றேன். நான் கீளப் புற்றிராதபடியால் கீழே உட்கார எனக்கு விருப்பமில்லை. ஆயினும் என்னை இழிவுபடுத்தும் பொருட்டு உட்காரவைத்தார்கள்." லாகூர் ரெயில்வே லாக்-அப் அறையைப் பற்றிக் கூறும்போது அவர் பின்வருமாறு குறிப்பிடுகின்றனர்: "அதில் மனிதர் இருத்தல் முற்றிலும் கூடாததாயிருந்தது. அது முன்னர் ஜலமலங் கழிக்குமிடமாக உபயோகிக்கப் பெற்றதன் காரணமாகத் துர் நாற்றம் வீசிக்கொண்டிருந்தது." அவர்கள் தங்கள் தலைப்பாகைகளையும் பாதரட்சைகளையும் லாக்-அப் அறைக்கு வெளியில் வைக்குமாறு கட்டளையிடப்பட்டார்கள். கௌஹர்சிங் சீக்கியரா யிருந்தபடியால் தலைப்பாகையைக் கழற்றிவைக்க மறுத்து, முதுமை காரணமாக மூக்குக் கண்ணாடியின்றிப் பார்க்க முடியாதபடியால் அதனைப் போட்டுக்கொண்டிருக்க வேண்டுமெனத் தெரி

வித்தார். அவர் அறிவிக்கப்படாமலே லம்பர்தாரியினின்றும் நீக்கப் பெற்றனர். அவர் மேலதிகாரிகளுக்குச் செய்துகொண்ட அப்பீலும் விசாரணை செய்யப்பெருமலே தள்ளப்பட்டது.

கோஸேன் மாயாராம் பி. ஏ., எல். எல். பி., அவர்களும் கைது செய்தல் அதிகாலையிலேயே கைக்கொள்ளப் பெற்றதெனச் சொல்லுகிறார். "நாங்கள் சரியாக உடைதரித்துக் கொண்டிருக்கவில்லை. சிலர் இரவில் அணிந்து கொள்ளும் ஷர்ட்டுகளுடனும் பிஜாமாக்களுடனும் கைது செய்யப்பெற்றனர். நியாயவாதி மௌல்வி அலிம்தீன் ஷர்ட்டுடனும் மேல் வேஷ்டியுடனு மிருந்தனர். எங்கள் உடைகள் கொண்டுவரப்பட உத்தரவளிக்கப்பட வேண்டுமென நாங்கள் தெரிவித்துக் கொண்ட வேண்டுகோள் கோபத்துடன் உடனே மறுக்கப்பெற்றது. "நானும், எஸ்-பூடாசிங்கும், மௌல்வி அலிம்தீனும், ஜமியத்சிங்கும் ஒரே வண்டியிலேற்றப்பெற்றோம். உட்காரப் பலகைகளிருந்தும் நாங்கள் கீழே உட்காரவைக்கப் பெற்றோம். அன்றையதினம் அதிகாலையில் ஸர்தார் பூடாசிங் பிரவர்த்திக்குச் சாப்பிட்டிருந்தனர். அவர் ஜலங்கழிக்க அனுமதியளிக்குமாறு பாது காவலனொருவனை வேண்டிக்கொண்டும் பயன்படவில்லை. நாங்களெல்லோரும் விடாமல் அங்ஙனம் வேண்டிக் கொண்டதன் மேல், போர்வீரர்களிலொருவன் "நீங்கள் அதனை விழுங்க முடியாதா?" என்று கேட்டான்." மற்றக் காட்சிகளை விளக்கிக் கூறிய பிறகு அவர் சொல்வதாவது :—"நாங்கள் சிறைச்சாலையில் அனுபவிக்க வேண்டியிருந்த கஷ்டங்கள் சொல்லக் கூடாதவைகளாயிருந்தன. சாதாரண சிறைச்சாலை உணவு ஆடுமாடுகளுக்கு ஏற்றதேயன்றி மனிதர்களுக் கேற்றதன்று. குளித்தல் முதலியவைகளுக்காக நாங்கள் காலையிலும் மாலையிலும் அரை மணி நேரம் அறைகளை விட்டுச்செல்ல அனுமதி யளிக்கப்பெற்றோம். இந்த ஒரு மணி நேரமும் பல முறை எங்கள் வார்டர்

களால் மறுக்கப்பெற்றது. அவர்கள் தங்களிஷ்டம்போல் எங்கள் கதவுகளை மூடித் திறந்துகொண்டிருந்தார்கள். இச்சாட்சி தமக்கும் சப் டிவிஷனல் ஆபிசருக்கும் நடைபெற்ற வேடிக்கையான சம்பாஷணை யொன்றைத் தெரிவிக்கிறார். சப்-டிவிஷனல் ஆபீசர் முதலில் சிலருக்கும், பிறகு மற்ற நியாயவாதிகளுக்கும் ஏப்ரல்மீ 6-ந்தேதி கூட்டத்திற்குச்செல்லக்கூடாதென எச்சரிக்கை செய்ய முயன்றனர். ஆனால் இச்சாட்சி கூட்டத்தில் யாதொரு தீங்குமில்லை யெனவும், நியாயவாதிகள் கூட்டத்திற்குச் செல்வது அவர்களுடைய உத்தியோக அனுமதிக்கு முரண்படாதென்றும் கூறியதன் மேல், சப் டிவிஷனல் ஆபீசர் அவரை நேராக வேண்டிக் கொள்ளலானார். அதற்குக் கோஸேன் தம் பலவீனத்தை வெளிப்படுத்திக் கொண்டு இணங்கினார். பிறகு சப் டிவிஷனல் ஆபீசர் மற்ற நியாய வாதிகளை வரவழைத்து, கோஸேன் கூட்டத்திற் சேரா திருப்பதாக வாக்களித்திருந்தனரென அவர்களிடந் தெரிவித்தார். கோஸேன் இதைப்பற்றிக் கேள்வியுற்றதும் பின் வருமாறு சொல்லலானார். ''நான் துன்புறுத்தப் பெற்றதாகக் கருதி சப் டிவிஷனல் ஆபீசர் மற்றவர்களைத் தம் வசப்படுத்திக் கொள்ளுமாறு என் பெயரைத் தவறான வழியில் உபயோகித்ததாக நினைத்தேன். நான் கூட்டத்திற்குச் செல்ல எண்ணினேனென்றும், அவர் என் பெயரை இங்ஙனம் உபயோகிக்க யாதொரு உரிமையும் பெற்றிருக்கவில்லையென்றும் நான் அவருக்கு எழுதினேன்.''

கைது செய்யாது விடப்பெற்ற ஸர்தார்ப்ரிதாம் சிங்க் என்னும் நியாயவாதி ஏப்ரல் மாதம் 19-ந்தேதி அறிவிக்கப்பெற்ற இராணுவச் சட்டத்தின் தொடக்கத்தைக் கண்ணுறலாயினர். அவர் அதனைப் பின் வருமாறு விளக்கிக் கூறுகின்றனர்:—'' சப்-டிவிஷனல் ஆபிசர் ராய் சாஹிப் ஸ்ரீராம் ஸத் அவர்களே அறிக்கையைப் படித்தனர். படித்தானதும் அவர்கள் இரண்டா முறை

வேலை நிறுத்தஞ் செய்யின், அவர்களைச் சுடத் தமக்கு அதிகாரம் வழங்கப்பட்டிருப்பதாக அவர் ஜனங்களுக்குத் தெரிவித்தார். இச்சந்தர்ப்பத்தில் அவர் தம் தடியால் மதிப்புள்ள முதியோர் பலரது மோவாய்க்கட்டைகளைக் குத்தினர்." ஹண்டர் கமிட்டியார் முன் குறிப்பிடப் பெற்ற மெஷீன் பீரங்கி ஆடம்பரத்தைப் பற்றி அவர் பின் வருமாறு கூறுகிறார்:—

"எப்ரல்மீ 6-ந்தேதி சமீபத்தில் பிரிட்டிஷ் இந்தியப் போர் வீரர்கள் மெஷீன் பீரங்கிகள் பலவற்றைக் கொண்டும், பீரங்கிகள் ஏற்றப்பெற்ற மோட்டார் வண்டிகளைக் கொண்டும் அரசாங்கத்தாரின் பலத்தை வெளிப்படுத்தலானர்கள். மெஷீன் பீரங்கிகளுக்கெதிரில் மேடான இடத்திற்கு நேராக இரும்புத் துண்டுகள் பல வைக்கப் பெற்றிருந்தன. மெஷீன் பீரங்கிகள் வேலை செய்யப்பெற்று, இரும்புத் துண்டுகளில் பீரங்கி நெருப்புப் பாய்ந்த பிறகு, அதிகாரிகளின் உத்தரவின்படி இந்த வேடிக்கையைப் பார்க்க வந்திருந்த ஜனங்களுக்கு அவைகள் காட்டப் பெற்றன. அவர்கள் மறுபடியும் அரசாங்கத்தாருக்கு விரோதமாகக் கலகஞ் செய்யின் பீரங்கிகளுக்கு இலக்காக நிறுத்தப் படுவார்களென ஜனங்கள் அறிவிக்கப்பட்டார்கள். இங்ஙனம் பீரங்கிகள் காட்டப் பெறுவதற்கு முன் லெப்டினெண்ட்-கவர்னர் விடுத்திருந்த அறிக்கையொன்று படித்துக் காட்டப்பட்டது. அவர் அதில் சாதாரண நிலைமையை ஏற்படுத்துவதில் ஜனங்களும் அரசாங்கத்தாருடன் ஒத்துழைத்தல் வேண்டுமென ஆலோசனை கூறியிருந்தார்."

ஜனங்களின் கூட்டுறவை வேண்டிய காலையிலேயே இங்ஙனம் வல்லமை வெளிப்படுத்தப் பெற்றது பொருந்தாத சேர்க்கையாகும்.

மே மாதம் 7-ந் தேதிக்குச் சமீபத்தில் வேறு விதமான ஆடம்பர மொன்று நடைபெறலாயிற்று. இம்முறை இவ்வாட்டம்

பரம் ஜனங்களைப் பயமுறுத்துவதற்காக மாத்திரமன்றித் தாழ்வு படுத்துவதற்காகவும் செய்யப்பட்டது. மேற் கூறிய சாட்சியே இதைப் பற்றியுங் கூறுகிறார் :—

"அவர் அவ்விடத்து ஜனங்களெல்லோரையும், முக்கியமாகக் கைது செய்யப்பெறாத நியாயவாதிகள் உட்பட, வெய்யிலில் ஒருங்கு கூட்டினர். நியாயவாதிகள் மற்றவர்களினின்றும் வேறு பிரிக்கப்பெற்று, இரண்டு வரிசைகளாக நிற்க வைக்கப் பெற்றார்கள். ஏப்ரல் மாதம் 6-ந் தேதி கூட்டத்திற் சம்பந்தப் படாதவர்களெல்லோரும் முன் வரிசையிலும், கூட்டத்திற்குச் சென்றிருந்தும் அதில் அதிகமாகச் சம்பந்தப்படாதிருந்தவர்கள் பின் வரிசையிலும் நிறுத்தப்பட்டார்கள். மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் பிறகு தம் பிரசங்கத்தைத் தொடங்கலாயினர். இந்திய நியாயவாதிகளே அவர் எடுத்துக்கொண்ட விஷயம். இந்தியாவிலுள்ள நியாயவாதிகள் தாழ்ந்த வகுப்பினரென்றும், அவர்கள் அரசாங்கத்தாருக்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்து ஜமீன்தார்களைத் தங்கள் ஆயுதங்களாக்கிக் கொண்டிருக்கிறார்க ளென்றும் அவர் சொன்னார். என் தகப்பனாருக்கு என்ன உத்தியோக மென்றும், நான் எங்கே கல்வி பயின்றவனென்றும் அவர் என்னை நேரிற் கேட்டார். நான் ஓர் உபாத்தியாயரின் குமாரனென்றும், லாகூர் பார்மன் கிறிஸ்துவக் கல்லூரியிற் கல்வி பயின்றே னென்றும் சொல்லப்பட்டதன்மேல் அவர் நான் எங்ஙனம் கிளர்ச்சிசெய்ய முற்பட்டிருத்தல் கூடுமென வியந்தனர். மற்ற நியாயவாதிகளி னெதிரில் அவர் என்னைச் 'சிறுபுழு' என்றும் அழைத்தனர்.

"நியாயவாதிகளை இங்ஙனம் நடத்தியான பிறகு போலீஸ் இன்ஸ்பெக்டராயிருந்தவரான ஸர்தார் கௌஹர்சிங்கைக் காலில் ஒன்று மின்றியும் கைவிலங்குடனும் ஜனங்களெதிரில் வெய்யிலில் நடந்து வருமாறு மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் கட்டளையிட

லாயினர்: கௌஹர்சிங் அரசாங்கத்தின் இராஜ பக்தியில்லாக் குடிமகனென்றும், அவர் பிள்ளைகள் மூவர் கெட்ட செய்கைகள் செய்ததற்காகச் சிறைச்சாலைக்கு அனுப்பப்பட்டனரென்றும் சாஹிப் ஜனங்களிடஞ் சொன்னார். அரசாங்கத்தார் அவருடைய உபகாரச் சம்பளத்தைப் பிடுங்கிவிட்டு அவரைப் பர்மாவிற்கு வெளியேற்றி விடுவரெனவும் துரைமகனார் கூறினார்.

"பிறகு அவர் ஜனங்களுக்குப் பொதுவாகப் புத்திமதி கூற லானார். அவர்களெல்லோரும் பன்றிகளென்றும், அருவருக்கத் தக்க ஈக்களென்றும் அவர் அவர்களிடஞ் சொன்னார். அவர்களெல்லோரும் தங்கள் கடைகளை மூடியதனால் அரசாங்கத்தாருக்கு விரோதமாகக் கலகஞ் செய்தனரென்றுங் காரணத்தினால் எல்லோரும் ஒரே நிறமுடையவரென்று கூறி, அவர் கறுப்பு மனிதர்கள், வெறுக்கத்தக்க ஜனங்கள், என்று பலவாறாக வைது கீழே எச்சிலுமிழ்ந்தனர். அவர்கள் தங்களை ஏமாற்றி வந்த நியாயவாதிகளின் பேச்சை எப்பொழுதும் கேட்கக் கூடாதென்றும், லம்பர்தாரிடமும், ஜெயில்தாரிடமும், தாசீல்தாரிடமும், டெபுடிகளிடமுமே அவர்கள் ஆலோசனை பெறவேண்டுமென்றும் அவர் அவர்களுக்குச் சொன்னார்."

நியாயவாதிகள் தனியாக இழிவுபடுத்தப் பட்டதையும், ஜனங்கள் தங்கள் நண்பர்களெனக் கருதியவர்களிடமிருந்து பிரிக்கப்படுமாறு முயற்சி செய்யப்பட்டதையும் தம்முடைய குமாரர்கள் செய்ததாகக் கருதப்பெற்ற குற்றத்திற்காக மதிப்புள்ள போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒருவர் வேண்டுமென அவமானப் படுத்தப்பட்டதையும், ஜனங்களெல்லோரும் கேவலமாகத் திட்டப் பெற்றதையும் நாம் இங்கே காண்கிறோம். இவைகளெல்லாம் ஒரு ஜில்லாவைத் தம் பொறுப்பில் வைத்திருந்தவரும், சமாதானத்தை நிலை நாட்டிக் குற்றவாளிகளைத் தண்டிக்குமாறு அனுப்பப் பெற்றவருமான உத்தியோகஸ்தரொருவரால் செய்யப்பட்டன.

அதிகாரிகள் குற்றமற்றவர்களைக் கருணையின்றித் துன்புறுத்துவதில் எவ்வளவு தூரஞ் சென்றார்களென்பதைக் கௌஹர் சிங்கின் வழக்கு நன்கு வெளிப்படுத்துகின்றது. ஸர்தார் கௌஹர் சிங்கும் அவர் குடும்பத்தாரும் அநேகமாய் நாசப்படுத்தப் பெற்றனர். இவர்களைத் துன்பத்திற்குள்ளாக்குவதில் அக்கரை கொண்டிருந்த அதிகாரி தகா முறைகளைக் கைக்கொள்ளலாயினர். ஸர்தார் கௌஹர் சிங்கின் குமாரரான ஸர்தார் அமார் சிங்கின் வாக்குமூலம் நம்பக் கூடியதாயின், ராய் சாஹிப் ஸ்ரீராம் இக்குடும்பத்தின் மேற் சில காலமாகக் கண் வைத்திருந்தனர். இச்சாட்சி கூறுவதாவது: "அங்ஙனமே 1919-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 19-ந்தேதி என் தகப்பனார் கைது செய்யப் பெற்று, யாதொரு குற்றமுஞ் செய்யாதிருந்த பொழுது லாகூர் சென்ட்ரல் ஜெயிலுக்கு அனுப்பப்பட்டனர். ஆனால் அவர் அன்றே விடுதலை செய்யப்பட்டார். அன்று ஷெயிகுபுரத்தில் எங்களுக்கு என்ன நேர்ந்ததென்பதை விளக்கிக் கூறுதல் முடியாததாயிருக்கிறது. எங்கள் வீடுகளெல்லாம் பூட்டப் பெற்று, ஸ்திரீகளும் குழந்தைகளும் வெளியே துரத்தப் பெற்றார்கள். வயலிலிருந்த மாசூல் பறிமுதல் செய்யப்பட்டது. அங்கே காவல் வைக்கப் பெற்று, நாங்கள் மாசூலை அறுவடை செய்யாதவாறு தடுக்கப் பெற்றோம். இதனால் எங்களுக்கு மிக்க நஷ்ட மேற்பட்டது. இதனைக் கிராமவாசிகள் நன்கறிவார்கள். எங்கள் வீட்டைக் கொளுத்தி விடுவதாக எங்களை அடிக்கடி பயமுறுத்தி வந்தார்கள்." எப்ரல்மீ 20-ந் தேதி இச்சாட்சி தம் இரண்டு சகோதரர்களுடன் கைது செய்யப்பெற்றனர். அவர் மைத்துனனும், நண்பரொருவரும், இரண்டு வேலைக்காரர்களும் கைது செய்யப்பட்டார்கள். வேலைக்காரர்கள் தம் பொருட்டே துன்புறுத்தப் பெற்றார்களென ஸர்தார் அமார் சிங்க் கூறுகின்றனர். மைத்துனனும் நண்பரும் வேலைக்காரர்களிருவருமாகிய நால்வரும்

விசாரணையின்றி மே மாதம் 28-ந் தேதி விடுதலை செய்யப் பெற்றனர். ஸர்தார் அமார்சிங் மே மாதம் 24-ந் தேதி ஷெயிகு புரத்திற்குக் கொண்டுவரப் பெற்றனர். அடையாளங் கண்டு பிடித்தலென்னும் போலிக் காரணங்கொண்டு அவர் கை விலங் குடன் ஜனங்களுக்கு முன் கொண்டுவரப் பெற்றார். தம்மை ஜனங்களுக்கு முன் அவமானப் படுத்தும் பொருட்டே இங் ஙனங் கொண்டுவந்தனரென அவர் கூறுகிறார். 26-ந் தேதி அவர் மிஸ்டர் பென்னியின் முன்பாகக் கொண்டுவரப் பெற்றார். அவருக்கு விரோதமாகச் சாட்சியமொன்று மில்லாதபடியால் அவர் விடுதலை செய்யப்பெற்றார்.

492, 493, 497, 499, 500, 501-வது சாட்சிகள் கௌஹர் சிங்குக்கு விரோதமாகச் சாட்சியங் கொடுக்குமாறு தாங்கள் வற் புறுத்தப் பெற்றதாகவேனும், தாங்கள் பொய்ச் சாட்சியங் கூற மறுத்ததற்காகத் தாங்களே கைது செய்து குற்றஞ் சாட்டப் பெற்றுத் தண்டிக்கப்பட்டதாக வேனும் சாட்சியங் கூறியிருக் கின்றனர். ஸர்தார் கௌஹர் சிங்கே தம் வழக்கைப்பற்றிப் பின் வருமாறு கூறுகிறார்:—"அதிகாரிகள் வேண்டிய படி என் பிள்ளைகள் தாங்களாகவே சென்றிருந்தும் என் வீடும் லாயங்க ளும் பிற விடுதிகளும் 8 நாள் பூட்டப் பெற்றிருந்தன. எங்கள் வீட்டையும் நிலங்களையுஞ் சுற்றிப் போலீசார் பலர் காவல் நிறுத் தப் பெற்றிருந்தனர். எனவே நாங்கள் வீடின்றி வெளியே தங்கியிருக்க வேண்டியவர்களானோம். நாங்கள் எங்கள் மாகூல் களைப் பார்க்கக் கூடாதெனத் தடுக்கப் பெற்றிருந்த படியால் அவை அதிகமாகச் சேதமாயின. மூன்றில் இரண்டு பாகம் பெற வேண்டியவர்களான எங்கள் குடிகளும் நஷ்டமடைந்தார்கள். அவர்கள் சிறிதளவுங் குறைக்காமல் வாய்க்கால் வரி செலுத்த வேண்டியிருந்தது. நான் மே மாதம் 17-ந்தேதி மறுபடியும் கைதுசெய்யப்பெற்று மேமீ 30-ந்தேதி விடுதலை செய்யப் பெற்

றேன்." காரணங் காட்டுமாறு அறிவிக்கப்படாமலே அவர் லம்பர்தார் உத்தியோகத்தினின்றும் நீக்கப் பெற்றனர்.

ஷெயிகுபுரத்தில் யாதொன்றும் நாசப்படுத்தப் பெறாமலும், கூட்டத்தினால் தந்திக் கம்பிகளுக்குச் சேதம் உண்டாகாமலும் இருந்தும், நஷ்ட ஈடு விதிக்கப் பெற்றது. நியாயவாதி கோஸேன் மாயாராம் கூறுவதாவது: "நஷ்டத்தின் உயர்ந்த மதிப்பு 5 ரூபாய்க்குமேலிருத்தல் முடியாது. முதலில் 900 ரூபா நஷ்டஈடு வசூலிக்க ஆலோசனைசெய்யப்பெற்றது. பிறகு அந்தத் தொகை 100 ரூபாயாகக் குறைக்கப்பட்டது. அந்தத் தொகையில் சுமார் 60 ரூபா தாங்கள் யாதொரு குற்றமுஞ் செய்யாமலிருந்தும் சிறைச்சாலைக்கு அனுப்பப்பெறும் துர்ப்பாக்கியமுள்ள நான்கு நியாயவாதிகளிடமிருந்து வசூலிக்கப் பெற்றது.

தாம் வருந்தும் விடுதியொன்று அமைக்கக் கருதியதாக மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் தம் சாட்சியத்தில் ஒத்துக் கொண்டதை லாலா தக்ர்தாஸ் வெளிப்படுத்தியிருக்கிறார். அவர் 1000 ரூபா கொடுக்க வேண்டுமெனத் தெரிவிக்கப்பெற்றனர்.

ஏப்ரல் மாதத்தில் ஷெயிகுபுரத்தில் நடைபெற்ற சம்வங்களின் வரலாற்றை முடிக்குமுன், கர்னல் ஓப்ரையன், மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித், ராய்சாஹிப் ஸ்ரீராம் ஸத் ஆகிய மூவரும் கொடுத்துள்ள சாட்சியத்தின் ஒருபகுதியை உற்று நோக்குதல் இன்றியமையாததாகும். அவர்கள் தங்கள்வேலையின் நோக்கத்தை அதில் வெளியிட்டிருக்கிறார்கள். பொதுவாக ஜனங்களை வாரண்டின்றிக் கைதுசெய்தது இந்தியப் பாதுகாப்புச் சட்டத்திற் கிணங்கத் தமக்கு வழங்கப்பெற்ற அதிகாரத்தின்படி நியாயமானதாகுமெனக் கர்னல் ஓப்ரையன் கூறியிருத்தல் நம் ஞாபகத்திலிருக்கிறது. இந்தப் பிரிவுக்குச் சாதாரண அறிவுள்ளவர்கள் எங்ஙனம் பொருள் கொள்வார்களெனின், கமிஷனர்கள் என்பதில் டெபுடி கமிஷனர்கள் சேர்ந்திருக்கவில்லையென்பதேயாம். டெபுடி கமிஷ

ணர்களுக்கு அதிகாரம் வழங்கப் பெற்றுள்ளவிடங்களிலெல்லாம் அங்ஙனம் தனியாகக் குறிப்பிடப் பெற்றிருக்கின்றது. ஆயினும் ஷெயிகுபுரத்து நியாயவாதிகளைப் பொறுத்தவரையில், கர்னல் ஒப்ரையன் தம் நிலையை மாற்றிக்கொண்டு, வேலை நிறுத்தத்தை ஏற்பாடு செய்ததற்காகவே அவர்கள் கைது செய்யப்பட்டார்களெனக் கூறியுள்ளார். ஷெயிகுபுரத்திற்கு அதற்குமுன் சென்றிராதவரும், எனவே நியாய வாதிகளை அதற்கு முன் பார்த்திராதவருமான மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித் நியாயவாதி வகுப்பினரைக் கடிந்து கூறியதுடன், அவர்களைப்பற்றி ஹைகோர்ட்டாருக்கு அறிவிக்கவும் துணிவு கொள்ளலாயினர். ராய்சாஹிப் ஸ்ரீராம்ஸத் நியாய வாதிகளுள் ஒருவர் "ட்ரிப்யூன்" பத்திரிகையின் சந்தாதாரராயிருந்தமையாலும்; வேலை நிறுத்தத்தன்று இன்னொரு நியாயவாதியுடன் வெறுந்தலையுடன் பார்க்கப்பட்ட படியாலும், ஏப்ரல்மீ 6-ந்தேதிக்குப்பிறகு நடந்த கூட்டத்தின் அக்கிராசனர் மூறையில் அவருக்குப் பலர் தாங்கள் வர முடியாமையால் வருத்தமுற்றதாகக் கடிதங்களெழுதியிருந்ததனாலும்; இன்னொருவர் "மாஸ்லெம் ஹெரல்ட்" பத்திரிகையின் சந்தாதாரராயிருந்தபடியாலும், இன்னொரு நியரயவாதியின் வீட்டிற்பார்க்கப்பட்டபடியாலும், தாம் வர முடியாமைக்கு வருந்துவதாகக் கூட்டத்தலைவருக்குக் கடித மெழுதியபடியாலும் அவர்களிடம் குற்றங்காண இடமுண்டாயிற்றென ஒத்துக் கொண்டிருக்கின்றனர்.

அவசர விசாரணைகளைப்பற்றி யேனும் வருத்திப் பொருள் பறித்ததைப்பற்றி யேனும் நாங்கள் விளக்கமாகக் கூறினோமில்லை. இவ்விரண்டு விஷயங்களையும் பற்றியுள்ள சாட்சியம் ஷெயிகுபுரத்து வாக்குமூலங்களில் முழு அளவிற் கூறப்பட்டிருக்கின்றது. அவசர விசாரணைகள் வெறும் போலியேயாம். வருத்திப் பொருள் பறித்ததைப் பற்றியுள்ள சாட்சியம் அம்

முறை எவ்வளவு நாசப்படுத்த வல்லதென்பதை விளக்கு கின்றது.

## 18. லயல்பூர்.

லயல்பூர் லயல்பூர் ஜில்லாவின் காரியஸ்தலம். அது 15,000 ஜனத்தொகையுள்ள ஒரு புதிய பட்டணம். இம்மாகாணத்தில் கோதுமை ஏற்றுமதி செய்யும் மிகப் பெரிய இடங்களில் இஃ தொன்றும். ஏப்ரல் மாதம் 6-ந்தேதி முழு வேலை நிறுத்தம் தானு கத் தோன்றிவிட்டது. அன்று ஒரு பொதுக் கூட்டமும் கூட் டப் பெற்றது. அதில் பல தீர்மானங்கள் செய்யப் பெற்ற துடன், ஜாக்கிரதையாய் எழுதப் பெற்றிருந்த மிதமான போக் குள்ள பேச்சுகளும் பேசப் பெற்றன. அதிகாரிகளைக் கலந்து ஆலோசித்த பிறகே கூட்டங் கூட்டப் பெற்றது. 12-ந்தேதி வரையில் யாதொரு சம்பவமும் நடைபெறவில்லை. ஆனால் அதற்குள்ளாக மிஸ்டர் காந்தியும், டாக்டர்கள் சத்யபாலும் சிச்லு வும் கைது செய்யப் பெற்ற செய்தியும், லாகூரிலும் அமிர்த சர ஸிலும் ஜனங்கள் சுடப்பெற்ற செய்தியும் எட்டலாயின. இத னால் இன்னொரு முறை தானுக வேலை நிறுத்தந் தோன்றிவிட் டது. ஜனத்தலைவர்கள் அதனை விலக்க முயன்றும், ஜனங்க ளின் மனக்கிளர்ச்சியைக் கட்டுப்படுத்த அவர்களாலாகவில்லை. ஆயினும் அவர்கள் சமாதானத்தை நிலை நாட்டும் விஷயத்தில் அதிகாரிகளுக்கு மிக்க உதவி செய்யலானார்கள். பொற் கோயில் கொளுத்தப் பெற்றதென்ற வதந்தி முக்கியமாய்ச் சீக்கியர்களுக் குக் கலவர முண்டாக்கியது. அதனால் வேலை நிறுத்தம் நீடிக்கப் பெற்றது. ஆயினும் ஜனத்தலைவர்களின் திறமையினாலும் ஊக் கத்தினாலும் வேலை நிறுத்தம் 15-ந்தேதி கலைக்கப் பெற்றது. நகரத்தில் யாதொரு அமளியு மேற்படவில்லை. லயல்பூருக் கரு கில் கம்பிகள் அறுக்கப் பெற்றன; ஆனால் கம்பிகள் அறுக்கப்

பெற்றதற்கும் வேலை நிறுத்தத்திற்கேனும் லயல்பூரிலுள்ள எவருக்கேனும் யாதொரு சம்பந்தமுமில்லை. ஸ்டேஷனில் அடுக்கி வைக்கப் பெற்றிருந்த பதர் மூட்டைகள் கொளுத்தப் பெற்றன. இது கொளுத்துங் கூட்டத்தாரின் வேலையெனக் கருதப்பட்டது. இது சம்பந்தமாய்க் குற்றமற்றவர்கள் கைது செய்யப் பெற்று மிக்க தொந்தரவிற்கு உட்படுத்தப்பட்டார்கள். ஆனால் நஷ்ட ஈடு கொடுத்தல் வேண்டுமென இந்தியா மந்திரியாருக்காக வழக்குக் கொண்டுவரப்பட்ட பொழுது, மாஜிஸ்டிரேட் விசாரணை செய்து வழக்கைத் தள்ளிவிட்டனர். பதர் மூட்டைகள் கொளுத்துங் கூட்டத்தாரால் கொளுத்தப் பெறவில்லையென அவர் தீர்ப்புச் சொல்லிவிட்டனர். துரதிர்ஷ்ட வேளையாய், குற்றமற்றவர்களைக்காக்க முடியாதவாறு விசாரணை வெகு நாட் சென்று நடத்தப்பெற்றது. நாங்கள் குறித்துக் கொண்டுள்ள வாக்குமூலங்களோடு தீர்ப்பையுஞ் சேர்த்திருக்கிறோம். மாஜிஸ்டிரேட் பின்வருமாறு கூறுகிறார். "பதர் மூட்டைகள் இரவு 8-15 மணியிலிருந்து 8-45 மணிக்குள்ளாகத் தீப்பிடித்துக் கொண்டதாகத் தெரியவருகிறது. போர்வீரர்கள் சுமார் 8-40 மணிக்கே நெருப்பைக்கண்டார்கள். இரவு இருளாகவிருந்தது. அப்பொழுது தொழிற்சாலைகளின் புறத்திலிருந்து பலமான காற்று வீசிக் கொண்டிருந்தது. இக்காற்று பிறகு பலத்த மண் காற்றாக மாறியது.

"தொழிற்சாலைகளுக்குச் சமீபத்திலிருந்த மூட்டைகள் தீப்பற்றிக் கொண்டன. தொழிற்சாலைகளை யடுத்துள்ள பக்கத்திலேயே நெருப்புப் பிடிக்கத் தொடங்கியது. மூட்டைகளின் மேலிருந்த உறை தீப்பிடித்துக் கொண்டிருந்தது. உடனே நெருப்பு மூட்டைகளிற் பிடித்துக்கொண்டது. அச்சமயம் பூஸா சௌகுதார் அங்கில்லை. மூட்டைகள் சம்பந்தமான உத்தியோகஸ்தர் நெருப்புப் பிடித்துக் கொண்ட சிறிது நேரத்திற் கப்

புறம்வந்து சேர்ந்தனர். தொழிற்சாலைகளி லிருந்துசிலரும் முனி சிபல் உத்தியோகஸ்தர்களுள் சிலரும் மேற் குறிப்பிடப் பெற்ற ஸ்டோர் கீபரும்தான் நான் சென்ற பொழுது அங்கிருந்தனர். யாதொருகூட்டமும் மூட்டைகளை வந்து பார்த்ததாகவேனும், தனி மனிதரெவரும் மூட்டைகளினருகில் பார்க்கப்பட்டதாக வேனும் தெரியவரவில்லை. சௌகிதார் வராமலிருந்தது சோம் பேறித்தனத்தினாலேயேயன்றி, யாதோர் ஏற்பாட்டின் படியோ முன் யோசனையினாலோ வராதிருந்ததாகத் தெரியவில்லை. சாமான்கள் போட்டுவைக்குமிடத்தில் பாராக்காரர்களேனும் போர் வீரர்களேனும் சந்தேகாஸ்பதமான ஒன்றையுங் காணவில்லை. அதன் பிறகு அடித்த மண்காற்றும், மற்ற மூட்டைப் போர்கள் தீப்பிடித்துக் கொள்ளாதவாறு தடுக்க உதவி செய்ய வந்த வர்களின் அடிச் சுவடுகள் தரையின் மேற் பதிந்திருந்ததும் இவ் விஷயமாய்ச் சாட்சியம்பெற முடியாதவாறு செய்துவிட்டன.

"விரிவான போலீஸ் விசாரணையொன்று நடைபெற்றது. மூட்டைகள் கொளுத்தப் பெற்ற விஷயமாய் யாதொரு செய்தி யுங் கிடைக்கவில்லை. லயல்பூர் வழக்குகளில் அப்ரூவராயிருந்த வர்கள் சிலர் லயல்பூர் குழப்ப விஷயமாகத் தண்டிக்கப் பெற்ற வர்களோடு நெருங்கிப் பழகுபவர்களாகவும் அவர்களுடைய இர கசியங்களை யறிந்தவர்களாகவு மிருந்தார்கள். ஆயினும் இவர்களுள் ஒருவரும் பதர் மூட்டைகள் கொளுத்தப் பெற்ற விஷயமாக ஒன்றுந் தெரிவிக்க முடியாதவரா யிருந்தார்கள். மூட்டைகளைக் கொளுத்துதல் அவர்களுடைய சகாக்களின் ஏற்பாட்டில் அடங்கி யிருக்கவில்லை போலும்.

"இது கொளுத்துபவனொருவனாற் செய்யப் பெற்ற செய் கையாகவே இருக்கவேண்டுமென முதலில் பலமான சந்தேகம் இருந்து வந்தது. ஏனெனில்

(1) இத்தகைய சம்பவங்கள் குழப்பங்கள் சம்பந்தமாகப் பிற விடங்களிலும் நடைபெற்றிருக்கின்றன.

(2) டோபா டேக் சிங்கில் மூட்டைகளைக் கொளுத்த ஒரு சதியா லோசனை செய்யப் பெற்றதாகச் சொல்லப்பட்டது.

(3) அதற்கு முதல் நாள் சாமான்கள் வைக்குமிடத்தி லிருந்து சாமான்கள் அப்புறப் படுத்தப்பட்டன.

"ஆயினும் போலீஸ் விசாரணை மூட்டைகள் கொளுத்தப் பெற்ற சம்பவத்தைக் கொளுத்துபவனுடைய செய்கையோடே னும் கலகக்காரர் செய்கையோடேனும் சம்பந்தப்படுத்தவில்லை. லயல்பூர் குழப்பங்கள் சம்பந்தமாக தண்டிக்கப்பெற்றுச் சிறைச் சாலையிலுள்ளவர்களை நான் கேட்டேன். தண்டனையடைந்த பிறகு அவர்கள் தங்களுக்குத் தெரிந்ததை மறைப்பதனால் யாதொரு பயனுமுண்டாகாது. வேறுபல விஷயங்களைப்பற்றி அவர்கள் தெரிவித்திருக்கிறார்களேயன்றி, அவர்களுள் ஒருவரும் மூட்டைகள் கொளுத்தப்பெற்ற விஷயமாக ஒன்றுந் தெரி வித்தாரில்லை.

"இச்செய்கை கிராமத்தினர் எவராலேனுஞ் செய்யப் பெற்றதா வென்பதையும் பரிசோதித்துப் பார்த்தேன். யாதோர் அத்தாட்சியுங் கிடைக்கவில்லை.

"அன்றையதினம் நான்கு தொழிற்சாலைகள் வேலைசெய்து கொண்டிருந்தன. அவைகளுள் ஒன்று மூட்டைப் போர்களுக்கு மிகவுஞ் சமீபத்திலிருந்தது. மாரிகால மாதங்களில் தொழிற் சாலைகள் வேலை செய்வதனால் மூட்டைகள் தீப்பற்றிக்கொண்ட தில்லை. ஆனால் ஏப்ரல் மாதத்திலிருந்து, எரிந்த கரித்துண்டு கள் புகைக்கூண்டினின்றும் விழுவதால் தொழிற்சாலைக் கட்டி டத்தின் வெளியிடத்தில் போடப்பெற்றுள்ள பருத்திப்பொதி கள் தீப்பிடித்துக்கொள்வதுண்டு. சமீபத்திலிருந்ததன் காரண

மாக, மூட்டைகளில் நெருப்புப் பிடித்துக் கொண்டதற்கும் இதுவே காரணமாக இருந்திருத்தல் கூடும்.

"இவ்வழிவு எல்லைக்குள் கூடிய நியாய விரோதமான கூட்டத்தினாலேனும் கலகத்தினாலேனும் உண்டாயிற்றென்று கூறச் சந்தேகத்தைத் தவிர வேறொன்றையும் நான் ஆதாரமாகக் கண்டிலேன்.

"எனவே நான் போலீஸ் சட்டத்தின் 15 A பிரிவின் (2) (c) உட்பிரிவுகளிற் கண்டுள்ளபடி மதிப்புப் போடக் கூடாதவனாயிருக்கிறேன்."

இவ்விஷயமாகக் கூறுங்கால் மாஜிஸ்டிரேட் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கின்றனர்: "அன்றையதினம் லயல்பூரில் கலகமேனும் குழப்பமேனும் நடைபெறவில்லை. கடைகள் மூடப் பெற்றிருந்தும், நகரத்தில் குழப்பமேனும் நியாய விரோதமான கூட்டங்களேனும் காணப்படவில்லை."

லயல்பூர் கொடுஞ் செயல்களினின்றுந் தப்பியிருந்ததன் காரணமாகவே போலீஸ் சூபரின்டெண்டெண்ட் மிஸ்டர் பி. டபில்யூ. ஸ்மித் ஹண்டர் கமிட்டியார் முன் தாம் கொடுத்துள்ள சாட்சியத்தில், இராணுவச் சட்டம் விரும்பத் தக்கதெனத் தாம் கருதியபோதிலும் அதனை அமுலுக்குக் கொண்டுவர அவசிய மேற்படவில்லை யெனக் கூறியிருக்கிறார். அங்ஙனமிருந்தும் இராணுவ ஆடம்பரமும், பயமுறுத்து முறையும், சட்ட நடவடிக்கைகளும், சலாஞ்செய்யும் உத்தரவுகளும், பிரயாணத்தைக் கட்டுப்படுத்தலும், ஜனத்தலைவர்களின் செல்வாக்குக் குறைக்கப் படுதலும் அங்கே இருந்து வந்தன.

22-ந் தேதிக்குப் பிறகே ஜனங்கள் கைது செய்யப்பட்டார்கள். லாலாசிந்த் ராம் தபார் கூறுவதாவது :—

"22-ந்தேதி ஜனங்கள் படுக்கையை விட்டு எழுந்திருக்கு முன்னரே மெஷீன் பீரங்கிகள் நகரத்தைச் சுற்றிலும் வைக்கப்

பெற்றிருந்தன. பிரிட்டிஷ் போர்வீரர்கள் நகரத்தைச் சூழ்ந் திருந்தனர். சுமார் 12 பேர் கைது செய்யப்பெற்றனர். அவர்க ளுள் நானும் ஒருவன்,............மே மாதம் 2-ந்தேதி நாங்கள் இருவர் இருவராகக் கைவிலங்கிடப் பெற்று நியாஸ்தலத்தில் நிறுத்தப் பெற்றோம். நாங்கள் மறுத்துக் கூறினோம்........ இங்ஙனமே நாங்கள் சிறைச்சாலையிலிருந்து நியாயஸ்தலத்திற்கும் நியாயஸ்தலத்திலிருந்து சிறைச்சாலைக்கும் கொண்டு போகப் பெற்றோம். நாங்கள் நியாயஸ்தலத்திலிருந்த வரையில் கைவிலங் கிடப் பெற்றிருந்ததுடன் உட்காரவைக்கப் பெறுமலிருந்தோம். என்னை அப்ரூவராக்குமாறு முயற்சிகள் செய்யப் பெற்றன. டெபுடி கமிஷனர் கைப்பட எழுதிய கடிதமொன்று என் நண்ப ரொருவர் மூலமாக எனக்கு அனுப்பப் பெற்றது." ஆனல் இச் சாட்சி அதற்கு இணங்கா திருந்தனர். குற்றஞ் சாட்டப் பெற்ற பிறகு, கைதிகள் லாகூருக்குக் கொண்டு போகப்பட்டார்கள். இச்சாட்சி கூறுவதாவது:—"முற்பகல் சுமார் 11 மணிக்கு, எரிக் கும் வெய்யிலில், நாங்கள் கைவிலங்குகளுடனும் தளைகளுடனும் சிறைச்சாலையி லிருந்து ஸ்டேஷனுக்கு நடந்து செல்லவேண்டி யவர்களா யிருந்தோம். தளைகள் போடப் பெற்றிருந்ததனுல் எங்கள் கணுக்கால்களில் காயமுண்டாயிற்று."

ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவரும், லயல்பூர் பஞ்சாப் நாஷனல் பாங்க் லிமிடெட் கம்பனியின் டைரெக்டரும், டி. எம். ஏ. எஸ். ஹைஸ்கூல் கமிட்டியின் உதவித் தலைவரும், 22 வருஷ அனுபவமுள்ள நியாயவாதியுமான லாலா போத்ராஜும் கைது செய்யப் பெற்றவர்களுள் ஒருவர். குஜரன்வாலா ஜில்லா வைப் போலன்றி, கைதிகள் என்ன குற்றத்திற்காக விசாரணை செய்யப்படுவார்களென்பது அவர்களுக்கு அறிவிக்கப்பெற்றது. நியாய விரோதமான கூட்டங் கூட்டினரென அவர்கள் இந்தி யன் பினல் கோட் 143-வது பிரிவின்படி கைதுசெய்யப்பெற்றி

ருந்தார்கள். எனவே அவர்கள் ஜாமீன் மேல் தங்களை விடுமாறு கேட்டுக்கொண்டார்கள். வேறு சில குற்றங்களையும் அவர்கள் மேற் சாட்ட ஆலோசிக்கப்பெற்றுவந்த தென்னுங் காரணமாக அவர்களுடைய மனு மறுக்கப்பெற்றது. காப்பில் வைக்கப்பெற்றிருந்த பொழுது தாங்கள் நடத்தப்பட்ட விதத்தைக்கூறுங்கால் இச்சாட்சி பின்வருமாறு குறிப்பிட் டிருக்கின்றனர்: விசாரணை செய்யப்பெறாமல் காப்பில் வைக்கப்பெற்றுள்ள கைதிகள் தங்கள் வீடுகளிலிருந்தே உணவுபெற உரிமை பெற்றிருந்தும், அவர்கள் தங்கள் சொந்த உணவு கொண்டுவரப்படுமாறு அனுமதியளிக்கப் பெறல் வேண்டுமெனத் தெரிவித்துக் கொண்ட வேண்டுகோள் மறுக்கப் பெற்றதுடன் அவர்கள் பின்வருமாறு அறிவிக்கப்பட்டார்கள். "நீங்கள் உண்ணாவிரதத்தை அனுஷ்டிக்கக்கூடிய பொழுது, சிறைச்சாலை உணவுடன் திருப்தி கொண்டிருத்தல்வேண்டும்." விசாரணை செய்யப் பட்டபொழுது அவர்கள் காலை 10 மணிமுதல் மாலை 7 மணிவரையில் நிற்க வைக்கப்பெற்றிருந்தார்கள். எனவே தாங்கள் பகலில் தங்கள் செலவிலேயே சிற்றுண்டி வரவழைத்துக் கொள்ளுமாறு அனுமதியளிக்கப்படல் வேண்டுமென அவர்கள் கேட்டுக்கொண்டார்கள். முதல் நாள் அங்ஙனமே அனுமதி யளிக்கப்பெற்றது. மற்ற நாட்களில் அவர்களுக்கு அவ்வுரிமை யில்லையெனச் சொல்லிவிட்டார்கள். சட்ட நடவடிக்கைகள் தொடங்கப் பெறுவதற்கு முன்பாக வேனும் பிறகேனும் தஸ்தாவேஜுகளைப் பார்க்க மாஜிஸ்டிரேட் அவர்களுக்கு அனுமதியளிக்க மறுத்துவிட்டனர். ஆயினும் அவர்கள் டிபன்ஸ் சாட்சிகளைத் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்ளப்பட்டார்கள். லாலா அமீர்சந்த் குடும்ப வேலையாய் ஏப்ரல் மாதம் 13-ந் தேதி லயல்பூருக்கு வந்து சேர்ந்தனர். அவர் கல்கத்தாவிலிருந்து லாகூருக்கு ஏப்ரல் மாதம் 8-ந் தேதி வந்திருந்தனர். அவரும் கைது செய்யப்பெற்றனர். அதிகாரி

கள் தெரிவித்ததன்மேல் விசாரணை தள்ளிவைத்துக்கொண்டே போகப்பெற்றது. கடைசியாகக் குறிப்பிடப் பெற்ற தேதி ஜூன் மாதம் 14-ந் தேதி. ஆனால் திடீரென தேதி முன்ன தாகவே மாற்றி வைத்துக்கொள்ளப் பெற்றது. அறிவிக்கப் பெறாமலே விசாரணை ஜூன் மாதம் 5-ந் தேதி வைத்துக் கொள் ளப்பட்டது. தம் சாட்சிகளைக் கொண்டு செல்ல முடியாமலே தாம் குற்றஞ் சாட்டப்பெற்றதாக இச்சாட்சி கூறுகிறார். அவர் திரும்பவும் 6-ந் தேதி குற்றஞ் சாட்டப்பெற்று மூன்று மாதச் சிறைச்சாலை தண்டனை விதிக்கப் பெற்றனர். ஜூன்மீ 18-ந் தேதி அவருக்கு இரண்டு வருஷச் சிறைச்சாலை தண்டனை விதிக் கப்பட்டது. லெப்டினண்ட் கவர்னரால் மாற்றப் பெற்ற மற்றத் தீர்ப்புக்களுடன் அவருடைய தீர்ப்பும் மாற்றப்பெற்று, அவர் செப்டெம்பர் மாதம் 18-ந் தேதி விடுதலை செய்யப் பெற்றனர். அவர் திரும்பவும் கைது செய்யப்பெற்று ஜாமீன் கட்டுமாறு அறிவிக்கப் பெற்றனர். ஆனால் அவருக்கு மாத்திரந் தெரிந் துள்ள சில காரணங்களை முன்னிட்டுப் போலீசார் வழக்கை வாபீஸ் வாங்கிக் கொண்டனர். தாம் வங்காளத்திலிருந்து வந்த தால் தம்மிடம் அழிக்கவல்ல ஆயுதங்களிருக்குமென்ற சந்தேகத் தின் மேலேயே தாம் கைது செய்யப் பெற்றதாக இச்சாட்சி பிறகு அறிந்து கொள்ளலாயினர். "இதனாலேயே அதிகாரிகள் பிஸ்டல்களுடன் என் வீட்டிற்கு வந்து என்னைக் கைது செய் தார்கள்" என அவர் முடிக்கின்றார்.

ஸர்தார் சாந்த சிங் என்னும் நியாய வாதி, நியாயவாதிக ளும் பிறரும் விசாரணை செய்யப்பெற்ற வரலாற்றை நன்கு விளக்கிக் கூறுகிறார். டிபன்சில் தாங்கள் ஒவ்வொரு படியிலும் தடுக்கப் பெற்றார்களென்றும், இதனால் தாமத மேற்பட்டபோது தாங்கள் காப்பில் வைக்கப் பெற்றிருந்ததாகவும், இராணுவச் சட் டம் ஒழிந்தபோது வழக்கு முடிவு பெறாம லிருந்தும் தங்கள்

மேல் குற்றம் உறுதிப் படுத்தப்பட்டதென்றும் அவர் கூறுகிறார். நல்லவேளையாய், இராணுவச் சட்டத்திற்குப் பிறகு அவர்கள் விசாரணை முடிந்தபடியால், அவர்கள் அப்பீல் செய்துகொள்ளக் கூடியவர்களா யிருந்தார்கள். மேல் நியாயஸ்தலத்தார், குற்றஞ் சாட்டப் பெற்றது நியாய் விரோதமான தெனக் கூறி, வழக்கு களை மறு விசாரணைக்கு விடுத்தனர். அவர்கள் பிறகு ஜூலைமீ 23-ந்தேதி விடுதலை செய்யப் பெற்றார்கள். ஆனால் அவர்கள் உடனே மறுபடியும் கைது செய்யப்பட்டார்கள். ஆயினும் இம் முறை அவர்கள் ஜாமீன்மேல் விடப்பட்டார்கள்.

எனவே அவர்கள் நன்னம்பிக்கையுடன் தங்கள் உத்தியோ கத்தைப் பார்த்துவரலானார்கள். ஆனால் அவர்கள் உடனே மாஜிஸ் டிரேட்டால் வரவழைக்கப்பெற்று, இன்னும் அவர்கள் விசாரணை யிலுள்ள மனிதர்களென்றும், தங்கள் உத்தியோகத்தைத் திரும் பவுங் கைக்கொண்டதனால் தகாச்செயல் செய்ததாகக் குற்றஞ் சாட்டப்பட் டிருந்தார்களெனவும் அறிவிக்கப்பட்டார்கள். இவ் வெச்சரிக்கை புத்திமதி கூறுவது போல் தெரிவிக்கப்பெற்றதெ னினும், தாங்கள் அலுவலைத் தொடங்காதிருத்தலே தக்கதெனக் கருதியதாக இச்சாட்சி கூறுகிறார். நாடகத்தின்கடைசி அங்கம் இன்னும் முற்றுப் பெறவில்லை. அக்டோபர் மாதம் முதல் தேதி ஜாமீன் மேல் விடுதலை செய்யக்கூடாத வாரண்டுகள் பிறப்பிக் கப்பெற்றன.

அவர்கள் கைது செய்யப்பட்டார்கள். இச்சாட்சி பின்னுங் கூறுவதாவது: " நாங்கள் அழுக்கான அறையில் அழுக்கான தரையின் மேல் அழுக்கான படுக்கையிற் படுத்துக் கொள்ளும் மதிப்பற்ற செய்கைக்கு உட்படுத்தப்பெற்றோம். சிறைச்சாலை யில் நியாயப்படி ஏற்படுத்தப்பெற்றுள்ள லாக்-அப் அறைக்கு எங் களை அனுப்புமாறு நாங்கள் கேட்டுக்கொண்டது கவனிக்கப் பெற வில்லை." கடைசியாக இம்பீரியல் சட்டசபையில் கனம் பண்டித

மதன் மோகன் மாளவ்யா செய்த கிளர்ச்சியின்பயனுக இச்சட்ட நடவடிக்கைகள் வாபீஸ் வாங்கிக்கொள்ளப்பட்டன; நியாயவாதிகள் காப்பினின்றும் விடுவிக்கப் பெற்றுர்கள்.

தாம் சத்தியாக்கிரஹத்தைப்பற்றி ஒரு வியாசம் படித்த குற்றத்திற்காக லயல்பூர் நகர பரிபாலன எல்லேக்குள் காப்பில் வைக்கப் பெற்றிருந்தன ரென்றும், இப்பாதுகாப்பு இராணுவச் சட்டம் ஒழியுமளவும் இருந்ததென்றும் பாரிஸ்டர் மிஸ்டர் ராம்தாஸ் சோக்ரா கூறுகிறுர். பின்னும் அவர் கூறுவதாவது: "ஆனுல் பாதுகாப்பில் வைக்கப் பெற்றதைக்காட்டிலும் கொடிய உத்தரவொன்று பிறப்பிக்கப் பெற்றது. கச்சேரி பஜாரிலுள்ள என் காரியஸ்தலத்தில் இராணுவச் சட்ட அறிக்கைகள் ஒட்டப் பெற்றன. என் காரியஸ்தலம் நான் குடியிருக்கும் வீட்டிலிருந்து அரை மைல் தூரத்திலிருக்கிற படியால், அவ்வளவு தூரத்திலிருந்து இராணுவச்சட்ட அறிக்கைகளே ஒருவர் தம் முழுச்சுதந்தரத்தை இழக்குமாறும் பாதுகாத்து வருதல் மிகவும் கஷ்டமான வேலேயாயிருந்தது. இவ்விஷயமாய் நான் கமாண்டரிடம் வணக்கத்துடன் என் வேண்டுகோளேத் தெரிவித்தேன். ஆயினும் அவ்வேண்டு கோள் மறுக்கப் பெற்றது. என் காரியஸ்தலம் நான் குடியிருக்கும் வீட்டிலிருந்து வெகு தூரத்திலிருந்தபடியால் நான் இல்லாதபோது இராணுவச்சட்ட அறிக்கைகள் என் காரியஸ்தலத்தில் ஒட்டப் பெறுவதற்குப் பதிலாக என்னிடமே நேராகக் கொடுக்கப்படவேண்டுமெனக் கமாண்டரை வேண்டிக்கொண்டேன். ஏனெனில் அறிக்கைகள் என் காரியஸ்தலத்தில் ஒட்டப் பெறின், நான் இல்லாதபோது, அவைகள் ஒட்டப் பெற்றிருப்பதை நான் அறிந்துகொள்ளு முன்னரே எவரேனும் அவைகளேக் கிழித்து விடுதல் கூடும். அறிக்கைகளேப் பலகையின் மேல் ஒட்டி வைக்க அனுமதியளிக்க வேண்டுமென இரண்டா முறை வேண்டிக் கொண்டேன். அங்ஙனம் பலகையின் மேல்

ஒட்டப் பெறும் அறிக்கைகளைப் பகற் காலத்தில் என் காரிய ஸ்தலத்தின் முன் வைத்து இராக் காலத்தில் உள்ளே எடுத்து வைக்குமாறு நான் ஏற்பாடு செய்தல் கூடுமெனவும் அதனால் நான் இரவில் அவைகளைப் பாதுகாத்துக் கொண்டிருப்பதினின் றும் தப்பியிருக்கலாமென்றும் அவரிடந் தெரிவித்தேன். அவை நியாயமான வேண்டுகோட்களெனவும், தாம் டெபுடி கமிஷன ரோடு கலந்து ஆலோசித்து எனக்கு அறிவிப்பதாகவும் கமாண்டர் என்னிடந் தெரிவித்தனர். நான் பிரதி மாலையும் போலீஸ் சூப ரின்டெண்டெண்டின் காரியஸ்தலத்திற்குச் சென்று, அங்கே இராணுவச்சட்ட அறிக்கைகள் இருக்கின்றனவா வென்பதைக் கண்டு வரலாமென மறுநாள் நான் அறிவிக்கப் பெற்றேன். இரண்டாவது வேண்டுகோளைப்பற்றி ஒன்றுஞ் சொல்லாமல் அவர் மௌனமா யிருந்துவிட்டனர்.

"என் மேல் இவ்வுத்தரவுகள் பிறப்பிக்கப் பெற்ற பிறகு நான் டெபுடி கமிஷனரைக் கண்டு நான் ஏன் சட்டப்படி நடத் தப் பட்டேனென அவரைக் கேட்டேன். தாம் என்னைப்பற்றி நல்ல ரிபோர்ட்டுகள் பெறவில்லையென அவர் என்னிடந் தெரி வித்தனர். நான் பின் வருமாறு சொன்னேன். "அது தான் நான் தெரிந்து கொண்டுள்ளதும். எனக்கு விரோதமாக உங்க ளுக்கு என்ன கிடைத்திருக்கிற தென்பதை நீங்கள் தயவு செய்து விளக்கமாகக் கூறுவீர்களா?" போலீஸ் கடிதங் களைப் பார்ப்பதாக அவர் வாக்களித்தனர். இதன் பிறகு நான் அவரிடம் இருமுறை சென்றிருந்தேன். ஆனால் அவர் ஒவ்வொ ருமுறையும் தமக்கு அங்ஙனம் பார்க்க ஓய்வில்லையெனத் தெரி வித்தார். இதுகாறும், அதிகாரிகளின் விநோதச் செயலுக்குக் காரணம் யாதென்பதைக்கண்டு கொண்டேனில்லை."

பொய்ச் சாட்சியங் கூறுமாறு சாட்சிகள் வற்புறுத்தப்பெற் றது மற்றவிடங்களிற் செய்யப்பட்டது போலவே யிருந்தது.

சாட்சியங் கொடுக்க வேண்டிய ஒருவரிடம் ஓர் உத்தியோகஸ்தர் "சிம்மாசனம் தூக்குமரம் இவ்விரண்டினுளொன்றைத் தெரிந்து கொள்ளும்" என்று கூறினர். விரும்பியவாறு அச்சாட்சி சாட்சியங் கூறினல் சுயேச்சையாயிருக்கலாம்; இல்லாவிடில் சிறைச்சாலைக்குச் செல்வதே அவர் விதியாகும். (518, 522, 525, 526, 531, 533, 536, 537, 548-வது வாக்கு மூலங்களையுங் காண்க)

## 19. கூர்ஜ்ஜரம்.

சீக்கியப் போரில் இங்கே சண்டை நடைபெற்றதன் காரணமாகக் கூர்ஜ்ஜரம் சரித்திர சம்பந்தமான இடமாயிருக்கிறது. அது சுமார் 20,000 ஜனத்தொகையுள்ளது. அது பிரதான இருப்புப்பாதையில் வாஜிரபாதிற்கு 9 மைல் தூரத்திற் கப்பாலுள்ள ஒரு ரெயில்வே ஸ்டேஷன்.

ஏப்ரல் மாதம் 6-ந்தேதி தோன்றுவதாயிருந்த வேலை நிறுத்தம் பிரதேச வியாபாரியும் சனதன தர்ம சபைத்தலைவருமான லாலா ராம்சந்த் தண்டன் என்பவரது முயற்சியால் தடுக்கப்பெற்றது. ஆனல் 13-ந் தேதி லாகூரிலிருந்துவந்த கூர்ஜ்ஜரமாணவர் சிலரும், வைசாகி விழாவுக்காக வாஜிரபாதிற்குச் சென்றிருந்த ஒரு கூட்டத்தாரும் அன்றிரவு 11 மணி வண்டியில் வந்துசேர்ந்தனர். அவர்கள் ஒருங்கு சேர்ந்து ரௌலட் சட்டத்தை இழித்துக் கூறிக்கொண்டே ஊர்வலமாக நகரத்திற் பிரவேசித்தார்கள். காலையில் அவர்கள் லாகூரிலும் பிறவிடங்களிலும் நடைபெற்ற சம்பவங்களின் செய்தியைப் பரப்பிக் கடைக்காரர்களைத் தங்கள் கடைகளை மூடுமாறு தூண்டிவிட்டார்கள். வேலைநிறுத்தந் தோன்றியதும், அதிகாரிகள் முனிசிபல் கமிஷனர்களை வரவழைத்துத் தத்தம் வார்டைப் பாதுகாத்துக் கொள்ளுமாறு அவர்களுக்குத் தெரிவித்தார்கள். அங்ஙனமே 14-ந் தேதி இரவு அவர்கள் தங்கள் நண்பர்களின் உதவியைக் கொண்டு தத்தம்

வார்டைக் காவல் செய்யலானார்கள். யாதொரு விசேஷ சம்பவமும் அன்றிரவு நடைபெறவில்லை. 15-ந் தேதி, சிறுவர்களும் அவர்களோடு சேர்ந்திருந்த மற்றவர்களும் மிஷன் ஸ்கூலுக்குச் சென்று அதனை மூடுமாறு தலைமை உபாத்தியாயரைக் கேட்டுக் கொண்டார்கள். தலைமை உபாத்தியாயர் அங்ஙனம் மூட மறுத்துவிட்டனர். அவர் பிள்ளைகளுள் சிலரைப் பிரம்பாலடித்தனரென்றும் சொல்லப்படுகிறது. அதன்மேல் பிள்ளைகள் கற்களை யெடுத்துப் பலகணிகளின் மேலெறிந்து, கண்ணாடிகள் சிலவற்றை உடைத்துவிட்டார்கள். அவர்கள் ஸ்டேஷனிலும் இங்ஙனம் நாசப்படுத்திக் காகிதங்கள் சிலவற்றைக் கொளுத்தினார்கள். ஆனால் அவர்கள் ஜன்னற் கண்ணாடிகள் சிலவற்றை உடைக்கு முன், துப்பாக்கியாற் சுடப்பெற்றதும் கலைந்து செல்லலானார்கள். அதனால் யாதொரு சேதமு முண்டாகவில்லை.

மேற் கூறிய சம்பவங்களுக்கு மேல் வேறொன்றும் நடைபெறவில்லை. வேலை நிறுத்தத்தை வளர்த்ததிலேனும் அதன் பிறகு நடைபெற்ற சம்பவங்களிலேனும் பொறுப்புள்ளவர் எவரும் சம்பந்தப்பட்டிருக்கவில்லை. ஆயினும் ஏப்ரல் மாதம் 19-ந் தேதி கூர்ஜ்ஜரத்தில் இராணுவச் சட்டம் அறிவிக்கப்பெற்றது. டெபுடி கமிஷனர் மிஸ்டர் வில்லியம்ஸன் இராணுவச் சட்டத்தைப் பற்றி ஒன்று மறியார். அவர் அதனை விரும்பவில்லை. இராணுவச் சட்டத்தை அறிவித்துத் தமக்கு ஒரு தந்தி அனுப்பப் பெற்றபொழுது, இராணுவச் சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப் படவேண்டுவது பஞ்சாபிலுள்ள கூர்ஜ்ஜரத்திலாவென அவர் வினவலாயினர். அது பம்பாய் மாகாணத்திலுள்ள கூர்ஜ்ஜரமாகவே யிருத்தல் வேண்டுமென அவர் எண்ணினார். ஆனால் அவர் தவறாக இங்ஙனம் நினைக்கலானார். இங்ஙனம் நடத்தப்பெறுமாறு யாதொன்றையுஞ் செய்திராத கூர்ஜ்ஜரம் இராணுவத்தார் பொறுப்பில் ஒப்புவிக்கப்பெற்றது. ஜூன் மாதத்தில்

இராணுவச் சட்டம் ஒழிக்கப்படும் வரை அஃது இராணுவத்தார் வசமேயிருந்தது.

கூர்ஜ்ஜரத்தில் இரண்டு கக்ஷிகளுள்ளன. அவைகளுள் ஒன்றில் பிரதேச உத்தியோகஸ்தர்கள் சேர்ந்திருப்பதாகத் தெரியவருகிறது. மற்றொரு கக்ஷி குடிமக்களுள் முதன்மையானவரும், சமீபகாலம் வரையில் கௌரவ மாஜிஸ்டிரேட்டாகவும் முனிசிபல் கமிஷனராகவுமிருந்தவருமான ஸேத் சரக்தீன் என்பவரைத் தலைவராகக் கொண்டுளது. உத்தியோகஸ்தர் கக்ஷியினர் தங்கள் விரோதிகளைக் கலக்கத் தீர்மானித்திருந்ததாகத் தெரியவருகிறது. கூர்ஜ்ஜரத்திலுள்ள 'பாரிஸ்டர் ஹரி கோபாலும் பிறரும் கைது செய்யப்பெற்று வெகு காலம் காப்பில் வைக்கப் பெற்றிருந்தனர். அவர்கள் இராணுவச் சட்ட விசாரணை ஸ்தலத்தாரால் விசாரிக்கப் பெற்று, குற்றமற்றவர்களெனக் கௌரவமாக விடுதலை செய்யப்பட்டார்கள். பிராசிகியூஷன் தரப்பில் சாட்சியங்கொடுத்த உத்தியோகஸ்தர்கள் பொய்ச் சாட்சியங் கூறியதாக நியாயவாதிகள் குறிப்பிட்டார்கள். யுத்த காலத்தில் அதிகாரிகளுக்கு உதவிய வரும், தம் செய்கைகள் பலவற்றிற்காக அரசாங்கத்தாரிடமிருந்து பல ஸன்னத்களைப் பெற்றிருப்பவருமான லாலா ராம் சந்த் தண்டனும் துன்புறுத்தப் பெற்றனர். சிறிதளவு காரணமின்றியும் மதிப்புள்ள நியாவாதிகளின் வீடுகளும் பிறருடைய வீடுகளும் சோதனை செய்யப் பெற்றன.

ஸேத் சரக்தீன் மாஜிஸ்டிரேட் பதவியினின்றும் கமிஷனர் பதவியினின்றும் நீக்கப் பெற்றனர். இராஜப் பிரதிநிதியார் முதலான அதிகாரிகளிடமிருந்து அவர் ஸன்னத்கள் பெற்றிருக்கின்றனர். கெயிஸர்-இ-ஹிந்த் பதக்கமொன்றும் அவருக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அவர் தாமே 200 பேரைச் சேனையிற் சேர்த்திருக்கின்றனர். நாங்கள் கூர்ஜ்ஜரத்தைப் பற்றி

வெளியிட்டுள்ள வாக்கு மூலங்கள் நன்கு கவனிக்கப்படல்வேண்டும். பொய்ச்சாட்சியங் கூறிய உத்தியோகஸ்தர்களின் மேல் சட்ட நடவடிக்கை யெடுத்துக் கொள்ள அனுமதியளிக்கப் படவேண்டுமென மிஸ்டர் ஹரி கோபால் கேட்டனர். ஆனால் அனுமதியளிக்கப் பெறவில்லை.

மற்ற ஜில்லாக்களிற் குறிப்பிடப் பெற்றுள்ள ஏனைய கஷ்டங்களை யெல்லாம் கூர்ஜ்ஜா வாசிகளும் அனுபவித்துத் தீரவேண்டியவர்களானார்கள். கூர்ஜ்ஜாத்தில் அரசியல் வாழ்க்கையே இல்லை யென்பது ஈண்டுக் குறிப்பிடத் தக்கதொன்றும். அங்கே ஒரு ஜில்லா காங்கிரஸ் கமிட்டியுமில்லை.

யாதொரு நியாயமுமின்றி, தண்டனைப் போலீஸ் படையொன்று கூர்ஜ்ஜாத்தில் வைக்கப்பெற்றிருந்தது. 42,000 ரூபா வரி விதிக்கப்பெற்றிருக்கிறது. இந்தத் தொகை ஆறு முறையாக வசூல் செய்யப்படுதல்வேண்டும். முதல் முறை வசூலிக்க வேண்டிய தொகையை முன்னரே வசூல் செய்தாயிற்று. இஃது ஆச்சரியமாகக் காணப்படு மெனினும், இந்தத் தொகையிற் காற்பங்கு லாலா ராம் சந்த் தண்டனிடமிருந்தும் இன்னொரு காற்பங்கு நியாய வாதிகள் சிலரிடமிருந்தும் வசூல் செய்யப்பட்டது. இவ்வரியின் இடைச் சம்பவம் வரியைப் போலவே நியாயமற்றதென நாங்கள் கருதுகிறோம்.

## 20. ஜலல்பூர் ஜட்டன்.

இது கூர்ஜ்ஜாத்திற்கு எட்டு மைல் தூரத்தில் கூர்ஜ்ஜா ஜில்லாவிலுள்ள ஒரு சிறு கிராமம். இக்கிராமம் நெசவுத்தொழிலுக்குப் பேர் போனது.

ஏப்ரல் மாதம் 6-ந்தேதி இங்கே வேலை நிறுத்த மேற்படவில்லை. ஆனால் 15-ந்தேதி மற்ற விடங்களில் வேலை நிறுத்த மேற்பட்டதை யுணர்ந்து இங்கும் வேலை நிறுத்தஞ் செய்யப்

பட்டது. ஜனக்கூட்டம் யாதொன்றையும் நாசப்படுத்தவில்லை. எல்லோருஞ் சேர்ந்து ஊர்வலம் வந்தனர். 15-ந்தேதி அல்லது 16-ந்தேதி இரவு யாரோ ஒருவர் தந்திக் கம்பி யொன்றை அறுத்துவிட்டனர்.

இக்குற்றத்திற்காகவே போலும் இராணுவச் சட்டம் முறையாக அறிவிக்கப் பெற்றது. மதிப்புள்ளவர்கள் கைது செய்யப் பட்டார்கள். மொத்தத்தில் 17 பேர் கைது செய்யப் பெற்றனர். நியாயஸ்தலத்திற்குக் கொண்டுபோகப் பெருமலே ஒருவர் விடுதலை செய்யப்பட்டனர். மற்றவர்கள் இராணுவச் சட்ட விசாரணை ஸ்தலத்திற்குக் கொண்டு செல்லப்பட்டார்கள். இவர்களுள் 10 பேர் விடுவிக்கப்பெற்றனர். அறுவர் பலவாருகச்சிறைச்சாலை தண்டனை விதிக்கப்பெற்றனர்.

இராணுவச் சட்ட காலத்தில், சிறு குழந்தைகள் உட்படப் பள்ளிக்கூடத்துச் சிறுவர்கள் ஒருநாளைக்கு மும்முறை தாணுவுக்குச் செல்ல வேண்டியவர்களாயிருந்தார்கள்.

யாதொரு நியாயமுமின்றி இக்கிராமத்திற்கு 12,000 ரூபா நஷ்டஈடு விதிக்கப்பெற்றது. அதில் ஆறில் ஒருபங்குமுன்னரே வசூல் செய்யப்பட்டது.

## 21. மலக்வால்.

இது ஒரு முக்கியமான இருப்புப்பாதைச்சந்திப்பு. பிரதான இருப்புப்பாதையி லுள்ளதும் கூர்ஜ்ஜராத்திற்குப் பத்துமைல் தூரத்திலுள்ளதுமான லாலா மூஸாவிலிருந்து இதற்குவருதல் வேண்டும். அது 3,000 ஜனத்தொகையுள்ளது. மலக்வாலில் ஏப்ரல் மாதம் 17-ந் தேதி சிலர் இருப்புப்பாதைத் தண்டவாளத்தைப்பெயர்த்து, பிரயாணிகளின் உயிர்களை அபாயத்திற்கு உள்ளாக்கினர். அங்ஙனஞ் செய்தவர் இருப்புப் பாதைத் தொழிலாளராயிருத்தல் கூடும். ஒரு வண்டித்தொடர் பாதையைவிட்டுக்

கீழே சென்றுவிட்டது. ஆனால் நல்ல வேளையாய் யாதொரு சேதமும் ஏற்படவில்லை.

தக்ககாலத்தில் இராணுவச் சட்டம் அறிவிக்கப் பெற்றது. வழக்கம்போல் மற்றச் சம்பவங்களெல்லாம் நடைபெறலாயின. இளம் பிராயத்தினரான மாணவர்களும் ரெயில்வே குமாஸ்தாக்களும் சுமார் 20 பேரும் சேர்ந்து 40 பேருக்குமேல் கைது செய்யப் பெற்றனரென நாங்கள் விசாரித்தறிந்து கொண்டோம். இவர்களுள் 8 பேர் குற்றமற்றவர்களென விடுவிக்கப் பெற்றனர்; 15 பேருக்கு மேலானவர்கள், வெகு காலம் காப்பில் வைக்கப் பெற்றிருந்தும், விசாரணைக்குக் கொண்டு போகப் பெறாமலே விடுவிக்கப் பெற்றார்கள். மதிப்புள்ளவர்கள் உத்தியோகஸ்தர்களுக்குப் பங்கா இழுக்குமாறு கட்டாயப் படுத்தப்பட்டார்கள். வீதிகளைச் சுத்தஞ் செய்தல் முதலாய சுகாதார சம்பந்தமான வேலைகள் செய்யவும் அவர்கள் பணிக்கப் பெற்றார்கள். யூனியன் ஜாக் கொடிக்குச் சலாஞ் செய்யும்பொருட்டு பள்ளிச் சிறுவர்கள் பிரதி தினம் மும்முறை செல்லுமாறு கட்டாயப் படுத்தப்பட்டார்கள்.

ரெயில்வே குமாஸ்தாக்கள் வேலையினின்றும் நீக்கப் பெற்றார்கள். இவர்களுள் சிலர் முப்பது வருஷம் வேலைசெய்தனர்.

சென்ற ஏப்ரல் மாதத்தில் அமிர்தசரஸ், லாகூர், குஜரான் வாலா, லயல்பூர், கூர்ஜ்ஜூரம் ஆகிய ஐந்து ஜில்லாக்களிலும் நடைபெற்ற சம்பவங்களை நாங்கள் கூடிய வரை சுருக்கமாக ஆராய்ச்சி செய்துள்ளோம். பஞ்சாபில் நடைபெற்ற கோரமான சம்பவத்தை நன்றாக விளக்கிக் கூற நாங்கள் ஆவல் கொண்டிருந்தும் அங்ஙனஞ் செய்ய முடியாதவர்களானோம். நாங்கள் பொது ஜனங்களுக்கு வெளியிடும் சாட்சியத்தினால் வெளிப்படுத்தப்பட்டுள்ளபடி, ஜனங்கள் துன்புறத்தப் பெற்றதையும், அதிகாரிகள் இலஞ்சம் வாங்குதல் முதலியவைகளில் ஈடுபட்டிருந்ததையும், மனிதவுணர்ச்சி பொருட்படுத்தப் பெறாதிருந்ததையும் இச்சுருக்கமான

அறிக்கையில் சுருக்கிக் கூறுதல் கஷ்ட சாத்தியமாகும். நாங்கள் தராசுத் தட்டுகளைச் சமனுகப் பிடிக்க முயற்சி செய்திருக்கிறோம். உத்தியோகஸ்தர்களுக்குத் திடீரென ஏற்பட்ட வழக்கத்திற்கு மாறான சம்பவங்களுக்கு இடந்தர நாங்கள் முயன்றிருக்கின்றோம். ஆயினும் குழப்பமென்று வழங்கப்பெற்றதை யடக்கும் பொருட்டு அதிகாரிகள் கைக்கொண்ட முறைகள் தேவைக்கு மிகவும் அதிகமானவை யென நாங்கள் முடிவு செய்திருக்கிறோம்.

குழப்பங்களின் தன்மை யாது? அவை எங்ஙனந் தோன்றின? எங்கேயோ சிற்சில விடங்களில் கட்டிடங்கள் முதலியவை கொளுத்தப் பெற்றதும், குற்றமற்ற ஐரோப்பியர் கொலை செய்யப் பெற்றதும், தந்திக் கம்பிகள் அறுக்கப் பெற்றதும், இரண்டொரு சிறு வாராவதிகள் கவலை யீனமாய்க் கொளுத்தப் பெற்றதும், இரண்டோரிடங்களில் வண்டித் தொடர் கீழிறக்கப் பெற்றதும் குழப்பங்களிற் சேர்ந்தவைகளாம். இச் செயல்கள் எங்கும் வியாபித்திருக்கவில்லை யென்பதும், ஆயுதம் வைத்துக் கொண்டுள்ள ஜனங்கள் இவைகளினுற் பாதிக்கப்படாம லிருந்ததுடன் குழப்பங்களில் நேராகவேனும் மறைவாகவேனும் சம்பந்தப்படவில்லை யென்பதும், குழப்பங்களிற் சம்பந்தப்பட்டிருந்தவர்களின் தொகை பஞ்சாபிலுள்ள 2 கோடி ஜனத் தொகையில் $4\frac{1}{2}$ லக்ஷமே யென்பதும் உத்தியோகஸ்தர்களின் சாட்சியத்தின்படியும் ஒத்துக்கொள்ளப் பட்டிருக்கின்றன. எங்களிடமுள்ள சாட்சியத்தின்படி $2\frac{1}{4}$ லக்ஷம் ஜனத் தொகையுள்ள அமிர்தசரஸ், காசூர், குஜரான்வாலா, வாஜிரபாத், நைஜாம்பாத், ஹாபிஜபாத், மோமன், தாபன் சிங்க், சுஹர்கானு, கேம்கான், பட்டி, மலக்லால் ஆகிய இவ்விடங்களிலேயே கொடுஞ் செயல்கள் செய்யப்பெற்றன. இந்த $2\frac{1}{4}$ லக்ஷம் ஜனத் தொகையில் மிகச் சிறு தொகையினரே குழப்பங்களில் உண்மையாகச் சம்பந்தப்பட்டிருத்தல் கூடுமென்பது

எங்களிடமும் ஹண்டர் கமிட்டியாரிடமுள்ள சாட்சியத்தினாலும் விசாரணைகள் பலவற்றின் தஸ்தாவேஜுகளினாலும் நன்கு விளங்குமென்பது ஈண்டு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளப் படுதல்வேண்டும். சேதமான ஐரோப்பிய உயிர்கள் நான்கு. கூட்டத்தின் இந்தச் செய்கை மிகவும் கண்டிக்கத் தக்கதொன்றாம்.

ஆனால் சாதாரணமாகச் சமாதான நிலையிலுள்ள ஜனங்கள் பொதுச் சொத்துக்களைக் கொளுத்தவும் கொலை செய்யவும் எங்ஙனம் முற்பட்டார்கள்? இதற்கு விடையளிக்க நாங்கள் முயற்சி செய்துள்ளோம். ஸர் மைகல் ஓட்வியர் ஜனங்களின் பேர் போன பொறுமையை அதிகமாக வருத்தலாயினர். படித்த வகுப்பினரை இழித்துக் கூறியதாலும், சேனைக்கு ஆள் சேர்ப்பதிலும் யுத்த நிதிகளுக்குப் பணம் வசூல் செய்வதிலும் தகா முறைகளைக் கைக்கொண்டதனாலும், பொது ஜனங்களின் பத்திரிகைகளை அடக்கியதனாலும் அவர் ஜனங்களுக்கு மிக்க மனக் கொதிப்பையுண்டுபண்ணி விட்டனர். அவர் மிஸ்டர் காந்தியையும் டாக்டர்கள் கிச்லுவையும் சத்யபாலையும் முற்றிலும் நியாயமில்லாதவாறு வெளியேற்றியது, அவரால் சேகரித்து வைக்கப் பெற்றிருந்த தீப்பற்றிக் கொள்ளக்கூடிய பொருள்களுக்கு நெருப்பிடலாயிற்று. ரௌலட் சட்டத்தைக் கண்டிக்குமாறு ஏப்ரல் மாதம் 6-ந் தேதி எழுந்த சமாதானக் கிளர்ச்சியை அடக்க வேண்டுமென்ற நோக்கம் பாழ்படவும், அவர் ஜனங்களின் மனோசக்தி சுயேச்சையான முறையிலும் ஒழுங்காகவும் வெளிப்படுவதைத் தடுக்கப் பலத்த முயற்சி யொன்று செய்யத் தீர்மானித்திருந்தனர். இந்தத் திடத்த செடியை, எவ்விதத்திலேனும் வேர்களையப்பெறவேண்டிய விஷப் பூண்டென அவர் தவறாகக் கொள்ளலானார். அவர் மேற்குறிப்பிடப் பெற்றுள்ள வெளியேற்று முத்தரவுகளைப் பிரயோகஞ் செய்யலாயினர். அப்பொழுதும் அவர் தங்கள் துப்பாக்கிகளைத் தாராளமாக உபயோகியாதிருக்குமாறு தம் கீழுள்ள

உத்தியோகஸ்தர்களுக்கு அவசரமாக உத்தரவு செய்திருப்பின் நலமுண்டாயிருக்கும். ஆனால் ஒரே சமயத்தில் கோபமாகவும் சாந்தமாகவு மிருக்க அவராலாகவில்லை. அமிர்தசரஸில் விவேக மில்லாதவாறு துப்பாக்கிப் பிரயோகஞ் செய்யப்பட்டது ஜனங் களின் மன நிலையைக் குலைத்துவிட்டது. கூட்டம் பைத்தியங் கொண்டு, கோபத்தில் கொள்ளையடித்துக் கொலை செய்து ஆர வாரஞ் செய்யலாயிற்று. ஜனங்கள் தங்கள் கோபத்தை மூன்று மணி நேரத்திற் செலவிடலானார்கள். நாங்கள் குறிப்பிட்டுள்ள மற்ற விடங்கள் அமிர்தசரஸைப் பின் பற்றி அவ்வாறே செய்ய லாயின. காசூரைத் தவிர மற்ற விடங்களில் உயிர்ச் சேத மொன்று மேற்படவில்லை.

இந்நிலையைக் கலகமெனக் கூறுவதா, போரியற்றுதலெனச் சொல்வதா? வேண்டுமாயின் இராணுவ உதவிபெற்று, சிவில் அதிகாரிகள் இதனை அடக்குதல் முடியாதோ? இது சட்டத்தை அடக்கவேண்டிய அவசியமுள்ள நிலையா? ஒவ்வோரிடத்தைப் பற்றியும் தனித்தனியாகச் சொல்லி வரும்போது நாங்கள் இதற்கு விடையளித்துள்ளோம். ஹண்டர் கமிட்டியார் முன் கூறப் பட்டு வெளியிடப் பெற்றுள்ள சாட்சியமும் எங்களிடமுள்ள சாட்சியமும் காட்டுகிறபடி, இராணுவச் சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப் பட யாதோர் அவசியமுமில்லை யென்னும் துணிபை நாங்கள் பலவாறாகச் செய்துள்ள பரிசீலனையும் உறு திப் படுத்துகின்றது. ஹண்டர் கமிட்டியாரிடம் இரகசியமாகக் கொடுக்கப்பெற்றுள்ள சாட்சியம் இராணுவச் சட்டத்தை ஆத ரிக்க வேண்டுமாயின் அமிழ்த்துந் தன்மையதாகவும் விசேஷ மாய் விளக்கமுள்ளதாகவு மிருத்தல்வேண்டும்.

கலகம் அல்லது யுத்த நிலை இருந்ததாகக் கூறப்பட்ட கூற்று ஹண்டர் கமிட்டியார் முன் உடைந்துபோய்விட்டது. பஞ்சாபிற்கு வெளியிலும் சதியாலோசனை யென வழங்கப்

பெற்றதற்குப் பின்னும் யாதோர் ஏற்பாடும் இருந்ததாக ருஜுப் படுத்தப்படவில்லை. அதற்கு மாறாக, ஸர் மைகலால் நம்பப் பெற்ற சகாக்களுள் ஒருவரான கர்னல் ஓப்ரையன் கலகமென் பதை ஆதரிக்கத் தமக்கு யாதொரு சாட்சியமுமில்லை யென் பதையும், அஃது அனுமானத்தின் மேற் செய்யப்பெற்ற வேலையே யென்பதையும், குஜரான்வாலா தலைவர்கள் கைது செய்யப்பெற்றதும் வதந்தியை ஆதாரமாகக் கொண்டே யென் பதையும் ஒத்துக்கொண்டிருக்கின்றனர். தலைவர்களைக் கொடுஞ் செயல்களோடு சம்பந்தப்படுத்தத் தமக்கு யாதொன்றும் கிடைக்க வில்லை யென்பதையும், குஜரான் வாலாவில் ஏதேனுங் கொடுஞ் செயல் செய்யப்பெறின் தாம் அவர்களைப் பொறுப்புள்ளவர் களாக்க விரும்பின ரென்பதையும் அவர் ஒத்துக் கொண்டனர். மற்றச் சாட்சிகள் இவரைக் காட்டிலும் மேலாகக் கூறியிருக்க வில்லை. அவர்கள் செய்கைகளையும் சம்பவங்களையும் மதிப்பிட் டுணர யோக்கியதையற்றவர்க ளென்பதை வெளிப்படுத்திக் கொண்டார்கள்.

அதிகமாகப் பரவியுள்ள சதியாலோசனையிருந்ததென்பதை நிலை நாட்டும் பொருட்டு, ரௌலட் சட்டக் கிளர்ச்சி குறும்புத் தனமான தென்று ஸர் மைகல் கொள்ளவேண்டியவரானார். தலை வர்களின் ஒவ்வொரு பேச்சிலும் இராஜத் துரோகத்தையும், வேலை நிறுத்தம் ஒவ்வொன்றிலும் சதியாலோசனையையும், ஹிந்து மகமதிய சகோதரத்வத்தில் பிரிட்டிஷ் ஆட்சி பயமுறுத் தப்பெற்றதையும் அவர் கண்டதுடன் பிறரையும் காணச் செய்த னர். சதியாலோசனை யென்னுங் கூற்று உடைந்து போனது ஆச்சரியமானதன்று.

இராணுவச் சட்டம் நியாயமற்ற தெனின், அஃது ஏறக் குறைய இரண்டு மாத காலம் நீடித்து வைக்கப் பெற்றிருந்தது அதனின்றும் நியாயமற்றதாகும். அதன்படி கைக்கொள்ளப்

பெற்ற முறைகள் நாரிக முள்ளதெனச் சொல்லிக் கொள்ளும் எந்த அரசாங்கத்தையும் அவமானத்திற்குள்ளாக்குவனவாகும். இராணுவச் சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்படுமுன் ஜலியன் வாலாபாகில் குற்றமற்றவர்களின் படுகொலை நடைபெறலா யிற்று. அதற்கடுத்த இரண்டு மாதங்களிலும் ஜெனரல் டையர் பயமுறுத்தி அதிகாரஞ் செலுத்தியது ஸர் மைகல் ஓட்வியரால் அங்கீகரிக்கப் பெற்றது. எங்களுடைய எண்கள் திருத்தமாயிருப் பின், 1,200 பேர் உயிர் துறந்தனர்; குறைந்தது 3,600 பேர் காயமுற்றனர்; சிலர் நிலையாக அங்கவீனராயினர். பழிக்குப் பழி யாகக் கைக்கொள்ளப் பெற்ற தண்டனை ஜனங்கள் செய்த குற் றத்தின் அளவிற்கு மிகவும் அதிகமானது. ஜனங்கள் அதிகமா கக் கோபமூட்டப் பெற்றதன் மேலேயே இக்குற்றஞ் செய்யலா னார்கள். எஞ்சி நின்றவர்கள் இராணுவச் சட்ட காலத்தில் மெதுவாகச் சித்திரவதை செய்யப்பெற்றதை நாங்கள் போதிய அளவு விளக்கிக் கூறியுள்ளோம். நாங்கள் வெளியிட்டுள்ள விஷ யங்கள் அதிக்கிரமச் செயல்கள் இனி நேரிடக் கூடாதபடி தடுக்குமென நம்புகின்றோம்.

---

## அதிகாரம்—6

### முடிவுரை.

நாங்கள் இப்பொழுது இராணுவச் சட்டம் அறிவிக்கப் பெற்றிருந்த ஐந்து ஜில்லாக்களைப் பற்றியுங் கூறியுள்ளோம். நாங்கள் ஸர் மைகல் ஓட்வியரின் ஆட்சியை விளக்கி, ரௌலட் சட்டத்தையும் சத்தியாக்கிரஹ இயக்கத்தையும் பரிசீலனை செய்ய முயற்சி செய்துள்ளோம்.

நாங்கள் எங்கள் முன்னுள்ள விஷயங்களையே கவனித்து வர முயன்றிருக்கின்றோமென்பதையும், எங்கள் முடிவுகள்

தனியாக அச்சிடப் பெற்றுள்ள சாட்சியத்தையும், ஹண்டர் கமிட்டியார் முன் கொடுக்கப்பெற்ற சாட்சியத்தையும் இரா ணுவச் சட்ட விசாரணை ஸ்தலங்களின் தஸ்தாவேஜையுமன்றி வேறொன்றையும் ஆதாரமாகக் கொண்டு செய்யப் பெறவில்லை யென்பதையும் நாங்கள் தெரிவிக்க விரும்புகின்றோம்.

சில விடங்களில் நாங்கள் கடுஞ் சொற்களை உபயோகிக்க வேண்டியவர்களானோம்; ஆனால் நாங்கள் ஒவ்வொரு பண்புச் சொல்லையும் தக்க ஆலோசனையின் மேலேயே உபயோகித்திருக் கின்றோம். நாங்கள் ஏதேனுந் தவறிழைத் திருப்பின், பஞ்சாப் அரசாங்கத்தாருக்கு விரோதமாகச் சொல்லவேண்டிய விஷயத் தைக் குறைவாகச் சொல்லியிருக்கிறோம். அரசாங்கத்தார் முடியாத அளவு திருத்தமாயிருத்தல் வேண்டுமென எதிர்பார்க்க எங்களுக்கு உரிமை யில்லையென்பதை நாங்கள் உணர்ந்து கொண்டிருக்கிறோம். குழப்பமும் கஷ்டமும் நேரிடுங்கால், எவ் வளவு தான் நல்லெண்ணமுடையவராயினும் எந்த அதிகாரியும் தவறிழைத்தல் இயற்கையே. மேலும் ஆட்சி முறையில் இந் நாடு சில மாறுதல்களைப் பெற விருக்குந் தறுவாயிலும், சக்ரவர்த் திப் பெருமான் அதிகாரிகளும் குடிமக்களும் ஒத்துழைக்க வேண்டுமெனத் தெரிவித்துள்ளபோதும், முன்னேற்றத்தைத் தடுக்கக் கூடிய ஒன்றையும் நாங்கள் சொல்லுதல் கூடாதென் பதையும் அறிந்து கொண்டிருக்கிறோம்.

ஆனால், எதிர் காலம் எவ்வளவு பிரகாசமுள்ளதா யிருப் பினும், ஜனங்களுடைய குற்றமுள்ள செய்கைகளைக் கவனியா திருத்தல் கூடாதது போலவே பொறுப்புள்ள உத்தியோகஸ்தர் கள் மிகவும் நியாய விரோதமான செய்கைகளை மொத்தமாகச் செய்திருப்பதையும் கவனியாதிருத்தல் கூடாததா யிருக்கிறது. அதிகாரிகளின் குற்றங்களும் ஜனங்களின் குற்றங்களும் முன் எச்சந்தர்ப்பத்தைக் காட்டிலும் இப்பொழுது களையப் பெற

வேண்டுவதே மிகவும் அவசியமென்பது எங்களுடைய அபிப்பிராயம். அதிகாரிகளும் குடிமக்களும் சுத்தமான மனத்துடனும் சுத்தமான கையுடனும் நெருங்கி வராவிடில் சீர்திருத்தத்தை நடவடிக்கைக்குக் கொண்டுவந்து இந்தியா விரைவில் தன் குறியை யடையுமாறு செய்தல் கஷ்ட சாத்தியமாகும். எனவே, தவறிழைத்த அதிகாரிகள் நியாயப்படி நடத்தப்பட வேண்டுமென நாங்கள் சிபார்சு செய்தல் அவர்களைப் பழிக்குப் பழியாகத் தண்டிக்க வேண்டுமென்ற நோக்கத்தினாலன்று; நாட்டின் நிர்வாகம் ஒழுங்கீனத்தினின்றும் அநீதியினின்றும் சுத்தப்படுத்தப்பட வேண்டுமென்பதற்காகவேயாம். எனவே அமிர்தசரஸிலும் பிறவிடங்களிலும் கூட்டத்தின் அதிக்கிரமச் செயல்கள் கண்டிக்கத் தக்கவையென்று நாங்கள் நம்பும்போது, ஜனங்களின் கொடுஞ் செயல்களுக்காக அதிகாரிகள் தங்கள் செய்கைகளால் அளவுக்கு அதிகமாகவும் தண்டனை விதித்துவிட்டார்க ளென்பதையும் நிச்சயமாய் நம்புகின்றோம்.

டில்லிக்கும் பஞ்சாபிற்கும் சென்றுகொண் டிருந்தபொழுது மிஸ்டர் காந்தி கைது செய்யப்பெறாமலும், டாக்டர்கள் சத்யபாலும் கிச்லுவும் கைது செய்து வெளியேற்றப் பெறாமலுமிருந்திருப்பின், குற்றமற்ற ஆங்கிலேயர்களின் உயிர்கள் காக்கப்பட்டிருக்குமென்றும், மாதா கோயில்கள் உட்பட, மதிப்புள்ள பொருள்கள் அழிக்கப் பெறாமலிருக்குமென்றும் நாங்கள் நம்புகின்றோம். பஞ்சாப் அரசாங்கத்தாரின் இவ்விரு செய்கைகளும் அநாவசியமானவை; அவை முன்னே கைக்கொள்ளப்பட்ட முறைகளினால் சித்தஞ் செய்து வைக்கப் பெற்றிருந்த தீப்பிடித்துக் கொள்ளக் கூடிய பொருள்களுக்கு நெருப்புக் குச்சுகள் போலாயின.

பஞ்சாபின் பல ஜில்லாக்களிலும் நடைபெற்ற சம்பவங்களை விரிவாகப் பரிசீலனை செய்யுங்கால், நாங்கள் இந்தியா அரசாங்

கத்தாரைப்பற்றி யாதுங்கூருது விடுத்துள்ளோம். ஆயினும் இந்தியா அரசாங்கத்தார் உத்தியோகஸ்தர்கள் செய்கையில் நேராகக் கலந்துகொண்டிருந்தன ரெனக் கொள்ளாவிடினும், அவர்கள் செய்கையற்றிருந்ததைக் கவனியா திருத்தல் கூடாததாகும். மாட்சிமை தங்கிய இராஜப் பிரதிநிதியார் ஜனங்களின் விஷயமாகப் பரிசீலனை செய்து பார்க்கக் கஷ்டமெடுத்துக் கொண்டாரில்லை. தனி மனிதர்களும் பொதுச் சங்கங்களும் அனுப்பிய தந்திகளை அவர் கவனித்தாரில்லை. அவர் விசாரணை செய்யாமலே பஞ்சாப் அரசாங்கத்தாரின் செய்கைக்கு அங்கீகாரங் கொடுத்திருக்கிருர். அவர் மிக்க விரைவாக அதிகாரிகளைப் பாதுகாப்பென்னும் உடையால் போர்த்துவிட்டனர். சம்பவங்கள் நடைபெற்ற பிறகும் அவர் நேராகப் பார்ப்பதற்காகப் பஞ்சாபிற்குச் சென்ருரில்லை. உத்தியோக முறையில் சாட்சியங் கொடுத்தவர்கள் ஒத்துக் கொண்டுள்ள விஷயங்களை அவர் மேமாதத்திலேனும் தெரிந்துகொண்டிருத்தல்வேண்டும். ஆயினும் அவர் ஜலியன்வாலா பாக் படுகொலையும் அதற்குப் பிறகு இராணுவச் சட்டத்தின்படி நடந்த சம்பவங்களும் எத்தன்மையன வென்பதை இம்பீரியல் அரசாங்கத்தாருக்கேனும் பொது ஜனங்களுக்கேனும் ஒன்றுந் தெரிவித்தாரில்லை. எழுச்சியைக் கிளப்பவன்றி உண்மையைக் கண்டுபிடிக்கும் பொருட்டு பஞ்சாபிற்குச் சென்று கொண்டிருந்த பேர்போன ஆங்கிலேயக் கிறிஸ்தவரான மிஸ்டர் சி. எப். ஆண்ட்ரூஸைத் தடுத்ததில் அவரும் சப்பந்தப்பட்டிருந்தார். அவர் பஞ்சாப் அரசாங்கத்தின் பிரதான காரியதரிசியான மிஸ்டர் தாம்ஸன் உண்மைகளைத் திரித்துக் கூறியதற்கும் கனம் பண்டித மதன்மோகன் மாளவ்யாவை அவமதித்ததற்கும் இடந்தரலானுர். கனம் பண்டித மதன்மோகன் மாளவ்யா சட்டசபையிற் கூறிய விஷயங்கள் முற்றிலும் அநேகமாய் உண்மையானவைகளே யென்று உத்தியோகஸ்தர் சார்

பாகச் சாட்சியங் கூறியுள்ளவர்களே ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர் பொது ஜனங்களின் மனப் போக்கைப் பொருட்படுத்தாமல் யோசனை யற்றிருந்தபடியால், இந்தியா மந்திரியார் தம்மை அவ்வாறு செய்ய வற்புறுத்தியதற்கு முன் அவர் இராணுவச் சட்டத்தின்படி விதிக்கப் பெற்ற மரண தண்டனைகளை நிறுத்திவைக்க மனங்கொண்டாரில்லை. அவர் கனம் பண்டித மதன்மோகன் மாளவ்யா போன்ற பொறுப்புள்ள சட்டசபை அங்கத்தினர் கேட்ட கேள்விகளைத் தடுத்ததனுல் பின்னும் வெளிச்சந் தோன்றாதவாறு தம் இருதயத்தை மூடிக்கொண்டனர். பிரதேச விசாரணை செய்ய அவர் பஞ்சாபிற்குச் செல்ல மனங் கொள்ளவில்லை. ரௌலட் கிளர்ச்சியைப் பற்றி அவர் மனப்போக்கு எவ்வாறிருந்ததென்பதை ஆராயாது விடுக்கின்றோம். ஆனுல் எப்ரல் மாதம் ஏற்பட்ட நிலைமைக் கேற்றவாறு நடந்துகொள்ள அவர் சக்தியற்றிருந்ததை நாங்கள் பொது ஜன நன்மையை முன்னிட்டுக் கவனியாதிருக்க முடியவில்லை. எனவே அரசர் பெருமானுல் தம் பொறுப்பில் விடப்பெற்றவர்களின் நன்மையை இராஜப்பிரதிநிதியார் வேண்டுமென்றே கவனியா திருந்தனரென்று நாங்கள் கருதவில்லை யெனினும், அவர் தமக்கு வழங்கப் பெற்றுள்ள பதவியை வகிக்க யோக்கியதை யற்றவரெனக் காட்டிக் கொண்டாரெனக் கூறவேண்டியிருப்பது பற்றி வருந்துகின்றோம். மாட்சிமை தங்கிய இராஜப் பிரதிநிதியார் உத்தியோகத்தி னின்றும் திரும்ப அழைக்கப் பட வேண்டுமென நாங்கள் கருதுகின்றோம். எங்களுடைய மற்ற முடிவுகளைக் கீழே சுருக்கிக்கூறுகிறோம்:—

1. ஸர் மைகல் ஓட்வியர் படித்த வகுப்பினரிடம் வெறுப்பும் அவநம்பிக்கையுங் கொண்டதாலும், சேனைக்கு ஆட்களும் யுத்த நிதிகளுக்குப் பணமும் பெறுமாறு கொடிய கட்டாய முறைகளை அனுசரித்ததாலும், பிரதேச பத்திரிகைகளை வாய

டைத்து வெளியிலிருந்து வரும் தேசீயப் பத்திரிகைகளைத் தடுத்துப் பொதுஜன அபிப்பிராயத்தை அடக்கியதாலும் பஞ்சாப் வாசிகள் அவர் ஆட்சியில் வெறுப்புக் கொண்டிருந்தார்கள்.

2. ரௌலட் கிளர்ச்சி பொது ஜனங்களின் மன நிலையைக் குலைத்து அரசாங்கத்தாரின் நன்னோக்கத்தில் ஜனங்களுக்குள்ள நம்பிக்கையை அசைத்துவிட்டது. பொது இயக்கங்கள் சம்பந்தமான வேலைகளை அடக்குமாறு ஸர் மைகல் ஓட்வியர் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தை உபயோகித்ததன் காரணமாக, இவ்விஷயத்தில் பஞ்சாப் வாசிகள் மற்ற விடங்களிலுள்ள ஜனங்களைக் காட்டிலும் அதிகப் பங்கு பெற லானார்கள்.

3. சத்தியாக்கிரஹ இயக்கமும் அதற்கு முன்னணியாக ஆலோசிக்கப் பெற்ற வேலை நிறுத்தமும் நாடு முழுவதற்கும் ஊக்கங் கொளுத்தியதுடன், ஜனங்களின் கொடிய மன வெழுச்சியைக் கட்டுப்படுத்தி நாடு இன்னும் கொடியனவாயும் அதிகமாகப் பரவுவனவாயுமுள்ள துன்பங்களுக் குள்ளாகாதபடி பாது காத்து நின்றன.

4. ரௌலட் கிளர்ச்சி பிரிட்டிஷாருக்கு விரோதமான மன நிலையுடன் ஆலோசிக்கப்படவில்லை. சத்தியாக்கிரஹ இயக்கம் பகைமையும் கொடுமையும் நீங்கிய மனப்போக்குடன் ஆலோசித்து நடவடிக்கைக்குக் கொண்டு வரப்பட்டது.

5. பஞ்சாப் அரசாங்கத்தை வீழ்த்த யாதொரு சதியாலோசனையும் நடைபெறவில்லை.

6. மிஸ்டர் காந்தி கைது செய்து காப்பில் வைக்கப் பெற்றதும், டாக்டர்கள் சத்யபாலும் கிச்லுவும் கைது செய்து வெளியேற்றப் பெற்றதும் நியாயமற்றவைகளாம். அவைகளே ஜனங்கள் மாட்டெழுந்த கோபா வேசத்திற்குக் காரணமாகும்.

7. அமிர்தசரஸில் தொடங்கிய கூட்டத்தின் கொடுஞ் செயலுக்குக் காரணம் இருப்புப் பாதைமேல் வாராவதியண்டை

துப்பாக்கிப் பிரயோகஞ் செய்யப்பட்டதும், கலவரம் பொங்கி யெழுந்த தறுவாயில் கூட்டம் இறந்து பட்டவர்களையும் காய முற்றவர்களையும் கண்டதுமேயாம்.

8. கோப முண்டானதற்கு யாது காரணமா யிருப்பினும், கூட்டத்தின் அதிக்கிரமச் செயல்கள் மிகவும் வருந்தத் தக்கன வாயும் கண்டிக்கத் தக்கனவாயு மிருக்கின்றன.

9. விஷயங்கள் பகிரங்கமாகத்தெரியும் வரை, இராணுவச் சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட யாதொரு நியாயமான காரணமும் காட்டப்பெறவில்லை.

10. ஒவ்வோரிடத்திலும், சமாதானம் முழு அளவில் நிலை நாட்டப் பெற்ருன பிறகே இராணுவச் சட்டம் அறிவிக்கப் பெற்றது.

11. இராணுவச் சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப் பெற்றது இராஜாங்க அவசியமென்பதை ஒத்துக்கொண்டாலும், அஃது அநாவசியமாக நீடிக்கப் பெற்றிருந்தது.

12. ஐந்து ஜில்லாக்களிலும் இராணுவச் சட்டத்தின்படி எடுத்துக் கொள்ளப்பட்ட நடவடிக்கைகளிற் பெரும்பாலன அநாவசியமாகவும், கொடியவைகளாகவும், வருந்துபவைகளாகவு மிருந்ததுடன் அவைகளினுற் பாதிக்கப் பெற்ற ஜனங்களின் மனப்போக்கைக் கவனியாதனவாயுமிருந்தன.

13. லாகூர், அகல்கார், ராமகரம், கூர்ஜ்ஜரம், ஜலல்பூர் ஜட்டன், லயல்பூர், ஷெயிகுபுரம் முதலிய விடங்களில் ஜனக்கூட்டம் குறிப்பிடத்தக்க அதிக்கிரமச் செயல்களொன்றுஞ் செய்ய வில்லை.

14. ஜலியன்வாலா பாக் படுகொலை, குழந்தைகள் உட்படக் குற்றமற்றவர்களையும் நிராயுதபாணிகளையும் ஜீவ காருண்யமின்றி மாய்க்கும் பொருட்டுச் செய்யப்பட்ட ஒரு கொடுஞ் செயலாகும்.

இந்தப் படுகொலையின் கொடுமை நவீன பிரிட்டிஷ் ஆட்சியின் சரித்திரத்தில் எங்கும் காணப்படாது.

15. இராணுவச் சட்ட விசாரணை ஸ்தலங்களும் அவசர நியாயஸ்தலங்களும் குற்றமற்றவர்களைப் பயமுறுத்துங் கருவிகளாயிருந்ததோடு, நீதியைச் சீர்குலைத்து நூற்றுக்கணக்கான ஸ்திரீ புருஷர்களின் நிலைமையைப் பாழ்படுத்துவன வாயின.

16. ஊர்ந்து செல்லல் முதலிய விநோத தண்டனைகள் நாகரிகமுள்ள அரசாங்கத்தார் கைக்கொள்ளற் பாலனவல்ல. இந்தத் தண்டனைகளை விதித்தவர்கள் எவ்வளவு ஒழுங்கீனமான நிலைமையில் வீழ்ந்து விட்டார்களென்பது அவைகளினால் நன்கு விளங்கும்.

17. பழிக்குப்பழி வாங்குபவைகளான தண்டனைகள் விதிக்கப் பெற்றிருந்தும், பல இடங்களில் நஷ்ட ஈடு வசூலித்து தண்டனைப் போலீசாரைக் குற்றமற்றவர்களிடம் ஏறக்குறைய இரண்டுமாத காலம் வைத்திருந்து, அபராதம் விதித்துச் சட்ட விரோதமாகப் பொருள்பெற்றது அநாவசியமானதும் நியாயமற்றதுமா யிருந்ததுடன் ஜனங்களை அதிக வருத்தத்திற்கு உள்ளாக்கியது.

18. இரர்ணுவச் சட்ட காலத்தில் இலஞ்சம் வாங்கப்பெற்றதும் ஒழுங்கீனம் ஏற்பட்டதும் துன்பத்தின் இன்னொரு பகுதியாம். அனுதாபமுள்ள ஆட்சியின் கீழ் அவை எளிதில் ஒழிக்கப் பெற்றிருத்தல் கூடும்.

19. ஜனங்கள் பாற் செய்யப் பெற்றுள்ள தீங்குக்குப் பரிகாரந் தேடவும், ஆட்சி முறையைப் பரிசுத்தமாக்கவும், உத்தியோகஸ்தர்கள் சட்ட விரோதமாக இனி நடந்துகொள்வதைத் தடுக்கவும் நாங்கள் கீழ்க்கண்ட முறைகளைச் சிபார்சு செய்கிறோம்:—

(a) ·ரௌலட் சட்டம் ஒழிக்கப் பெறல் வேண்டும்.

(b) ஸர் மைகல் ஓட்வியர் அரசாங்கத்தில் எவ்விதமான பொறுப்புள்ள உத்தியோகத்தையும் வகியாதபடி நீக்கப் பெறல் வேண்டும்.

(c) ஜெனரல் டையர், கர்னல் ஜான்ஸன், கர்னல் ஓப்ரையன், மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித், ராய் சாகிப் ஸ்ரீராம் ஸத், மலிக் சாகிப் கான் முதலியவர்கள் அரசாங்கத்தில் எத்தகைய பொறுப்புள்ள பதவியிலும் இல்லாத வாறு நீக்கப்பெறல் வேண்டும்.

(d) நாங்கள் வெளியிட்டுள்ள வாக்கு மூலங்களில் குற்றஞ் செய்தவர்களாக ஏற்படும் சில்லரை உத்தியோகஸ்தர்களைப்பற்றி விசாரணை செய்து, குற்றமிருப்பதாக ருஜு ஏற்படின், அவர்களை வேலையினின்றும் நீக்கிவிடல் வேண்டும்.

(e) கனம் இராஜப் பிரதிநிதியார் தம் பதவியை விட்டு விலகுமாறு திரும்பியழைக்கப்படல் வேண்டும்.

(f) பிரத்தியேக விசாரணை ஸ்தலங்களிலும் அவசர நியாய ஸ்தலங்களிலும் தண்டனை விதிக்கப் பெற்றவர்களின் அபராதத் தொகைகள் திருப்பியளிக்கப்படல் வேண்டும். குழப்பத்தினல் பாதிக்கப்பெற்ற நகரங்களினின்றும் வாங்கப் பட்ட நஷ்ட ஈடுகள் குறைக்கப்படல் வேண்டும். நஷ்ட ஈடு முழுமையுஞ் செலுத்திய நகரங்களுக்குக் குறைந்த நஷ்ட ஈடு விதிப்பதனுல் ஏற்படும் மிச்சம் திருப்பியளிக்கப்படல் வேண்டும். தண்டனைப் போலீசார் அப்பால் அகற்றப்படல் வேண்டும்.

ஸர் மைகல் ஓட்வியர், ஜெனரல் டையர், கர்னல் ஜான்ஸன், கர்னல் ஓப்ரையன், மிஸ்டர் பாஸ்வர்த் ஸ்மித், ராய்சாகிப் ஸ்ரீராம் ஸத், மலிக் சாகிப் கான் ஆகிய எழுவரும் தண்டிக்கப் படுமாறு நியாய விரோதமாக நடந்துகொண் டிருக்கின்றன ரென்பதை நாங்கள் உணர்ந்திருந்தும், இந்தியா இவ்வுரிமையை உபயோகியாமல் விடுப்பதனுலேயே இலாப மடைதல் கூடுமென்பது எங்

கள் அபிப்பிராயமாதலின், அத்தகைய முறையைச் சிபார்சு செய்யாது விடுக்கின்றோம். மேற் கூறிய உத்தியோகஸ்தர்களை வேலையினின்றும் நீக்குவதனாலேயே எதிர்காலத்தில் போதிய அளவு பரிசுத்த மேற்படுதல் கூடும்.

கர்னல் மக்ரே, காப்டன் டவ்டன் ஆகிய இருவரும் கர்னல் ஓப்ரையன் முதலானவர்களைப் போலவே தங்களிடம் நம்பிக்கையாய் விடப்பெற்ற பொறுப்பை நிறைவேற்றத் தவறிவிட்டன ரெனினும் இவ்விரு உத்தியோகஸ்தர்களும் மற்றவர்களைப் போல் அனுபவமில்லாதவர்களா யிருந்தபடியாலும், அவர்களுடைய மிருகத்தனமான செய்கை அனுபவமுள்ள உத்தியோகஸ்தர்களின் செய்கையைப் போல் வேண்டுமென்று யோசித்துச் செய்யப்பட்டதா யிராதபடியாலும் நாங்கள் அவர்கள்மேல் பகிரங்கமாக யாதொரு நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளப் படவேண்டுமெனச் சிபார்சு செய்யாது விடுகின்றோம்.

மோ. க. காந்தி,
சி. ஆர். தாஸ்,
அப்பாஸ். எஸ். டயாப்ஜி,
எம். ஆர். ஜயகர்.

---

B. I. PRESS, MADRAS.

‘தேசபக்தன்’
புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

---

புத்தக விலை ஜாபிதா.

---

இதில், அரசியல் நூல்கள், ஜீவிய சரிதங்கள், இலக்கண இலக்கியங்கள், நாவல்கள், பிற நூல்கள் முதலியன அடங்கியிருக்கின்றன. இந்த ஜாபிதாவில் இல்லாத புத்தகங்களையும் நாங்கள் வாங்கி அனுப்பத் தயாராயிருக்கிறோம். இதன் லாபம், பரோபகார காரியங்களுக்குச் செலவழிக்கப் படுவதால், நேயர்கள் தங்கள் புத்தக ஆர்டர்களை நமது ஆபீஸுக்கு அனுப்பக் கோருகிறோம்.

# அரசியல் புஸ்தகங்கள்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| தேசபக்தாமிர்தம்— (தேசபக்தியைப் புகட்டக் கூடியது. 'தேசபக்தன்' ஆசிரியர் ஸ்ரீமான் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் எழுதியது). | 1 | 0 |
| இந்தியாவும் சுய ஆட்சியும் (ஓர் அரிய அரசியல் நூல்; டாக்டர் எஸ். மணிஐயர் எழுதிய முகவுரையுடன் கூடியது). | 1 | 0 |
| மகாத்மாகாந்தி ஜீவிய சரிதம் (பெரிய பதிப்பு). | 1 | 5 |
| ஷை சிறிய பதிப்பு | 0 | 5 |
| திலகர் ஜீவிய சரிதச் சுருக்கம் | 0 | 3 |
| கோகலே சரிதம் | 0 | 8 |
| பன்னிரு தேசாபிமானிகள் சரித்திரம் | 0 | 12 |
| தாதாபாய் சரிதம் | 0 | 3 |
| லார்ட் ஸின்ஹா | 0 | 4 |
| மணி ஐயரின் சரிதம் | 0 | 12 |
| ஆனந்தமடம் (பங்கிம் சந்திர சட்டர்ஜி வங்காளி பாஷையில் செய்தது) | 0 | 12 |
| சுயஆட்சி—(கனம் சாஸ்திரியார் ஆங்கிலத்தில் எழுதியதன் மொழிபெயர்ப்பு). | 0 | 8 |
| ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் | 1 | 4 |
| வேதாந்த ரகஸ்யம் (ஸ்ரீ விவேகாநந்தர் அருளியது | 1 | 8 |
| எனது குருநாதர் | 0 | 8 |
| சச்சிதானந்த சிவம் (ஸ்ரீ சுப்பிரமணிய சிவம் எழுதியது). | 0 | 14 |
| விவேகாநந்தர் சரிதம் | 0 | 2 |
| ஸ்வராஜ்ய சித்தி | 0 | 8 |
| நமது கோரிக்கை | 0 | 1 |
| காங்கரஸ் லீக் கோரிக்கைகள் | 0 | 2 |
| சுதேச விரதம் | 0 | 1 |
| சுதேசக்கல்வியும் அன்னி பெஸண்ட்டும் | 0 | 1 |
| விசேஷக் காங்கரஸ் அக்கிராசனர் மிஸ்டர் ஹாஸன் இமாமின்பேச்சு | 0 | 3 |
| கண்ணன் பாட்டு | 0 | 8 |
| நாட்டுப்பாட்டு—அல்லது வந்தேமாதரப் பாட்டு | 0 | 4 |
| முரசு | 0 | $\frac{1}{2}$ |
| பாப்பா பாட்டு | 0 | $\frac{1}{4}$ |
| புக்கர் வாஷிங்டன் சரித்திரம் | 0 | 8 |
| சந்திரகுப்த சரித்திரம் | 0 | 8 |
| ஆரிய சரித்திரம் | 1 | 5 |
| பீஷ்ம விஜயம் | 0 | 10 |
| ஸர் அப்துர்ரகிமின் மறுப்புரை | 2 | 0 |
| வால்மீகி விஜயம் | 1 | 0 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| கனம் மாளவ்வியாவின் மறுப்புரை | 1 | 0 |
| சிவாஜி சரித்திரம் | 1 | 0 |
| அம்பிகாபதியின்சரித்திரம் (கம்பனின் குமாரன்). | 0 | 4 |
| தேசிங் இராஜன் கதை | 0 | 3 |
| ரவீந்திர நாத் டாகூரின் சிறு கதைத் தொகுதி | 0 | 12 |
| சத்தியாக்கிரகம் அல்லது சாத்விக எதிர்ப்பின் மகிமை | 0 | 6 |
| சாசிரடீஸ் சரிதம் | 0 | 12 |
| திலகர் விசாரணை | 0 | 12 |
| காங்கிரஸ் லீக் கோரிக்கைகளும் அதிகார வர்க்கத்தின் தவறும் | 0 | 12 |
| பொதுவிஷய விளக்கம் | 1 | 8 |
| ரவீந்தர நாதரின் பஞ்சாதனம் | 0 | 10 |
| விசேஷ காங்கிரஸ் மகாசபைப் பிரசங்கங்கள் | 0 | 8 |
| பாரத ஜன சபை | 1 | 0 |
| ராஜாங்கத் துவேஷ மசோதா | 0 | 4 |
| முஸ்லீம் லீக் விசேஷக் கூட்டம் | 0 | 8 |

## ஷார்ட் ஹாண்ட்.

| | | |
|---|---|---|
| தமிழ் சுருக்கெழுத்துப் புஸ்தகம்—(தமிழ் உபந்நியாசங்களை அப்படியே சுருக்கெழுத்தில் எடுக்கு முறை விவரிக்கப்பட்டிருக்கிறது. பிரசங்கிகளுக்கும் பத்திரிகா நிருபர்களும் மாணவர்களுக்கும் உபயோகமானது.) | 4 | 0 |

## பழைய தமிழ் நூல்கள்.

சென்னப்பட்டணம், பிரஸிடென்ஸி காலேஜ்
மாஜி தமிழ்ப்பண்டிதராகிய
பிரஹ்மஸ்ரீ மஹாமஹோபாத்தியாய வே. சாமிநாதையர்
அவர்கள்
பரிசோதித்துப் பதிப்பித்துள்ள
தமிழ்ப்புஸ்தகங்களின் பெயர்களும் விலை முதலியனவும்

[பழைய காப்பியங்கள்.]

| | | |
|---|---|---|
| மணிமேகலையும், அரும்பதவுரை முதலியனவும் | 5 | 0 |

| | ரூ. அ. | | ரூ. அ. |
|---|---|---|---|
| சீவக சிந்தாமணி, நச்சினார்க்கினியருரை, (இரண்டாம் பதிப்பு) பலவகை ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் | 6 0 | பத்துப்பாட்டும், நச்சினார்க்கினியருரை முதலியனவும் (இரண்டாம் பதிப்பு) பலவகை ஆராய்ச்சிக்குறிப்புகளுடன் | 4 8 |

[எட்டுத்தொகையைச் சார்ந்தவை.]

| | | | |
|---|---|---|---|
| நற்றிணை நானூறு மூலமும் உரையும் | 5 0 | மேலழகருரையும் | 2 8 |
| பரிபாடல் மூலமும் பரி | | புறநானூறு மூலமும் உரை முதலியனவும் | 4 0 |

## இலக்கணம்.

| | | | |
|---|---|---|---|
| புறப்பொருள் வெண்பாமாலை மூலமும் உரை முதலியனவும் | 1 8 | நன்னூல் மூலமும் மயிலைநாதருரையும் | 3 2 |

## வசனம்.

| | | | |
|---|---|---|---|
| புத்தசரித்திரம், பௌத்த தருமம், பௌத்த சங்கம் | 0 8 | மணிமேகலைக் கதைச்சுருக்கம் | 0 8 |

## சைவநூல்கள்.

| | | | |
|---|---|---|---|
| செல்லிநகர்ப் பெரும்பற்றப்புலியூர் நம்பி இயற்றிய திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்; அல்லதுவேம்பத்தூரார் திருவிளையாடல் அரும்பதவுரை முதலியவற்றுடன் | 2 0 | காளத்திப் புராணம், அரும்பதவுரை முதலியவற்றுடன் | 2 0 |
| வீரைநகர் ஆனந்தக்கூத்தர் இயற்றிய திருக் | | தொல்காப்பியத் தேவரியற்றிய திருப்பாதிரிப் புலியூர்க் கலம்பகம் | 0 4 |
| | | சேறைக்கவிராச பிள்ளை இயற்றிய திருக்காளத்திநாதருலா; அரும்பதவுரைமுதலியனவுடன் | 0 6 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| அந்தகக் கவி வீரராகவ முதலியாரியற்றிய திருவாரூருலா, அரும்பதவுரை முதலியவற்றுடன் | 0 | 4 |
| திருவாடு துறையாதீனத்து ஸ்ரீ கச்சியப்ப முனிவர் இயற்றிய கச்சியானந் தருத்திரேசர் வண்டு விடுதூது | 0 | 2 |
| தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் இயற்றிய திருவாவடுதுறைக்கோவை அரும்பதவுரை முதலியவற்றுடன் | 0 | 8 |
| திருப்பூவணம் கந்தசாமிப் புலவரியற்றிய திருப்பூவணநாதருலா அரும்பதவுரை முதலியவற்றுடன் | 0 | 4 |
| திருப்பெருந்துறைப் புராணம் அரும்பத வுரை முதலியவற்றுடன் | 1 | 0 |
| திருவாரூர்த் தியாகராச லீலை ஷை | 0 | 12 |
| சூரைமாநகர்ப் புராணம் | 0 | 8 |
| மண்ணிப்படிக்கரைப் புராணம் ஷை | 0 | 8 |
| தனியூர்ப் புராணம் ஷை | 0 | 2 |
| சீகாழிக்கோவை ஷை | 0 | 8 |
| ஷை மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் பிரபந்தத்திரட்டு—இதில் பதிகங்கள், பிள்ளைத் தமிழ்கள், கலம்பகங்கள், உலா, அந்தாதிகள், மாலைகள், தூது, கோவை முதலிய பல வகையான 40-தமிழ்ப் பிரபந்தங்கள் அடங்கியுள்ளன | 2 | 8 |
| புலவர் திலகராகிய புகழேந்திப்புலவர் இயற்றிய நளவெண்பா மூலமும் உரையும் புதிய பதிப்பு | 1 | 4 |
| கல்லாடனார் இயற்றிய கல்லாடம் மூலமும் உரையும் கிலிட்டு பைண்டு | 3 | 0 |
| துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய திருவெங்கைக்கோவை மூலமும் உரையும் உயர்ந்த கிலிட்டு பைண்டு | 2 | 8 |
| பிங்கல முனிவர் இயற்றிய பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு மூலமும் உரையும். உயர்ந்த கிலிட்டு பைண்டு | 2 | 8 |
| காங்கேயர் அருளிய உரிச்சொல் நிகண்டு | 0 | 8 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| தண்டியலங்காரம் மூலமும் உரையும் | 1 | 8 |
| ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன் வெற்றிவேற்கை ஸ்ரீ இராமாநுஜகவிராயர் விருத்தியுரையுடன் | 0 | 12 |
| அதிவீரராம பாண்டியன் அருளிய நைடதம் மூலம் செய்யுள் முதற்குறிப்பகராதியுடன் | 0 | 12 |
| நாலடியார் உரையுடன் | 2 | 0 |
| குறள் (பரிமேலழகர் உரையுடன்) | 4 | 0 |
| ஷை மயிலைநாதர் உரையுடன் | 2 | 8 |
| குறள் மூலம்—இதில் பால், இயல் அதிகார செய்யுள் முதற் குறிப்பகராதியும் ஒவ்வொரு அதிகாரத்திற்குத் தமிழ் இங்கிலீஷ் மகுடமும் அடங்கியுள்ளன | 0 | 4 |
| இனிது நாற்பது—கபிலர் இயற்றியது உரையுடன் | 0 | 3 |
| இன்னா நாற்பது—(பூதஞ்சேந்தனார் இயற்றியது) உரையுடன் | 0 | 3 |
| களவழி நாற்பது (பொய்கையார் இயற்றியது) உரையுடன் | 0 | 2 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஔவைக்குறள் மூலம் | 0 | 2 |
| கார்நாற்பது—(கண்ணங்கூத்தனார் இயற்றியது) உரையுடன் | 0 | 2 |
| சிறுபஞ்சமூலம் (காரியாசான் செய்தது) உரையுடன் | 0 | 4 |
| நான்மணிக்கடிகை (விளம்பிநாகனார் செய்தது) உரையுடன் | 0 | 5 |
| முதுமொழிக்காஞ்சி கூடலூர் கிழார் செய்தது) உரையுடன் | 0 | 2½ |
| திரிகடுகம்—(நல்லாதனார் செய்தது) உரையுடன் | 0 | 4 |
| ஏலாதி—(கணிமேதையார் செய்தது) உரையுடன் | 0 | 5 |
| அறநெறிச்சாரம் (முனைப்பாடியார் செய்தது) மூலமாத்திரம் | 0 | 4 |
| ஆசாரக்கோவை—(பெருவாயின் முள்ளியார் செய்தது) உரையுடன் | 0 | 8 |
| பழமொழி—(முன்றுரையரையர் செய்தது) உரையுடன் | 2 | 0 |
| சௌந்தரிய லகரி—மூலமும் சைவ எல்லப்ப நாவலர் இயற்றிய உரையும் | 0 | 6 |

ரூ. அ.

இன்னிலை— (பொய்கை யார்) இயற்றியது) உரையுடன் 0 12

சரஸ்வதி அந்தாதி—(கம்பர் இயற்றியது) உரையுடன் 0 5

மறைசையந்தாதி —யாழ்ப்பாணம் சின்னத்தம்பிப் புலவர் இயற்றிய சிறந்த இலக்கிய நூல் 0 5

கல்வளை யந்தாதி—ஷெயார் இயற்றியது உரையுடன் 0 5

தாலாட்டுப் பிரபந்தம் இதில் கீதாசாரத்தாலாட்டு முதலிய 12 தாலாட்டுகள் அடங்கி யுள்ளன 0 4

யாப்பிலக்கண வினாவிடை(சரவணப்பெருமாளையர் இயற்றியது) 0 2

ஒட்டக்கூத்தர் இரட்டைப்புலவர் சரிதம் 0 8

வியாச விதானம்—தமிழ் காம்போஸிஷன் எழுதுவதற்கு இது சிறந்த உதவிப் புஸ்தகம் 0 12

தேசபக்தாமிர்தம்—இது தமிழில் வசன நடை எழுதப் பயிலுவோர்களுக்கும் பத்திரிகையில் வியாசங்களெழுதப் பழகுவோர்களுக்கும் சிறந்ததைப் புஸ்தகம் 1 0

தமிழ் வியாசங்கள் மாணவர்களுக்கு உபயோகமானது (ஸ்ரீ எம். வி. அரங்கசாமி ஐயரால் எழுதப்பட்டது) 0 12

## மதம், சன்மார்க்கம் முதலியவைகளைப் பற்றிய நூல்கள்.

படித்தால் மத பக்தியும், ஒழுக்கமும் உண்டாகும்.

உபதேசகாண்டம் மூலமும் உரையும் 4 8

நாலயிர திவ்யப் பிரபந்தம் 3 8

துவாதசோபநிஷத் (தமிழில்) 2 8

பரிபூரணானந்த போதமும் சிவ சூரியப் பிரகாசமென்னும் உரையும் (ஸ்ரீ பாம்பன் குமரகுருபரதாஸ சுவாமிகள் இயற்றியது.) 2 0

வேதாந்த ரகஸ்யம் 1 8

இராமகிருஷ்ண விஜயம் 1 4

| | ரூ. | அ. |
|---|---|---|
| விஷ்ணுஸ்தல மஞ்ரி | 0 | 8 |
| குசேலோபாக்கியானம் (மூ ல மு ம் அரும்பத வுரையும் வசனமும்) | 0 | 12 |
| சிவக்ஷேத்திராலய உண் மை விளக்கம் (ஸ்ரீ கதிர்வேல் பிள்ளை இயற்றியது.) | 0 | 8 |
| திருவள்ளுவர் குறள் ஆங் கிலத்தில் (ஸ்ரீமான் வ. வே.சு. ஐயரால் எழு தப்பட்டது.) | 3 | 0 |
| சர்வ தரிசின சங்கிரகம் | 2 | 8 |
| வேதாந்த விவகார கிரிமி னல் கேஸ் | 1 | 8 |
| தேவலோகக் கிரிமினல் கேஸ் | 1 | 8 |
| ஸ்ரீமத் கம்பராமாயணம் பாலகாண்டம் (ராப்பர் பவுண்ட்) | 2 | 0 |
| ஷை துணி கட்டிடம் | 2 | 6 |
| செந்தமிழ் வானவர் திவ்ய சரிதங்கள் | 0 | 12 |
| மெய்ஞ்ஞான போதம் | 0 | 12 |
| திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் முதல் திரு முறை (அரும் பத வுரையுடன் சரித்திர மும் சேர்ந்தது.) | 0 | 12 |
| பகவத் கீதை கிரந்த சுலோகமும் அதற்குப் பிரதித் தமிழ்ச்சுலோக மும் தமிழ்ப் பொழிப் புரையுடன் கூடியது. பாக்கெட் அளவு கொ ண்டது | 0 | 12 |
| குமரேச சதகம் பதவுரை யுடன் கூடியது | 0 | 6 |
| சிவ சுப்ரமண்யர் பஜனைக் கீர்த்தனை | 0 | 6 |
| ஜீவயாதனை வியாசம் அல் லது கொன்றுதின்னா மை மூலமும் உரையும் (ஸ்ரீ பாம்பன் குமர குருபரதாஸ சுவாமி கள் இயற்றியது.) | 0 | 11 |
| தத்துவதரிசினி | 0 | 10 |
| ஞானதரிசினி | 0 | 10 |
| முக்திநிலையும் கர்மயோக மார்க்கமும் | 0 | 3 |
| ஸ்தோத்திர ராமாயணம் | 0 | 2 |
| திரு வாசகம் காலிகோ பைண்டு | 0 | 10 |
| ஹனுமத் பிரபாவம் | 0 | 3 |
| ஷண்முக ஸகஸ்ர நாமார் ச்சனையும். குமாரஸ் தவமும் | 0 | 4 |
| கந்தரலங்காரம் (அருண கிரிநாதர் அருளிச் செ ய்தது) | 0 | 1 |
| வடிவேலர் அந்தாதி அல் லது கந்தபுராணக் கரு ப்பொருள் | 0 | 4 |
| குகப்பெருமாள் | 0 | 3 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| அருணகிரிநாதரின் சரிதம் | 0 | 1 |
| விவேகானந்தர் சுவாமிகள் சரித்திரச்சுருக்கம் | 0 | 2 |
| சச்சிதானந்த சிவம் (ஸ்ரீ சுப்பிரமணிய சிவம் எழுதியது) | 0 | 14 |
| வால்மீகி விஜயம் (ஸ்ரீ மகேச குமார சர்மா எழுதியது | 1 | 0 |
| ஆரிய சரித்திரம் | 1 | 0 |
| சாகிரடீஸ் சரிதம் | 0 | 12 |
| ஸ்வராஜ்யசித்தி | 0 | 8 |
| ஆத்திச்சூடி நீதிக்கதைகள் | 0 | 8 |
| அவதாரமகிமை | 0 | 1 |
| புத்த சரித்திரம் | 0 | 8 |
| பக்த சந்திரிகா | 0 | 12 |
| பூலோக இன்பதுன்பம் | 0 | 8 |
| பாரத வினவிடை | 0 | 12 |
| பக்தலீலாமிருத வசனம் | 2 | 0 |
| தட்சிண இந்தியா | 5 | 0 |
| தேவிபராக்கிரமம் | 1 | 4 |
| கௌரீமணி | 0 | 5 |
| கீதமஞ்சரி | 0 | 3 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானனந்த விளக்கம் | 1 | 0 |
| இல்லறம், துறவறம் | 0 | 1 |
| காரைக்காலம்மையார் சரிதம் | 0 | 3 |
| கற்பு | 0 | 2 |
| மங்கையற்கரசியின் காதல் | 0 | 10 |
| மௌன தேசிகர் | 0 | 6 |
| ஒளவை | 0 | 6 |
| பிரபஞ்சபாவ புண்ணியம் | 0 | 8 |
| பிரபோத சந்திரோதய வசனம் விளக்கம் | 1 | 2 |
| இராமாயண சாரம் | 1 | 0 |
| சீதை வனம்புகுதல் | 0 | 3 |
| சீகாழிக்கோவை | 0 | 8 |
| சங்கர விஜயம் | 1 | 4 |
| திருப்புகழ் 2000 பாட்டுகள் | 5 | 0 |
| திருப்புகழ் 200 பாட்டுகள் மட்டப்பதிப்பு | 0 | 6 |
| வள்ளுவர் நேரிசை | 0 | 10 |
| விநாயகர் கவசம் | 0 | 3 |
| திருவண் காட்டடிகள் | 0 | 12 |
| ஷை சுத்தப் பதிப்பு | 1 | 4 |
| இராஜயோகம் | 0 | 12 |
| ரிபுகீதை | 1 | 0 |

## நவீன தமிழ் நாவல்கள்.

**படிக்கப்படிக்க இன்பம் தரும்.**

**நாவல் எழுத சக்தியைக் கொடுக்கும்.**

| | ரூ. | அ. |
|---|---|---|
| மாண்டி கிறிஸ்டோ அல்லது துஷ்ட நிக்ரக | | |
| சிஷ்ட பரிபாலனம் முதல்பாகம் | 1 | 8 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஷை இரண்டாம்பாகம் | 1 | 8 |
| இந்திரசித்தன் | 1 | 4 |
| அயாஷா அல்லது ஜயாயிரம் வருஷம் வாழ்ந்த அரசி இரண்டு பாகங்களும் சேர்ந்தது | 1 | 12 |
| இந்திராணி அல்லது இந்திர்புரி ரகஸ்யம் | 1 | 4 |
| ஆதிலட்சுமி அல்லது அன்பின் மாட்சி | 1 | 12 |
| ரங்கநாயகி | 1 | 4 |
| அந்தப் புரக்காதல் அல்லது அரண்மனை இரகசியம் | 1 | 0 |
| கோஹர்ஜான் | 0 | 8 |
| ரமணி (ஒரு சரித்திர சம்பந்தமான நாவல்) | 0 | 8 |
| ஸ்ரீநிவாஸன் துப்பறியும் நாவல் | 0 | 6 |
| மோகனா ஓர்இனிய தமிழ் நாவல் | 0 | 5 |
| தென்னூர் கொலை அல்லது துப்பறியும் திறமை | 1 | 4 |
| ஷண்முக சுந்தரம் அல்லது பெருமை யின் சிறுமை | 1 | 0 |
| ஜயவீரன் அல்லது வீரத்தின் பெருமை | 0 | 14 |
| சித்ர ரேகை அல்லது அசோகவன அற்புதம் ஓர் துப்பறியும் நாவல் | 1 | 0 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| கமலாகரன் அல்லது மருங்காபுரிமாயக் கொலை | 1 | 0 |
| தங்கம்மாள் | 0 | 12 |
| மீனாட்சி சுந்தரன் | 0 | 12 |
| சுசீலா | 1 | 0 |
| சூளாமணி காவ்யம் | 1 | 0 |
| அனுமான்ஸிங் சரித்திரம் | 0 | 12 |
| முரளிதரன் | 0 | 10 |
| கமலபவன அற்புதம் | 0 | 10 |
| ஞான சுந்தரம் | 0 | 8 |
| ஆரியகுமாரி | 0 | 6 |
| கோபாலன் | 0 | 8 |
| மரகதவல்லி | 0 | 10 |
| மீனலோசனி | 0 | 6 |
| மூத்தாள் இளையாளான கதை | 0 | 4 |
| பரிமளரோஜா | 0 | 5 |
| தேவராஜு | 0 | 6 |
| சூட்மதரிசி என்ற மரியாதைராமன் | 0 | 4 |
| சந்திரானனா | 0 | 5 |
| பிமலா அல்லது திவான் மகள் | 0 | 6 |
| பிரபாவதி | 0 | 4 |
| லோபி | 0 | 6 |
| ரத்னாபாய் | 0 | 2 |
| சோமசுந்தரம் | 0 | 4 |
| காதல்வெற்றி | 0 | 4 |
| அன்புக்கு மழிவோ | 0 | 5 |
| பெற்றமனம் பித்து | 0 | 2 |
| காயற்கன்னி | 0 | 12 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| காமாட்சி | 0 | 8 |
| ஷேக்ஸ் பியர் நாடகக் கதைகள் (கவிமாண் பும் பெரும்புயலும்) | 0 | 6 |
| தேடாத செல்வம் | 0 | 3 |
| கமலகாந்தன் | 0 | 2 |
| அல்லி | 0 | 3 |
| ஜயவீரன் (அல்லது சத் தியமேஜயம்) | 0 | 2 |
| பவழக்கொடி | 0 | 3 |
| தேசிங்குமன்னன் | 0 | 3 |
| ஹிரண்மயி | 0 | 2 |
| ஜகத்ஜோதி | 0 | 8 |
| நவராத்திரிப் பிரசங்கங் கள் | 0 | 5 |
| வசீகரி (ஈஸ்டிலின் நாவ லைத் தழுவி எழுதப் பட்டது) | 1 | 0 |
| இரத்னபுரி ரகஸ்யம் | 3 | 0 |
| நாகரிகம் | 2 | 0 |
| அன்பானந்தன் | 1 | 0 |
| புருஷோத்தமன் | 0 | 10 |
| மேகவர்ணன் | 0 | 8 |
| மங்களவல்லி | 0 | 8 |
| இரகுநாதன் | 0 | 12 |
| குசாவதி | 0 | 12 |
| தமயந்தி | 0 | 8 |
| ஜகதல ஜகத்ஜோதி | 0 | 8 |
| ஜயலட்சுமி | 0 | 10 |
| நீலகண்டன் | 0 | 10 |
| மோராமணி | 1 | 8 |
| உட்டாணி | 0 | 6 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| மாயசுந்தரி | 0 | 8 |
| தலைவாங்கி | 1 | 0 |
| லண்டன் திருடர் | 2 | 12 |
| இராமமூர்த்தி | 0 | 10 |
| தாட்சாயணி | 0 | 6 |
| வீரநாதன் | 0 | 12 |
| கற்கோட்டை | 1 | 12 |
| இராஜேந்திரன் | 1 | 0 |
| இராமநாதன் | 1 | 4 |
| திக்கற்ற இருகுழந்தை கள் | 1 | 0 |
| விஜய சுந்தரம் | 2 | 0 |
| வஸந்தமல்லிகா | 1 | 0 |
| கோகிலாம்பாள் | 0 | 12 |
| ஸரசா | 0 | 10 |
| சந்திரோதயம் | 1 | 0 |
| ஜடாவல்லவர் | 1 | 8 |
| ஆனந்தகிருஷ்ணன் | 0 | 12 |
| மோகன சுந்தரம் | 0 | 12 |
| சுவர்ணாம்பாள் | 0 | 10 |
| மனோரமா | 0 | 8 |
| மதன பூஷணம் | 1 | 0 |
| நாரதர் கலகம் | 1 | 8 |
| அராபிக்கதை | 2 | 8 |
| பூலோக விநோதக்கதை | 5 | 0 |
| வித்யானந்தனர் | 1 | 4 |
| விஜயபாஸ்கரன் | 1 | 0 |
| நகைப் பைத்தியம் இர ண்டு பாகம் | 1 | 0 |
| இராஜம் ஐயர் சரிதை | 0 | 8 |
| தலையணை மந்திரோபதே சம் | 0 | 8 |

| | ரூ. | அ. | | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|
| பவானந்தர் | 0 | 6 | இயற்கை அற்புதங்கள் | 0 | 8 |
| இல்லறைக் கொத்து | 1 | 8 | தபால் சரித்திரம் | 0 | 4 |
| சாணக்ய சாகஸம் | 1 | 4 | நெற்பயிர் | 0 | 2 |
| தீனதயாளு | 0 | 8 | இரத்ன பிரகாசம் | 0 | 8 |
| தர்மகர்த்தா | 0 | 10 | ஸ்ரீமதி | 0 | 4 |
| தேசபாண்டே | 0 | 3 | சந்தேகம் | 0 | 1 |

## நவரஸம் பொருந்திய நாடகப் புஸ்தகங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மிருச்ச கடிகம் | 1 | 8 | ஊர்வசியின் சாபம் | 0 | 8 |
| சீதா லக்ஷிமி என்கிற தற்காத்துக்கொண்ட தாரம் | 1 | 0 | சபாபதி (அஹஸ்ய நாடகம்) | 0 | 8 |
| அமலாதித்தியன் | 1 | 0 | கோனேரி அரசகுமாரன் அகஸ்ய நாடகம் | 0 | 8 |
| அரிச்சந்திரன் | 1 | 0 | குப்பன் பித்தலாட்டங்கள் | 0 | 8 |
| இரண்டு நண்பர்கள் | 0 | 14 | சாரங்கதரன் | 0 | 8 |
| லீலாவதி சுலோசனை | 0 | 12 | வேதாள உலகம் | 0 | 8 |
| கள்வர் தலைவன் | 0 | 12 | யயாதி | 0 | 8 |
| காதலர் கண்கள் | 0 | 12 | முற்பகற்செய்யின் பிற்பகல் விளையும் | 0 | 8 |
| ரத்னுவளி | 0 | 12 | பேயல்ல பெண்மணியே | 0 | 8 |
| விஜயரங்கம் | 0 | 12 | காலவரிஷி அல்லது மகிமையுள்ள மோதிரம் | 0 | 8 |
| மனோஹரன் | 0 | 12 | சீதமஞ்சரி (நாடகப் பாட்டுகள் அடங்கியுள்ளன) | 0 | 8 |
| கமலேசன் | 0 | 12 | பாதுகா பட்டாபிஷேகம் | 0 | 8 |
| வள்ளிநாயகி (புராண நாடகம்) | 0 | 12 | தசரதன் தவறு | 0 | 8 |
| ராமலீலை | 0 | 12 | வனஜாட்சி | 0 | 8 |
| மார்க்கண்டேயர் | 0 | 10 | சிங்களப்பெண் | 0 | 8 |
| ஹரிச்சந்திரன் அல்லது சத்திய ஸ்தாபனம் (தேவநா தய்யங்கார் எழுதியது) | 0 | 10 | பங்கஜாட்சி | 0 | 8 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஜயலட்சுமி அல்லது காதலின் இடையூறுகள் | 0 | 8 |
| ராஜலட்சுமி அல்லது விதியும் மதியும் | 0 | 8 |
| தமயந்தி (ஓர் அரிய நாடகம்) | 0 | 8 |
| சத்திய ஹரிச் சந்திரன் (பண்டிட் நாராயண சாமி ஐயர் எழுதியது) | 0 | 5 |
| ஹிமார்ஜுனை | 0 | 8 |
| மரியாதைராமன் | 0 | 6 |
| கமலவதனா | 0 | 6 |
| ருக்மணி பரிணயம் | 0 | 4 |
| சுகுணா அல்லது கற்பின் திறம் | 0 | 8 |
| அம்பிகாபதியும் அரசிளங் குமரியும் | 0 | 10 |

## வைத்தியநூல்கள்.

### இவைகளைப் படித்தால் தாமே வைத்தியராகலாம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| சிகித்ஸாரத்னதீபம் என்னும் வைத்யநூல் | 2 | 0 |
| யூகி முனிகரிசிலை தேரையர்கரிசிலை கல் நண்டு சூத்திரம் மூன்றும் சேர்ந்து | 1 | 0 |
| மூலிகை மர்மம் | 0 | 8 |

## ராய்சாகிப் T. M. பொன்னுசாமி பிள்ளையின்

# அரிய தமிழ் நாவல்கள்

ஒவ்வொரு ஸ்திரி புருஷரும் வாசிக்கவேண்டியது

### ஞானப்பிரகாசம்

(இரண்டு பாகமும் சேர்ந்தது) விலை 1 8

### சிவஞானம்

இரண்டு பாகமும் அடங்கியது 1 4

### ஞானசம்பந்தம்

படங்களுடன் இரண்டுபாகமும் கொண்டது 1 4

### ஞானாம்பிகை

படங்களுடன் இரண்டு பாகமும் கொண்டது 1 8

இந்த நான்கு நாவல்களைத் தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் வாங்கி வாசிப்பதோடு தத்தம் நண்பர்களுக்கும் சிபார்சு செய்யவேண்டுவது அவசியம். இப்புத்தகங்களைப் பற்றித் தமிழ் உலகு நன்கு அறியுமாதலால் நாம் இவைகளைப் பற்றி ஒன்றும் சொல்லத் தேவையில்லை. இந்த நாவல்களைப் படித்துவிட்டால் நேயர்கள் கடைகளில் உலவுகிற சில அஸங்கியமான நாவல்களைப் படிக்கத் துணியமாட்டார்கள். இவ்வருமையான நாவல் ஒவ்வொன்றும் மழமழப்பான காயிதத்தில் நன்றாக அச்சடிக்கப்பட்டிருக்கிறது. முதற் பதிப்புப் புஸ்தகங்கள் செலவழிந்து விட்டபடியால் இரண்டாம் பதிப்பு வெளியாயிருக்கிறது. வேண்டுவோர் நமக்கு ஆர்டர் செய்யவும்.

## பட்டினத்தார் புராணம்.

இதில் புராண மூலமும் ஸ்ரீமான் தி. வடிவேலு முதலியாரவர்களியற்றிய விசேஷ உதாரணங்களோடு கூடிய பொழிப்புரையும் அடங்கியுள்ளன. சித்தாந்த சரபம் அஷ்டாவதானம் சிவ ஸ்ரீ கலியாணசுந்தர யதீந்திரரால் பார்வையிடப்பட்டது; சுத்தப்பதிப்பாகவுள்ளது; கலிகோ பைண்டு செய்யப்பட்டது; நல்ல காயிதத்தில் அச்சடிக்கப்பட்டது; 250 பக்கங்கள் கொண்டது. பட்டினத்துப் பிள்ளையாரின் சரிதத்தையும் அவரது பாடங்களையும் படிக்காதவர்களுடைய ஜன்மம் வியர்த்தமென்றே சொல்லவேண்டும்.

இதன் விலை ரூபா 1-8 தபால் கூலி வேறு.

## திருக்குறள் மூலமும் உரையும்

இது பெங்களூர் இரத்தின நாயகர் அண்டுசன்ஸ் அவர்களால் பதிப்பிக்கப்பெற்றது. பதவுரை கருத்துரை விசேஷ உரை கொண்டது. திருவள்ளுவ நாயனாரின் சரிதச்சுருக்கமும் அடங்கியுள்ளது. தமிழ் வேதமாகிய இப்புத்தகத்தை யாவரும் எளிதில் படித்தறிந்து கொள்ள பதவுரை, கருத்துரை விசேட உரை சேர்க்கப்பட்டிருக்கின்றன. புதிய பதிப்பாகையால் சொற்பப் பிரதிகளேதான் அச்சிடப்பட்டிருக்கின்றன. வேண்டுவோர் சீக்கிரம் எழுதிப் பெற்றுக்கொள்ளவும்.

இதன் விலை ரூபா 3—8—0. தபால் கூலி வேறு.

# ஞானத்திரட்டு
## அல்லது
## விவேகாநந்த சுவாமிகளின் உபந்நிசாயங்கள்.

இதில் கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் அடங்கியுள்ளன. அழகான தமிழ் நடையில் காலஞ் சென்ற ஸ்ரீமான் வி. நடராஜய்யரால் எழுதப்பெற்றது. சுவாமி விவேகாநந்தரின் அரிய உபந்யாசங்களைத் தற் காலத்தவர்கள் படிப்பது அவசியம். கர்மயோகம், பக்தி யோகம், ஞானயோகம் உதாரணங்களால் நன்ருக விளக் கப்பட் டிருக்கின்றன. இரண்டுபாகமும் சேர்ந்தது.

இதன் விலை ரூபா ஒன்று. தபால் கூலி வேறு.

மானேஜர்,

'தேசபக்தன்' புத்தகசாலை,

இராயப்பேட்டை, சென்னை.

---

B. I. PRESS, MADRAS.